சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# 2 அகநானூறு

மணிமிடை பவளம்

மூலமும் உரையும்

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# அகநானூறு

## மணிமிடை பவளம்

மூலமும் உரையும்

**2**

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

சென்னை - 600 014.

☎ 044-2811 4402 / 044 - 2844 3791 / 97907 06548

நூல் கிடைக்குமிடம் :

**கௌரா புத்தக மையம்**
செயிண்ட் ஜான் சர்ச் வணிக வளாகம்
10, ராக்கின்ஸ் சாலை, திருச்சிராப்பள்ளி-1
☎ : 99520 34876 / 0431 2419584

**கௌரா புத்தக மையம்**
4, வெங்கட்ரங்கம் பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.
☎ : 97907 06548 / 94449 10346

விலை : ரூ. 120.00

* முதற் பதிப்பு : ஜூன் 2010

* பதிப்பாசிரியர் : **எஸ். கௌமாரீஸ்வரி** M.A., M.L.I.S.,
* நூலின் பெயர் : அகநானூறு - மணிமிடை பவளம் மூலமும் உரையும்
* பக்கங்கள் : 440
* ஒளி அச்சு : ஜெய் ஜீனா
* வெளியீடு : சாரதா பதிப்பகம்
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.
* அச்சிட்டோர் : மெட்ராஸ் ஆர்ட் பிரிண்டர்ஸ், சென்னை - 5, போன் : 28546933

CODE : 920

**கௌரா ஏஜென்ஸீஸ்**
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.
☎ : 044-2844 3791 / 97907 06548 / 97907 06549
www.gowrabookfair.com. E-mail : gowra_09@yahoo.in / gowra09@gmail.com

# பதிப்புரை

*எட்டுத்தொகை நூல்களுள் அகநூலாக அமையும் பெருமை உடையது அகநானூறு. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளில் நானூறு பாக்களைக் கொண்டிருக்கிறது. நூலைத் தொகுத்தவர் உப்பூரிக்கிழார் மகனார் உருத்திரசன்மனார். தொகுப்பித்தவர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. அகநானூறு களிற்றியானை நிரை (பாடல்கள் 1- 120) மணிமிடை பவளம் (பாடல்கள் 121 - 300) நித்திலக் கோவை (பாடல்கள் 301 - 400) என்னும் முப்பிரிவுகளாக அமைந்துள்ளன. வில்லவதரையன் பாடலும் இதனை உணர்த்தும்.*

**ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்**
**நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய**
**இன்பப் பகுதி இன்பொருட் பாடல்**
**நானூ றெடுத்து நூனவிற் புலவர்**
**களித்த மும்மதக் களிற்றியா னைநிரை**
**மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்**
**மேவிய நித்திலக் கோவை என்றாங்கு**
**அத்தகு பண்பின் முத்திற மாக**
**முன்னினர்த் தொடுத்த நன்னெடுந் தொகை.**

*121 முதல் 300 வரை உள்ள பாடல்கள் மணியும் பவளமும் கலந்தது போன்று அழகுடையன. மணிமிடை பவளத்திற்கு புலியூர்க் கேசிகன் எளிமையான உரை வழங்கியுள்ளார். உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடைபெறவிருக்கும் இவ்வேளையில் தமிழரின் அகவாழ்வு நெறிகளைக் கூறும் அகநானூறு இலக்கியத்தைக் கற்று இன்புறுவோம்.*

**பதிப்பகத்தார்**

# உள்ளே...

# அகநானூறு - மணிமிடை பவளம்

அகத்தினின்று எழுகின்ற இன்பியல் வாழ்வின் ஆர்வத் துடிதுடிப்புகளையும் அளவற்ற எண்ணச் சுழல்களையும் அணிபெறக் காட்டுவனவே தமிழரின் அக நூல்கள். அவற்றுள், கடைச்சங்க காலத்துத் தொகுக்கப் பெற்றது அகநானூறு. 'நெடுந்தொகை' எனவும் அது பெயர்பெறும். அதனுள் (121 முதல் 300 வரை) நூற்றெண்பது செய்யுட்களைக் கொண்ட இரண்டாம் பகுதி இம் **மணிமிடை பவளம்** ஆகும்.

அகநானூற்றை அழகுற முதற்கண் ஆய்ந்து பதிப்பித்த சான்றோர் **கம்பர் விலாசம் இராஜகோபால அய்யங்கார்** அவர்களாவர்; பரிசோதித்தோர் **மகாவித்துவான் ரா. ராகவய்யங்கார்** அவர்களாவர். அடுத்து, உரையொன்றினை நூல் முழுமைக்குமே வகுத்த பெரியார் **கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளையவர்கள்**. அது **நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டாரவர்கள்** துணையுடன் வெளிவந்தது. சைவசித்தாந்த மகா சமாசத்தார் **பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள்** துணையுடன் சங்க இலக்கியங்கள் அனைத்தையுமே புலவர் வரிசையிலே வெளியிட்டனர். அண்மையில் **மர்ரே கம்பெனியார்** அக நானூற்று மூலத்தை மட்டும் நன்கு ஆராய்ந்து வெளியிட்டனர். இவர்களனைவரும் செய்த பெரும்பணியினாலேயே அகநானூற்றை அறிந்தறிந்து அனுபவிக்கும் பெருவாய்ப்புத் தமிழ் அன்பர்களுக்கு நெடுகிலும் வாய்த்தது.

எனினும், பலரும் எளிதிலே கற்று இன்புற வேண்டுமானால் எளிய உரை ஒன்றும் இன்றியமையாதது எனக் கருதி, அந்தத் தேவையை நிறைவுசெய்ய முயல்வதே இந்நூலின் நோக்கமாகும். பல்லாயிரவரும் பயனடைய வேண்டும் என்ற காரணம்பற்றி, மக்கள் பதிப்பு வரிசையிலே இதனை முதற்கண் வெளியிட முன்வந்தனர்.

நூலினை அனுபவிக்க உதவும் வகையிலே, பாடினோர் வரலாறுகளும், பாடப்பட்டோர் வரலாறுகளும் பின்னிணைப்புக்களாக மிளிர்வது இந்நூலின் தனித்த சிறப்பாகும். தெளிவான உரையும், மற்றும் தேவையான குறிப்புக்களும் விளக்கங்களும், ஆங்காகே தரப்பட்டிருக்கின்றன. அவை கற்பவர்க்குப் பெரிதும் உதவுவன.

பொதுவாக, எந்த நூலுக்குமே அதற்குரிய உரையின் துணைமட்டுமே அந்த நூலின் முழு இனிமையினையும் அனுபவிக்கப் போதுமானதாகாது. ஒவ்வொரு பாடலையும் உள்ளத்துள்ளே எண்ணிஎண்ணி, அவற்றின் அமைவுடன் ஒன்றிக்கலந்து அனுபவிப்பதே உண்மையாக அவற்றை அறிந்து அனுபவிப்பதாகும். அதற்கு இந்நூல் ஓரளவுக்கு உதவியா யிருக்கும் என்று நம்புகின்றேன்.

**வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப்புண்பு!**

**புலியூர்க் கேசிகன்**



# நூல் வரலாறு

## பாயிரம்

நிலைபெற்ற அறநெறியினைப் பேணி வந்தவர்கள்; எப்புறத்தும் வெற்றியும் சிறப்புற்ற ஆட்சிச் சக்கரத்தினை நடத்தியவர்கள்; யாதும் பழுதுஅற்ற சீரிய கொள்கையினை உடையவர்கள் வழுதியராகிய பாண்டியர்கள். அவர்களுடைய அவைக்கண்ணே அறிவு குடிகொண்டிருக்கும் செறியுடைய மனத்தவரும், வானளாவிய நற்புகழ் உடையவருமாகிய சான்றோர்கள் குழுமியிந்து, அருமையுடைய முத்தமிழினையும் ஆய்ந்து வந்தனர். அந்தக் காலத்தே,

ஆராய்ந்து, சாலச் சிறந்தவையெனத் தெரிந்த சிறப்பினையுடைய இனிய தமிழ்ப் பாடல்களுள், நெடியவாகி அடிகள் அதிகமாக விளங்கிய இன்பப் பகுதியினைச் சார்ந்த இனிய பொருள் அமைந்த பாடல்கள் நானூற்றை எடுத்து, நூல்களை ஆராய்ந்து சொல்லும் புலவர் பெருமக்கள் தொகுத்தனர்.

மும்மதங்களால் களித்தலையுடைய ***களிற்றியானை நிரை***, மணியோடும் சேர்த்துக் கோர்த்த அழகு ஒளிரும் **மணிமிடை பவளம்**, சிறப்பான ***நித்திலக்கோவை*** என்றவிதமாக, அத்தகைய பண்பினோடு முத்திறம் உடையனவாகத் தொடுத்தற்கு நினைந்து தொகுத்தது நல்ல நெடுந்தொகையாகும்.

அந்த நெடுந்தொகைக்குக் கருத்து எனப் பண்பினையுடைய சான்றோர் முற்காலத்தே சொன்னவைகளை நாம் ஆராய்வோமானால், அருமையுடையவாகிய பொருளுடைமையினைக் கருத்தாகக் கொண்டு, எவ்விதக் கோணுதலும் இல்லாமல், பாட்டமைதியோடு பொருந்துமாறு, செய்யுள் தகைமையிற் சிறந்த அகவல் நடையினால் கருத்து இனிதாக இயற்றியோன், பரிகள் பூட்டிய தேரினையுடைய வளவர்கள் காத்துப் பேணும் வளமையான சோழநாட்டினுள்ளேயும், நாடு எனச் சிறப்பித்துக் கூறப்படும் மிக்க பெருமையுடைய சிறப்பினையும், என்றும் வளங் கெடுதலில்லாத உயர்வினையும் உடைய இடையளநாட்டுத், தீதற்ற கொள்கையினர் வாழுகின்ற புகழுடன் விளங்கிய சீர்மை கெழுமிய மணக்குடி என்னும் ஊரினனான, செம்மை நிரம்பிய

*தேவன் என்பவனாவன், அவன், தொன்மையாகவே சிறப்புடைய நன்மையாளர் மலிந்த குடியினனு மாவன்.*

**நின்ற நீதி வென்ற நேமிப்**
**பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்**
**அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து**
**வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ**
**அருந்தமிழ் மூன்றுந் தெரிந்த காலை**

**ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்**
**நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய**
**இன்பப் பகுதி யின்பொருட் பாடல்**
**நானூ றெடுத்து நூல்நவில் புலவர்**
**களித்த மும்மதக் களிற்றியா னைநிரை**

**மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்**
**மேவிய நித்திலக் கோவை என்றாங்கு**
**அத்தகு பண்பின் முத்திறமாக**
**முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்குக்**
**கருத்தெனப் பண்பினோர் உரைத்ததை நாடின்**

**அவ்வகைக்கு அவைதாஞ் செய்விய அன்றி**
**அரியவை யாகிய பொருண்மை நோக்கிக்**
**கோட்ட மின்றிப் பாட்டொடு பொருந்தத்**
**தகவொடு சிறந்த அகவல் நடையால்**
**கருத்தினிது இயற்றி யோனே-பரித்தேர்**

**வளவர் காக்கும் வளநாட் டுள்ளும்**
**நாடெனச் சிறந்த பீடுகெழு சிறப்பிற்**
**கெடலருஞ் செல்வத்து இடையள நாட்டுத்**
**தீதில் கொள்கை மூதூ ருள்ளும்**
**ஊரெனச் சிறந்த சீர்கெழு மணக்குடிச்**

**செம்மை சான்ற தேவன்**
**தொன்மை சான்ற நன்மை யோனே!**

*இத் தொகைக்குக் கருத்து அகவலாற் பாடினான், இடையள நாட்டு மணக்குடியான், பால்வண்ண தேவனான* ***வில்வ தரையன்.***

*இத்தொகைப்பாட்டிற்கு அடியளவு சிறுமை பதின் மூன்று; பெருமை முப்பத்தொன்று. தொகுப்பித்தான் பாண்டியன்* ***உக்கிரப் பெருவழுதி****. தொகுத்தான் மதுரை* ***உப்பூரிகுடிகிழான்*** *மகனாவான்* ***உருத்திர சன்மன்*** *என்பான்.*

“வண்டு படத் ததைந்த” என்பது முதலாக, “நெடுவேள் மார்பின்” என்பதீறாகக் கிடந்த நூற்றிருபதுபாட்டும் “களிற்றி யானை நிரை” இப்பெயர் காரணப்பெயர்; செய்யுட் காரணமோ பொருட்காரணமோ எனிற் பொருட் காரணம் என உணர்க.

“நாணகையுடைய நெஞ்சே” என்பது முதலாக, ‘நாள் வலை” என்பதீறாகக் கிடந்த நூற்றெண்பது பாட்டும் “மணி மிடை பவளம்” இப்பெயர் உவமையாற் பெற்ற பெயர்; செய்யுளும் பொருளுந் தம்முள் ஒவ்வாமையால்.

“வறனுறு” என்பது முதலாக “நகை நன்று” என்பதீறாகக் கிடந்த பாட்டு நூறும் “நித்திலக் கோவை”; இவை செய்யுளும் பொருளும் ஒக்குமாகலின்.

**வியமெல்லாம் வேண்டேர் இயக்கங் கயமலர்ந்த**
**தாமரை யாறாகத் தகைபெறீஇக் காமர்**
**நறுமுல்லை நான்காக நாட்டி நெறிமாண்ட**
**எட்டும் இரண்டுங் குறிஞ்சியாக் குட்டத்து**
**இவர்திரை பத்தா இயற்பட யாத்தான்**
**தொகையின் நெடியதனைத் தோலாச் செவியான்**
**வகையின் நெடியதனை வைப்பு. 1**

**ஒன்றுமூன் றைந்தே ழொன் பான்பாலை; யோதாது**
**நின்றவற்றி னான்கு நெறிமுல்லை;-அன்றியே**
**யாறா மருதம்; அணி நெய்த லையிரண்டு**
**கூறாதவை குறிஞ்சிக் கூற்று. 2**

**பாலை வியமெல்லாம் பத்தாய்; பனிநெய்த**
**னாலு நனிமுல்லை நாடுங்கான் - மேலையோர்**
**தேறு மிரண்டெட் டிவைகுறிஞ்சி செந்தமிழின்**
**ஆறு மருதம் அகம். 3**



# வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| பெயர் | : | புலியூர்க்கேசிகன் |
| தோற்றம் | : | 16.10.1923 |
| மறைவு | : | 17.4.1992 |
| இயற்பெயர் | : | க. சொக்கலிங்கன் |
| தந்தைபெயர் | : | கந்தசாமி பிள்ளை |
| தாயார் | : | மகாலட்சுமி அம்மையார் |
| குடும்பம் | : | துணைவி - சொ. சுந்தரத்தம்மை |
| | : | மகன் - திரு. சொ. கந்தவேலன் |
| | : | மகள் - திருமதி. நீலச்செல்வி (எ) மகாலட்சுமி - மகாதேவன் |
| | : | மகள் - செல்வி. சொ. கலைச்செல்வி (தமிழ் வளர்ச்சித்துறை) |
| | : | மகள் - திருமதி. மலர்ச்செல்வி ஹரிகுமார் |
| ஊர் | : | நெல்லையைச் சேர்ந்த புலியூர்க் குறிச்சி |
| கல்வி | : | ஆங்கிலப் பிரிவு - இண்டர், இந்துக் கல்லூரி, நெல்லை |
| பணிகள் | : | ஆசிரியர் - வடுகச்சி மலைப்பள்ளி 3 ஆண்டுகள். மேலாளர் - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 10 ஆண்டுகள் பாரி நிலையம், 2 ஆண்டுகள் அருணா பப்ளிகேஷன்ஸ், பல ஆண்டுகள் மாருதி பதிப்பகம். |
| தமிழார்வம் | : | தமிழார்வம் காரணமாக டாக்டர் மு.வ., தமிழ்க்கடல் மறைமலையடிகள், தமிழ்த் தென்றல் திரு.வி.க., கவிமணி போன்ற |

தமிழறிஞர்களுடன் தொடர்பு கொண்டு தமிழறிவை வளப்படுத்தியமை.,

தமிழ்த் தொண்டு : சங்க இலக்கியங்கள் அனைத்துக்கும் எளிய உரை எழுதி மலிவுப் பதிப்பில் விற்று இலக்கியங்களை அனைவர் மத்தியிலும் எளிமைப்படுத்திப் புரிய வைத்தமை. மனோ சக்தி, எண்களின் இரகசியம், எண்களும் எதிர் காலமும், தியானம் போன்ற நூல்கள் பல்வேறு நாடு களில் புகழ் தேடித் தந்தன.

பிற சிறப்புகள் : சிறந்த கவிஞர், படிதிருத்துநர், பதிப்பாசிரியர், எழுத்தாளர், மொழி பெயர்ப்பாளர், சோதிடர், எண் கணித வல்லுநர், ஆவிகள் பற்றிய ஆராய்ச்சியாளர்.

: பல்கலைக்கழகச் சொற்பொழிவாளராகவும் கல்லூரிகள், பள்ளிகள் மற்றும் இலக்கிய விழாக்களில் தலைமை ஏற்றும் சிறப்பித்தவர்.

: வானொலியில் உரையாற்றியவர். குமுதம், குங்குமம், தாய், இதயம், விகடன், ஞானபூமி, முத்தாரம், அமுத சுரபி, கல்கண்டு போன்ற இதழ்களில் இவர் படைப்புகள் வந்துள்ளன.

: நந்தி வாக்கு, சோதிட நண்பன் போன்ற பல இதழ்களின் ஆசிரியராக இருந்தவர்.

சிறப்பு : தென்னிந்திய இரயில்வே முத்தமிழ் மன்றம், ஸ்ரீராம் நிறுவனம், கம்பன் கழகம், திருவள்ளுவர் இலக்கிய மன்றம், பன்னாட்டுத் தமிழுறவு மன்றம் போன்ற பல்வேறு அமைப்புகள் பாராட்டிச் சிறப்பித்துள்ளன. இவரது அறநெறிச் செல்வர், புகழ் பெற்ற பேரூர்கள், புலவரும் புரவலரும் போன்ற நூல்கள் பாட நூல்களாக வைக்கப் பட்டிருந்தன. இவரது படைப்புகளை ஆய்வாளர்கள் ஆய்வு செய்து பட்டம் பெற்றுள்ளனர்.

# அகநானூறு - மணிமிடை பவளம்

## 121. அவளும் வருவாளாம்!

**பாடியவர் :** *மதுரை ம்ருதன் இளநாகனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தோழியால், தலைமகளை உடன்வரும் எனக் கேட்ட த்லைமகன், நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தலைவியைப் பிரிந்து வெளிநாடு செல்ல நினைத்தான் ஒரு தலைவன். அவளுடைய தோழியின் மூலமாகச் செய்தியைச் சொல்லி அவளிடம் இசைவுபெற முயலுகின்றான். அந்தத் தோழியும் தலைவிபாற் சென்று வந்து, 'தலைவியும் நின்னுடன் வருவாளாம் என்கின்றாள். அவன், கானகத்தைக் கடந்து சென்று, அதன் கொடுமையையும். முன்பே உணர்ந்திருந்தவன். அதனால், தலைவியின் மடமையான சொற்கள் அவனுக்கு நகைப்பைத் தோற்றுவிக்கின்றன. அவன் தன் நெஞ்சிற்குச் சொல்லுவதாக அமைந்தது இந்தப் பாடல்.)*

**நாம்நகை யுடையம் நெஞ்சே! -கடுந்தெறல்**
**வேனில் நீடிய வானுயர் வழிநாள்,**
**வறுமை கூரிய மண்நீர்ச் சிறுகுளத்**
**தொடுகுழி மருங்கில் துவ்வாக் கலங்கல்**
**கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச்**

**சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு**
**செங்கோல் வாலிணர் தயங்கத் தீண்டிச்**
**செறிபுறம் உரிஞிய நெறியயல் மராஅத்து**
**அல்குறு வரிநிழல் அசைஇ, நம்மொடு**
**தான்வரும் என்ப, தடமென் தோளி-**

**உறுகண மழவர் உருள்கீண் டிட்ட**
**ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்**
**கணைவிசைக் கடுவளி எடுத்தலின், துணைசெத்து**
**வெருளேறு பயிரும் ஆங்கண்,**
**கருமுக முசுவின் கானத் தானே.**

*மிக்க கூட்டமான மழவர்கள், தம் தேருருள் உருளும் படியாக உடைத்திட்ட மலையின் வழியிலே செல்லும், சாத்தரது சோறு பொதிந்த பனையோலைக் குடையை, அம்பு போலும் விரைவினையுடைய சூறைக்காற்று எழுப்புகையினாலே உண்டான ஓசையைத், துணையிட்ட கூச்சலென்று கருதி*

வெருண்ட மானின் ஏற்றனது, அத்துணையை அஞ்சேலெனக் குரலிட்டு அழையா நிற்கும் அவ்விடங்களிலே;

கரிய முகத்தையுடைய முசுக்கலைகள் நிறைந்த காட்டிலே;

மிகுதியும் வருத்துதலையுடைய கோடை நீட்டித்த மிகவும் உயர்ந்த ஏற்ற வழியிலே;

நாளுக்கு நாள் வறுமைப்பட்டுக் கொண்டிருக்கும் மண்கலந்த நீரையுடைய சிறிய குளத்தகத்தே தோண்டப்பட்ட குழியின் பக்கத்திலேயுள்ள உண்ணத்தகாத கலங்கல் நீரைக் கொண்டு;

கன்றுகளையுடைய மடப்பம் பொருந்திய பிடியின் மெல்லிய தலையைக் கழுவிவிட்டுத், சேற்றைக்கொண்டு தான் நீராடியதனாலே பிடியோடும் கன்றோடும் வேறுபட்ட வலிய களிறு;

சிவந்த காம்பினையுடைய வெள்ளிய கொத்து அசையத் தன் துதிக்கையாற் பற்றிச், சொறிபொருந்திய தன் முதுகினை உராய்ந்து கொண்ட, வழிக்கு அயலதாகவுள்ள மராமரத்தின் தங்குதற்கமைந்த வரிவரியாயுள்ள நிழலிலே, தங்கி;

பருத்த மென்மையான தோளையுடைய தலைவி, நம்மோடு தானும் வருவள் என்னா நின்றாள்;

நெஞ்சே! இது கேட்க நாம் நகையினை உடையேமாய் இரா நின்றேம்!

(இவ்வாறு, தன். நெஞ்சுக்குக் கூறியவனாகத் தலைமகன் தான் செலவழுங்கினான் என்க.)

முசுவின் கானத்தே ஏறு பயிரும் ஆங்கண் வேனில் நீடிய உயர்வழியிலே களிறு புறமுரிஞிய மராஅத்து நிழலில் அசை இத் தோளி நம்மோடு வரும் என்ப; நெஞ்சே! இது கேட்க நாம் நகையுடையேமாய் இராநின்றேம் என்று கூட்டிப் பொருள் காண்க.

**சொற்பொருள்:** 1. கடுந்தெறல் - மிகுதியாக வருத்துதலை உடைய. 2. வானுயர் வழி - மிகவும் உயர்ந்த ஏற்றவழி. 3. நாள் வறுமை கூரிய - நாளுக்கு நாள் வறுமைப்பட்டுப் போகிய, மண்ணீர் - மண் கலந்த நீர். 4. தொடு குழி - தோண்டப்பட்ட குழி. துவ்வா - உண்ணத்தகாத. 5. மடப்பிடி - மடப்பம் பொருந்திய பிடி; இளைய பிடியுமாம். கயந்தலை - மெல்லிய தலை. 6. வயம் - வலிமை. 7. செங்கோல் வாலிணர் - சிவந்த காம்புகளையுடை வெள்ளிய பூங்கொத்து. 7. தயங்க - அசைய. 8. உரிஞிய - உராய்ந்துகொண்ட. 9. வரி நிழல் - வரிவரியாயுள்ள நிழல்.

*11. உறுகண மழவர் - மிக்க கூட்டமான மழவர்; மழவர், இவர் ஒரு போர்மறக் குடியினர்; இவர்கள் தலைவனாக அதிகமான் உரைக்கப்படுவான். 12. வெண்குடை - வெள்ளிய பனையோலைக் குடை; சோறுண்ட பின் கழித்துப் போடப்பட்டிருக்கும் குடை. முசு - குரங்கினத்துள் ஒன்று.*

**விளக்கம்:** *சேறு கொண்டு ஆடியதனால் மட்களிறு போலத் தோன்றலின் 'வேறுபடு களிறு' (6) என்றார்.*

**உள்ளுறை பொருள் :** *களிறு, தன் பிடியை மண்ணியும், ஏறு தனது துணையைப் பயிர்ந்தும் அவற்றினைத் தலையளி செய்தாற்போல, யாமும் தலைவியைத் தலையளி செய்யா நிற்பேம் என்று தலைமகன் தன் நிலைமை தோன்றக் கூறினானாகவும் கொள்க.*

**மேற்கோள் :** *'உடன் சேறல் செய்கையொ டன்னவை பிறவு 'மடம்பட வந்த தோழிக் கண்ணும்' என்னும், 'கரணத்தின் அமைந்து முடிந்த காலை' என்னும் கற்பியற் சூத்திரப் பகுதியில், தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறியதாக நச்சினார்க்கினியர் இதனைக் கொள்வர்.*

*'எள்ளல் இளமை பேதைமை மடனென் றுன்னப்பட்ட நகை நான்கென்ப' என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்துப் பிறர் மடம் பொருளாக நகை தோன்றற்கு, 'நாம் நகையுடையம் நெஞ்சே... தான் வருமென்ப தடமென் 'தோளி' என்பதனை உதாரணமாகவும்,*

*'பன்றி புல்வா யுழையயே...ஏறெனற்குரிய' என்ற மரபியற் சூத்திரத்துப், புல்வாய் ஏறெனப்பட்டதற்கு 'வெருளேறு பயிரும் ஆங்கண்' என்பதனை உதாரணமாகவும் பேராசிரியர் கொள்வர்.*

**பாட பேதங்கள்:** *1. நாணகை யுடையம் நெஞ்சே. கடுந்திறல். 3. வறுமை கூறிய மண்ணிர்ச் சிறுகுளத். 11. உறுகண், உறுகணை, ஊறுகணை மழவர். 13. கன்மிசை; கனைவிசை.*

## 122. பற்பல தடைகள்

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *(1) தலை மகன் சிறைப்புறத்தான் ஆகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னது. (2) தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியதூஉம் ஆம்.* **சிறப்பு:** *சோழமன்னன் தித்தனின் உறந்தைப் புறங்காடு.*

*(இரவுக் குறியிலே உறவாடிவரும் தலைவியும் அவள் தோழியும் வந்து குறியிடத்திலே காத்திருக்கின்றனர். தலைவன்*

*வருவதற்குச் சற்று நேரம் ஆகவே தலைவி வருந்தினாள். அப்போது, அவன் வந்து மறைந்திருக்கவே, அவன் கேட்குமாறு, இரவு வருவதன் தடைகளை எல்லாம் தோழிக்குச் சொல்லுகிறாள் தலைவி; அல்லது, தோழி 'அவன் வந்தான்' என்று சொல்லத் தொடங்கத், தலைவி தோழிக்குக் கூறுகிறாள்.)*

**இரும்பிழி மகாஅரிவ் அழுங்கல் மூதூர்**
**விழவின் றாயினும் துஞ்சா தாகும்:**
**மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்,**
**வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்**
**பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்.**

**துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்**
**இலங்குவேல் இளையர் துஞ்சின், வைஎயிற்று**
**வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்;**
**அரவவாய் ஞமலி மகிழாது மடியின்,**
**பகலுரு உறழ நிலவுக்கான்று விசும்பின்**

**அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே;**
**திங்கள் கல்சேர்வு கனைஇருள் மடியின்,**
**இல்எலி வல்சி வல்வாய்க் கூகை**
**கழுதுவழங்கு யாமத்து அழிதகக் குழறும்;**
**வளைக்கண் சேவல் வாளாது மடியின்,**

**மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்;**
**எல்லாம் மடிந்த காலை, ஒருநாள்**
**நில்லா நெஞ்சத்து அவர்வா ரலரே; அதன்றால்**
**அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்து,**
**ஆதி போகிய பாய்பரி நன்மா**

**நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்**
**கல்முதிர் புறங்காட் டன்ன**
**பல்முட் டின்றால்-தோழி! நம் களவே.**

*மிக்க தேனுண்டு களிக்கும் மாக்களையுடைமையால் ஆரவாரமிக்க இம் மூதூர்தான், விழாவினை உடையதின் றாயினும் துஞ்சாதாகும்; வளமிக்க கடைவீதியும் பிற வீதிகளும் உறங்கி னாலும் கொடிய பேச்சுடைய அன்னை உறங்காளாவள். பிணித்துக்கொள்ளும் கூற்றினைப்போலத் தப்பவரிய சிறை காவலையுடைய அன்னை துஞ்சினாலும், உறங்காளாவள். பிணித்துக்கொள்ளும் கூற்றினைப்போலத் தப்பவரிய சிறை காவலையுடைய அன்னை துஞ்சினாலும், உறங்காத கண்ணரான ஊர்க்காவலர் விரைந்து வருவர். விளங்குகின்ற வேலையுடைய*

அவ்விளைஞர் துஞ்சினாலும், கூரிய எயிற்றினையும் வலஞ் சுரிந்த வாலினையுமுடைய நாய் குறையா நிற்கும். அரவமிகுந்த வாயையுடைய அந்நாய் குறையாது உறங்கினாலும், பகலுரு வினை ஒக்கும் நிலாவைக் கக்கியபடி விசும்பின் அகன்ற விடத்திலுள்ள சந்திரன் நிலைபெற்று ஒளி விரியா நிற்கும்.

திங்களும் மேற்குமலையை அடைந்து, மிக்க இருள் வந்து தங்குமானால், வீட்டெலியை உணவாகவுடைய வலிய வாயை யுடைய கூகைச் சேவலானது, பேய் இயங்கும் நடுயாமத்து உள்ளம் அழிவுண்டாகக் குழறா நிற்கும். மரப் பொந்தில் வாழும் அக்கூகைச் சேவல் குழறாது உறங்குமாயின், மனையின் கண் செறிக்கப்பட்ட கோழி தனது மாட்சிமைப்பட்ட குரலை எடுத்துக் கூவா நிற்கும்.

இவை எல்லாம் உறங்கின ஒரு காலை, ஒருநாளும் என்னி டத்தினின்று பிரிந்து நில்லாத நெஞ்சினையுடைய தலைவர் வாரலர்; அதனால் -

பருக்கைக் கற்கள் பெய்துள்ள சதங்கைகள் ஒலிக்க, ஓட்டத்திலே மிக்கு, ஆதியென்னும் கதியில் தேர்ந்த, ஆயும் செலவினையுடைய நல்ல குதிரைகளையும், காவல் வேலியையு முடைய தித்தனது உறையூரைச் சூழ்ந்த, கல்முதிர்ந்த புறங்காடு போல, நம் களவு பல இடையூறுகளையும் உடையதாயிருந்தது தோழி!

* என்று, இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. இரும்பிழி - மிக்க தேன்; கள். அழுங்கல் - ஆரவாரம். 3. மல்லல் - வளமை. ஆவணம் - கடைத்தெரு. மறுகு - குறுந்தெருக்கள். 5. பிணிகோள் - பிணித்துக் கொள்ளும். 6. கடுகுவர் - விரைவர். இளையர் - காவலிளையர். 8. சுரித்தல் - சுருண்டிருத்தல். தோகை - வால். ஞாளி - நாய். 9. அரவவாய் - அரவமிகுந்த வாய். 10. பகலுரு உறழ - பகலுருவினைப் போன்ற. 11. மண்டிலம் - திங்கள் மண்டிலம். 12. கனையிருள் - மிக்க இருள். 14. கழுது - பேய். அழிதக - அழியும்படியாக. 19. அரி - பரல். புட்டில் - கெச்சை. 20. ஆதி - ஆதியென்னும் கதி; நேரான ஓட்டம். 21. நொச்சி - காவல். 22. கல்முதிர் - கற்கள் முதிர்ந்த.

**விளக்கம் :** இப் பாட்டு இரவுக்குறி. சிறைக்காவலின் கடுமையை உணர்த்துவது.

**மேற்கோள்:** இப்பாட்டுச் 'சிறைக்காவல் எல்லாம் வந்த செய்யுள்' என்பர் களவியல் உரைகாரர். (சூ.30)

'இருவகைக் குறிபிழைப்பாகிய விடத்தும்' என்னும் கற்பியற் சூத்திரத்துக், 'காணாவகையிற் பொழுது நனியிகப் பினும்' என்னும் பகுதியின் விசேடவுரையில், 'தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், நாய் துஞ்சாமை போல்வனவற்றால் தலைவன் குறியின்கண் தலைவி வரப்பெறாமல் நீட்டித்தலாம்' என்று கொண்டு, அதற்கு இப் பாட்டினை உதாரணமாகக் காட்டியும்;

'களவலராயினும்' என்னும் கற்பியற் சூத்திரத்து, 'அன்னவை பிறவும் செவிலி மேன' என்றதனால், வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்' என்பதுங் கொள்க என்றும்;

'குடையும் வாளும்' என்னும் புறத்திணையியற் சூத்திரத்து, "முற்றிய அக்த்தோன் வீழ்ந்த நொச்சியும்' என்னும் பகுதியின் விசேடவுரையில், 'நொச்சியாவது, காவல்; இதற்கு நொச்சி ஆண்டுச் சூடுதலும் கொள்க, அது மதிலைக் காத்தலும் உள்ளத்தைக் காத்தலும் என இருவர்க்குமாயிற்று. இக்கருத்தானே 'நொச்சி வேலித் தித்தன் உறந்தை' என்றார் சான்றோரும் என்றும், நச்சினார்க்கினியர் கூறுவர்.

'முட்டு வயிற் கழறல்' என்ற மெய்ப்பாட்டியற் சூத்திரத்து, 'முட்டுவயிற் கழறல்' என்னும் பகுதிக்கு, 'நொச்சி வேலி... களவே' என்னும் பகுதியினை உதாரணமாகக் கொண்டு, இது தலைமகன் கேட்பக் கழறியுரைத்தது' என்றும்;

'சேவற் பெயர்க்கொடை சிறகொடுசிவணும், ஆயிருந்தூவி மயிலலங் கடையே' என்னும் மரபியற் சூத்திர உரையில், 'கூகை' சேவலெனப்பட்டதற்கு, 'வளைக்கட் சேவல் வாளாதுமடியின்' என்பதை உதாரணமாகக் காட்டியும் பேராசிரியர் கூறுவர்.

**பாடபேதங்கள்:** 8. மருளும். 9. குரையாது. 22. கன்முது.

## 123. ஒன்றில் கொள்ளாய்!

**பாடியவர்:** காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் **திணை:** பாலை. **துறை:** தலைமகன் இடைச் சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** சோழகளின் வன்மையும் வண்மையும்.

*(பிரிய மனமின்றித் தன் காதலியைப் பிரிந்துபோய்ப் பொருள் தேடிவரச் சென்றான் ஒருவன். இடைவழியிலே அவன் நினைவு அவளை நோக்கியே பிற்பட்டுச் செல்லத் தொடங்கிற்று. அப்போது அவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது இது.)*

**உண்ணா மையின் உயங்கிய மருங்கின்**
**ஆடாப் படிவத் தான்றோர் போல,**
**வரைசெறி சிறுநெறி நிறைபுடன் செல்லும்**
**கான யானை கவினழி குன்றம்**
**இறந்து, பொருள் தருதலும் ஆற்றாய்: சிறந்த**
**சில்லைங் கூந்தல் நல்லகம் பொருந்தி**
**ஒழியின், வறுமை அஞ்சுதி; அழிதகவு**
**உடைமதி-வாழிய, நெஞ்சே! நிலவு**
**என நெய்கனி நெடுவேல் எஃகிலை இமைக்கும்**
**மழைமருள் பல்தோல் மாவண் சோழர்**
**கழைமாய் காவிரிக் கடல்மண்டு பெருந்துறை,**
**இறவொடு வந்து கோதையொடு பெயரும்**
**பெருங்கடல் ஓதம் போல,**
**ஒன்றிற் கொள்ளாய், சென்றுதரு பொருட்கே.**

*பக்க மலையைச் செறிந்த சிறிய வழியிலே மந்தையாய்க் கூட்டங்கூடிச் செல்லும் காட்டுயானைகள்;*

*உண்ணாமையினாலே ஒட்டிப்போன வயிற்றினையுடைய நீராடாத விரதத்து ஆன்றோரைப் போல அழகழியாநின்ற குன்றத்தினைக் கடந்து, பொருளீட்டுதலும் இயலுமாறில்லை;*

*சிலவாகிய ஐந்து பகுதியைப் பொருந்திய கூந்தலாற் பொலிந்த தலைவியது நல்ல மார்பினைப் பொருந்தியபடியே வீட்டிடத்தே தங்கிவிடின் வறுமையை அஞ்சாநின்றாய்;*

*குன்றங் கடந்து சென்று ஈட்டும் பொருளைக் குறித்து;*

*நிலவு என்னும்படியாக நெய்யாற் கனிந்த நெடிய வேற்படையையும் மின்னாநின்ற வாட்படையையும், மழையை ஒத்த பல தோற்கிடுகுப் படையையும், பெரிய வள்ளன்மையையும் உடையவரான சோழரது, ஓடக்கோலை முழுகச் செய்யும் நீத்தத்தையுடைய காவிரியானது சென்றடையும் கடற்பெருந் துறையினிடத்தே, இறால்மீனோடு வந்து கோதையோடு பெயர்ந்து செல்லும் பெரிய கடலலையைப் போல;*

*போதல் தவிர்தல் என்னும் இரண்டனுள் ஒன்றினிடத்தும் துணிவினைக் கொள்ளாயாய்ப், போவதும் வருவதுமாக இருப்பாய்;*

*நெஞ்சே! நீ வாழ்க!*

*(அன்றி, அழிவுண்டாக நீ பிளக்க என்று, தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சினைக் கழறிச் சொன்னான் என்க.)*

**சொற்பொருள் :** *1. உயங்கிய - வாடிய; உறங்கிய - ஒட்டிப் போன. 2. ஆடாப் படிவத்து ஆன்றோர் - நீராடாத விரதத்தை யுடைய ஆன்றோர். 3. நிரைபுடன் செல்லும் - மந்தையாய்க் கூட்டங்கூடிச் செல்லும். 6. ஐங்கூந்தல் - ஐந்து பகுதியையுடைய கூந்தல். நல்லகம் - நல்ல மார்பம். 7. அழிதக உடைமதி - அழிவு பொருந்தப் பிளக்க. 8. நிலவென - நிலவொளி போல. 9. நெய்கனி - நெய்யாற் கனிந்த; வேற்படை நெய்யாற் கனிந்து நிலவென ஒளிசெய்து விளங்கிற்றென்க. 10. மழை - மழை மேகம்.தோல் - கிடுகு. 11. கழை - ஓடக் கோல். 12. இறவு - இறால்மீன். கோதை - நீராடும் மகளிர் கழித்துப் போட்ட தலைமாலை. 13. ஓதம் - அலை.*

**உள்ளுறை:** *ஓதம் இறவினையாதல் கோதையினையாதல் ஒன்றினைக் கொள்ளாது இறவொடு வருதலும், கோதையொடு பெயர்தலும் போல, நெஞ்சமும் போதல் தவிர்தல் என்னும் இரண்டனுள் ஒன்றினைக் கொள்ளாது, முதற்கண் பொருளை உட்கொண்டு செலவயர்தலும், பின்னர் அதனை விடுத்து சில்லைங் கூந்தலாளது ஆகத்தை உட்கொண்டு செலவொழிதலு மாக இருபாலும் வருந்தா நின்றது என்க.*

**மேற்கோள்:** *வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும், என்னும், 'கரணத்தின் அமைந்து முடிந்த காலை' என்னும் கற்பியற் சூத்திரப் பகுதிக்குக் கூறும் விசேட உரையுள், 'விழுமமாவன, பிரியக் கருதியவன் பள்ளியிடத்துக் கனவிற் கூறுவனவும், போவேமோ தவிர்வேமோ என வருந்திக் கூறுவனவும்...பிறவுமாம்' என்று கொண்டு, இப்பாட்டுப் போவேமோ தவிர்வேமோ என்றது என்றும்,*

*'நோயும் இன்பமும்' என்னும் பொருளியற் சூத்திரவுரையில், 'உண்ணாமையின்' என்னும் அகப்பாட்டினுள், இறவொடு வந்து.. பொருட்கே' என்றவழி, 'அழிதக வுடைமதி வாழிய நெஞ்சே' என்றதனால், நிலையின்றாகுதி என நெஞ்சினை உறுப்புடையது போலக் கழறி நன்குரைத்தவாறும், ஓததத்தையும் நெஞ்சையும் உயர்திணையாக்கி உவமவாயிற் படுத்தவாறுங் காண்க" என்றும் கூறுவர் நச்சினார்க்கினியர்.*

**பாடபேதங்கள் :** *1. உறங்கிய. 8. உடையை வாழி நெஞ்சே. 9. லெஃகிலை. 14. ஒன்றிற் கொல்லாய்.*

## 124. பாசறை வருத்தம் வீட!

**பாடியவர்:** *மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *தலைமகன் தேர்ப்பாகற்கு உரைத்தது.*

*(போர்மேல் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், பகைவர் பணிந்து போரும் நின்றதாயின், 'இவ்வருத்தம் தீரத்தேரை விரைந்து செலுத்துக' என்று பாகனிடம் கூறுதல்.)*

**'நன்கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி,**
**வந்துதிறை கொடுத்து, வணங்கினர், வழிமொழிந்து**
**'சென்றீக' என்ப ஆயின், வேந்தனும்**
**நிலம் வகுத்துறாஅ ஈண்டிய தானையொடு**
**இன்றே புகுதல் வாய்வது; நன்றே,**

**மாட மாண்நகர்ப் பாடமை சேக்கைத்**
**துனிதீர் கொள்கைநம் காதலி இனிதுறப்,**
**பாசறை வருத்தம் வீட, நீயும்-**
**மின்னுநிமிர்ந் தன்ன பொன்னியற் புனைபடைக்,**
**கொய்சுவல் புரவிக், கைகவர் வயங்குபரி,**

**வண்பெயற்கு அவிழ்ந்த பைங்கொடி முல்லை**
**வீகமழ் நெடுவழி ஊதுவண் டிரிய,**
**காலை எய்தக், கடவு மதி -மாலை**
**அந்திக் காவலர் அம்பணை இமிழ்இசை**
**அரமிய வியலகத்து இயம்பும்**

**நிரைநிலை ஞாயில் நெடுமதில் ஊரே.**

*'பகைவர் நல்ல ஆபரணங்களை யானைமீது எடுப்பித்துக் கொண்டு வந்து திறையாகக் கொடுத்து வணங்கி வழிபாடு வகுத்துக்கொண்டு ஒன்றுகூடிய தனது சேனையோடும், இன்றே தன் ஊர் புகுதல் பெரிதும் மெய்யாகும்;*

*மாடங்களால் மாட்சிமைப்பட்ட மாளிகையிலே செவ்வியமைந்த பள்ளியிலே வெறுப்புத் தீர்ந்த கோட்பாட்டினையுடைய நம் காதலி இன்பமடையவும், இங்கு நம் பாசறை வருத்தம் ஒழியவும்;*

*வளவிய பெயலுக்கு மலர்ந்த பசிய கொடியிடத்து முல்லை மலர் மணவாநின்ற நெடிய வழியிலே நுகரும் வண்டுகள் பறந்தோட, இக்காலத்தே;*

*மின்னல் நுடங்கினாற்போன்று ஒளிவீசுகின்ற பொன்னால் இயன்று அலங்கரித்த பல்லணத்தினையும், கொய்யப்பட்ட உளையினையுமுடைய புரவியைக் கைவிரும்புகின்ற விளக்கமமைந்த செலவு சிறக்க;*

*அந்திப் பொழுதிற் காக்கும் முறையையுடைய காவலரது அழகிய முரசின் ஆர்க்கின்ற ஓசையானது அகன்ற நிலாவொளி*

முற்றத்தின்கண் ஒலியா நிற்கும், ஒழுங்குபட்ட நிலைமையினை யுடைய மதிலுறுப்பாற் சிறந்த நெடிய மதிலையுடைய ஊர்க்கு மாலையிலே சென்றடையக் கடாவுவாயாக என்று, தலைமகன் தேர்ப்பாகற்கு உரைத்தான் என்க.

**சொற்பொருள் :** 1. நன்கலம் - நல்ல ஆபரணங்கள். நண்ணார் - பகைவர். 2. வழிமொழிந்து - வழிபாடு சொல்லி. 4. நிலம் வகுத்துறா ஈண்டிய - நிலத்தை வகுத்துக்கொண்டு ஒன்று கூடிய படைகள் அணிவகுத்து நிற்கும் நிலையைக் குறிப்பிடுவது இது. 5. வாய்வது - பெரிதும் மெய்யாகும். 6. மாடமாண் நகர் - மாடங்களால் மாட்சிமைப்பட்ட மாளிகை. பாடு அமை சேக்கை - செவ்வியமைந்த பள்ளி. 7. துனிதீர் - வெறுப்புத்தீர்ந்த. 8. வீட - ஒழி. புனை - படை - அலங்கரித்த பல்லணம். 10.சுவல் - பிடரிமயிர். 10. கைகவர் - கை விரும்புகின்ற. 11. அவிழ்ந்த - மலர்ந்த. 11. வீ - மலர் 14. பணை - முரசம். 15. அரமியம் - நிலாவொளி முற்றம். 16 நிரை நிலை ஞாயில் - ஒழுங்குப்பட்ட நிலைமையுடைய மதிலுறுப்பு.

**மேற்கோள்:** 'அரமிய வியலகம்' என்பதனைச் 'சிதைந்தன வரினும் இயைந்தன வரியார்' என்னுஞ் சொல்லதிகாரச் சூத்திரத்துக் காட்டுவதுடன்,

'நன்கலங்...வழிமொழிந்து' என்பதனை, 'மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே' என்னும் பொருளியற் சூத்திரவுரையிற் காட்டி, நன்கலந் திறை கொடுத்தோ மென்றலின், பகைவயிற் பிரிவே பொருள் வருவாயாயிற்று என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

**பாடபேதங்கள்:** 4. நிலம் வருத்துறாஅ. 6. மாடமாநகர். 9. பொன்னயிற்.

## 125. ஓடுவாய் வாடையே!

**பாடியவர்:** பரணர். **திணை:** பாலை. **துறை:** (1) தலைமகன் வினைமுற்றி மீண்டமை உணர்ந்த தோழி தலைமகளுக்குச் சொல்லியது. (2) தலைமகன் வினைமுற்றி மீண்டமை தோழி உணரத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** கரிகால் வளவனோடு வாகைப்பறந்தலையிலே போரிட்டுத் தோற்ற ஒன்பதின்மரைப்' பற்றிய செய்தி.

*(தலைமகன் பிரிந்தான். அவன் மீண்டு வருவதாகக் கூறிய கார்காலமும் வந்தது. வாடையின் வருத்தமோ மிகுதியாயிற்று. அதனால் தலைவி வருந்தினாள். அவன் வினைமுடித்து வந்ததும், அதனை அறிந்தவள் வாடையை விளித்துக் கூறுவதாக அமைந்தது*

*செய்யுள். வாடையை விளித்துக் கூறுவது போலத் தோழி தலைவியிடம் கூறியதாகவேனும், அன்றித் தலைவி தோழியிடம் கூறியதாகவேனும் கொள்ளலாம்.)*

**அரம்போழ் அவ்வளை தோள்நிலை நெகிழ,**
**நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி-**
**ஈர்ங்காழ் அன்ன அரும்புமுதிர் ஈங்கை**
**ஆலி யன்ன வால்வீ தாஅய்**
**வைவால் ஓதி மையணல் ஏய்ப்பத்**

**தாதுஉறு குவளைப் போதுபணி அவிழப்,**
**படாஅப் பைங்கண் பாவடிக் கயவாய்க்**
**கடாஅம் மாறிய யானை போலப்,**
**பெய்துவறிது ஆகிய பொங்குசெலற் கொண்மூ**
**மைதோய் விசும்பின் மாதிரத்து உழிதரப்,**

**பனிஅடூஉ நின்ற பானாட் கங்குல்**
**தனியோர் மதுகை தூக்காய், தண்ணென,**
**முனிய அலைத்தி, முரண்இல் காலை;**
**கைதொழு மரபின் கடவுள் சான்ற**
**செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்**

**விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்**
**வெருவரு தானையொடு வேண்டுபுலத்து இறுத்த**
**பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்,**
**சூடா வாகைப் பறந்தலை, ஆடுபெற**
**ஒன்பது குடையும்நன்பகல் ஒழித்த**

**பீடில் மன்னர் போல,**
**ஓடுவை மன்னால்-வாடை! -நீ எமக்கே.**

*முடிவு போகாத இல்வாழ்க்கையை முற்றுவிக்க வேண்டி: அரத்தாற் போழப்பட்ட அழகிய வளைகள் எம் தோள் நிலையினின்றும் நழுவும்படி;*

*ஈரிய கொட்டை போலும் அரும்புகள் முதிர்ந்த ஈங்கையின் ஆலங்கட்டிபோலும் வெளிய பூக்கள் உதிர்கையினாலே;*

*கூரிய வாலையுடைய் ஓந்தியின் இருண்ட தாடியைப்போலத் தாது நிரம்பிய குவளைமொட்டுக் கட்டவிழவும்;*

*உறங்காத பசிய கண்ணையும், பரந்த அடியையும், பெரிய வாயையும், வற்றிய மதநீரையுமுடைய யானைபோலப் பெய்துவற்றிய பொங்கிய செலவினையுடைய மேகமானது, நீலநிறந்தோய்ந்த வானிடத்துப் பல திசைகளினும் திரிந்து கொண்டிருக்கவும்;*

ஓ வாடைக் காற்றே!

நம்மிருவருக்கும் மாறுபாடில்லாத காலத்தே;

பனி வருத்தாநின்ற பாதிராத்திரி இருளிலே, தனித் துள்ளாரது வலிமையினை ஆராயாயாய்த் தன்னொன்று நின்னை யாம் வெறுக்குமாறு வருத்தா நின்றாய்காண்!

பலரும் கையாற்றொழுந் தன்மையினையுடைய கடவுட் டன்மை அமைந்த செய்வினையாகிய ஓதல் வினையின் பக்கலிலே சென்ற எம் தலைவர் விரைய வந்தனராயின்;

விரிந்த தலையாட்டத்தாற் பொலிந்த விரைந்தசெலவினை யுடைய நன்மை வாய்ந்த குதிரைப்படை முதலாக, மாற்றார்க்கு அச்சம் வருகின்ற பிறபடைகளோடும், தான் வேண்டிய புலத்துத் தங்கிய, பெரிய வளத்தையுடைய கரிகால் வளவனுக்கு முன்பாக நிற்றலை மாட்டாராய், வாகையூர்ப் பறந்தலையிலே, அவன் வெற்றிபெறத் தாம் தோற்றுத் தமது ஒன்பது குடையையும் நடுப்பகலிலே போட்டு ஒழித்த, பெருமை யொழிந்த மன்னர் ஒன்பதின்மரைப்போல, நீயும் மிகுதியும் ஓடுவை!

என்று, தலைமகன் வினைமுற்றி மீண்டமை யுணர்ந்த தோழி, தலைமகட்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. அரம் போழ் அவ்வளை - அரத்தாற் போழப்பட்ட அழகிய வளைகள்; போழ்தல் - பிளத்தல். 2. நிரம்பா வாழ்க்கை - முடிவு போகாத இல்வாழ்க்கை. 3. ஈர்ங்காழ் - ஈரிய கொடை; ஈரிய - இரண்டாகப் பிளக்கப் பட்ட. 3. ஈங்கை - ஒருவகைச் செடி. 4. ஆலி - ஆலங்கட்டி. வால்வீ - வெள்ளிய பூக்கள். 5. ஓதி - ஓந்தி. மையணல் - இருண்டதாடி. 7. படாஅப் பைங்கண் - உறங்காத பசிய கண். பாவடி - பரந்த அடி. கயவாய் - பெரிய வாய். 8. கடாஅம் - மதநீர். 9. கொண்மூ - மேகம். 10. மைதோய் விசும்பு - நீல நிறந் தோய்த்த விசும்பு. மாதிரம் - திசை. 11. பானாட் கங்குல் - பாதிராத்திரி இருள். 12. மதுகை - வலிமை. தூக்கல் - ஆராய்தல். 12. முனிய - வெறுக்க. அலைத்தி - வருத்துகின்றாய். முரண் - மாறுபாடு. 14. கடவுட்சான்ற - கடவுட்டன்மை உடைய. 16. பரியுடை நன்மான் - விரைந்த செலவையுடைய நன்மை வாய்ந்த குதிரைப்படை. 18. முன் நிலை செல்லார் - முன் நிற்றலை மாட்டார். 19. சூடா வாகை - வாகையூர். ஆடுபெற - வெற்றிபெற. 20. நன்பகல் - நடுப்பகல். 21. பீடு - பெருமை.

**மேற்கோள்:** 'பனியடூஉ நின்ற காலை' என்பதனை, முன் பனியாமம் குறிஞ்சிக்கண் வந்ததற்குப் 'பனியெதிர் பருவமும்

உரித்தென மொழிப' என்னும் அகத்திணையியற் சூத்திரவுரையிலும்;

'இப்பாட்டினைக் காட்டி, இதனுள் பலரும் கைதொழும் மரபினையுடைய கடவுட்டன்மை யமைந்த செய்வினையெனவே ஓதற் பிரிதலென்பது பெற்றாம்' என, 'ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன' என்னும் சூத்திரவுரையிலும்;

"சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' என்பதனால், கிழவனும் கிழத்தியும் இல்லறத்திற் சிறந்தது பயிற்றாக்கால் இறந்ததனாற் பயனின்றாதலின், இல்லறம் நிரம்பாதென்றற்கு 'நிரம்பா வாழ்க்கை' என்றார்; இல்லறம் நிகழ்த்துகின்ற காலத்தே, மேல்வரும் துறவறம் நிகழ்த்துதற்காக அவற்றைக் கூறும் நூல்களைக் கற்று, அவற்றின் பின்னர்த் தத்துவங்களை உணர்ந்து, மெய்யுணர்தல் அந்தணர் முதலிய மூவர்க்கும் வேண்டுதலின், ஓதற்பிரிவு அந்தணர் முதலியோர்க்கே சிறந்த தென்றார்" என்றும்;

'வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது' என்னுங் கற்பியற் சூத்திரத்து, 'அரம்போழ் அவ்வளை' என்னும் பாட்டினுள், 'பானாட் கங்குலில்.....முனிய அலைத்தி.... கடவுட்சான்ற செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்... ஓடுவை! 'என்றது இராப்பொழுது அகலாது நீட்டித்ததற்கு ஆற்றாளாய்க் கூறினாளென்று உணர்க' என்றும், நச்சினார்க்கினியர் கூறுவர்.

'தேவர் காரணமாகப் பிரியும் பிரிவிற்கு, இப்பாட்டை 'மேவிய சிறப்பின்' என்னும் சூத்திரவுரையில் இளம்பூரணனார் காட்டுவர்.

**பாடபேதங்கள்:** 5. வைவரலோதி. 6. க்கேழுறு; க்கோளுறு. 9. வோங்குசெலற் 10. திழிதர. 11. பனிபட நின்ற.

## 126. மடமை கெழுமிய நெஞ்சமே!

**பாடியவர்:** நக்கீரர். **திணை:** மருதம். **துறை:** 1. உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லி யது. 2.அல்லகுறிப்பட்டு அழிந்ததூஉம் ஆம். 3. தோழியைப் பின்னின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம். **சிறப்பு:** பல்வெல் எவ்வி; திதியனோடு பொருத அன்னி பற்றிய செய்திகள்.

(தலைவி தலைவனோடு ஊடினாள்; அல்லது அல்ல குறிப்பட்டு அவன் கலங்கினான்; அல்லது தோழியிடம் தன் தலைவியைக் கூட்டுவிக்க வேண்டி நிற்கின்றான். இந்நிலையிலே,

*அவள் நினைவு அவன் உள்ளத்திலே நிலைபெற்று நின்று அவனை வருத்த, அவன் சொல்லியதாக அமைந்தது செய்யுள்.)*

**நினவாய் செத்து நீபல உள்ளிப்,**
**பெரும்புன் பைதலை வருந்தல் அன்றியும்,**
**மலைமிசைத் தொடுத்த மலிந்துசெலல் நீத்தம்**
**தலைநாள் மாமலர் தண்துறைத் தயங்கக்**
**கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்று**

**அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க,**
**மாலிருள் நடுநாட் போகித் தன்னையர்**
**காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு,**
**அவ்வாங்கு உந்தி, அஞ்சொல் பாண்மகள்,**
**நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகில்**

**பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்,**
**கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்**
**பயங்கெழு வைப்பிற் பல்வேல் எவ்வி**
**நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்**
**பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்,**

**திதியனொடு பொருத அன்னி போல**
**விளிகுவை கொல்லோ, நீயே-கிளியெனச்**
**சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப், பெரிய**
**கயலென அமர்த்த உண்கண், புயலெனப்**
**புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்:**

**மின்னேர் மருங்குல், குறுமகள்**
**பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே!**

*கிளி என்னுமாறு சிறியவாக மிழற்றுகின்ற செவ்வாயினையும்,பெரிய கயலென்னுமாறு மாறுபட்ட மையுண்ட கண்களையும், மேகம் என்னுமாறு முதுகிலே தாழ்ந்து இருண்டு விளங்குகின்ற கொத்தான ஐந்து பகுதியான கூந்தலையும், மின்போன்ற நுண்ணிய இடையினையும், இளமையினையும் உடைய தலைவியது பின்னே சார்ந்து நிற்றலைத் தவிராத மடமை நிரம்பிய நெஞ்சமே!*

*நின் சொற்களை நீதானே மெய்யாகக் கருதிப், பலப்பல நினைந்து, பெரிய புல்லிய துன்பமுடையையாய் வருந்துவ தன்றியும்;*

*மலையின் மேற்பாகத்தே தொடுத்த மிக்குச்செல்லுகின்ற வெள்ளத்தாலே முதல் நாளிலே பூத்த பெருமை பொருந்திய மலர், தண்ணிய துறைக்கண்ணே அசையா நிற்க;*

கடலின் கரையை மெலிவிக்கும் காவிரி என்னும் பெரிய யாற்றினுடைய கருமணல் ஒழுகிய நெடிய மடுவின் நிலைத்தற்கரிய ஆழ்ந்த நிலை தளருமாறு;

மயக்கத்தைச் செய்கின்ற இருண்ட நள்ளிரவிலே சென்று, தன் தமையன்மார் நாட்காலையிலே பிடித்துக் கொணர்ந்த, திரண்ட, உடலிடத்தே வரியுள்ள வாளை மீனுக்கு விலையாக, அழகிய உட்குழிந்த கொப்பூழினையும் அஞ்சொல்லினையுமுடைய பாண்மகள், நெடிய கொடிகள் அசையும் கள்ளுமலிந்த வீதியினிடத்தே, பழைய செந்நெல் முகவைய்யை விரும்பாளாய்க், கழங்கினை ஒக்கும் பருத்த முத்தமோடு நல்ல ஆபரணங்களைக் கொள்ளும் பயன் மிக்க ஊர்களையும், பல வேற்படைகளையுமுடைய எவ்வி என்பான்; நீதியை ஆராய்ந்த நல்ல மொழியாலே அடக்கவும் அடங்கானாய்ப், பொன்போலும் பூங்கொத்தினையும், நறிய மலரையுமுடைய புன்னை மரத்தினை விரும்பித் திதியனோடு பொருத அன்னிபோல;

நீயும் இறந்து படுவையோ!

(என்று உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொன்னான் என்க.)

**சொற்பொருள்:** 1. வாய் - மெய். செத்தல் - கருதுதல், உள்ளி - நினைந்து. 2. பைதலை - துன்பம் உடையையாய். 3. நீத்தம் - வெள்ளம். 4. தலைநாள் - முதல் நாள். தயங்க - அசைய. 6. அறல் - கருமணல், கயல் - மடு. அருநிலை - நிலைத்தற்கரிய ஆழ்ந்த நிலை. 7. மாலிருள் நடுநாள் - மயக்கத்தைத் தருகின்ற இருண்ட நள்ளிரவு. தன்னையர் - தன் தமையன்மார். 8. கணை கோட்டு வாளை - திரண்ட உடலிடத்து வரியுள்ள வாளைமீன். 10. நுடங்கும் - அசையும். நறவு - கள். மறுகு - வீதி. 11. முகவை - ஓர் அளவு. 13. வைப்பு - ஊர். 14. நயம்புரி - நீதியை ஆராய்ந்த. 17. விளிகுறை - இறந்துபடுவை. 19. அமர்த்த - மாறுபட்ட. புயல் - மேகம். 20. இருளிய - இருண்ட. பிறங்கு குரல் - விளங்குகின்ற கொத்தான. 22. பின்னிலை - பின்னே சார்ந்து நிற்றலை.

**விளக்கம்:** குறுமகள் பின்னிலை விடா நெஞ்சே! பைதலையாய் வருந்துதலன்றியும், அன்னிபோல விளிகுவை கொல்லோ எனக் கூட்டுக.

**உள்ளுறை:** நீத்தம் மலரை அலைத்ததோடு, கடற்கரையையும் குத்தி யிடித்தாற்போல, இவ்வாற்றாமை தலைவியது குழையும் உள்ளத்தை நெகிழ்வித்தன்றித், தோழியது வலிய உரனையும் சிதைப்பதாயிரா நின்றது; இனி, இவள் ஊடல் ஒழிவள்காண் என்று ஆற்றினானாகக் கொள்க.

*இப்பாட்டினைப் பிற்கூறிய இரண்டு துறைக்கும் கொள்ளின், குறிஞ்சி ஒழுக்கமாம்.*

*'நாம் அல்ல குறிப்பட்டது தலைவியது மெலிய நெஞ்சத்தையும் தோழியது வலிய நெஞ்சத்தையும் ஒரு சேர நெகிழ்விக்கும் என்று ஆற்றினானாம்' என்று, பிற்கூறிய முறைக்கு ஏற்பப் பொருள் உரைத்துக் கொள்க. 'பாண் மகளது வாளை மீனை நெல்முகவைக்குப் பெறாரேனும், முத்தத்திற்கும் நன்கலனுக்கும் பெற்றாற்போல, நாம் தலைவியைக் குறையிரத்தலாற் பெறேமாயினும், நன்கலன் நல்கிப் பெறுவேம்' என்று தலைமகன் ஊக்கத்துடன் சொல்லி ஆற்றினானாகக் கொள்ளலும் கூடும்.*

**மேற்கோள்:** *'மெய் தொட்டுப் பயிறல்' என்னும் களவியற் சூத்திரத்து, 'மற்றைய வழியும்' என்னும் பகுதிக்கு இப் பாட்டினைக் காட்டி, 'இது நெஞ்சினை இரவு விலக்கியது' என்பர் நச்சினார்க்கினியர்.*

**பாடபேதங்கள்:** *1. நின்செயல். 4. ப்பரப்பிக். 6. அறல் வாழ், 7. போகிய தன்னையர். 12. கலந் தரூஉம். 17. விளிகுவை கொல்லோ சொன்மோ?*

## 127. வழிநாள் தங்கலர்!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.* **சிறப்பு:** *இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வென்றி மேம்பாடு.*

*(பொருள் தேடிவரச் சென்றிருந்த தலைவன் வராதது கண்டு வாடி மெலிந்தாள் தலைவி. அவள் வருத்தத்தைப் போக்குமாறு, தோழி இப்படி அவளுக்கு உறுதிசொல்லித் தேற்றுகிறாள்.)*

**இலங்குவளை நெகிழச் சாஅய், அல்கலும்,**
**கலங்கஞர் உழந்து, நாம் இவண் ஒழிய**
**வலம்படி முரசின் சேர லாதன்**
**முந்நீர் ஓட்டிக் கடம்புஅறுத்து, இமயத்து**
**முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து,**

**நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்**
**பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்**
**பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்**
**ஒன்றுவாய் நிறையக் குவைஇ, அன்றவண்**
**நிலம்தினத் துறந்த நிதியத்து அன்ன,**

**ஒருநாள் ஒருபகற் பெறினும், வழிநாள்**
**தங்கலர் - வழி, தோழி!- செங்கோற்**
**கருங்கால் மராஅத்து வாஅல் மெல் இணர்ச்**
**சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடிக்,**
**கல்லா மழவர் வில்லிடம் தழீஇ,**

**வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை**
**மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்**
**பழிதீர் காதலர் சென்ற நாட்டே.**

*'இலங்குகின்ற கைவளை' நெகிழுமாறு மெலிந்து, தினமும் கலங்கும் துன்பமுழந்து, நாம் இவ்விடத்தே தனித்திருப்பவும், நாட்டிலே,*

*கடலிடத்தே நாவாயைச் செலுத்திக் கடம்பினை அறுத்து, அதுகொண்டு இயற்றிக்கொண்ட வெற்றிமிக்க முரசினை யுடைய சேரலாதன், இமயமலையில் முன்னோரெல்லாம் வியக்க வளைந்த விற்பொறியைப் பொறித்து, (மீண்டும் திரும்பிவந்து), மாந்தைக் கண்ணுள்ள நன்மையினையுடைய தன் கோயிலின் முற்றத்துப் பகைவர் பணிந்து திறையாகத் தந்த பெருமைமிக்க நல்ல ஆபரணங்களோடு, பொன்னாற் செய்த பாவையையும், வயிரங்களையும், ஆம்பல் என்னும் எண்ணின் அளவுக்கு நிறையக் குவித்து, அன்று நிலந் தின்னும்படி அவ்விடத்தே துறந்த, அந்நிதியன்ன நிதியினை நம் காதலர் ஒருநாள் ஒருபகலிற் பெற்றாலும்;*

*சிவந்த கொம்பினையும் கரிய காம்பினையுமுடைய மரா மரத்தின் வெளிய மெல்லிய பூங்கொத்தினைச் சுரிந்து வளைந்த தலைமயிர் பொலிவுறச் சூடி, ஆறலைக்குந் தொழிலையன்றிப் பிற தொழிலைக் கல்லாத மழவர், வில்லை இடப்புறத்திலே தழுவிச், சுரத்திடையே வருகின்ற சாத்தரைப் பார்க்கும், அச்சம் வருகின்ற கவர்த்த பாலைநில வழிகளையுடைய,மொழி வேறுபட்ட திசையிலுள்ளா ராயினும்;*

*மறுநாள் தங்கார்; தோழி நீ வாழ்க!*

*என்று, பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.*

*வளை நெகிழ மெலிந்து அருருழந்து நாம் இவண் ஒழிந்திருக்க, நம் காதலர் சேரலாதன் துறந்த நிதியன்ன நிதியை, ஒருநாள் ஒருபகலிலே தாம் சென்ற நாட்டின்கண் பெறினும், வழிநாள் ஆண்டுத் தங்கலர் என்று கூட்டிப் பொருள் காண்க.*

**சொற்பொருள்:** 1. இலங்கு வளை - விளங்குகின்ற வளை. 2. கலங்கு அஞர் உழந்து - கலங்கும் துன்பத்தினை அடைந்து வருந்தி. 3. வலம்படு முரசு - வெற்றிமிக்க முரசு. 4. முந்நீர் - கடல். கடம்பு - கடம்பாகிய பகைவரது காவல் மரம். 5. வணங்கு வில் - வளைந்த விற்பொறி. 6. மாந்தை - சேரலாதனின் கோநகர். முற்றம் - கோயில் முற்றம்; கோயிலாவது அரண்மனை. 7. பணிதிறை தந்த - பணிந்து திறையாகத் தந்த. 8. ஆம்பல் - பேரெண். 10. நிலத்தினத் துறந்த - நிலந் தின்னுமாறு துறந்த; நிலத்தின்னல் - எடுத்தினத் துறந்த - நிலத் தின்னுமாறு துறந்த; நிலந்தின்னல் - எடுத்துப் பயன்படுத்துதல் இன்மையால். 12. செங்கோல் - சிவந்த கொம்பு. 13. கருங்கால் - கரிய காம்பு. மராஅம் - மரமரம். வாஅல் - வெண்மையான. 13. சுரிந்து வணர் பித்தை - சுரிந்து வளைந்த தலைமயிர். 15. கல்லா மழவர் - ஆறலைத் தலையன்றிப் பிற தொழிலைக் கல்லாத கல்லா மழவர் 16. வருநர் - வருகின்ற வாணிகச் சாத்தினர். வெருவரு - அச்சம் வருகின்ற. 17. பழிதீர் - பழியினின்றும் நீங்கிய.

**விளக்கம்:** காதலர் பொருளால் மயங்கியும், போரால் வருந்தியும் வேற்று நாட்டுத் தங்குவாரல்லர் என்று தலைவனது புகழும் வீரமும் எடுத்துக் கூறித் தோழி வற்புறுத்தினாள் என்று கொள்க. பழிதீர் காதலர் ஆதலின், செய்வினை முற்றாமையே, அவர் வரும் நாள் கடந்து போவதற்குக் காரணம் என்பதுமாம்.

## 128. தளரடி தாங்கும் நெஞ்சு!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

(இரவுக்குறியிடத்திலே வந்து தலைவன் வரவுக்கு எதிர் நோக்கிக் காத்திருக்கும் தலைவி, தன் தோழியிடத்திலே தன்னுடைய மனநிலையினை இப்படிக் கூறுகிறாள். அவன், சிறைப் புறத்தே நின்று கேட்டுக்கொண்டிருப்பான் என்பது குறிப்பு.)

**மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே;**
**கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே**
**யாமம் கொளவரின் கனைஇக், காமங்**
**கடலிலும் உரைஇக், கரைபொழி யும்மே**
**எவன்கொல்-வாழி, தோழி! -மயங்கி**

**இன்னம் ஆகவும், நன்னர் நெஞ்சம்**
**என்னொடும் நின்னொடும் சூழாது, கைம்மிக்கு,**

**இறும்புபட்டு இருளிய இட்டருஞ் சிலம்பிற்**
**குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்,**
**கான நாடன் வரூஉம், யானைக்**

**கயிற்றுப்புறத் தன்ன, கன்மிசைச் சிறுநெறி,**
**மாரி வானந் தலைஇ நீர்வார்பு,**
**இட்டருங் கண்ண படுகுழி இயவின்,**
**இருளிடை மிதிப்புழி நோக்கி, அவர்**
**தளர்அடி தாங்கிய சென்றது, இன்றே?**

*ஊரம்பலங்கள் ஒலியவிந்தவாய் மனைகளும் உறங்கின;*

*கொன்றால் ஒத்த கொடுமையோடு இன்று நடுயாமப் பொழுதும் வருமாயின், காமமானது செறிந்து கடலினுங் காட்டிற் பரந்து, பின்னர்க் கரைந்து ஒழியும்;*

*நாம் இவ்வண்ணமாயிருப்பவும், நம் நல்ல நெஞ்சமானது மயங்கி, என்னோடும் நின்னோடும் ஆராயாது, கைகடந்து;*

*சிறுகாடிட்டு இருண்ட குறுகலான கடத்தற்கரிய பக்க மலையினிடத்துள்ள, குறுமையினையுடைய சுனையிடத்தே பூத்த குவளை மலரை, வண்டு மொய்க்கும்படி சூடியவனாகக் காணநாடன் வாராநின்ற, யானை முதுகிற்கிடந்த கயிற்றுத் தழும்பு போன்ற கன்மிசையேயுள்ள சிறிதான வழியிலே;*

*மாரிக்காலத்து மேகம் மழைபெய்து நீங்கக், சூதிரிலே நீர் ஒழுகிச் செல்லுவதற்கு அரிதாயிருக்கும் குறுகிய இடத்தேயுள்ள படுகுழிகளையுடைய வழியிலே;*

*இருளினிடையே அவர் மிதிக்குந்தோறும் பார்த்து, அவரது தளரா நின்ற அடியைத் தாங்கியுதவும் பொருட்டாக, இன்று அவ்விடம் சென்றதே!*

*அஃது என்ன பயனைக் கருதியோ? தோழி அதனைச் சொல்வாயாக, நீ வாழ்க!*

*என்று,இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்று கொள்க.*

*மன்று பாடவிந்து மனைமறந்தன்று; காமம் கரைபொழியும்; நாம் இன்னமாகவும், நெஞ்சம் கான நாடன் வரூஉம் சிறி நெறிக்கட் படுகுழியியவின், அவர் இருளிடை மிதிப்புழி நோக்கித் தளரடி தாங்கி இன்று சென்றது; இஃது என்னையோ! என்க.*

*தான் தலைவனைப் பிரிந்து வருந்தியிருப்பவும், தன் நெஞ்சம் தலைவனது தளரடியைத் தாங்கச் சென்றது அதன் அன்பு மிகுதியினால் என, அதன் அன்பு மிகுதியை நோக்கி, 'நன்னர் நெஞ்சம்' என்றனள்.*

**சொற்பொருள்:** *1. மன்று - ஊர் அம்பலம். மனை - இல்லங்கள். மடிந்தன்று - உறங்கின. 2. கொன்றோரன்ன - கொன்றாலொத்த; ஓர், அசை. 3. கனைஇ - செறிந்து, உரைஇ - பரந்து. கரைபொழியும் - கரைபு ஒழியும்; கரைபு - கரைந்து, 7. கைமிக்கு - கைகடந்து. 8. இறும்பு - சிறுகாடு. இட்டருஞ்சிலம்பு - குறுகிய கடத்தற்கரிய பக்கமலை. 12. மாரிவானம் - மாரிக் காலத்து மேகம். 13. இயவு - வழி.*

**மேற்கோள்:** *'மாயோன் மேய காடுறை யுலகமும்' என்னும்அகத்திணையியற் சூத்திரவுரையில், இறும்புபட்.... சிறுநெறி" என்பது குறிஞ்சி ஒழுக்கத்திற்குக் குறிஞ்சி நிலம் உரியதாயிற்று என்றும்;'*

*'காடு மலையு முல்லை குறிஞ்சி, கூதிர் யாமம் என்மனார் புலவர்' என்ற சூத்திரவுரையில், குறிஞ்சிக்கட் கூதிரும் யாமமும் வந்ததற்கு இப் பாட்டினைக் காட்டி, இஃது இரவுக் குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்கு உரைப்பாளாக உரைத்தது என்றும்;*

*'மறைந்தவற் காண்டல்' என்னும் களவியற் சூத்திரத்துப் 'பொழுது மாறும்புரைவ தன்மையின், அழிவு தலைவந்த சிந்தைக் கண்ணும்' என்னும் பகுதிக்கு இப் பாட்டினைக் காட்டிக், 'காமம் கரைபு ஒழியாநிற்கவும் என்ன நன்றி கருதி இருவரொடுஞ் சூழாது சென்றது நெஞ்சு' எனப் பொழுதும் நெறியும் இரண்டும் கூறினாள்; 'மனைமடிந்தன்றே' என்பது பொழுது; 'சிறுநெறி' என்றது ஆற்றின்னாமை; இதனைப் பொருளியலுட் கூறாது, தன் வயின் உரிமையும், அவன் வயிற் பரத்தைமையும் பற்றிக் ஈண்டுக் கூறினாள் என்றும்;*

*"பொழுதும் ஆறும் காப்பும்' என்னும் பொருளியற் சூத்திர உரையில், 'மன்றுபா டவிந்து' என்பது, பொழுது வழுவுதலிற் குற்றங் காட்டியது என்றும்;*

*'நோயும் இன்பமும்' என்னும் பொருளியற் சூத்திர உரையில், இப்பாடலில் 'நெஞ்சம் தளரடி தாங்கிய சென்றது இன்றே' என்பது, உறுப்புடையது போல அழுகைபற்றிக் கூறியது என்றும், நச்சினார்க்கினியர் காட்டுவர்.*

*'முட்டுவயிற் கழறல்' என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்து, 'அச்சத்தின் அகறல்' என்னும் மெய்ப்பாட்டிற்கு இதனை*

உதாரணமாகக் காட்டி, 'இதன் கருத்தாவது, நாம் இவர் இருளிடைவருதல் ஏதம் அஞ்சி அகன்று அவலித்திருப்பவும், என்னையும் நின்னையும் கேளாது என்னெஞ்சு போவானேன் என்றவாறாயிற்று, என்பர் பேராசிரியர்.

'செல்வர் மனத்தின் ஓங்கி' என்னும் சிந்தாமணிச் செய்யுள் உரையில், 'யானைக் கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி' என்பது, வழியின் ஒக்கத்தைக் கூறியதாக நச்சினார்க்கினியர் கொள்வர்.

**பாடபேதங்கள்:** *3. கோள்வரின். 6. இன்னண. 13. படுங் குழியியவின்.*

## 129. மனம் திறந்து சொன்னார்!

**பாடியவர்:** *குடவாயில் கீரத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளுக்குத் தோழி சொல்லியது.*

*(பிரிவிடை வேறுபட்டாள் தலைவி. அவளுக்கு, முன்னர்க் களவுக் காலத்திலே தலைவன் தன் காதல்மிகுதியைத் தெரிவித்துச் சொன்னதைக் காட்டி, அவன் வருவான் என்கிறாள் தோழி.)*

**'உள்ளல் வேண்டும் ஒழிந்த பின்' என**
**நள்ளென் கங்குல் நடுங்குதுணை யாயவர்**
**நின்மறந்து உறைதல் யாவது? 'புல் மறந்து**
**அலங்கல் வான்கழை உதிர்நெல் நோக்கிக்'**
**கலைபிணை விளிக்கும் கானத்து ஆங்கண்,**

**கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத்**
**தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்**
**பொதிவயிற்று இளங்காய் பேடை ஊட்டிப்,**
**போகில்பிளந் திட்ட பொங்கல் வெண்காழ்**
**நல்கூர் பெண்டிர் அல்குற் கூட்டும்**

**கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்பக்,**
**கொழுப்புஆ தின்ற கூர்ம்படை மழவர்,**
**செருப்புடை அடியர், தெண்சுனை மண்டும்**
**அருஞ்சுரம் அரிய வல்ல; வார்கோல்**
**திருந்திழைப் பணைத்தோள் தேன்நாறு கதுப்பின்,**

**குவளை உண்கண், இவளொடு செலற்கு 'என**
**நெஞ்சுவாய் அவிழ்ந்தனர் காதலர்-**
**அஞ்சில் ஓதி ஆயிழை! -நமக்கே.**

அழகிய சிலவாகிய கூந்தலையும், ஆராய்ந்த ஆபரணங் களையும் உடைய தலைவியே!

இவளை நாம் பிரிந்து போனபின், இவள் இரந்துபாட்டை நினைந்து நாம் இரங்க வேண்டுமன்றோ என நினைந்து, நள்ளென்னும் இரவில், நடுங்குந் துணையினரான நம் தலைவர்;

தான் புல்லுத் தின்னுதலை மறந்து, காற்றால் அசைந்தாடும் பெரிய மூங்கிலினின்றும் உதிரும் நெல்லை நோக்கிக் கலைமான் தன் பிணையை அழைக்கும் கானத்திடத்தே;

கற்பாறையோடு சேர்ந்து அமைந்திருந்த வடுப்பட்ட சிற்றில்லிலே;

தாழியிடத்தே செருக்கி வளர்ந்த கொழுவிய இலையை யுடைய பருத்தி மொட்டினிடத்துள்ள இளங்காயைத் தன் பேடைக்கு ஊட்டி, ஆண் பறவைகள் கொத்திப் பிளந்து போட்ட பஞ்சி பொங்கி எழுந்த, வெளிய அப் பருத்திக் கொட்டையை, வறுமையுற்ற பெண்டிர் தம் அல்குலிடத்துக் கூட்டா நிற்கும்;

கலங்குதற்குக் காரணமான போர்முனையையுடைய சிறிய ஊரினர் கையைத் தலைமீது வைத்து வருந்தும்படி;

அவருடைய கொழுத்த ஆவைக் கவர்ந்து சென்று தின்ற கூரிய படையையுடைய மழவர், செருப்பினைப் பூண்ட அடியின ராய்த், தெள்ளிய சுனைக்கண் நீரருந்த நெருங்கும் அரிய சுரமானது;

நீண்ட கோற்றொழில் அமைந்த திருந்திய ஆபரணங் களையும்,மூங்கில் போன்ற தோளையும், வண்டுபடுகின்ற கூந்தலையும், குவளைபோன்ற மையுண்ட கண்ணையுமுடைய இத் தலைவியுடன் செல்லுவதற்கு அரியவல்லவாய் இராநின்றன என்று, காதலர் நமக்குத் தம் மனக்கருத்தை வெளியிட்டனர்;

அவ்வாறாகியபோது, நின்னை மறந்து நம் காதலர் வேற்று நாட்டிடத்தே தங்குதல் என்பது எவ்வாறு கூடும்?

என்று, தலைமகட்குத், தோழி தலைமகன் பிரிந்த காலத்துச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. ஓதி - மகளிர் கூந்தல். 2. நள்ளென் கங்குல் - நள்ளென்னும் இரவு. 3. புல் மறந்து - புல்லுண்ணலை மறந்து. 4. அலங்கல் - அசைந்தாடும். வான்கழை - பெரிய மூங்கில். 6. கல் சேர்பு இருந்த - கற்பாறையோடு சேர்ந்திருந்த. கதுவாய்க் குரம்பை - வடுப்பட்ட சிற்றில். 7. கலித்த - செருக்கிவளர்ந்த. கோழ்

இலை - கொழுவிய இலை. 8. பொதி - மொட்டு. 9. போகில் - புள். 10. 'பெண்டிர்' என்றது வறுமையுற்ற பெண்டிரை. அல்குற் கூட்டும் - மடியினிடத்தே கூட்டா நிற்கும்; 'அல்கற் கூட்டும்' பாடமாயின்,இரவிற் கூட்டும். 15. தேன் நாறு கதுப்பு - வண்டு மொய்க்கும் கூந்தல். 17. நெஞ்சு வாய் அவிழ்ந்தனர் - மனக்கருத்தை வாய்விட்டுச் சொல்லினர்.

**விளக்கம்:** 'புன் மறைந்து' (3) என்னும் பாடத்திற்குப் புல்லும் புதரிலே மறைந்திருந்து என்றுபொருள் கொள்க.

**பாடபேதங்கள் :** 3. புன்மறைந்து 9. பொங்கர் வெண்காழ் 10. அல்கற் கூட்டும்.

## 130. பார்த்தால் பேச மாட்டீர்கள்!

**பாடியவர்:** வெண்கண்ணனார். **திணை:** நெய்தல். **துறை:** கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது. **சிறப்பு:** கொற்கை முன்றுறைச் சிறப்பு.

*(தலைவன் தன் ஆண்மையெல்லாம் தோற்றும் பெண் ஒருத்திபால் மையல்கொண்டு மயங்கினான். அவனை இடித்துரைத்துத் தோழர்கள் பழித்தனர். அதற்கு அவன் எதிர் மறுத்து உரைப்பது இது.)*

**அம்ம வாழி, கேளிர்! முன்நின்று**
**கண்டனிர் ஆயின், கழறலிர் மன்னோ-**
**நுண்தாது பொதிந்த செங்காற் கொழுமுகை**
**முண்டகம் கெழீஇய மோட்டுமணல் அடைகரைப்**
**பேஎய்த் தலைய பிணர்அரைத் தாழை**

**எயிறுடை நெடுந்தோடு காப்பப், பலவுடன்**
**வயிறுடைப் போது வாலிதின் விரீஇப்,**
**புலவுப்பொருது அழித்த பூநாறு பரப்பின்**
**இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்**
**கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்**

**நற்றேர் வழுதி கொற்கை முன்துறை**
**வண்டுவாய் திறந்த வாங்குகழி நெய்தற்**
**போதுபுறங் கொடுத்த உண்கண்**
**மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே.**
**பாங்கரே! யான் சொல்வதனைக் கேட்பீராக!**

*நுண்ணிய தாது மூடிய சிறந்த காம்பினையும், கொழுவிய மொட்டினையுமுடைய, கழிமுள்ளி பொருந்திய மேடிட்ட மணலடைந்த கரையின்கண்ணே;*

பேய்போன்ற தலையையுடைய சருச்சரை பொருந்திய அரையினையுடைய தாழையினது;

முள்ளாகிய பற்களையுடைய நெடிய மடல்கள் பல ஒரு சேரக் காப்ப;

நடுவிடத்தைப் பிறப்பிடமாக வுடைய மொட்டுக்கள் தூய்மையாக விரிந்து, புலால் நாற்றத்தினைப் பொருது வென்று அழித்ததனால், பூமணமே கமழும் கடற்பரப்பினிடத்தே, பரக்கின்ற அலைகள் கரையிலே தந்த குளிர்ந்த கதிர்களை யுடைய முத்தங்கள், விரும்பிய நடையையுடைய குதிரையின் காலை வடுப்படுத்து முடஞ்செய்யும், நல்ல தேரையுடைய வழுதியின் கொற்கைப் பட்டினத்து, முதன்மையான கடற்றுறையின் கண்ணே;

வண்டினால் வாய் விரிக்கப்பெற்ற வளைந்த கழியிடத்துள்ள நெய்தற்போது, அழகினுக்குத் தோற்றுப் புறங் கொடுத்த, ஒளிபொருந்திய முகத்தின்கண்ணுள்ள மையுண்ட க்ண்ணின் காதலொடு பொருந்திய, வனப்பு மிகுந்த பார்வையினை;

எதிர் நின்று நீர் கண்டீராயின், இவ்வாறு என்னை இடித்துக் கூறவே மாட்டீர்.

அது காணவில்லையாதலால், எம்மை இடித்துக் கூறுவீராயினீர்.

என்று, பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தான் என்க.

**சொற்பொருள்:** 1. கேளிர் - கேட்பீராக! 4. முண்டகம் - கழிமுள்ளி. 5. பிணர் - சருச்சரை. 8. பரப்பின் - கடற்பரப்பின் கண். 9. ஈர்ங் கதிர் - தண்ணிய ஒளிக்கதிர். 10. கவர் நடை - விரும்பும் நடை. கால்வடுத் தபுக்கும் - காலைவடுப்படுத்து முடம்படுக்கும். 12. வாங்கு கழி - வளைந்த கழி. 14. மதை இய - வனப்பு மிக்க.

**உள்ளுறை பொருள்:** கழிமுள்ளியின் மொட்டோடு தாமரையின் மொட்டுப் பொருந்தியிருந்ததென்பது காதற்றோழி யோடு தலைமகள் கூடியிருந்த தன்மையாகவும்; தாழையின் தோடுகள் பல சூழ்ந்து அம் முகையைக் காத்திருந்தது, ஆயவெள்ளம் தலைமகளை இடைவிடாமற் சூழ்ந்திருந்த தன்மையாகவும்; உள்ளுறையாகப் பொருள்படக் கூறிப், பாங்கற்குத் தலைமகள் தான் கண்ட தலைமகளது இயல்பினை உரைத்தானாகக் கொள்க.

*தாழம்பூக் கழியின் புறத்துள்ள புலால் நாற்றத்தினை நீக்கித் தன் மணமே கழியிடமெல்லாம் கமழுமாறு செய்தது போலத், தலைவியின்பாலுள்ள என் காதல் நம் உறுதிமொழிகளை யெல்லாம் முற்றவும் நீக்கி, அக் காதலையே பெருக்குவதாயிரா நின்றது என்று, இறைச்சியிற் பொருள்பட, உள்ளவுரனோடு கிளந்து, கழற்றெதிர் மறுத்தானாகவும் கொள்க.*

**மேற்கோள்:** *பாங்கன் கழறத் தலைமகன் கழற்றெதிர் மறுத்ததற்கு இப்பாட்டினை நக்கீரனார் மேற்கோள் காட்டுவர் (இறையனார் களவியல் 3.)*

**பாடபேதங்கள் :** *3. குறுமுகை. 5. பெய்தல் தலைஇய 6. நெடுங்கோடு. 7. விரிய; விரைஇ. 8. பொருதிழிந்த. 10. கவர்பரி; கவர்காற். 12. திறக்கும்; துறந்த. 15. புறக்கொடுத்த.*

## 131. யான் வாரேன்!

**பாடியவர்:** *மதுரை மருதன் இளநாகனார்.* **திணை :** *பாலை.* **துறை:** *பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.* **சிறப்பு;** *நடுகல் நட்டு வீரரைப் போற்றும் பழைய தமிழர்மரபு.*

*(பிறருக்கு ஈந்து புகழ்பெற விரும்பினான் ஒருவன் அதற்குப் பொருள்தேடி வரவும் அவன் நெஞ்சம் தூண்டியது. ஆனால், தலைவியைப் பிரியவும் அவனால் முடியவில்லை. தன் நெஞ்சிற்கு இவ்வாறு கூறிப் போகாதேயே அமைகின்றான்.)*

**'விசும்புற நிவந்த மாத்தாள் இதணைப்
பசுங்கேழ் மெல்லிலை அருகுநெறித் தன்ன,
வண்டுபடுபு இருளிய, தாழ்இருங் கூந்தல்
சுரும்புஉண விரிந்த பெருந்தண் கோதை
இவளினும் சிறந்தன்று, ஈதல் நமக்கு என,**

**வீளை அம்பின் விழுத்தொடை மழவர்
நாள்ஆ உய்த்த நாமவெஞ் சுரத்து
நடைமெலிந்து ஒழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்
பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்,**

**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
வெருவரு தகுந கானம் 'நம்மொடு
வருக' என்னுதி ஆயின்,
வாரேன்; நெஞ்சம்! வாய்க்கநின் வினையே.**

வானமளாவ உயர்ந்த, கரிய அரையினையுடைய இதணை மரத்தின் பசிய நிறமுடைய மென்மையான இலைகள், ஒன்றனருகே ஒன்று ஒடித்து வைக்கப்பட்டாற்போல, வண்டு மொய்த்து இருண்ட முதுகின்புறத்தே தாழ்ந்த கரிய கூந்தலையும், சுரும்பினம் உண்ண விரிந்த பெரிய குளிர்ச்சியான மாலையினையுமுடைய இத் தலைவியினும், வறியார்க்கு ஈதலே நமக்குச் சிறந்ததென;

'விள்' என்னுஞ் சீழ்க்கை ஒலியினைக் கொண்ட, தப்பாத அம்புத் தொடையையுடைய வீரர், நாட்காலையிலே வெட்சி சூடினராய், 'ஆன் நிரையைக் கவர்ந்துகொண்டு போன, அச்சம் பொருந்திய வெம்மைகொண்ட பாலைநில வழியிடத்தே, தூரத்து நடையினாலே மெலிந்து தம் தாயுடன் செல்ல மாட்டாது தங்கிவிட்ட நினைவுத் துன்பத்தையுடைய கன்றுகளின் கடைக்கண்களினின்றும் ஒழுகும் நீரைத் துடைத்த கரந்தை வீரர்களது;

பெயரும் பெருமையும் எழுதி, மயிற்பீலி சூட்டிய, பாலை நில வழிதோறும் உயர்ந்து தோன்றுகின்ற நிலையான நடுகற்க ளிடத்து, அந் நடுகலிடத்தவன் பிடித்த வேலை நட்டு, அதன் கண் சார்த்தப்பெற்ற கேடகங்கள், வேற்று வேந்தரது போர் முனையைப் போலத் தோன்றாநின்ற, அச்சம் வருகின்ற கானத்தே;

நெஞ்சமே! நம்மொடு நீ வருக என்று அழைப்பையாயின்' யான் வாரேன்; நீயே செல்வாயாக; நின்காரியம் கைகூடுவதாக!

என்று, பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் கூறினான் என்க.

**சொற்பொருள்:** 1. இதணை - ஒரு மரம், மாத் தாள் இதணை - கரிய அரையினையுடைய இதணை மரம்; 3. வண்டு படுபு - வண்டு மொய்த்து. 6. வீளை அம்பு - 'விள்' என்னும் சீழ்க்கை ஒலியோடு தொடுக்கப்படும் அம்பு. 11. பிறங்கு நிலை - உயர்ந்து தோன்றுகின்ற நிலையான. 12. 'வேல்'என்றது நடுகலிடத்தவன் கைக்கொண்டிருந்த வேலினை. 15. வாய்க்க - வாய்ப்பதாக; காரியம் கைகூடுக.

வண்டு மொய்த்து இருண்ட முதுகின் புறத்தே தாழ்ந்த கரிய கூந்தலுக்கு, 'விசும்புற நிவந்த மாத்தாள் இதணை பசுங்கேழ் மெல்லிலை அருகு நெறித்தன்ன' என்று உவமித்துக் காட்டுகின்றார். இதனாற் கூந்தலின் இயல்பான கருமையும் நெடுமையும், அதன்பால் சூட்டப்பட்டிருக்கும் தண்கோதையின் சிறப்பும் விளங்கும்.

*இதனை இலை அருகு நெறித்தன்ன வண்டுபடுபு இருளிய கூந்தற் கோதை இவளினும், நமக்கு ஈதல் சிறந்தன்று என் நெஞ்சே, கானம் நம்மொடு வருக என்னுதியாயின், வாரேன்; நின் வினை வாய்க்க என்று கூட்டிப் பொருள் காண்க.*

**மேற்கோள்:** *'ஆபெயர்த்துத் தருதலும்' என்னும் 'வெறியறி சிறப்பின் என்னும் புறத்திணையியற் சூத்திரப் பகுதிக்கு, இப் பாட்டினை உதாரணமாகக் காட்டி, இதனுள் மறவர் நாளாவுய்த்த' என, வேந்துறு தொழிலல்லாத வெட்சித் திணையும், கரந்தைக்கண்ணே கொள்க என்றும்;*

*'பெயரும் பீடும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்'என, அகத்திற்கும் வருதலின், பொது வியலாயிற்று என்றும்;*

*'நோயும் இன்பமும்' என்னும் பொருளியற் சூத்திரத்து வருகவென்னுதி யாயின், வாரேன், நெஞ்சம்! வாய்க்க நின் வினையே! என்பது, மறுத்துரைப்பது போலத் தறுகண்மை பற்றிப் பெருமிதங் கூறிற்று என்னும் நச்சினார்க்கினியர் கூறுவர்.*

**பாடபேதங்கள்:** *1. ஈகைப். 6. வீவாய் அம்பின். 12. படுக்கும். 15. வோர நெஞ்சம்.*

## 132. நின்னுடன் கொண்டு போய்விடுக!

**பாடியவர்:** *தாயங் கண்ணனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தோழி தலைமகளை இடத்து உய்த்துவந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று வரைவுகடாயது.*

*(குறித்த இடத்திலே தலைமகளைக் கொண்டு சேர்த்து விட்டுத், தலைமகன் அவளை விரைந்து மணந்துகொள்ள வேண்டியதை வற்புறுத்துகிறாள் தோழி.)*

**ஏனலும் இறங்குகுரல் இறுத்தன; நோய்மலிந்து**
**ஆய்கவின் தொலைந்த இவள் நுதலும்; நோக்கி**
**ஏதில மொழியும் இவ்வூரும்; ஆகலின்,**
**களிற்றுமுகந் திறந்த கவுளுடைப் பகழி,**
**வால்நிணப் புகவின், கானவர் தங்கை**

**அம்பணை மென்தோள் ஆயஇதழ் மழைக்கண்**
**ஒல்கியற் கொடிச்சியை நல்கினை ஆயின்,**
**கொண்டனை சென்மோ நுண்பூண் மார்ப!**
**தளிதலைத் தலைஇய சாரல் நளிசுனைக்**
**கூம்புமுகை அவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை**

**வேங்கை விரியிணர் ஊதிக், காந்தள்**
**தேனுடைக் குவிகுலைத் துஞ்சி, யானை**
**இருங்கவுட் கடாஅம் கனவும்,**
**பெருங்கல் வேலி, நும் உறைவின் ஊர்க்கே**

*தூங்கித் தாழ்ந்த கதிரினையுடைய தினையும் அறுக்கப்பட்டன; இவளுடைய நெற்றியும் நோய்மிக்கதனால் ஆயத்தாரால் ஆராயப்பட்ட தன் அழகுகெட்டது; இவ்வூரவரும் இதனை நோக்கிப் புறமான பழிச்சொற்களைச் சொல்லு கின்றனர்;*

*ஆதலினாலே,*

*களிற்றின் முகத்தைப் பிளந்த அம்பினையும், கன்னத்து அடக்கிய வெள்ளிய நிணமாகிய உணர்வினையுமுடைய, குறிஞ்சிநில மாக்களின் தங்கையாகிய, அழகிய மூங்கில் போன்ற மெத்தென்ற தோளினையும், ஆராய்ந்தெடுத்த இதழ் போன்ற குளிர்ந்த கண்ணினையும், துவளும் இயல்பினையுமுடைய குறிஞ்சிநிலத் தலைவியை அருளுவையாயின்;*

*மழைத்துளியை முதற்பெயலாகப் பெய்துவிட்ட மலைச் சாரலிலே, பலவாகச் செறிந்த சுனையிடத்துக் கூம்பிய மொட்டை விரித்த, குறுமையான சிறகையுடைய பறவையாகிய வண்டுகள், வேங்கையின் விரிந்த பூங்கொத்தினை நுகர்ந்து, தேனையுடைய காந்தளின் குவிந்த குலையிலே உறங்கி, யானையினது பெரிய கவுளிடத்து ஒழுகும் மதநீரை உண்பதாகக் கனாக்காணும், பெரிய மலையைச் சூழக்கொண்ட உறைதற்கு இனிய நுமது ஊர்க்கு;*

*வரைந்து கொண்டு செல்வாயாக.*

*என்று, தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று வரைவு கடாயினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. இறங்கு குரல் - தூங்கித் தாழ்ந்தகதிர். இறுத்தன - அறுக்கப்பட்டன. நோய் மலிந்து - நோய் மிகுந்து. 4. 'கவுளுடை வால்நிணப் புகவின் கானவர்' எனக்கூட்டுக. புகவு - உணவு. 7. ஒல்கியல் துவளும் இயல்பு. கொடிச்சி - குறிஞ்சி நிலத் தலைவி. 9. தலைஇய - முதற் பெயலாகப் பெய்து விட்ட. 12. குவிகுலை - குவிந்தகுலை.*

**உள்ளுறை:** *கூம்பு முறை அவிழ்த்த பறவை, வேங்கையின் இணர் ஊதிக் காந்தட் குலையில் துஞ்சி, யானைக் கடாம் கனவும் என்றதன் கருத்து, தலைமகளின் நாண் முதலிய தளைகளை*

*அவிழ்த்த தலைமகன், அவள் நுகர்ந்து பாங்கற் கூட்டமும் பின்னர்த் தோழியிற் கூட்டமும் பெற்றுப், பின்னரும் இரவுக்குறி பகற்குறிகளால் அடைதற்கரிய கூட்டம் பெறச் சிந்தியா நின்றான்; அவ்வெண்ணத்தை விட்டு வரைவொடுபுகுக எனத் தலைமகளைத் தோழி வரைவுகடாயினாள் என்று கொள்க.*

**மேற்கோள்:** *'ஆயர் வேட்டுவர்' என்னும் பொருளியற் சூத்திரவுரையில், 'ஆயர் வேட்டுவர் என்னும் இருபெயரான் அன்றி ஒன்றென முடித்தலாற் கொள்ளப்படும் தலைவரும் தலைவியரும் உளர் என்று உரைத்து, 'வானிணப் புகவிற் கானவர் தங்கை' என வருவனவும் காண்க என்பர் நச்சினார்க்கினியர்.*

**பாடபேதங்கள்:** *6. ஆயிழை மழைக்கண் 9. துளிதலைக் கலைஇய. 11. விரியிணர் உதிரக் காந்தள்.*

## 133. ஒன்று வினவினர்!

**பாடியவர்:** *உறையூர் மருத்துவன் தாமோதரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *'பிரிவிடை, ஆற்றாளாயினாள்' எனக் கவன்ற தோழிக்குத், தலைமகள் 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது.* **சிறப்பு:** *மிளைநாடு பற்றிய செய்தி.*

*(தலைவன் பிரிந்த காலத்திலே தலைவியின் வாட்டத்தைக் கண்டு, 'இவள் எப்படிப் பொறுப்பாளோ?' என்று கலங்கினாள் தோழி. அவளுக்குத் தன் தலைவனின் காதல் மிகுதியைக் கூறித், 'தான் ஆற்றியிருப்பேன்' என்பது தோன்றச் சொல்லுகிறாள் தலைவி.)*

**'குன்றி அன்ன கண்ண, குரு உமயிர்ப்,**
**புன்தாள், வெள்ளெலி மோவாய் ஏற்றை**
**செம்பரல் முரம்பில் சிதர்ந்தபூழி,**
**நல்நாள் வேங்கைவீ நன்களம் வரிப்பக்,**
**கார்தலை மணந்த பைம்புதற் புறவின்,**

**வில்எறி பஞ்சியின் வெண்மழை தவழும்**
**கொல்லை இதைய குறும்பொறை மருங்கில்,**
**கரிபரந் தன்ன காயாஞ் செம்மலொடு**
**எரிபரந் தன்ன இலமலர் விரைஇப்,**
**பூங்கலுழ் சுமந்த தீம்புனற் கான்யாற்று**

**வான்கொள் தூவல் வளிதர உண்கும்;**
**எம்மொடு வருதல் வல்லையோ மற்று?' எனக்**
**கொன்ஒன்று வினவினர் மன்னே - தோழி!**

**இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி**
**கொல்புனக் குருந்தொடு கல்அறைத் தாஅம்**

**மிளைநாட்டு அத்தத்து ஈர்ஞ்சுவற் கலித்த**
**வரிமரல் கறிக்கும் மடப்பிணைத்**
**திரிமருப்பு இரலைய காடிறந் தோரே.**

*சிவலின் கால்முள்ளைப் போன்றவான மொட்டு முதிர்ந்த வெட்சிப்பூ, கானவர் சுட்டு அழித்த தினைப்புனத்துக் குருந்தம் பூவோடு, கற்பாறையின்கண் பரந்துகிடக்கும், மிளைநாட்டின் பாலை வழியிலேயுள்ள, ஈரமான மேட்டிடத்திலே, செருக்கி வளர்ந்த வரிகளையுடைய மரலைக் கடிக்கும் மடப்பிணையுடன் கூடிய, திரிந்த கொம்பினையுடைய இரலைமான் வாழும் காட்டிற் சென்ற நம் தலைவர்.*

*குன்றிமணிபோலும் கண்ணுடையவாய், நன்னிறம் பொருந்திய மயிரையும் புல்லிய காலையும் தாடியையுமுடைய ஆண் வெள்ளெலிகள் சிவந்த பரல்கள் மிக்க வன்னிலத்திலே கிளறிய புழுதியின் கண்ணே, மணநாளாகிய நன்னாளிலே பூக்குமியல்புடைய வேங்கைப்பூ விழுந்து நல்ல வெறியாடும் களம்போல அழகு செய்யக், கார்காலம் தலைக்கூடியதனால் பசிய புதல்களையுடைய முல்லை நிலத்திலே, வில்லினாலே அடிக்கப்பட்ட பஞ்சிபோல வெள்ளிய மேகங்கள் தவழா நிற்கும், காட்டிடத்துப் புதுப் புனத்தினையுடைய சிறிய மலையின் பக்கத்திலே;*

*கரிபரவினாற் போன்ற காயாவினது பூவாடலோடு, எரிபரவினாற்போன்ற இலவமலர், கலந்து, அழகிய வண்டலோடு, எரிபர வினாற்போன்ற இலவமலர், கலந்து, அழகிய வண்டலைச் சுமந்த தீவிய நீரையுடைய காட்டாற்றின் கண்ணே, வானை எட்டிய காற்று நீர்த்துவலையை எழுப்பித்தர உண்ணுவேமாகிய எம்முடன் வருதலை மாட்டுவையோ என்று,*

*பெருமை பொருந்திய ஒரு வார்த்தையைக் கேட்டார் தோழி!*

*கேட்டனரே அல்லாமற் கொண்டு தலைக்கழிந்திலர் என்று, தலைமகள் தோழிக்குக் கூறினாள் என்க.*

**விளக்கம்:** *மன் (13) ஒழியிசை. ஒருகால் கொண்டு தலைக் கழிதலும் கூடும் என்று தலைவி நினைத்தலால், அவள் ஆறுதல் பெற்றனள். தாம் பசித்திருக்கவும் தன் பிணை மரலைக் கறித்துப் பசிதீர்வதைக் கண்டு மகிழும் இரலையையுடைய காட்டிற் சென்றவராதலால், நம் தலைவர் தாம் பாலையில் உழந்தன*

ராயினும், விரைய வந்து நம் நோய் தீருமாறு அருளிச் செய்வர் என்று, தலைவி குறிப்பால் தோழிக்கு உணர்த்தினாள் என்க.

மிளைநாடு என்பது ஒருநாடு; இந்நாட்டினராக மிளைக்கந்தன்; மிளைக்கிழான் நல்வேட்டன்; மிளைவேள் தித்தன் முதலியோரைக் காணலாம். இஃது ஒரு குறுநாடு எனவும், தமிழகத்துள் ஒரு பகுதி எனவும் கொள்ளலாம்.

**மேற்கோள்:** இப்பாட்டினை, 'இது பாலைக்கண் இரங்கள் நிகழ்ந்தது' எனக், 'கொண்டு தலைக்கழியினும்' என்னுஞ் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் காட்டுவர். அவர் கருத்துப்படி, தலைவர் எம்முடன் வருதலை மாட்டுவையோ என்று வினவினதன்றிக், கொண்டு சென்றிலர் என இரங்கியதாகும்.

**பாடபேதம்:** *16. இரநாட்டத்தத்து - இரநாட்டிலுள்ள பாலையிடத்து.*

## 134. இடி மறந்து செலுத்துக!

**பாடியவர்:** *சீத்தலைச் சாத்தனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றி மீண்ட தலைமகன் பாகற்கு உரைத்தது.*

*(வினைமேல், தன் காதலியைப் பிரிந்து சென்ற தலைவன், வினையினை முடித்துவிட்டுத் திரும்புகின்றான். அப்போது அவன் தன்னுடைய பாகனுக்குக் குதிரைகளைச் செலுத்துவது பற்றிக் கூறியது இது.)*

**வானம் வாய்ப்பக் கவினிக் கானம்**
**கமஞ்சூல் மாமழை கார்பயந்து இறுத்தென;**
**மணிமருள் பூவை அணிமலர் இடையிடைச்,**
**செம்புற மூதாய் பரத்தலின், நன்பல**
**முல்லை வீகழல் தாஅய், வல்லோன்**

**செய்கை அன்ன செந்நிலப் புறவின்**
**வாஅப் பாணி வயங்குதொழிற் கலிமாத்**
**தாஅத் தாளிணை மெல்ல ஒதுங்க,**
**இடிமறந்து, ஏமதி-வலவ! குவிமுகை**
**வாழை வான்பூ ஊழுறுபு உதிர்ந்த**

**ஒழிகுலை அன்ன திரிமருப்பு ஏற்றொடு**
**கணைக்கால் அம்பிணைக் காமர் புணர்நிலை**
**கடுமான் தேர்ஒலி கேட்பின்,**
**நடுநாட் கூட்டம் ஆகலும் உண்டே.**

மழையானது தப்பாமல் வாய்த்தமையாலே, நிறைந்த சூலையுடைய கரிய மேகங்கள், கார்காலத்தின் பயன் விளையப் பெய்ததாகக், காடுகள் அழகுற்று, நீலமணியைப் போலும் காயாம்பூவின் அழகிய மலர்களின் இடையிடையே, சிவந்த முதுகினையுடைய இந்திரகோபப் பூச்சி பரவி ஊர்தலினாலும், நல்ல பல முல்லைமலர்கள் கழலின் கொடிக்கண் தாவுதலி னாலேயும், சித்திரம் எழுத வல்லவனின் செய்கையை ஒத்துத் தோன்றும், சிவந்த நிலத்தையுடைய முல்லைநில வழியிலே;

தாவிச் செல்லுதலினாலே தாளம் விளங்குகின்ற நாட்டியத் தொழில் பயின்ற மனஞ்செருக்கிய குதிரையினுடைய, தாவும் இணையொத்த கால்களால் மெல்ல நடக்கும்படியாகச், சாட்டையால் அடித்தலை மறந்து, வலவனே! தேரைச் செலுத்துவாயாக!

ஏனெனில்,

முறையுற்று மடலுதிர்ந்த குவிந்த மொட்டாகிய, பெரிய பூ ஒழிந்த வாழையின் குலைபோலும் முறுக்குண்ட கொம்பினையுடைய ஏற்றுமானுடன், புணரும் நிலையிலுள்ள திரண்ட கால்களையுடைய அழகிய பிணைமான், விரைந்து செல்லும் குதிரை பூண்ட தேரின் ஒலியைக் கேட்பின், அம் மருட்சியினாலே நடுநாளின்கண் முயக்கம் உண்டாதலும் கூடுமோ? இல்லையாதலின் என்க.

என்று, வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகற்கு உரைத்ததாகக் கொள்க.

**சொற்பொருள் :** 1. வானம் வாய்ப்ப - மழை தப்பாமல். 2. கமஞ்சூல் - நிறைந்த சூல். கார் பயந்து இறுத்தல் - கார் காலத்தின் பயன் விளையப் பெய்தல். கார் பயந்து இறுத்தென - கார்காலத்தின் பயன் விளையப் பெய்ததாக. 3. மணி - நீலமணி. பூவை அணிமலர் - காயாம்பூவின் அழகிய மலர். 4. மூதாய் - இந்திரகோபப் பூச்சி. 5. வீ - மலர். கழல் தாய் - கழலின் கொடிக் கண் வீழ்தலினாலே. 6. புறவு - முல்லை நிலம். 7. கலிமா - மனஞ்செருக்கிய குதிரை. பாணி - தாளம். 10. வான் பூ - பெரிய பூ. ஊழுறுபு - முறையுற்று. 11. ஏறு - ஏற்றுமான். 12. காமர் - அழகு.

**விளக்கம்:** தலைமகளைக் கூடுதற்கு விரைகின்றவன் தலைவன். ஆதலால், புணரும் நிலையிலுள்ள மானினங்களின் பிரிவுக்கு அஞ்சினான் என்று கொள்க. எனவே, தலைவியிடத்து அவனுக்குள்ள காதற்பெருக்கம் உணரப்படும். 'இடிமறந்து' என்பதற்குத் தாற்று முள்ளாற் குத்துதலை மறந்து என்றும் பொருள் கூறலாம்.

**மேற்கோள்:** 'கம நிறைந்தியலும்' என்ற தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திரத்தின் உரையுள், 'கமஞ்சூன் மாமழை' என்பதனைச் சேனாவரையர் மேற்கோள் காட்டுவர்.

**பாடபேதங்கள்:** *3. மணிமலர்ப் பூவை. 9. தேகுமதி. 14. ஆகலுமுண்டோ.* **துறை:** *வினைமுற்றி மறுத்தரா நின்ற தலைமகன் பாகற்கு உரைத்தது என்றும் காணப்படும்.*

## 135. அறிவு பிறிதாகி மயங்கினேன்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னது.* **சிறப்பு:** *ஆதிமந்தியின் காதற் சிறப்பு; காமூர்த் தலைவனாகிய கழுவுள் என்பானை ஈரெழு வேளிரும் சென்று அழித்த செய்தி.*

*(காதலன் பிரிய, அந்தப் பிரிவினால் தன் அழகுகெட்டு நோய்கூர்ந்த தலைவி, தன்னுடைய ஆற்றாமையைத் தன் அன்புத் தோழியிடம் எடுத்துக்கூறி இப்படிப் புலம்புகிறாள்.)*

**திதலை மாமை தளிர்வனப்பு அழுங்கப்,**
**புதலிவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்,**
**பசலை பாய்ந்த நுதலேன் ஆகி,**
**எழுதெழில் மழைக்கண் கலுழ, நோய் கூர்ந்து,**
**ஆதி மந்தியின் அறிவுபிறி தாகிப்**

**பேதுற் றிசினே-காதல்அம் தோழி!**
**காய்கதிர் திருகலின் கனைந்துகால் கடுகி,**
**ஆடுதளிர் இருப்பைக் கூடுகுவி வான்பூக்**
**கோடுகடை கழங்கின், அறைமிசைத் தாஅம்**
**காடிறந் தனரே, காதலர்: அடுபோர்,**

**வீயா விழுப்புகழ், விண்தோய் வியன்குடை,**
**ஈர்-எழு வேளிர் இயந்துஒருங்கு எறிந்த**
**கழுவுள் காமூர் போலக்**
**கலங்கின்று மாது, அவர்த் தெளிந்தஎன் நெஞ்சே.**

*அன்பினையுடைய அழகிய தோழியே!*

*எரிக்கின்ற சூரியன் முடுகுதலினாலே காற்று மிக்கு விரைந்து வீச, அதனாலே ஆடும் இயல்பினையுடைய தளிரைக் கொண்ட இருப்பையினது இதழ்குவிந்த பெரிய பூக்கள், சங்கினாற் கடையப்பட்ட கழங்குபோலக் கற்பாறையின் மேலே பரவிக்கிடக்கும் காட்டினைக் கடந்துசென்றனர் நம் காதலர். ஆதலினாலே,*

தேமலோடு கூடிய எனது மாமை நிறமும், தளிர்போன்ற அழகும் கெடப், புதல்களிற் பூத்துப் பரவிய பீர்க்கின் செவ்விமலர்போன்று, பசலைநிறம் பாய்ந்த நெற்றியை உடையேனாகிச் சந்தன குங்குமச் சேற்றால் வரிக்கும் அழகினைக் கொண்ட குளிர்ந்த கண் அழ, நோய் மிகுந்தவளாகிய, ஆதிமந்தியைப் போல, அறிவுகெட்டு மயக்கமுற்றேன்.

அவர் விரைய வருவாரென்று தெளிந்திருந்த என் மனமும் அடும் போராற்றலையுடைய பதினான்கு குடி வேளிர்கள் ஒருங்கே கூடிச் சேர்ந்து, தாக்கியழித்த, கெடாத மிக்க புகழையும் வானளாவிய பெரிய குடையினையுமுடைய கழுவுள் என்பானது காமூரைப் போலக் கலங்கா நின்றதே!

**சொற்பொருள்:** *1. திதலை - தேமல். மாமை - மாமை நிறம். 'தளிர்' என்பது மாந்தளிரை. 2. எதிர் மலர் - செவ்வி மலர்; புதுப்பூக்கள். 4. மழைக் கண் - குளிர்ந்த கண். கலுழ - அழ. 5. ஆதிமந்தி - கரிகால் வளவனின் மகள்; இவள் அறிவு பிறிதாகியது, இவள் தன் காதலனாகிய ஆட்டன் அத்தியைக் காவிரி வெள்ளத்தில் இழந்த காலத்து. 7. காய் கதிர் - எரிக்கின்ற சூரியன். திருகுதல் - முடுகுதல்; தாக்கி வருத்துதல். கால் கனைந்து - காற்று மிகுதியாகி. 8. கூடு குவி வான்பூ - இதழ் குவிந்த வெள்ளிய பூக்கள் 9. கோடு கடை கழங்கு - சங்கினாற் கடையப்பட்ட கழங்கு; யானைத் தந்தத்தாற் கடையப்பட்ட கழங்கும் ஆம், அறை - பாறை. 12. ஈரெழு வேளிர் - பதினான்கு வேளிர்கள்.*

**விளக்கம் :** *இருப்பைக் கூடுகுவி வான்பூ காய்கதிர் திருகலின் கனைந்து கால்கடுகி அறைமிசைத் தாவும் காடிறந் தனர் நம் காதலர்; அதனால் என் திதலை மாமைத் தளிர் வனப்பு அழுங்கப் பசலைபாய்ந்த நுதலேன் ஆகிக், கண்கலுழ நோய் கூர்ந்து, ஆதி மந்தியின் அறிவு பிறிதாகிப், பேதுற்றது; அவரைத் தெளிந்த என் நெஞ்சமும் ஈரெழு வேளிர் ஒருங்கியைந்து எறிந்த கழுவுளின் காமூர்போலக் கலங்கிற்று; என்க. மாது, அசை.*

**பாடபேதங்கள்:** *13. காமூர். 14. விளிந்தன்று.*

## 136. ஒய்யென நாணினாள்!

**பாடியவர்:** *விற்றூற்று மூதெயினனார்.* **திணை:** *மருதம்.* **துறை:** *உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தலைவனோடு தலைவி ஊடுப் புலந்து இருந்தாள். அவன், அவளுடைய ஊடலைத் தணிவிக்கவும், கூடி மகிழவும் முயன்றான்.*

*அவன் அங்ஙனம் முயல முயல அவளுடைய ஊடலும் அதிகமாய்க் கொண்டு போயிற்றேயன்றிக் குறைந்த பாடாயில்லை. இதனால் மனம் நொந்து தன் நெஞ்சுடன் இப்படிச் சொல்லுகிறான் தலைவன்.)*

**மைப்புஅறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு**
**வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்,**
**புள்ளுப் புணர்ந்து இனிய ஆகத் தெள்ஒளி**
**அம்கண் இருவிசும்பு விளங்கத், திங்கட்**
**சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்,**

**கடிநகர் புனைந்து, கடவுட் பேணிப்,**
**படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ,**
**வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்,**
**பூக்கணும் இமையார் நோக்குபு மறைய,**
**மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை,**

**பழங்கன்று கழித்த பயம்பமல் அறுகைத்**
**தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற**
**மண்ணுமணி அன்ன மாஇதழ்ப் பாவைத்**
**தண்நறு முகையொடு வெந்நூல் சூட்டித்.**
**தூஉடைப் பொலிந்து மேவரத் துவன்றி,**

**மழைபட் டன்ன மணன்மலி பந்தர்,**
**இழைஅணி சிறப்பின் பெயர்வியர்ப்பு ஆற்றித்**
**தமர்நமக்கு ஈத்த தலைநாள் இரவின்,**
**'உவர்நீங்கு கற்பின்எம் உயிர்உடம் படுவி!**
**முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்,**

**பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர்**
**உறுவளி ஆற்றச் சிறுவரை திற' என**
**ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்,**
**உறைகழி வாளின் உருவுபெயர்ந்து இமைப்ப,**
**மறைதிறன் அறியாள் ஆகி, ஒய்யென**

**நாணினள் இறைஞ்சி யோளே-பேணிப்**
**பரூஉப்பகை ஆம்பற் குரூஉத்தொடை நீவிச்**
**சுரும்பிமிர் ஆய்மலர் வேய்ந்த**
**இரும்பல் கூந்தல் இருள்மறை ஒளித்தே.**

*குற்றந்தீர நெய்யிடத்துக் கனிந்த இறைச்சியோடு கலந்த வெண்சோற்றைக் குறையாத வண்மையோடு, உயர்ந்தோரைப் பேணி, அழகிய இடமகன்ற பெரிய வானின்கண் விளங்கும், அந்தத் தெளிந்த ஒளியையுடைய திங்களை உரோகிணி*

கூடியதனால் எல்லாத் தோஷமும் நீங்கிய சுபநாட் சேர்க்கையிலே, திருமண வீட்டை அலங்கரித்துக், கடவுளைப் பேணி, மணத்தைத் தோற்றுவிக்கும் மணமுழவோடு பெரிய முரசமும் ஒலிக்கத், தலைவியை மங்கல நீராட்டிய மகளிர், தங்கள் கூரிய கண்களாலும் இமையாராய் நோக்கிவிட்டு விரைந்து மறைய;

மெல்லிய பூவையும் புல்லிய புறத்தையுமுடைய வாகையின் கவடுபொருந்திய இலையை, பழங்கன்று கடித்த குழியிலே நெருங்கி வளர்ந்த, ஒலிக்கின்ற குரலையுடைய மழையின் முதற்பெயலால் அறுகுஈன்றதும், கழுவிய நீலமணி போலும் கரிய இதழையுடையதும், பாவைபோலும் கிழங்கினிடத் துள்ளதுமான குளிர்ந்த நறிய மொட்டுடன், சேரக்கட்டிய வெள்ளிய நூலைச் சூட்டி, தூய ஆடையாற் பொலியச் செய்து, விருப்பம்வர ஒன்றுகூடி, மழையொலி உண்டானாற் போல மணவொலி மிக்க பந்தரிலே, ஆபரணங்கள் அணிவித்த சிறப்பினொடு எழுந்த வியர்வையை ஆற்றித், தமர்கள் நமக்கு இற்கிழத்தியாகத் தந்த, தலைநாள் இரவின்கண்;

"புதுத்தன்மை கெடாத புடவையால் உடம்பு முழுவதும் போர்த்தலினால், மிகப் புழுக்கத்தையடைந்த, நின்பிறை போன்ற நுதலிடத்துத் தெளிர்த்த வியர்வையை, மிக்க காற்று வீசி ஆற்றும் வண்ணம் சிறிதுபோது திற" வென்று சொல்லி யாம் அன்புடைய நெஞ்சமொடு அப்போர்வையை வவ்வினதனாலே, வடிவமானது உறையினின்றும் கழித்த வாள்போல வெளிப் பட்டு விளங்க, அவ்வடிவத்தை மறைக்கும் வகையை அறியாளாகிச் சடக்கென்று நாணினளாய்;

இதழ் பகுத்த பெரிய ஆம்பல் மலரின் நிறமழகிய மாலையை அணிந்து, வண்டுகள் ஒலிக்கும் ஆய்ந்தெடுத்த மலர் சூடிய பெரிய பலவாகிய கூந்தலின் இருளிடத்தே, மறைத்தற்குரிய உறுப்பினை மறைத்து, வெறுப்பு நீங்கிய கற்பினையுடைய, எம் உயிருக்கு உடம்பாக அடுப்பவள், யாம் செய்த இக்குறும்பினை விரும்பிக் கைதொழுது வணங்கினளாயிருந்தாள்.

அத் தகையாள், இன்று யான் பலபல சொல்லி உணர்த்தவும், உணராளாய் ஊடுகின்றனளே! இவள்யாரோ நமக்கு? என்று, தலைமகன் தன் நெஞ்சினுக்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. மைப்பு - குற்றம். புழுக்கு - குறைச்சி. 2. புரையோர் - உயர்ந்தோர். 3. 'புள்' என்றது புள் நிமித்தத்தை.

தெள்ளொளி - தெளிந்த ஒளி. 5. சகடம் - உரோகிணி. 'வானூர் மதியம் சகடணைய' என்பது சிலப்பதிகாரம். 5. கடி நகர் - மணவீடு. 7. பரூஉப் பணை - பெரிய முரசம். 8. மகளிர் - மங்கல மகளிர். 9. பூக்கண் - கூரிய கண். 11. பழங்கன்று - முதுகன்று. பயம்பு அமல் - குழியிலே நெருங்கி வளர்த்த. 12. தழங்கு குரல் - ஒலிக்கின்ற குரல். 13. மண்ணுமணி - கழுவிய நீலமணி. மாஇதழ் - கரிய இதழ். பாவை - பாவை போலும் கிழங்கு. 15. மேவர - விருப்பம் வர. துவன்றி - ஆற்றி. 19. உவர் - வெறுப்பு. அடுவி - அடுப்பவள்; சேர்பவள், 20. முருங்கா - புதுத்தன்மை கெடாத. 21. புழுக்கு - புழுக்கம். 22. சிறுவரை - சிறுபொழுது. 24. இமைப்ப - ஒளிவிட. 25. மறை திறன் - மறைக்குந் திறன். 27. பகை பரூஉ ஆம்பல் - இதழ் பருத்த பெரிய ஆம்பல். குரூஉத்தொடை - நிறமழகிய மாலை. 29. இரும்பல் கூந்தல் - பெரிய பலவாகிய கூந்தல்.

**விளக்கம்:** சோற்றாற் புரையோரைப் பேணித், திங்கட் சகடம் மண்டிய கூட்டத்து, நகர்ப்புனைந்து, கடவுட்பேணி, முழவொடு பணை இமிழ, மகளிர் மறைய, தமர் வாகையிலை யையும் அறுகின் முகையையும் சேர்த்துக் கட்டிய வெண் ணூலைச் சூட்டி, உடையாற் பொலிவித்து, மணப்பந்தலில் துவன்றி, நமக்கு ஆற்றி ஈத்த தலைநாள் இரவின் கண், கலிங்கம் வளைஇப் புழுக்குற்ற நின் வியரை வளியானது ஆற்றுமாறு திறக்கவென, யாம் போர்வையைக் கவர்தலினால், உரு ஒளிவிட, எம் உடம்படுவி, மறைதிறன் அறியாளாகி, ஒய்யென நாணினளாய்க், கூந்தலிருளில் மறை ஒளித்துப் பேணி, இறைஞ்சியோளா யிருந்தாள் என்று கொள்க.

**மேற்கோள்:** களவின் வழி வந்த கற்பும் கோடற்கு உதாரணமாக நச்சினார்க்கினியர் இப்பாட்டினைப் 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர், ஐயர் யாத்தனர் கரணமென்ப' என்ற கற்பியற் சூத்திர உரையில் காட்டுவர்.

'பெரும் புழுக்குற்றநின்— திறவென' என்பது, 'பொறிநுதல் வியர்த்தல்' என்னும் மெய்ப்பாடாகும் என்றும், 'இம் மெய்ப்பாடு தலைமகற்கு உரித்தன்று, உட்கும் நாணும் அவுற்கு இன்மையின்' என்றும், பேராசிரியர், 'புகுமுகம் புரிதல்' என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரவுரையிற் கூறுவர்.

**பாடபேதங்கள்:** 1. புழுக்கி நெய்க்கனி. 5. சகடம் வேண்டிய. 9. விருப்புற்று. 11. பழங்கன்று கறிக்கும். 15. தோன்றி. 18. கீந்த. 21. நுதற் குறுவியர். 29. விருண்மழை.

## 137. யான்தான் நோவேன்!

**பாடியவர்:** *உறையூர் முதுகூத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *'தலைமகன் பிரியும்' எனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத், தோழி சொல்லியது.* **சிறப்பு:** *திண்தேர்ச் செழியனின் மலை மூங்கிலும், உறந்தைச் சோழனின் பங்குனிவிழாவும்.*

*(தலைவன் பிரியப்போகிறானோ என நினைந்து மெலிந்தாள் தலைவி. அவள் மெலிவாற் கவலையுற்ற தோழி, தன் மனம் நொந்து இவ்வாறு கூறுகின்றாள்.)*

**ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத்து உண்ட**
**சிறும்பல் கேணிப் பிடியடி நசைஇக்,**
**களிறுதொடூஉக் கடக்குங் கான்யாற்று அத்தம்**
**சென்றுசேர்பு ஒல்லார் ஆயினும், நினக்கே-**
**வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர்**

**இன்கடுங் கள்ளின் உறந்தை ஆய்கண்,**
**வருபுனல் நெரிதரும் இகுகரைப் பேரியாற்று**
**உருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழிற்**
**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்,**
**வீஇலை அமன்ற மரம்பயில் இறும்பில்**

**தீஇல் அடுப்பின் அரங்கம் போலப்,**
**பெரும்பாழ் கொண்டன்று, நுதலே; தோளும்,**
**தேளா முத்தின் தெண்கடற் பொருநன்**
**திண்தேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅன்**
**நல்லெழில் நெடுவேய் புரையும்**

**தொல்கவின் தொலைந்தன; நோகோ யானே,**

*பாலைவழியிற் செல்லும் புகியர், சேற்றைக் கிளைத்து உண்ட சிறிய பலவாகிய கேணிகளைப், பிடியின் அடியென்று கருதி வியப்புற்றுக், களிறுகள் தொட்டுத் தொட்டுப் பார்த்து, அஃதின்மையினாலே அல்லலுழந்து, அதனைக் கடந்துசெல்லும் காட்டாற்றினையுடைய சுரத்திலே, நம் தலைவர் சென்று சேர்தலை உடன்படாராயினும், அவர் பிரிவரென்று கருதியதனால்,*

*பகைவரை வெல்லும் பொருட்டாக எறிகின்ற வீர முரசினாலே வெற்றிப் போரினையுடைய சோழரது, கடுப்பு இனிய கள்ளையுடைய உறையூரிடத்து, கடுகி வருகின்ற நீர் உடைக்க இடிந்த கரையினையுடைய காவிரிப் பேராற்றின் அழகிய வெண்மணலடுத்த, தேன்மணம் கமழ்கின்ற குளிர்ந்த பொழிலிலே, பங்குனி முயக்கம் கழிந்த மறுநாளில், பூவோடு*

இலைகளும் நெருங்கிப் பூத்துத் தளிர்த்த மரங்கள் அடர்ந்த, சிறு காட்டின் நடுவேயுள்ள தீயில்லாத அடுப்பினையுடைய திருவரங்கத்தைப் போல, நினக்கு நுதல் மிகப் பாழடைந்தது;

துளையிடாத முத்து விளையும் குளிர்ந்த கடலைத் தனக்கு உரித்தாகவுடைய வீரனாகிய, திண்ணிய தேரினையுடைய செழியனது, பொதியம் என்னும் மலைப்பக்கத்திலே வளர்ந்த. நல்ல அழகுடைய நெடிய மூங்கிலை ஒக்கும் தோளும், பண்டை அழகு கெட்டன;

அதற்கு நான் நோவா நின்றேன்!

என்று, தலைமகன் பிரியுமென்று கருதி வேறுபட்ட தலை மகட்குத் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. ஆறு - பாலை வழி. வம்பலர் - புதியர். 6. இன்கடுங் கள் - கடுப்பு இனிய கள். 8. முருகு - தேன். 9. பங்குனி முயக்கம் - பங்குனி உத்திரத் திருநாள்; இது உறையூரிற் சிறப்பாக நிகழ்ந்து வந்துது என்க. 10. இறும்பு - குறுங்காடு. 11. அரங்கம் - திருவரங்கம். 14. 'செழியனின் பொருப்பு' என்றது, பொதியத்தை.

**விளக்கம்** : பங்குனித் திங்களில் பௌர்ணமியோடு உத்திரநாள் கூடிய சுபதினமாதலால், அதனைப் பங்குனி முயக்கம் என்றார். முயக்கம் - கூட்டம். இந்நாளிலும் இவ்விழாத் தென்பாண்டிப் பகுதிகளில் சாத்தனார் கோயில் வழிபாடும், உண்டாட்டுமாக நிகழ்ந்து வருதலைக் காணலாம். இறையனார் களவியல் உரையுள், ஊர்கொண்ட பெருவிழா நாட்களாக மதுரை ஆவணி அவிட்டமும், உறையூர்ப் பங்குனி உத்திரமும், கருவூர் வெள்ளி விழாவும் கூறப்படுகின்றன.

## 138. கூடினராதல் நல்லதோ?

**பாடியவர்:** எழூஉப்பன்றி நாகன் குமரனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** குறவர் மனையிலே நிகழும் வேலன் வெறியாடலைப் பற்றிய செய்திகள்.

(தலைமகன் தன்னை மணந்துகொள்ளாமல் களவிலேயே மனஞ்செலுத்தத், தலைவி மனம் வருந்தி, இப்படி, அவன் கேட்குமாறு தோழியிடம் சொல்லுகிறாள். இரவுக்கு அஞ்சிய அச்சமும், தாயின் ஐயமும், விரைவிலே மணம் வேண்டு மென்பதைக் குறிப்பாக உணர்த்துவன காண்க.)

**இகுளை! கேட்டிசின் காதலம் தோழி!**
**குவளை உண்கண் தெண்பனி மல்க,**
**வறிதியான் வருந்திய செல்லற்கு அன்னை**
**பிறிதொன்று கடுத்தனள் ஆகி-வேம்பின்**
**வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி,**

**உடலுநர்க் கடந்த கடல்அம் தானைத்,**
**திருந்துஇலை நெடுவேல் தென்னவன் - பொதியில்**
**அருஞ்சிமை இழிதரும் ஆர்த்துவரல் அருவியின்**
**ததும்புசீர் இன்னியங் கறங்கக், கைதொழுது,**
**உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்,**

**கடம்பும் களிறும் பாடி, நுடங்குபு**
**தோடுந் தொடலையும் கைக்கொண்டு, அல்கலும்**
**தேடினர் ஆதல் நன்றோ?-நீடு**
**நின்னொடு தெளித்த நன்மலை நாடன்**
**குறிவரல் அரைநாட் குன்றத்து உச்சி,**

**நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூர்இருள்,**
**திருமணி உமிழ்ந்த நாகம் காந்தட்**
**கொழுமடற் புதுப்பூ ஊதுந் தும்பி**
**நன்னிறம் மருளும் அருவிடர்**
**இன்னா நீள்இடை நினையும்என் நெஞ்சே.**

*காதற்றோழியே! கேட்பாயாக;*

*குவளைபோன்ற மையுண்ட கண்ணில், தெளிந்த நீர் ஒழுக யான் வருந்தின துன்பத்தை நோக்கி அதனைப் போக்குதற்கு, அன்னை, தெய்வத்தான் வந்தது இவ்வேறுபாடென்று வேறாக ஐயுற்றதனால், வெறிநாற்றமுடைய வேம்பினது பசிய இலையை நீலோற்பல மலரோடும் சூடி, பகைத்தவரை வென்று கடந்த கடல்போன்ற சேனையையும், திருந்திய இலை முகத்து நெடிய வேலையுமுடைய பாண்டியனது பொதியில் மலையின், ஏறற்கரிய உச்சியினின்றும் இழியும், ஆரவாரித்து வருதலை யுடைய அருவியைப்போல ஒலிக்கும் சீரையுடைய, இனிய வாத்தியங்கள் ஒலிக்க,*

*உட்குப்பொருந்திய சிறப்பினையுடைய முருகனைக் கையாற்றொழுது, மலையின்கண் வருவித்து, அவன் கடம்பையும் களிற்றையும் புகழ்ந்து பாடிப், பனந்தோடும் காந்தள்மாலையும் கைக்கொண்டு, இரவு முழுவதும் வறிதே அசைந்து ஆடினராதல் நன்றாகுமோ?*

நின்னோடு நெடுநாளாகப் பிரியேன் என்றுதெளிவித்து வந்த நல்ல மலைநாடனாகிய நம் தலைவர், குறியிடத்து வருகின்ற நள்ளிரவில், குன்றின் உச்சியிலே, வழி தெரியாதவாறு தாழ்ந்த அணுகவரிய மிக்க இருளிலே, தன் முடியிலுள்ள சிறந்த மணியைத் தான் மேய்தல் காரணமாக உமிழ்ந்த நாகமானது, கொழுமையான மடலையுடைய காந்தளின் புதுப் பூவை நுகரும் நல்ல நிறத்தைக் கொண்ட தும்பியைத், தன் திருமணி கொல்லோ என்று கருதி மயங்கும், கடத்தற்கரிய வெடிப்புக்களால் இன்னாமையையுடைய நீண்ட வழியை, என் நெஞ்சு நினையும்; என்று,

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த், தலைமகள் சொன்னாள் என்று கொள்க.

**சொற்பொருள் :** *1. இகுளை - தோழி. 2. தெண்பனி - தெளிந்த நீர். 3. செல்லற்கு - துன்பத்திற்கு. 4. கடுத்தனளாகி - ஐயுற்றனளாகி. 5.வெறி - வெறிநாற்றம். 6. உடலுநர் - பகைத்தவர். கடந்த - வென்று கடந்த. சிமை - மலையுச்சி. 10. உருகெழு - உட்குப் பொருந்திய. முருகு - முருகன். 12. அல்கலும் - இரவு முழுவதும். 14. தெளித்த - தெளிவித்து வந்த. 16. துன்னரும் - அணுகுதற்கரிய. 19. நன்னிறம் - நல்ல நிறத்தையுடைய.*

**உள்ளுறை :** *திருமணியுமிழ்ந்த நாகம், காந்தளின் புதுப்பூவை நுகர்ந்ததனால், நன்னிறம் பெற்ற தும்பியைக் கண்டு, தன் மணியோவென ஐயுற்று மயங்குவது போலத் தலைமக னோடு இன்பம் நுகர்ந்ததனாற் பெற்ற புதுச்செவ்வியையுடைய என்னைக் கண்டு, முதுமை காரணமாக அறிவிழந்த அன்னை, மயங்காநின்றாள் என்றனள்.*

**மேற்கோள்:** 'கட்டினும் கழங்கினும் வெறியென விருவரும் ஒட்டிய திறத்தாற் செய்தி' என்ற, 'களவலராயினும்' என்னும் களவியற் சூத்திரப் பகுதிக்கு உதாரணமாகக் கொண்டு, இதன்கண், கட்டென்றாதல் கழங்கென்றாதல் விதந்து கூறாமையின், இரண்டும் ஒருங்கு வந்தன என்றும்,

'பொழுதும் ஆறும்' எனனும் பொருளியற் சூத்திரத்து 'அன்னவை பிறவும்' என்னும் பகுதியில், 'கடம்பும் களிறும்... ஆதல் நன்றே' என்பது, தலைவற்கு வெறியாட்டு உணர்த்தியது என்றும் நச்சினார்க்கினியர் கூறினர்.

**பாடபேதங்கள்:** *11. பாடித் தொடங்கும். 13 - 13. டல்கலும் பாடினளாதல் கைக்கொகண் டாடினள் ஆஅதல் நன்றோ வன்றே நீடு.*

## 139. அவர் நிலை யாது?

**பாடியவர்:** *இடைக்காடனார்:* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைமகன் தன்னைப் பிரிந்ததனால் மெலிவுற்று வாடிய தலைவி. தன் தோழியிடம், தன்னுடைய ஆற்றாமையினை மனம் விட்டுப் பேசுகிறாள். தலைவியின் காதல்கனிந்த உள்ளச் செல்வியை நன்றாக உணர்த்துவது இச் செய்யுள்.)*

**துஞ்சுவது போலஇருளி, விண்பக**
**இமைப்பது போலமின்னி, உறைக்கொண்டு**
**ஏறுவதுப் போலப் பாடுசிறந்து உரைஇ**
**நிலம்நெஞ்சு உட்க ஓவாது சிலைத்தாங்கு,**
**ஆர்தளி பொழிந்த வார்பெயற் கடைநாள்;**

**ஈன்றுநாள் உலந்த வாலா வெண்மழை**
**வான்தோய் உயர்வரை ஆடும் வகைறைப்**
**புதல்ஒளி சிறந்த காண்பின் காலைத்,**
**தண்நறும் படுநீர் மாந்திப், பதவு அருந்து**
**வெண்புறக்கு உடைய திரிமருப்பு இரலை;**

**வார்ணல் ஒருசிறைப் பிடவுஅவிழ் கொழுநிழல்,**
**காமர் துணையொடு ஏமுற வதிய;**
**அரக்குநிற உருவின் ஈயல் மூதாய்**
**பரப்பி யவைபோற் பாஅய்ப், பலவுடன்**
**நீர்வார் மருங்கின் ஈர்அணி திகழ;**

**இன்னும் வாரார் ஆயின் - நன்னுதல்!**
**யாதுகொல் மற்றவர் நிலையே? காதலர்**
**கருவிக் கார்இட இரீஇய**
**பருவம் அன்று, அவர்: 'வருதும்' என்றதுவே.**

*நீரையுடைய மேகமானது, சாக்காட்டைப் போல இருண்டு, வானத்தைப் பிளக்க இமைப்பதுபோல மின்னி, நீரைக் கொண்டு எழும்புவது போல ஒலிமிகுத்துப், புடைபெயர்ந்து உலாவி, நிலத்தின் நெஞ்சு திடுக்கிடும்படியாக ஓயாது ஒலித்து, நீரை நீடித்துப் பொழிந்த பெயலையுடைய கார்காலத்தின் கடைநாளிலே,*

*மழைபெய்து நாட்சென்ற தூயதல்லாத வெண்மேகங்கள், வானை அளாவி உயர்ந்த மலையின் உச்சியிலே உலாவுகின்ற விடியற் காலையிலே, புதல்கள் ஒளிமிகுந்தவையாய்க் காண்பதற்கு இனிதாகத் தோன்றும் காலத்திலே,*

குளிர்ந்த நறிய கிணற்றிலுள்ள நீரைக் குடித்துச் செங்கோல் அறுகினை அருந்துகின்ற, வெள்ளிய முதுகையும் திரிந்த கொம்பையுமுடைய இரலை மான், ஒழுகிய மணலின் ஒரு பக்கத்தே, பிடவு விரிகின்ற கொழுமையான நிழலிலே பிணையுடன் இன்பமுறத் தங்க,

செவ்வரக்குப் போலும் நிறத்தையும் வடிவழகையுமுடைய இந்திர கோபங்கள், பல ஒருசேரப் பரப்பப்பட்டவைகள் போலப் பரவி, நெடிய கரிய வழியில் நீருக்கு அணியாக விளங்க,

இக் காலத்திலும் நம் காதலர் வாராராயின், நல்ல நுதலையுடைய தோழியே! அவர் நிலைதான் யாதாயிற்றோ? அவர் மீளுவேம் என்று கூறியது, தொகுதியுடைய மேகம் இடியைத் தன்பாலே அமைத்துக் கொண்ட கார்காலம் அன்று; பின்னொரு காலமே போலும்! என்று, பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. துஞ்சுவது போல - சாக்காட்டைப் போல. பக - பிளக்க. 2. உறை கொண்டு - நீரைக் கொண்டு. 3. பாடு சிறந்து உரைஇ - ஒலிமிகுத்துப் புடைபெயர்ந்து உலவி. 4. உட்க - திடுக்கிடும்படி. 6. வாலா - தூய்மையல்லாத. 9. படுநீர் - கிணற்றிலுள்ள நீர். 12. ஏமுற - இன்பமுற. 15. நீரணி திகழ - நீருக்கு அணியாக விளங்க. 18. கருவி - தொகுதியையுடைய.

**மேற்கோள்:** 'கொல்லே யையம்' என்று சூத்திர மேற்கோளாக, 'யாது கொல் மற்றவர் நிலையே' என்பதனைக் காட்டி, இப்பாட்டினை இத்துறைக்கே உதாரணமாகக் கொண்டு, 'இம் மணிமிடை பவளத்துப் பாலைக்கண் முன் பனியும் வைகறையும் ஒருங்கு வந்தன' என்றும்,

'வேந்துறு தொழிலே யாண்டின தகமே' என்னுஞ் சூத்திரத்து, 'கருவிக் காரிடி யிரீயிய, பருவ மன்றவர் வருது மென்றதுவே' என்றது, கார்குறித்து வருவலென்றலின், அறுதிங்கள் இடையிட்டது என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

**பாடபேதங்கள்:** 6. ஈன்றுவரலுழந்த. 8. புதலேரணிந்த. 12. துணையோ டமர் துயில் 18. இரீஇய பருவ மன்னவர்.

## 140. உமணர் மடமகள்!

**பாடியவர்:** அம்மூவனார். **திணை:** நெய்தல். **துறை:** இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

*(தலைவனின் களவு உறவைப் பாங்கன் முறையானதென ஏற்றுக்கொள்ளவில்லை. அதனைச் செய்யக் கூடாதது எனக் கடிந்து உரைக்கவும் தொடங்கினான். அதனைக் கேட்ட தலைவன், தன்னுடைய காதலின் மிகுதியைக் கூறுகின்றான்.)*

**பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**
**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**
**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி,**
**என்றூழ் விடர குன்றம் போகும்**
**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**
**'நெல்லின் நேரே வெண்கல் உப்பு' எனச்**
**சேரி விலைமாறு கூறலின்,மனைய**
**விளியறி ஞமலி குரைப்ப, வெரீஇய**
**மதர்கயல் மலைப்பின் அன்னகண் எனக்கு,**

**இதைமுயல் புனவன் புகைநிழல் கடுக்கும்**
**மாமூ தள்ளல் அழுந்திய சாகாட்டு**
**எவ்வந் தீர வாங்குந் தந்தை**
**கைபூண் பகட்டின் வருந்தி**
**வெய்ய உயிர்க்கும் நோயா கின்றே.**

*பெரிய கடலிடத்து மீன்பிடி வேட்டத்தைச் செய்கின்ற சிறுகுடியிலே வாழும் பரதவர்கள், பெரிய உப்பங் கழியாகிய வயலிலே உழாமலே விளைவித்த வெள்ளிய கல்லுப்பினோடு, கோடையாற் பிளந்த கன் முழைகளையுடைய குன்ற வழிகளிலே, தங்களிற் கூடுதலைச் சாற்றிச்செல்லும் விரைகின்ற கோலினையுடைய உப்பு வாணிகரது, காதலையும் மடப்பத்தையுமுடைய மகள்,*

*கோற்றொழில் அமைந்த இலங்குகின்ற சிலவாகிய வளைகள் ஒலிப்பத் தன் கையை வீசி, 'வெள்ளிய கல்லுப்பு நெல்லினுக்கு ஒத்த அளவே' என்று, சேரிகளிலே விலை மாற்றுக் கூறுவதனாலே, மனையின் கண்ணுள்ள நாய் இது வேற்றுக் குரலெனக் குரைத்துவர, அதனைக் கண்டு வெருவிய, போரிடும் இயல்புடைய, மதர்த்த கயல்களிரண்டினைப் போன்ற அவள் கண்கள், எமக்கு,*

*புதுப்புனமாக்கும் பொருட்டாக முயல்கின்ற புனமுடையானாகிய குறவன், பழம்புனத்தைச் சுட்டு எரித்ததனால் உண்டாக்கிய புகையின் நிழலை ஒக்கும் கரிய பழஞ்சேற்றிலே அழுந்திய உப்பு வண்டியின் துன்பம் நீங்க, வருந்தி வலிக்கின்ற*

தந்தையின், புறத்துப் பூண்ட கடாவின் நோய்போல, எமது விருப்பமிக்க உயிருக்கு நோய் ஆயிற்று;

என்று, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் பாங்கற்கு உரைத்தான் என்க.

**சொற்பொருள்** : 1. வேட்டம் - மீன்பிடி வேட்டம். 2. இருங்கழி - பெரிய உப்பங்கழி. செறு - வயல். 3. கொள்ளை சாற்றி - தங்களிற் கூடுதலைக் கூறி. 4. என்றூழ் - கோடை. விடர - பிளந்த கன்முழைகளையுடைய. 5. கதழ்கோல் - விரைகின்ற கோலினையுடைய. உமணர் - உப்பு வாணிகர். 6. தெளிர்ப்ப - ஒலிப்ப. 9. விளியறி ஞமலி - குரலறியும் நாய். 10. மதர்கயல் - மதர்த்த கயல்மீன்கள். 11. இதை முயல் - புதுப்புன மாக்கும் பொருட்டாக முயல்கின்றன. புனவன் - புனமுடையான். 12. அள்ளல் - சேறு.

**உள்ளுறை** : சாகாட்டு எவ்வத்தினைப் பகடுதீரத் தந்தை வாங்கினாற்போலத், தலைவி பொருட்டாக எனக்குண்டான எவ்வத்தினை நீ தீர்த்தற்குரியாய் என்று பாங்கனுக்குச் சொல்லி, அவனிற் கூட்டம் வேண்டினானாகக் கொள்க.

**விளக்கம்** : 'சில்வளை' என்றது, பேதைப் பருவத்தாள் என்றற்கு. பெதும்பைப் பருவத்துப் பெண்கள் பல்வளையிடுதலை வழக்கமாக உடையவர் என்பர்.

**பாடபேதங்கள்** : 4. என்றூழ். வீடாஅக். 5. ததர் கோலு மணர். 8. கூறி நுவறலின் மனைய. 14. நையூண் பகட்டின்.

## 141. விழாக் கொண்டாட வருக!

**பாடியவர்:** நக்கீரர். **திணை:** பாலை. **துறை:** 'பிரிவிடை ஆற்றாள்' எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. **சிறப்பு** : செல்வச் செழுமைமிகுந்த கரிகால் வளவனது இடையாறு என்னும் இடமும், வேங்கடச் சிறப்பும், கார்த்திகை விழாவும்.

('தலைவன் பிரிந்ததனால் தலைவி மிகவும் ஆற்றாமை யுடைய வளாவாள்' என வருந்திய தோழிக்கு, அவள், திருக்கார்த் திகைத் திருவிழாவினை நம்முடன் சேர்ந்து கொண்டாட வாயினும் அவர் வருக' எனத், தான் அதுவரை ஆற்றியிருப்பேன் என்கிறாள்.)

**அம்ம வாழி, தோழி! கைம்மிகக்**
**கனவுங் கங்குல்தோ றினிய: நனவும்**
**புனைவினை நல்இல் புள்ளும் பாங்கின!**

நெஞ்சும் நனிபுகன்று உறையும்: எஞ்சாது
உலகுதொழில் உலந்து, நாஞ்சில் துஞ்சி.

மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர, மதி நிறைந்து,
அறுமீன் சேறும்அகல்இருள் நடு நாள்:
மறுகுவிளக் குறுத்து, மாலை தூக்கிப்,
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய

விழவுஉடன் அயர, வருகதில் அம்ம!
துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்,
தகரம் நாறுந் தண்நறுங் கதுப்பின்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ,

கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கைக்
கடிதுஇடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை ஓங்குமடல் இராது;

நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற்று அன்ன
நல்லிசை வெறுக்கை தருமார், பல்பொறிப்
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை

நரந்த நறும்பூ நாள்மலர் உதிரக்,
கலைபாய்ந்து உகளும், கல்சேர் வேங்கைத்,
தேம்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேங்கட வைப்பிற் சுரன்இறந் தோரே.

*தோழி! நான் சொல்வதனைக் கேள்: நீ வாழ்வாயாக!' இரவுதோறும் கனாவும் மிக்க இனியவாகின்றன; நனவிடத்தும் சித்திரத் தொழிலினால் அலங்கரித்த நல்ல இல்லிலே, புள் நிமித்தமும் நல்லவிடத்தில் உண்டாகின்றன; என் நெஞ்சமும் ஒடுங்காது மிகவும் விரும்பி அமைந்திருக்கும்;*

*ஏர்த்தொழில் மடிந்து, அதனாலே உலகிலுள்ள மற்றைத் தொழில்களும் கெடும்படி மழையானது பெய்யும் இடத்தை விட்டுச் சென்ற ஆகாயத்திலே, சிறுமுயலாகிய மறுவானது தன் மார்பகத்தே விளங்கச் சந்திரன் நிறைந்தவனாகி, உரோகிணி தன்னுடன் சேரும் இருளகன்ற நடு இரவில், அஃதாவது திருக்கார்த்திகைத் திருவிழா நாளின் இரவில், வீதிகளிலே*

விளக்குவைத்து, மாலைகளைத் தொங்கவிட்டுப் பழைமையைத் தனக்குப் பெருமையாகவுடைய மூதூரில் பலருடன் கலந்து கொண்டாடும் விழாவினை, நம்மோடு கூடிக் கொண்டாடும் வண்ணம்;

முற்றவுலர்ந்து, தூயமலரோடு நெருங்கி, மயிர்ச் சாந்து கமழும் குளிர்ந்த நறிய தலைமயிரினையுடைய புதிய மணப் பெண், உணவுமிகுந்த திருமணவீட்டிலே பல பக்கங்களை யுடைய அடுப்பிலே, பாலை உலையாக வைத்து, கூழையாகிய கூந்தலையும் குறிய தொடியினையுமுடைய மகளிரொடு, பெரிய வயலிடத்து விளைந்த நெல்லின் வளைந்த கதிரை முறித்துப் பசிய அவலை இடிக்கும் கரிய வயிரமுடைய உலக்கையினது விரைந்த இடிக்கு, வெருவிய நிறைந்த சூலையுடைய வெள்ளிய குருகானது, தீவிய குலையையுடைய வாழையின் ஓங்கிய மடலின்கண் இராது, நெடிய காலையுடைய மாவினிடத்துக் குறுமையாகப் பறத்தலைச் செய்து சென்று தங்கும், கெட்ட குடியைக் கைதூக்கி உயர்ந்து நிறுவிய பெரிய புகழையும், வெற்றிகொள்ளும் போரினையுமுடைய இடையாற்றைப் போல நல்ல செல்வத்தை ஈட்டும் பொருட்டாக,

கற்பாறையிடையே வளர்ந்த வேங்கையினது பல புள்ளிகளையுடைய புலிநிறத்தைக்கொண்ட பூவினிடையே, பெரிய கொம்பினையுடைய நாரத்தையின் நறிய, அழகிய, அன்று பூத்த மலர் உதிரும்படி முசுக்கலை என்ற ஆண்குரங்குகள் பாய்ந்து துள்ளும், தேனிறால்கள் கமழா நிற்கும் நெடிய பக்க மலைகளால் உயர்ந்த வேங்கடக் கோட்டத்தையடுத்த ஊர்களின் கண்ணுள்ள சுரத்திலே சென்ற நம் தலைவர்,

வருவாராக என்று, பிரிவிடையாற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தனள் என்று கொள்க.

**சொற்பொருள்:** 1. கைம்மிக இனிய - மிகுதியும் இனிய வாகின்றன. 3. புனைவினை நல்லில் - சித்திரங்களால் அலங்கரிக்கப் பெற்ற நல்ல வீடு. புள் - நிமித்தம். 5. நாஞ்சில் - கலப்பை. நாஞ்சில் துஞ்சி என்றதால், ஏர்த்தொழில் இல்லாதாகி என்க. 8. அறுமீன் - உரோகணி. 12. துவர - முற்றவும். கஞலி - நெருங்கி. 13. தகரம் - மயிர்ச்சாந்து, 14. அயினிய - உயவுமிகுந்த. கடிநகர் - திருமணவீடு. 18. காழ் - வைரம். 19. கமஞ்சூல் - நிறைந்த சூல். 23. இடையாறு என்பது, ஓர் ஊர். 24. வெறுக்கை - செல்வம். 26. நரந்தம் - நாரத்தை.

**விளக்கம்:** கனவு கங்குல் தோறும் இனியவாதலாலும், கனாமுந்துறாத வினை இல்லை என்பதாலும், தலைவர் விரைந்து

கோடற்கு வருவாரென்று துணிந்து, தான் ஆற்றுவல் என்பது படத் தோழிக்குத் தலைமகள் தன் நிலையைச் சொன்னாள் என்று கொள்க. மழை கால் நீங்கிய விசும்பில், மதி நிறைந்து கறுமீன் சேரும் நாளில், மறுகு விளக்குறுத்து, மாலை தூக்கிப், பலருடன் துவன்றிய விழாவினை உடன் அயரத், தலைவர் வருவாராக என்றனள்.

**பாடபேதங்கள்:** *10. துவன்றி விழவுடன். 18. பாசவல் இடித்த பெருங்கா. 19. வெரீஇக் கமஞ்சூல். 21. மரத்து. 25. புலிக்கோளூற்ற. 29. வேங்கட வெற்பிற்.*

## 142. வடுப்படத் தழுவினாள்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *மாந்தரஞ் சேரல் இரும்பொறையின் வள்ளன்மை; நன்னனின் பாழிக்காவலனான மிஞிலி அதிகனை வென்ற வெற்றிச் சிறப்பு.*

*(தன் காதலி இற்செறிப்பிலே சிறைப்பட்டமை காரணமாக அவளைக் கூடும் வாய்ப்பற்று வாடினான் தலைவன். இரவுக் குறியும் வாய்க்கப் பலப்பல இடையூறுகள் எழுந்தன. எல்லாம் நீங்கி, இரவிலே குறித்த இடத்திலே அவளைக் கண்டு கூடியும் மகிழ்ந்தவன், அந்த இன்பச் செல்வியை இப்படிச் சொல்லுகிறான்.)*

**இலமலர் அன்ன அம்செந் நாவிற்**
**புலம்மீக் கூறும் புரையோர் ஏத்தப்,**
**பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்**
**நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்-**
**பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற**

**குறையோர் கொள்கலம் போல, நன்றும்**
**உவஇனி-வாழி, நெஞ்சே!-காதலி**
**முறையின் வழா அது ஆற்றிப் பெற்ற**
**கறையடி யானை நன்னன் பாழி,**
**ஊட்டரு மரபின் அஞ்சு வரு பேஎய்க்**

**கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி**
**புள்ளிற்கு ஏமம் ஆகிய பெரும்பெயர்**
**வெள்ளத் தானை அதிகற் கொன்றுஉவந்து**
**ஒள்வாள் அமலை ஞாட்பிற்,**
**பலர் அறி வுறுதல் அஞ்சிப், பைப்பய,**

**நீர்த்திரள் கடுக்கும் மாசில் வெள்ளிச்**
**சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்**
**குறை அறல் அன்ன இரும்பல் கூந்தல்,**
**இடனில் சிறுபுறத்து இழையோடு துயல்வரக்,**
**கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து,**

**உருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை**
**இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து,**
**பெயல் அலைக் கலங்கிய மலைப்பூங் கோதை**
**இயல்எறி பொன்னின் கொங்குசோர்பு உறைப்பத்**
**தொடிக்கண் வடுக்கொள - முயங்கினள்:**

**வடிப்புறு நரம்பின் தீவிய மொழிந்தே.**

*அரசர்கள் பொருள்தேடி வருவதற்கு உரிய முறைமைகளி னின்றும் சற்றும் பிறழாமல், அவற்றையெல்லாம் அவ்வம் முறைகளோடும்கூடி இயற்றிப் பெருஞ் செல்வத்தைப் பெற்றவனும், உரல்போலும் அடியினையுடைய யானைப் படைகளை உடையவனுமான, நன்னன் என்பவனுக்கு உரியது 'பாழி' என்னும் பேரூர். அந்தப் பேரூரிலே, பலியூட்டு நிகழ்த்துவதற்கு அரிய தன்மையினையுடைய அச்சம்வருகின்ற பேய்க்குப் பலி யூட்டு நிகழ்த்துதலை ஏற்றுக்கொண்டான் வாய்மொழி தவறாதவனான 'மிஞிலி' என்பவன். புட்களுக்குப் பாதுகாவலாகிய பெரும்புகழினைக்கொண்ட வெள்ளம் போன்ற சேனாவீரர்களையுடைய அதிகன் என்பவனைக் கொன்று, அந்த மகிழ்வுடன் 'ஒள்வாள் அமலை' என்னும் வெற்றிக்கூத்தினை ஆடி, ஏற்றுக்கொண்டபடியே பேய்க்கு ஊட்டு நிகழ்த்தினான். அவன் அப்படி ஒள்வாள் அமலை ஆடியபோது, எங்கும் ஏற்பட்ட ஆரவாரப் பேச்சுக்களைப் போலப் பலரும் எம் களவு ஒழுக்கத்தை அறிந்து பேசப்படுதலை நினைத்து அஞ்சுபவள் நம் காதலியான அவள்.*

*நீரின் திரட்சியைப் போன்றிருக்கும், குற்றமற்ற சொக்க வெள்ளியினாலாகிய, வளைவு பொருந்திய கோற்றொழி லமைந்தவளைகள் செறிந்த முன்கைகளை உடையவள்; பிடரியிலே குறைந்து வருகின்ற கருமணலைப்போன்ற கரிய பலவாகிய கூந்தலானது அணிகளுடன்கூடி இனி இடமில்லை யாகும்படியாகக் கிடந்து அசைந்துகொண்டிருக்க விளங்குபவள்; கடல் மீன்களும் உறங்கும் 'நள்' என்னும் ஒலியினையுடைய இரவின் நடுயாமத்திலே, அழகு கிளர்ந்த பொலிவினை யுடையதும், செய்யும் தொழிலாற் சிறப்புற அமைந்ததுமான*

பொற்பாவையானது, நடைகற்று வருவதுபோன்று, ஒதுங்கி ஒதுங்கிப் பையப் பைய குறியிடத்திற்கு வந்து சேர்ந்தனள்.

மழைபெய்து அலைத்தலினாலே கலங்கிய மலைப் பூக்களால் தொடுத்த மாலையினின்றும், உலைக்களத்துக் கொல்லன் காய்ச்சி அடிக்குங் காலத்தே தெறித்து வீழும் பொற்றுகள் போன்ற மகரந்தத் துகள்கள் துளித்து வீழ, வடித்தல் அமைந்த யாழ் நரம்பினின்றும் எழும் ஒலிபோல இனிக்க இனிக்கப் பேசித், தன் தொடியிட்ட இடத்திலே வடுவுண்டாகு மாறு, என்னையும் கட்டித் தழுவினாள்.

இலவம்பூப் போன்ற அழகிய சிவந்த தம் நாவினால் அறிவுடைமை காரணமாக மேலாகக் கூறப்பெறுகின்ற உயர்ந்தோர்கள் புகழுமாறு, அரசர்கள் பலருள்ளும் மேம்பட்டு விளங்கியவனும், வரையின்றிக் கொடுத்தலால் எப்போதும் கவிந்தேயிருக்கும் கைகளை உடையவனாக விளங்கும் வள்ளலும், ஒருசார் ஒருங்கே நிறுத்துதற்கு அரிய பெரும் படைத்திரளினை உடையவனும், போர்களிலே வெற்றி பெறுபவனும் ஆகிய, மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் சேரமன்னனைப் பாடிச்சென்ற வறுமையாளர்களின் கொள்கலம் நிறைவுற்று விளங்குவதுபோல, நெஞ்சமே! இனி, நீயும் நன்றாக நிறை வெய்தி மகிழ்வாயாக! நீ வாழ்க!

என்று, இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. இலமலர் - இலவ மலர். 2. புலம்மீக்கூறும் புரையோர் - அறிவுடைமை காரணமாக மேலாகக் கூறப் பெறுகின்ற உயர்வுடையோர். 6. குறையோர் - குறையுடையோர்; குறையினையே என்றும்அறிந்து பழகிய கொள்கலமும் ஆம். 8. முறை - முறைமை. 9. கறை - உரல்; கறையுமாம். 10,11. 'பேய்க்கூடு' எனக்கூட்டியும், அதனை எதிரேற்றுக் கொண்ட மிஞிலி என உரைப்பர். வாய்மொழி - வாய்மையுடைய பேச்சு; சொன்ன சொல் தவறாத பேச்சு. 12. புள்ளிற்கு ஏமம் ஆகிய - பகைப் படைகளைக் கொன்று புட்களுக்கு உணவாக்கி அவற்றுக்குப் பாதுகாவல் ஆகிய 13. பெரும் பெயர் வெள்ளத்தானை - பெரும் பெயரான 'வெள்ளம்' என்ற எண்ணினளவு வீரர்களைக் கொண்ட தானையுமாகும். அதிகன் - அதியன் ஆய் எயினன். இதனைப் பின்வரும் 148 ஆவது பாடலும் உணர்த்தும். 14. ஒள்வாள் அமலை - வலிகெழுதோள் வாள் வயவர் ஒலிகழலா னுடன் ஆடியது' என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறும். வாளாற்றல் மிகுந்த வீரர் தம் அரசருடன் கூடியாடும் வென்றிக்

கூத்து இது. ஞாட்பு - பூசல்; அதனால் எழுகின்ற ஆரவாரம். 17. சூர்ப்பு - வளைவு - 19. சிறுபுறம் - பிடரி. 22. ஒதுக்கினள் - ஒதுங்கி வருபவள். 23. மலைப் பூங்கோதை - மலைப் புக்களால் தொடுத்த கோதை; கோதை, பெண்களின் தலைமாலை. 24. கொங்கு - மகரந்தம்; பூந்தாது. 26. தீவிய - இனிய.

**விளக்கம்:** 'ஞிமிலி அதிகனைக் கொன்று ஆடிய ஒள்வாள் அமலை' பலராலும் குறித்துப் பேசப்படுவதனாற்போல, இவர்களுடைய களவும் பிறர் அறியின், பலராலும் குறித்துப் பேசப்பட்டு அலர் உரைக்கப்படுவதாகும். அதற்கு அஞ்சியவள் ஒதுக்கினளாகப் 'பையப்பைய வந்தாள்' என்க. அவளைப் பெறாது வறுமையுற்று வாடிக்கிடந்த நெஞ்சம், முயக்கம் பெற்ற அந்த அளவானே எய்தியநிறைவுக்கு மாந்தரஞ்சேரலைப் பாடிச்சென்ற குறையோர்களின் கொள்கலம் நிரம்பிவழியும் இயல்பைக் குறித்தனர்.

**மேற்கோள்:** 'வினைபயன் மெய்யுரு' என்னும் உவமவியற் சூத்திரவுரையில், 'உருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை இயல் கற்றன்ன ஒதுக்கினள்' என்றக்கால், வடிவுபற்றி உவமங் கொள்ளவே, உயிரில்லாதாள்போல அச்சமின்றி இரவிடை வந்தாளென்னும் பொருள் தோன்றும் என்றும்,

'செல்வம் புலனே' என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்துத் 'தொடிக்கண் வடுக்கொள... மொழிந்தே' என்பது புணர்ச்சி பற்றிய உவகை; என்னை? இவள் இவ்வாறு முயங்கினமையின் 'உவவினி வாழிய நெஞ்சே' என்றமையின் என்றும், பேராசிரியர் கூறுவர்.

**பாடபேதங்கள் :** 1. நிறையிருந்தானை மாந்தரன். 7. வாழி யென்னஞ். 8. முறையியன் வழாஅ: 13. அதியற் 23. பெயலலைக் கலக்கிய மிலைப்பூங். 22. வியலெறி.

## 143. கண்கள் நீர் சொரிந்தன!

**பாடியவர்:** ஆலம்பேரிச் சாத்தனார். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகனைத், தோழி தலைமகளது ஆற்றாமை கண்டு செலவு அழுங்குவித்தது. **சிறப்பு:** சேரர்கள் படைத்தலைவனாகிய பிட்டன் என்பவனுக்கு உரிமையுடைய குதிரைமலையின் வளம் கூறப்பட்டிருப்பது.

(தலைவன், தான் பொருள்தேடி வரும் பொருட்டாகப் பிரியப் போவதாகச் சொன்னான். அவ்வளவிலேயே, அவன் காதலியின் துயரம் பெரிதாயிற்று. அதனை அறிந்த அவளுடைய தோழி

*மிகவும் வருந்தினாள். தலைவன்மீது அவளுக்கு வருத்தமும் உண்டாயிற்று. அவனிடம் வந்து, 'அவள் வருத்தத்தைக் கண்டு யான்தான் நோகின்றேன்: நின்பால் அவளுக்காக இரக்கப் படுகின்ற அருள் உள்ளத்தைக் காணோம்' என்றாள். அதனைக் கேட்ட அவன் மனம் மாறியவனாகத் தான் போவதையே நிறுத்திவிட்டான்.)*

**செய்வினைப் பிரிதல் எண்ணிக், கைம்மிகக்**
**காடுகவின் ஒழியக் கடுங்கதிர் தெறுதலின்**
**நீடுசினை வறிய வாக, ஒல்லென**
**வாடுபல் அகலிலை கோடைக்கு ஒய்யும்**
**தேக்கு அமல் அடுக்கத்து ஆங்கண் மேக்கெழுபு**

**முளிஅரிற் பிறந்த வளிவளர் கூர்எரிச்**
**சுடர்நிமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்**
**'வெம்மலை அருஞ்சுரம் நீந்தி-ஐய!**
**சேறும் என்ற சிறுசொற்கு... இவட்கே,**
**வசைஇல் வெம்போர் வானவன் மறவன்**

**நசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும்,**
**பொய்யா வாய்வாள், புனைகழல் பிட்டன்**
**மைதவழ் உயர்சிமைக் குதிரைக் கவாஅன்**
**அகல் அறை நெடுஞ்சுனை, துவலையின் மலர்ந்த**
**தண்கமழ் நீலம் போலக்,**

**கண்பனி கலுழ்ந்தன; நோகோ யானே.**

*ஐயனே! பொருளினைத் தேடிவருகின்ற ஆள்வினையின் பொருட்டாக, எம்மைப் பிரிந்து வேற்றுநாடு செல்லுதலைக் குறித்து எண்ணுகின்றாய்.*

*"ஞாயிற்றினது கதிர்கள் காட்டினது கவினெல்லாம் அளவுக்குமீறி அழிந்து போகுமாறு கடுமையாக எரித்துக் கொண்டிருக்கும்; தேக்கு மரங்களின் உயர்ந்த கிளைகளிலே யிருந்த பலவாகிய அகன்ற இலைகள் எல்லாம் வாடிப்போய், ஒல்லென்ற ஒலியுடன் மேற்காற்றினிலே உதிர்க்கப்பட்டுப் போகும்; அதனால், தேக்கின் நீண்ட கிளைகளும் வறுமையடைந்தவரைப்போல வளமற்று விளங்கும்; சாய்ந்த தூறுகளிலே நெருப்புப் பற்றிக் கொள்ளும்; காற்று வீசுவதனால் அது எங்கும் படர்ந்து மென்மேனும் வளர்ந்து ஓங்கும்; உயர்ந்த நெடிய செங்கொடிபோலத் தோன்றும் அந் நெருப்பின் கொழுந்துகள் மலைக்குகைகளினுள்ளேயும் சென்று முழங்கும். இத்தகைய வெம்மை வாய்ந்ததும், கடந்து போவதற்கு*

அரியதுமான சுரநெறியினைக் கடந்து வேற்று நாட்டிற்குச் சென்று சேர்வோம் என்று கூறினாய்; நீ கூறிய அந்தச் சிறுமையான சொற்களைக் கேட்டனள் தலைவி.

பழிச் சொற்கள் எவையும் சேர்தலில்லாத, வெம்மையுடன் போரிடுகின்ற வல்லமையினை உடையவன் சேரர்படைத் தலைவனாகிய - பிட்டன். பரிசில் பெற்று வாழும் ஆசையுடனே தன்பால் வருகின்ற இரவலர்களுக்கு நல்ல பல அணிகலன்களை அளிப்பவனும் அவன். வெற்றியினைத் தப்பாது விளைவிக்கின்ற வாய்மையுடைய வாளினை உடையவனும் அவன். அவன் தன் கால்களிலே வீரக்கழல்கள் புனைந்திருப்பான். கார்மேகங்கள் தவழுகின்ற உயர்ந்த மலையுச்சிகளையுடைய குதிரைமலை அவனுடையது.

அதன் சாரல்களிலே, பாறையிடத்தேயுள்ள நெடிதான சுனையிலே மழைத்துளிகள் வீழ மலர்ந்ததும், தண்மையான மணம் கமழ்வதுமான நீல மலர்களினின்றும் நீர்த்துளிகள் வீழ்ந்துகொண்டிருக்கும். அதைப்போல, இவளுடைய கருவிழி களும் நின் சொற்களைக் கேட்டதும், நீர் சொரியத் தொடங்கி விட்டன. அதனைக் கண்டு யான் தான் வருந்து கின்றேன்' ("நீ வருந்தினாயில்லை; வருந்தினால், இப்படிப் பிரிய நினைக்கமாட்டாய் அன்றோ?" என்பது குறிப்பு.)

என்று, பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றாமைகண்டு செலவழுங்குவித்தாள் என்க.

**சொற்பொருள்:** 1. கைம்மிக - அளவுக்கு அதிகமாக - 3. ஒல்லென - ஒல்லென்னும் ஒலியுடனே. வாடிய இலைகளைக் காற்று அலைத்து உதிர்க்கும்போது எழுகின்ற ஒலி இது. 4. கோடை - மேல்காற்று. 5. தேக்கமல் - தேக்கு மரங்கள் செறிந்த. 6. முளி அரில் காய்ந்துபட்ட தூறுகள். 7. விடர் முகை மலைப் பிளப்புகளின் முனைகள். 9. சிறு சொல் சிறுமை உடையதான சொல். 10. வானவன் - சேரன்; வசையின் வெம்போர் வானவனும் ஆம், 13. மை - கருமை; கார் - மேகம். குதிரை - குதிரை மலை; தர்மபுரிக்கு அருகே இருப்பது.

**உள்ளுறை:** 'முன்னரே வாடிய தேக்கினது இலையைக் கோடையானது சினை வறியவாக இழுத்துப் போவதுபோல, நுமது பிரிதற்குறிப்பால் முன்னரே வாடிய தலைவியின் உயிரை நும் பிரிவு உடல் பாழாக இழுத்துக்கொண்டு போய் விடும் எனத் தோழி குறிப்பால் உணர்த்தினாள் என்று கொள்க. சினை கிளை.

**விளக்கம் :** *வசையில் போராவது, படைமடம் படாமைப் பெரும் போர் ஆகும்; படைமடம் படின் வருவது வசையாம்; ஆதலின், பிட்டனை 'வசையில் வெம்போர் வானவன் மறவன்' என்றனர். வானவன் சேரன்.*

**பாடபேதங்கள் :** *2. கவின் அழியக் கடுங்கதிர். 4. ஆடுபல் அகலிலை. 6. முளரியிற்பிறந் 8. வெம்முனை அஞ்சுரம்.*

## 144. புலம்பினாலும் மகிழ்வாள்!

**பாடியவர்:** *மதுரை அளக்கர் ஞாழலார் மகனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினை முற்றிய தலைமகன், தன் நெஞ்சிற்கு உரைப்பானாய்ப் பாகற்குச் சொல்லியது.*

*(தலைமகன், போர்வினை மேற்கொண்டவனாகத், தன்னுடைய தலைவியைப் பிரிந்து சென்றிருப்பவன், தன்னுடைய பிரிவின் துயரத்தினால் தன்னுடைய காதலி எப்படி வாடி மெலிவாள்; எப்படித் தன் தோழியிடம் மனம் நொந்து தன்னுடைய கொடுமையை கூறிகூறி வருந்துவாள் என்றெல்லாம் எண்ணுகின்றான். அவனுக்கு ஓர் அமைதி. தான் போரில் வென்று பெற்ற செல்வத்தைப் பற்றிச் சுற்றத்தார்கள் புகழ்ந்து உரைக்க கேட்டபோது, அவள் எல்லாம் மறந்து தன்னைத் தழுவி மகிழ்ந்தது போல் மகிழ்வாளல்லவோ என்று நினைக்கிறான். தன் நெஞ்சினை விளித்துக் கூறுவதுபோலப் பாகனுக்குத் தன் ஆற்றாமையை உரைத்துத் தேரை விரைந்து செலுத்தத் தூண்டுகின்றான்)*

**"வருதும்' என்ற நாளும் பொய்த்தன;**
**அரியேர் உண்கண் நீரும் நில்லா;**
**தண்கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை**
**வைவாய் வான்முகை அவிழ்ந்த கோதை**
**பெய்வனப்பு இழந்த கதுப்பும் உள்ளார்,**

**அருள்கண் மாறலோ மாறுக-அந்தில்**
**அறன்அஞ் சலரே! ஆயிழை! நமர்' எனச்**
**சிறிய சொல்லிப் பெரிய புலப்பினும்,**
**பனிபடு நறுந்தார் குழைய, நம்மொடு,**
**துனிதீர் முயக்கம் பெற்றோள் போல**

**உவக்குநள்-வாழிய, நெஞ்சே!-விசும்பின்**
**ஏறெழுந்து முழங்கினும் மாறெழுந்து சிலைக்கும்**
**கடாஅ யானை கொட்கும் பாசறைப்,**
**பார்வேட்டு எழுந்த மள்ளர் கையதை**
**கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி,**

**மானடி மருங்கில் பெயர்த்த குருதி**
**வான மீனின் வயின்வயின் இமைப்ப,**
**அமரோர்த்து, அட்ட செல்வம்**
**தமர்விரைந்து உரைப்பக் கேட்கும் ஞான்றே.**

"அழகிய அணிகலன்கள் அணிந்துள்ள தோழியே! நம்மவர் வந்துவிடுவோம் என்று உரைத்துச் சென்ற நாளும் பொய்த்துவிட்டன; செவ்வரி பரந்த அழகிய மையுண்ட கண்களினின்றும் ஒழுகும் கண்ணீரும் நிற்கவில்லை; தண்மையான கார்காலத்திற்கு ஈன்ற பசுமையான கொடியினை யுடைய முல்லையின் கூர்மையான முனையையுடைய வெள்ளிய மொட்டு விரிந்த பூத்தொடுத்த மாலைசூடும் அழகினை இழந்து விட்ட எம் கூந்தலைப்பற்றியும் அவர் நினையாதவராயினர்; காதன் மனைவியை வாடவிடுவது அறமல்லவே என அறத்தினை கருதியும் அவர் அஞ்சினார் அல்லர்; இவ்வாறெல்லாம் ஆயினமையால் அவரிடத்தினின்றும் நமக்கு அருள் செய்தலான எண்ணம் மாறிப்போன தென்றாலும் மாறிப்போகட்டும்' என்றெல்லாம் சிறுமையான சொற்களைச் சொல்லித்தான் பெரிதாக வருந்துபவள் நம் காதலி. ஆயினும்,

வானத்திலே இடியேறானது எழுந்து முழங்கின தென்றாலும், அதற்கு எதிராகத் தானும் எழுந்து முழங்கும் மதம் பொருந்திய போர்யானைகள் சுற்றிக்கொண்டிருப்பது நம் பாசறை; போர் செய்தலை விரும்பி எழுந்த வீரர்களின் கையிடத்தவான கூரிய வாள்களின் குவிந்த முனைகள் சிதைவுறுமாறு பகைவர்களைக் கொன்ற காலத்திலே, களத்தில் குதிரைக் குளம்புகள் பதிந்த பள்ளங்களிலே பாய்ந்து கிடக்கும் குருதியானது, வானத்து ஆதிரையாகிய மீனைப்போல இடந்தோறும் விட்டுவிட்டு மின்னிக் கொண்டிருக்கும்; அவ்வாறு போர்த்திறன் அறிந்து போரியற்றி வென்று நாம் பெற்ற செல்வத்தைப்பற்றி, நம் சுற்றத்தார்கள் விரைந்து சென்று, அவளிடம் சொல்லி நம்மைப் புகழ்வார்கள்.

அதனைக் கேட்டபோது, அவள் குளிர்ச்சிபொருந்திய நம் மார்பகத்து நறுந்தார் குழையுமாறு, நம்முடன் தன்னுடைய துயரமெல்லாம் தீரத் தழுவுதலைப் பெற்றவளைப்போல, உள்ளம் மகிழ்வாள் அல்லளோ? நெஞ்சமே! நீ வாழ்வாயாக!

என்று, வினைமுற்றிய தலைவன் தன் நெஞ்சிற்கு உரைப்பானாய்த் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 2. அரி - செவ்வரி. ஏர் - அழகு. 3. கார்க்கு - கார் காலத்திற்கு, தலைப் பெயலுக்கும் ஆம். 4. வைவாய் -

கூர்மையான முனை. 5. கோதை பெய் வனப்பு இழந்த - மகளிர் தம் காதலரைப் பிரிந்த காலத்துக் கூந்தலுக்குக் கோதையும் சூடிப் புனையார் ஆதலின், அவ் வனப்பு இழந்த என்றான். 6. அருள் கண்மாறல் - அருள்தலாகிய கண்ணோட்டம் மாறல்: அருளும் கண்ணோட்டமும் மாறல் எனினும் பொருந்தும். 6. அந்தில் - அசை. 9. பனிபடு நறுந்தார் - புதுப் பூக்களால் கட்டப்பட்டதால் தேன் சொட்டிக் கொண்டிருக்கும் நறுமணமுள்ள தாரும் ஆம். 11. விசும்பின் ஏறு - இடிஏறு. 12. மாறு எழுந்து - மாறுகொண்டு சினந்து எழுந்தும் ஆம். சிலைக்கும் - ஒலி முழங்கும். 15. குவிமுகம் - குவிந்திருக்கும் முனை. 16. மான் அடி - குதிரைக் குளம்புகளின் தடம். 17. வான மீன் - இங்கே, செவ்வொளி பரப்பும் ஆதிரை மீன்.

**விளக்கம்:** 'கண்மாறல்' என்பது, விழித்தகண் இமைக்கும் அளவிலே மறைதல் என்றார் மதுரைக்காஞ்சி உரையில் நச்சினார்க்கினியர் - (மதுரை. அடி. 64). ஓர்த்து' - உன்ன நிமித்தமும் புள்நிமித்தமும் விசாரித்து எனவும் கொள்வர்.

**மேற்கோள்:** இப் பாட்டினை, "வேந்தன் தலைவனாயின வாறும், தான் அமரகத்து அட்ட செல்வத்தையே மிக்க செல்வமாகக் கருதுதற்கு உரியாள் அரச வருணத்திற்றலைவியே என்பதும் உணர்க" என, 'ஏவன் மரபின் என்ற சூத்திரத்து உரையிலே நச்சினார்க்கினியரும்; 'பொய்யே கோடல்' என்ற துறைக்கு, 'இன்பத்தை வெறுத்தல்' என்னுஞ் சூத்திர உரையிலே 'வருதுமென்ற நாளும் பொய்த்தன; வரியோர் உண்கண் நீரும் நில்லா' என்ற பகுதியைப் பேராசிரியரும் காட்டினர்.

**பாடபேதங்கள்:** 1. வருவேமென்ற. 2. வரியேர் உண்கண். 14. கைய. 18. அமரொறுத்து அட்ட.

## 145. அடித்த கை அழிவதாக!

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது. **சிறப்பு:** என்னி என்பவன் குறுக்கைப் பறந்தலையிலே திதியனை வென்று, அவன் காவல் மரமாகிய புன்னையை அழித்த செய்தி.

(அருமையாக வளர்த்த மகள், இற்செறிப்பைக் கடந்து தன் காதலனுடன் உடன் போக்கிலே சென்றுவிட்டாள். அவளை வளர்த்த அருமையும், தான் இற்செறித்தபோது முதுகிலே அடித்த அடியையும் பொருட்படுத்தாது நின்ற மகளின் நிலைமையையும் நினைத்துக் கொள்ளுகிறாள் தாய். 'அப்படி அவளை அடித்த கையை வெட்டினால்தான் என்ன?' என்று நொந்து கொள்ளுகிறாள்.)

**வேர்முழுது உலறி நின்ற புழற்கால்,**
**தேர்மணி இசையின் சிள்வீடு ஆர்க்கும்,**
**வற்றல் மரத்த பொன்தலை ஓதி**
**வெயிற்கவின் இழந்த வைப்பின் பையுள் கொள,**
**நுண்ணிதின் நிவக்கும் வெண்ஞெமை வியன்காட்டு**

**ஆளில் அத்தத்து, அளியள் அவனொடு-**
**வாள்வரி பொருத புண்கூர் யானை**
**புகர்சிதை முகத்த குருதி வார.**
**உயர்சிமை நெடுங்கோட்டு உருமென முழங்கும்**
**'அருஞ்சுரம் இறந்தனள்' என்ப-பெருஞ்சீர்**

**அன்னி குறுக்கைப் பறந்தலைத், திதியன்**
**தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணிய**
**நன்னர் மெல்லிணர்ப் புன்னை போலக்,**
**கடுநவைப் படீஇயர் மாதோ-களி மயில்**
**குஞ்சரக் குரல குருகோடு ஆலும்,**

**துஞ்சா முழவின் துய்த்தியல் வாழ்க்கைக்,**
**கூமுடைத் தந்தை இடனுடை வரைப்பின்,**
**ஊழடி ஒதுங்கினும் உயங்கும் ஐம்பாற்**
**சிறுபல் கூந்தற் போதுபிடித்து அருளாது,**
**எறிகோல் சிதைய நூறவும், சிறுபுறம்,**

**'எனக்குஉரித்து' என்னாள், நின்ற என்**
**அமர்க்கண் அஞ்ஞையை அலைத்த கையே!**

*வேர் முதலாக முழுவதுமே முற்றவும் காய்ந்துபோய் நிற்கும், துளைகளிலே சிள்வீடு என்னும் வண்டுகள் இருந்து கொண்டு தேரின் மணியோசைபோல ஒலிமுழங்கிக் கொண்டிருக்கும், வற்றல் மரத்திலுள்ள பொன்னிறம் வாய்ந்த தலையையுடைய ஓந்தியானது, வெயிலால் அழகு இழந்து போன ஊர்களிலுள்ள வெண்மையான ஞெமை மரங்களையுடைய அகன்ற காட்டிலே, தான், கோடையின் வெம்மையால் வருத்தம் கொள்ளுதலால் மெல்லெனத் தாவிக் கொண்டிருக்கும், ஆட்கள் எவரும் செல்லுதல் இல்லாத வழியிலே, வாள்போன்ற கோடுகளை யுடைய புலியுடன் போரிட்டுப் புண்பட்ட யானையானது, புள்ளிகள் சிதைந்த தன் முகத்திலேயிருந்து குருதியானது ஒழுகிக்கொண்டிருக்க, உயர்ந்த உச்சியினையுடைய நெடிய மலைமுகடுகளிலே இடி முடித்து முழங்குவதுபோல முழங்கிக்கொண்டிருக்கும்.*

இரங்கத் தக்கவளாகிய என் மகள், அத்தகைய அரிய சுரநெறியிலே, அவள் காதலனுடன் கடந்துசென்றனள் என்பார்கள்.

யானைக் குரலுடைய பறவைகளுடன் சேர்ந்து களிப்புக் கொண்ட மயில்களும் ஆடிக்கொண்டிருப்பதும், ஓயாத முழ வொலியினை உடையதும், செல்வத்தைத் துய்த்துஇயலுகின்ற இல்வாழ்க்கை அமைதியினை உடையதும்ஆகிய, நெல்வளம் மிகுதியாக உடைய தன் தந்தையின் அகற்சியையுடைய மாளிகையிலே, எடுத்துவைக்கும் தன் காலடியானது சிறிதே புரண்டாலும், அதற்கே வருந்துபவள் அவள். அவளுடைய, ஐம் பகுதிட்பட்ட சிறிய பலவாகிய கூந்தலைச் சூடியிருந்த மாலையுடன் சேர்த்துப்பிடித்துக், கொஞ்சமும் அருளில்லாது அடிக்குங்கோல் சிதையும் வரையும் முதுகிலே அடிக்கவும், 'முதுகு எனக்கு உரியது' என்றும் சொல்லாளாய், அன்று அசையாது நின்றாள்.

'குறுக்கைப் பறந்தலையிலே, திதியனது பழமைபொருந்தி யதும், நன்றாகிய மெல்லிய பூங்கொத்துக்களையுடையது மான, புன்னையின் பெரிய முதல் துண்டாகப் பண்ணிய அன்னி போல, அமர்த்த கண்களையுடைய என் அம்மையை அப்படி அடித்து வருத்திய என் கையும் பெரிய துன்பத்தை அடைவதாக!

என்று, மகட்போக்கிய செவிலித்தாய் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. வேர் முழுது - வேரும் மரம் முழுமையும் எனப் பொருள்படும். புகழ் கால் - துளையையுடைய அடி மரம். 3. ஓதி - ஓந்தி. 4. பையுள் - துன்பம். 7. வாள் வரி - புலி வாள் போன்ற கோடுகளை உடையது. 9. உரும் - இடி. முதல் - வேரோடும், 14. நவை - துன்பம் 16. துய்த்தியல் வாழ்க்கை - இல்வாழ்க்கை. 17. கூழ் நெல்வளம். 20. எறி - கோல் - அடிக்குங்கோல், 22. அஞ்ஞை - அம்மை; மகளைக் குறிக்கும்.

**விளக்கம் :** அடி புரள்வதற்கே வருத்தமுறும் மகள், கூறுதலைப் பற்றிக்கொண்டு அடிக்குங் கோலும் சிதையுமாறு அடித்தாலும், தான் உடன்போக்கிலே செல்லவிருப்பதை மனத்துட்கொண்டு வாளாவிருந்தனள்; அதனைப் பின்னரே செவிலித்தாய் உணர்கிறாள். துய்த்தியல் வாழ்க்கையை உடைய தந்தையாயிருந்தும், அவள் விரும்பியவாறே துய்த்தின்புற மாறுபாடு சொன்னதால்தான், அவள் வெளியேறினாள் என நினைப்பதும் இதனாற் கருதுக.

**மேற்கோள்:** 'கூழுடைத் தந்தை....முயங்கும்' என நெல்லுடைமை கூறிய அதனானே, அவள் வேளாண் வருண மென்பது பெற்றாம் எனக், 'கொண்டு தலைக்கழியினும்' என்னும் பொருளியற் சூத்திர உரையுள் நச்சினார்க்கினியர் காட்டினர்.

**பாடபேதங்கள்:** *6. அத்தந் தமியள். 16. துயக்கில் வாழ்க்கை. 22. அமர்க்கண் மஞ்ஞையை.*

## 146. அழகு வேண்டாதவர்!

**பாடியவர்:** *உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார்.* **திணை:** *மருதம்.* **துறை:** வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது.

*(தன் தலைவியை மறந்துவிட்டுப் பரத்தையர்களுடன் கூடித் திரிந்தான் ஒரு தலைவன். அவன் செயலை அறிந்த அவள் ஊடிப் பிணங்கி இருந்தாள். அவளுடைய நினைவு எழப்பாணன் மூலம் தான் மீண்டும் வீட்டுக்குவர நினைப்பதைச் சொல்லியனுப்பித் தன் தலைவியின் இசைவைப் பெற்றுவர வேண்டுகிறான் தலைவன். பாணனிடம் தலைவனின் வரவை ஏற்காது மறுத்துத் தலைவி இப்படிக் கூறுகிறாள்.)*

**வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு
பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி
மடக்கண் எருமை மாண்நாகு தழீஇ,
படப்பை நண்ணிப், பழனத்து அல்கும்
கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடுந்தேர்,**

**ஒள்ளிமழை மகளிர் சேரிப், பல்நாள்
இயங்கல் ஆனாது ஆயின், வயங்கிழை
யார்கொல் அளியள் தானே-எம்போல்
மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி
வளிபொரத் துயல்வரும் தளிபொழி மலரின்**

**கண்பனி ஆகத்து உறைப்பக், கண் பசந்து
ஆயமும் அயலும் மருளத்,
தாயோம்பு ஆய்நலம் வேண்டா தோளே?**

*எல்லா வலியும் மிகுதற்குக் காரணமான உடல்வலிமை யினையும் தலைமையினையும் உடைய எருமைக் கடாவானது, குளிர்ந்த தாமரைப் பொய்கையிலே, மாலைவேளைவரை பகலெல்லாம் கிடந்து நெடும்பொழுது மறுகிவிட்டு, மடப்பம் வாய்ந்த கண்களையுடைய மாட்சியுள்ள எருமைக்கிடாரியைத்*

தழுவிக்கொண்டு, தோட்டக்கால்களிலே மேய்ந்துவிட்டுப், பின்னர் வயல்களிலே சென்று தங்கும். அத்தகைய வளமுடைய ஆரவார மகிழ்ச்சி பொருந்திய ஊரனது, ஒலிக்கும் மணியுடைய நெடுந்தேரானது, ஒள்ளிய இழைகள் அணிந்த மகளிர்களுடைய சேரிப்புறத்தே பல நாட்களாகச் சென்று கொண்டிருந்தல் அமையாதானால்: -

மாயஞ் செய்யும் பரத்தமை உடையவனின் வாய்ச் சொற்களை எல்லாம் உண்மையென எம்மைப்போல நம்பி ஏமாந்து, காற்று மோதலினால் அசையும் மழை பெய்யப்பட்ட மலரினின்றும் நீர் சொரிவதுபோலத் தன் கண்களினின்றும் விழும் கண்ணீர் தன் மார்பிலே வழியக் கண்கலங்கி, ஆயத்தாரும் அயலாரும் இஃது என்ன புதுமையோவென மருட்சி கொள்ளத் தாயார் பாதுகாத்துவரும் அழகிய நலத்தினை வேண்டாதவளாகிப் போன, விளங்கும்அணிகளையுடைய பரத்தையருள் அவள் யாவளோ? அவள், இரங்கத்தக்கவள்! ஆதலாற் பாண, அவள்பால் நீ வாயில் வேண்டிச் செல்க: அஃது உனக்கும் அமையும்; என்று, தலைவி பாணனுக்கு வாயில் மறுத்தாள் என்க.

**சொற்பொருள்:** *1. முன்பின் - வலிமையுடைய, 2. அண்ணல் - தலைமையான. 2. மலர் - தாமரைமலர். 3. மறுகி - கிடந்து புரண்டு. 4. படப்பை - தோட்டக் கால்கள். 7. இயங்கல் - சென்று வருதல். வயங்குதல் - விளங்குதல், 9. அளியள் - இரங்கத் தக்கவள். 9. பரத்தன் - பரத்தமை உடையவன்.*

**உள்ளுறை:** எருமைக்கடாவானது மாலைவேளை வரை பொய்கையிலே கிடந்துவிட்டுப், பின் எருமையின் இளைய கிடாரியைத் தழுவி, தோட்டக் கால்களிலே மேய்ந்துவிட்டு, வயல்களிலே சென்று உறங்கும். அது போலத் தலைவனும் பரத்தையருடன் நீர் விளையாட்டயர்ந்து, அவர்களைத் தழுவிச் சோலைக்களிலே விளையாடிவிட்டு, வயல் போலும் எம் வீட்டிலே தங்குதல் கருதி வருவான் போலும்? அதற்கு யான் இசையேன்" என்றனளாம்

**பாடபேதம் :** *3. மடநாகு 4. படப்பை நண்ணிய 9. பரத்தை.*

## 147. தேடிச் செல்வன்!

**பாடியவர்:** ஔவையார். **திணை:** பாலை. **துறை:** செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:**வெள்ளி வீதியாரின் காதல் மிகுதி.

*(தன் காதலன் பிரிந்துபோய்க் குறித்த காலங் கடந்தும் வந்து சேராததனால் மனம் வருந்திய தலைவியின் துயரைத் தணிவிக்க*

*முயன்றாள் தோழி. தோழியின் சொற்களைக் கேட்ட தலைவியின் வருத்தம் மிகுந்ததேயல்லாமல் குறைய வில்லை. 'நான். அவனைத் தேடிப்போவதற்கு விரும்புகிறேன். என்றாள் அவள்.)*

**ஓங்குமலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த**
**வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்னை**
**ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க் குருளை**
**மூன்றுடன் ஈன்ற முடங்கர் நிழத்த,**
**துறுகல் விடரளைப் பிணவுபசி கூர்ந்தெனப்,**

**பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை**
**அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்**
**நெறிபடு கவலை நிரம்பா நீளிடை,**
**வெள்ளி வீதியைப் போல நன்றும்**
**செலவு அயர்ந் திசினால் யானே; பல புலந்து,**

**உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சா அய்,**
**தோளும் தொல்கவின் தொலைய, நாளும்**
**பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி,**
**மருந்துபிறிது இன்மையின், இருந்துவினை இலனே!**

*ஓங்கிய மலையை அடுத்த சாரலிலே பிடவுடனே மலர்ந்த, வேங்கையின் வெறிகமழும் தழையை வேறாக வகுத்தாற் போன்ற, தசையின் மூட்டம் விரியாத் வளைந்த நகத்தையுடைய குட்டிகள் மூன்றை, முடக்கமான இடத்திலுள்ள பொற்றைக்கற் பிளப்பாகிய குகையிலே, ஒருசேர ஈன்றதனால் ஓய்ந்த பெண்புலி, அறும் கோட்டையுடைய ஆண் உழைமானின் குரலை உற்றுக் கோளாநிற்கும், முடக்கம் அமைந்த கவலைகளாகிய ஒடுங்கிய நெடிய வழியிலே -*

*பிரிந்த தலைவரது பிரிவுக்குத் தினமும் இரங்கி, வெள்ளி வீதியைப்போலச் செல்லப் பெரிதும் விரும்பின யான், புலந்து உண்ணாத வருத்தமொடு, உயிர்செல்ல ஓய்ந்து, தோளும் பண்டையழகு கெடப் பலவற்றிற்கும் இருந்தும், பிறிது மருந்து இன்மையாற் செயலற்றேன்;*

*என்று, செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.*

**சொற்பொருள் :** *1. ஓங்குமலை - உயர்ந்தமலை. 2. வெறித்தழை - வெறிநாற்றம் உடைய தழை. 3. கோட்டு உகிர் - வளைந்த நகம். 4. நிழத்த - ஓய்ந்த. முடங்கர் - முடங்கல்கள்: 5. துறுகல் - பாறை. விடர் அளை - மலைப் பிளப்புக்களாகிய குகை. பிணவு - பெண்புலி. 6. அறுகோடு - அறல்பட்டு விளங்கும் கொம்பு.*

*ஓர்த்தல் - உற்று அறிதல். 8. கவலை - கவறுபட்ட வழிகள். 10. அயர்ந்திசின் - விரும்புவேன்.*

**உள்ளுறை:** *பிணவின் பசிக்கு இரங்கி உழைமானின் குரலை ஓர்க்கும் ஏற்றை உழுவையையுடைய நீளிடையிலே சென்றவ ராதலால், நம் தலைவர் நம் நோக்கு இரங்கிவிரைய வருவர் என்னும் கருத்தால், வெள்ளி வீதியைப் போலச் செல்லத் துணிந்திலேன் என்று தலைவி குறிப்பால் உணர்த்தினாள் என்க.*

**மேற்கோள்:** *'பாலைப் பொருட்கண் இரங்கற் பொருள் நிகழும்' என்பதற்குக், 'கொண்டு தலைக் கழியினும்' என்னும் சூத்திர உரையினும்; 'வெள்ளி வீதியைப் போல நன்றும், செலவயர்ந்திசினால் யானே' என்பதின்கண், 'பெயர் அகத் திணைக்கண் சார்த்துவகையான் வந்ததன்றித் தலைமை வகையாக வந்திலது' என, 'மக்கள் நுதலிய' என்ற சூத்திரத்து உரையினும் நச்சினார்க்கினியர் காட்டினர்.*

## 148. மாலை வருதல் வேண்டும்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *பகல் வருவானை இரவு வருக என்றது.* **சிறப்பு:** *ஆய் எயினன் மிஞிலியோடு பொருது களம்பட்டு வீழ்ந்த செய்தி.*

*(தலைவன் பகற்குறிக் கூட்டத்தை விரும்பியவனாக வருதலை அறிந்த தோழி, அவன் மனம் அப்படியே களவு நுகர்ச்சியிலே நிலைத்துவிடாமல், வரைந்து கோடல் முயற்சியிலே ஈடுபட வேண்டும் என விரும்புகிறாள். அவனைப், பகலில் வருவதை நிறுத்தி, இரவு வருக' என்று சொல்பவளே போல, இரவுக்குறியின் ஏதத்தையும் உரைத்து, அதனையும் மறுத்து, வரைந்து கோடலை மேற்கொள்ளுமாறு வற்புறுத்துகின்றாள்.)*

**பனைத்திரள் அன்ன பருஏர் எறுழ்த் தடக்கைச்**
**கொலைச்சினந் தவிரா மதனுடைய முன்பின்,**
**வண்டுபடு கடாஅத்து, உயர்மருப்பு யானை**
**தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி;**
**உறுபுலி உரறக் குத்தி; விறல்கடிந்து,**

**சிறுதினைப் பெரும்புனல் வவ்வும் நாட!**
**கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்**
**நெடுந்தேர் மிஞிலியொடு பொருது, களம் பட்டடெனக்**
**காணிய செல்லாக் கூகை நாணிக்**
**கடும்பகல் வழங்கா தாஅங்கு, இடும்பை**

**பெரிதால் அம்ம இவட்கே, அதனால்**
**மாலை வருதல் வேண்டும்-சோலை**
**முளைமேய் பெருங்களிறு வழங்கும்,**
**மலைமுதல் அடுக்கத்த சிறுகல் ஆறே.**

*திரண்ட பனைமரத்தைப் போலப் பருத்த அழகிய வளைந்த துதிக்கையினையும், பகையைக் கொல்லுஞ் சினம் நீங்காத மன எழுச்சியினையும், வண்டுகள் மொய்க்கும் மதநீர் ஒழுக்கத் தினையும் உடையது, ஏந்தியிருக்கும் கொம்புகளையுடைய களிறு ஒன்று. அது, தண்ணென்ற மணம் வீசும் மலைச்சாரலிலே யுள்ள மரங்களை முறித்துத் தள்ளிக் கொண்டே, தன்னுடன் மாறுபட்டு எதிர்த்த புலியுங் கதறுமாறு, அதனைத் தன் கோட்டால் குத்திக்கொன்று, அதனுடைய ஆற்றலையும் அழித்து விட்டதாகச், சிறுதினைகளையுடைய பெரிய புனங்களிலே நுழைந்து, தினைக் கதிர்களைக் கவர்ந்து உண்ணும். அத்தகையை நாட்டிற்குரிய தலைவனே!*

*கடும் விரைவுடனே செல்லும் குதிரையினை உடையவன் ஆய் எயினன். அவன், நெடுந்தேரினையுடைய மிஞிலி என்பவனோடு போரிட்டுக் களத்திலே பட்டு வீழ்ந்தான். புட்களின் காவலனான அவனைக் காண எல்லாப் பறவைகளுமே சென்றன. காணச்செல்லாத கூகையானது தன் செயலுக்கு நாணிக் கடும் பகல் வேளைகளிலே சஞ்சரிக்காதாயிற்று. அந்தக் கூகையைப் போலவே, இவட்கும் பகற்போதிலே வெளியே வருவதற்கு இயலாதவாறு, அலர் எழலால் ஆகிய துன்பம் மிகுதியாயிற்று.*

*அதனால், சோலைகளிடத்தேயுள்ள மூங்கிலின் முளை களை மேய்கின்ற பெருங்களிறுகள் சஞ்சரித்துக் கொண்டிருக் கின்ற மலைச்சாரலிடத்தேயுள்ள, கற்பாறைகள் செறிந்த பாதை வழியாக, இனி, மாலைநேரத்திலேயே நீயும் வருவாயாக!*

*என்று, தோழி தலைமகனைப் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்த வாய்ப்பாட்டால், அதுவும் மறுத்து, வரைவுகடாயினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. பனைத்திரள், திரள்பனை - திரட்சி யுடைய பனைமரம்; எறுழ் - வலிய. 2. கொலைச் சினம் - கொல்லுந் தகைமையுடைய கடுஞ்சினம். 3. உயர் மருப்பு - ஏந்தியிருக்கும் கொம்பு. 5. உரற - கதற. கடிந்து - அழித்து. 6. வவ்வும் - கவர்ந்து தின்னும். 7. கடும்பரி - கடுவேகத்துடன் செல்லும். 9. காணிய செல்லாக் கூகை - கூகை பகலிலே வெளி வராதது ஆதலின், அதனை இப்படி உவமித்துக் கூறினார்.*

**உள்ளுறை :** பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்தவள் போலச் சொன்னாள்: ஆனால், வழியின் கடுமையைக் கூறிய வனதனால் அதனையும் மறுத்தாள் என்க.

தினையினை நுகர்வதற்காக வருகின்ற களிறானது வலிய புலியைக் குத்தி அழித்துவிட்டு வந்து தினைப் புனத்திலே கவர்ந்து உண்ணும்; அதுபோலவே, நீ வரைந்து வருவதானால் அலர் உரைக்கும் கொடியோராகிய பெண்களின் வாயினை அடக்கித் தலைவியை மணந்து நுகர்ந்து இன்புறுவாய் என்கிறாள் தோழி.

**விளக்கம்:** 'காணிய செல்லாக் கூகை' என்ற சொற்கள், ஆய் எயினன் இறப்பவும், பறவைகள் அவனுக்கு நிழல் செய்ய, தான் சினமிக்கு அவனைக் காணச் செல்லாது போர் மரபு பிறழ்ந்த நன்னனையே குறிக்கும்' என்று, இந்நுலின் 208 ஆவது பாட்டுடன் ஒப்பிட்டால் கருத இடந்தருகின்றது.

## 149. எளிதாகப் பெற்றாலும் வாரேன்!

**பாடியவர்:** எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது. **சிறப்பு :** சேரநாட்டுடன் யவனர் செய்த வாணிகச் செய்தியும், செழியனின் மதுரைக்கு மேற்கிலுள்ள திருப்பரங் குன்றத்து வளமும்.

(தன் நெஞ்சத்திலே பொருள்தேடி வருதல் வேண்டுமென்ற ஆர்வம் எழ, முன்னர்த், தான் அப்படிப் பிரிந்த காலத்திலே, தன் தலைவி அடைந்த வேதனை மிகுதியை மறவாத தலைவன், தான் வாரேன் எனத் தன் நெஞ்சிற்குக் கூறிப்போவதை நிறுத்தி விட்டான். அதுபற்றிக் கூறுவது இச்செய்யுள்.)

**சிறுபுன் சிதலை சேண்முயன்று எடுத்த;**
**நெடுஞ்செம் புற்றத்து ஒடுங்கிரை முனையின்.**
**புல்லரை இருப்பைத் தொள்ளை முனையின்,**
**பெருங்கை எண்கின் இருங்கிளை கவரும்**
**அத்த நீள்இடைப் போகி, நன்றும்**

**அரிதுசெய் விழுப்பொருள் எளிதினிற் பெறினும்**
**வாரேன்-வாழி, என் நெஞ்சே!-சேரலர்**
**சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை கலங்க,**
**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**

**வளர்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ,**
**அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய**
**நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்**
**கொடிநுடங்கு மறுகின் கூடற் குடாஅது,**
**பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய,**

**ஓடியா விழவின், நெடியோன் குன்றத்து,**
**வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்து**
**எதிர்மலர்ப் பிணையல் அன்ன இவள்**
**அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.**

*சிறிய புல்லிய கறையான் முயன்று எழுப்பிய மிகவும் உயரமான சிவந்த புற்றினுள் மறைந்து கிடக்கும் புற்றாஞ் சோற்றினைப், பெரிய கையினையுடைய கரடியின் பெரிய சுற்ற மானது தின்னும். அதுவும் வெறுத்துவிட்டதானால், புற்கென்ற அரையினையுடைய இருப்பையின் தொளையுடைய வெண்மை யான பூக்களைக் கவர்ந்து உண்ணும். அத்தகைய சுரத்திலே நெடுந்தொலைவு சென்று, மிகவும் அரிதாக ஈட்டத்தக்க உயர்ந்த பொருளை எளிதாக யான் பெற்றாலும்கூட -*

*சேர மன்னர்களது, 'சுள்ளி' எனப்படும் அழகிய பேராற்றினது வெண்மையான நுரைகள் சிதறிப் போகுமாறு, நல்ல தொழில் மாண்புடைய மரக்கலத்திலே யவனர் பொன்னோடு வந்து மிளகோடு திரும்பிப் போகும் நல்ல வளங்கெழுமிய ஊர் முசிறி ஆகும். அதன்கண், ஆரவாரம் எழுமாறு முற்றுகையிட்டு, நடந்த அரிய போரையும் வென்று, அங்குள்ள பொற்பாவையையுங் கவர்ந்து வந்தவன், நெடிய நல்ல யானைப் படையினையும் வெல்லும் போராற்றலையும் உடையவனாகிய செழியன். அவனுடைய கொடியசையும் தெருக்களையுடைய மதுரைமா நகருக்கு மேற்குப்புறத்தே இருப்பது திருப்பரங்குன்றம். பல புள்ளிகளையுடைய மயிலின் வெற்றிக்கொடியினை உயர்த்திருப்பது அது. இடையறாத விழாக்களையும் அது உடையது. நெடியோனாகிய முருகனின் அந்தத் திருப்பரங்குன்றின் குண்டு சுனையிலே, வண்டினம் மொய்க்க இதழ் விரிந்த புதிய நீலப்பூவின் ஒத்த மலர்கள் இரண்டின் சேர்க்கையைப் போன்ற, இவளது செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ச்சியான கண்கள் தெளிந்த கண்ணீரினைக் கொள்ளுமாறு, நெஞ்சமே! இவளைப் பிரிந்து யான் நின்னோடு வருவேனல்லேன். நீ போய் நின் வினையை முடித்து வாழ்வாயாக! என்று, தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *1. சிதலை - கறையான். 2. நெடுஞ்செம் புற்று - உயரமான சிவந்த புற்று. ஒடுங்கு இரை - உள்ளே மறைந்து கிடக்கும் இரையான புற்றாஞ் சோறு. முனையில் - வெறுத்தால். 3. வான்பூ - வெண்மையான பூ. எண்கு - கரடி. இருங்கிளை - பெரிய சுற்றம். 9. யவனர் - அயோனியர் போன்ற மத்திய தரைக்கடல் நாட்டவர். கலம் - மரக்கலம். 10, கறி - மிளகு. 12. படிமம் - பாவை. 16. ஒடியா விழவு - இடையறாத விழாக்கள். 17. குண்டு சுனை - வட்டமான ஆழச்சுனை.*

## 150. தாய் காவற்படுத்தினாள்!

**பாடியவர் :** *குறுவழுதியார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத், தோழி, தலைமகளை இடத்துய்த்துவந்து, செறிப்பறிவுறீஇ, வரைவு கடாயது.*

*(கடற்பாங்கிலே கண்டு காதலித்துக் கூடி மகிழ்ந்தனர் காதல் இருவர். ஒரு நாள் பகலிலே சந்திப்புக்குக் குறித்த இடத்திலே தன் தலைவியைக் காணாது நீங்கும் தலைவனைத் தோழி எதிர்ப்படுகிறாள். தலைவியைக் குறித்த இடத்திலே விட்டு வருபவள் அவள். தலைவனிடம், தலைவி அவனைப் பிரிந்து படும் வருத்தத்தையும், தாய் அவர்கள் உறவை அறிந்து தலைவியை வீட்டிலே காவலில் வைத்ததையும் கூறி, விரைவிலே வந்து மணந்துகொள்ள வேண்டுகிறாள்.)*

**பின்னுவிட நெறித்த கூந்தலும், பொன்னென**
**ஆகத்து அரும்பிய சுணங்கும், வம்புவிடக்**
**கண்ணுருத்து எழுதரு முலையும் நோக்கி,**
**'எல்லினை பெரிது' எனப் பன்மாண் கூறிப்**
**பெருந்தோள் அடைய முயங்கி, நீடு நினைந்து,**

**அருங்கடிப் படுத்தனள் யாயே; கடுஞ்செலல்**
**வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறைக்,**
**கனைத்த நெய்தற் கண்போன் மாமலர்**
**நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ,**
**மாலை மணியிதழ் கூம்பக் காலைக்**

**கள்நாறு காவியொடு தண்ணென் மலருங்**
**கழியுங், கானலுங் காண்தொறும் பலபுலந்து;**
**வாரார் கொல்? எனப் பருவரும்-**
**தார் ஆர் மார்ப! நீ தணந்த ஞான்றே!**

மாலைகள் விளங்குகின்ற மார்பினை உடையவனே! நின்னைப் பிரிந்த பொழுதிலேயே, விரைந்து செல்லும் இயல்பினையுடைய வாட்சுறா மீன்கள் திரியும் சங்கினம் மேய்கின்ற பெரிய துறையினிடத்தே, தழைத்த நெய்தலது கண்போன்ற பெரிய மலரானது மாலைப்போதிலே தன் அழகிய இதழ்களைக் குவித்துக் கொள்ளக், காலையிலே செருந்தியின் அரும்பிய போதுகள் இதழ்விரியத், தேன்மணம் வீசுகின்ற காவிமலரோடு சேர்ந்து தானும் தண்ணென்று மலரும் அவ்வேளையிலே, கழியையும் கானற்சோலையும் காணும் போதெல்லாம், பலவும் நினைந்துநினைந்து வெறுப்புற்று, 'அவர் வரமாட்டார் போலும்! வரமாட்டார்போலும்!' என வருந்துபவள் நின்காதலி.

அவள் அன்னையானவள், பின்னலிடும்படியாக வளர்ந்து நெறித்தலையுடைய அவள் கூந்தலையும், பொன்போல மார்பிலே தோன்றிய தேமலையும், கச்சுக் கிழியுமாறு கண்கள் உருப்பெற்று எழுந்த முலையினையும் நோக்கினள், 'பெரிதும் அழகு பெற்றனை மகளே!' எனப் பலபல மாட்சியுடைய சொற்களைச் சொல்லிப், பெரிய தோள்கள் முற்றும் பொருந்துமாறு தழுவிக்கொண்டு, நெடுநேரம் நினைவிலே ஆழ்ந்து, அவளை அரிய காவலுக்கும் உட்படுத்தினள். (ஆகவே, 'அவளை நீ குறியிடத்திலே காண்பதற்கில்லை; விரைந்து வந்து மணந்து கொள்வாயாக' என்று பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத், தோழி, தலைமகளை இடத்துய்த்து வந்து செறிப்பு அறிவுறீஇ வரைவுகடாயினாள் என்க.)

**சொற்பொருள்:** 1. நெறித்த - நெறிப்பட்ட; வளைந்து நெளிந்த. 2. வம்புவிட - கச்சுக் கிழிய. 4. எல்லினை - ஒளியுடையை ஆயினை. 7. வாள்சுறா - வாள்போன்ற கொம்பினையுடைய சுறாமீன். வழங்கும் - திரியும். 8. கனைத்த - தழைத்த - 9. நனைத்த - அரும்பிய. 11. காவி - செங்கழு நீர்.

**விளக்கம்:** கழியும் கானலும் காணக்காண வருந்துதல், தலைவன் வரக் காணாமையினாலும், அவை தாம் இயற்கைப் புணர்ச்சியிலே கூடிக் களித்த நினைவுகளை எழுப்புதலாலும்.

**மேற்கோள்:** 'அளவு மிகத் தோன்றினும்' என்னும் துறைக் கண், இச்செய்யுள் 'தோழி செவிலி கூறியதைக் கொண்டு சொல்லியது' எனக், 'களவலராயினும்' என்ற சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்.

'ஏதம் ஆய்தல்' என்னும் மெய்ப்பாட்டிற்கு, 'வாரார் கொல் எனப் பருவரும் தாரார் மார்ப நீ தணந்த ஞான்றே' என்பதை,

'இன்பத்தை வெறுத்தல்' என்னுஞ் சூத்திரத்துப் பேராசிரியர் காட்டினர்.

**பாடபேதங்கள்:** *2. வம்புடைக் கண்ணுருத்து 4. எல்லிவள்.*

## 151. அருள் பிரிது ஆயினர்!

**பாடியவர்:** *காவன் முல்லைப் பூதனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது..*

*(தலைவன் தன்னையும் உற்றார் உறவினரையும் பிரிந்து, வறியவர்க்கு உதவப் பொருள்தேடி வரும் பொருட்டாகச் சென்று விட்டதான அருளற்ற செயலை நினைந்து . நினைந்து வருந்துகிறாள் தலைவி.)*

**'தம்நயந்து உறைவோர்த் தாங்கித் தாம்நயந்து**
**இன்னமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ,**
**நகுதல் ஆற்றார் நல்கூர்ந் தோர்!' என,**
**மிகுபொருள் நினையும் நெஞ்சமொடு அருள்பிறிது**
**ஆபமன்-வழி, தோழி! கால் விரிபு**

**உறுவளி எறிதொறும் கலங்கிய பொறிவரிக்**
**கலைமான் தலையின் முதன்முதற் கவர்த்த**
**கோடலம் கவட்ட குறுங்கால் உழுஞ்சில்**
**தாறுசினை விளைந்த நெற்றம், ஆடுமகள்**
**அரிக்கோற் பறையின், ஐயென ஒலிக்கும்**

**பதுக்கை ஆய செதுக்கை நீழற்,**
**கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்கு**
**உறுவது கூறுஞ், சிறுசெந் நாவின்**
**மணிஓர்த் தன்ன தெண்குரல்**
**கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே!**

*புள்ளிகளையும் வரிகளையும் உடையது கலைமான். அதன் தலையிலே முதன் முதலாகக் கப்புவிட்டிருக்கும் கொம்பினைப் போலக் கவடுபட்டு விளங்கும் குறுகிய அடிமரத்தினையுடையது வாகைமரம். அதன் கிளையிலே, விளைந்த நெற்றின் குலைகள் எங்கும் பரந்து, மிகுதியான காற்று வீசும் போதெல்லாம், ஆடும் கூத்தியர்களது அரிக்கோற் பறையொலி போல ஐயென்ற ஒலியுண்டாக்கிக் கொண்டிருக்கும். சிறிய செந்நாவினால் மணியொலி கேட்டாற்போன்று தெளிந்த குரலைச் செய்யும் நன்னிமித்தம் கூறும் பல்லிகள், பதுக்கை பட்டதும் குறைந்த 'நிழலுடையதுமான கள்ளியின் முள்பொருந்திய அடிப்புறங்*

களிலே தங்கியிருந்து, வழிச்செல்பவர்க்கு நேர்கின்ற துன்பங்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கும். அத்தகைய காட்டைக் கடந்து சென்றவர் நம் தலைவர்.

அவர், வறுமையுற்றோர் என்று கூறிவரும் இரவலர்களுக்கு உதவும் பொருட்டாக, மிகுதியான பொருளினை ஈட்டும் நினைவுடைய நெஞ்சினராய் விட்டனர். தம்மை விரும்பிவந்து உடன்வாழ்பவரைப் பேணித், தாம் விரும்பிய இனிமை பொருந்திய உறவினர்களோடு இன்பம் பெருகுமாறு கூடியிருந்து மகிழ்ந்திருக்கின்றதற்கும் மாட்டாராயினர். அதனால், அவர் நம்மிடத்தே மிகவும் அருளுடையவர் அல்லர் ஆவர். தோழி! அவர் வாழ்க! என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. நயந்து - விரும்பி; தம் நயந்து உறைவோர் - தம்மை விரும்பி மணந்து உடன் வாழ்பவர்; துணைவியான தன்னைக் குறித்தது. 2. ஏமுற - இன்பம் பெருக. 3. நகுதல் - மகிழ்ந்திருத்தல். 5. ஆப - ஆவர். 5. கால் விரிபு - எத்திசையினும் பரந்து. 6. உறுவளி - பெருங்காற்று 9. தாறு - குலை. 11. பதுக்கை - பதுக்கைக் கற்கள். 15. கணிவாய்ப் பல்லி - சோதிடங் கூறும் வாயுடைய பல்லியுமாம்.

**பாடபேதங்கள்:** பாடியவர் பெயர்: காவன் முல்லை மழுக்கரத்தனார்; காவன் முல்லைப் பூக்கரத்தனார்; காவன் முல்லைப் பூச்சாத்தனார் எனவெல்லாம் வழங்கும்.

## 152. கூந்தலும் தோளும் துயர்தரும்!

**பாடியவர்:** பரணர். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறிவந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** பிண்டனின் ஆற்றலைப் பார்த்துத் தலைவனான நன்னன் அளித்த செய்தி; தித்தன், வெளியன் என்பவரது கடல்வளச் சிறப்பு; நள்ளி, ஆய் ஆகியோரது வள்ளன்மை முதலியவை.

(இரவுக் குறியிலே வந்து, தன் காதலியைத் தழுவி மகிழ்ந்து அவளைப் பிரிந்து செல்லுந் தலைமகன், அவளுடைய கூந்தலின் வனப்பும் தோளின் சிறப்பும் நினைந்து, தன் பிரிவாற்றாமையை நெஞ்சுடன் கூறுகின்றதாக அமைந்தது இச் செய்யுள்.)

**நெஞ்சுநடுங்கு அரும்படர் தீர வந்து,**
**குன்றுழை நண்ணிய சீறூர் ஆங்கண்**
**செலீஇய பெயர்வோள் வணர்சுரி ஐம்பால்-**

**நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேரிசைச்**
**சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்,**

**இரங்குநீர்ப் பரப்பின் கானலம் பெருந்துறைத்,**
**தனம்தரு நன்கலம் சிதையத் தாக்கும்**
**சிறுவெள் இறவின் குப்பை அன்ன**
**உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்**
**முனைமுரண் உடையக் கடந்த வென்வேல்,**

**இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்ப்**
**பாரத்துத் தலைவன், ஆர நன்னன்;**
**ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்**
**களிமயிற் கலாவத் தன்ன தோளே-**
**வல்வில் இளையர் பெருமகன்; நள்ளி**

**சோலை அடுக்கத்துச் சுரும்புஉண விரிந்த**
**கடவுட் காந்தள் உள்ளும் பலவுடன்**
**இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி-**
**வல்லினும் வல்லார் ஆயினும் சென்றோர்க்குச்**
**சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும்,**

**மாஅல் யானை ஆஅய் கானத்துத்**
**தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்**
**வேயமைக் கண்ணிடை புரைஇச்**
**சேய ஆயினும், நடுங்குதுயர் தருமே.**

*நுண்மையான தலைக்கோலினையுடைய பாணர்களைப் புரந்த பெரும்புகழினை உடையவன், சினம் கெழுமிய பெரும் படையினை உடையவன், 'தித்தன் வெளியன்' என்னும் குறுநிலத் தலைவன். ஒலிக்கும் நீர்ப்பரப்பினையுடைய கானற்சோலைகள் நிறைந்த, அழகிய அவனது பெரிய கடற்றுறைகளிலே, பொன்னைக் கொண்டு வந்து தருகின்ற நல்ல மரக்கலங்கள் சிதையுமாறு, சிறிய வெள்ளையான இறாமீனின் தொகுதிகள் தாக்கிகொண்டிருக்கும். அவைபோலத் தாக்கி மிகுந்த பகையினைத் தந்துகொண்டிருந்தவன் வலிமிகுந்த 'பிண்டன்' என்பவன். அப்பிண்டனுடைய போர்முனைகளின் ஆற்றல் அழிய, அவனை வென்ற வெற்றி வேலினை உடையவன், நல்ல புகழ்மேவிய ஈகையினை உடையவன், பரிசிலர்களுக்கு களிறுகளையே பரிசிலாக வழங்கும் வண்மையாகிய களிப்பினை யுடையவன், 'பாரம்' என்னும் ஊர்க்குத் தலைவனாகிய ஆரம்பூண்ட சிறப்பினையுடைய 'நன்னன்' என்பவன். நம்முடைய நெஞ்சத்தை நடுங்கச்செய்கின்ற அரிய துன்பமானது*

தீர்ந்துபோகும் பொருட்டாக வந்து நம்மைக் கூடிய பின்னர், குன்றிடத்து உள்ளதாகிய அருகிலிருக்கும் தன் சிற்றூராகிய அவ்விடத்திற்குச் செல்வதற்காகப் போகின்றவளான நம்முடைய தலைவியின், வளைந்து கடை சுருண்ட கூந்தல், அந்த நன்னனுக்கு உரிய எழில் என்னும் நீண்ட மலைத்தொடர்களிலே யுள்ள பாழி என்னும் சிலம்பிலே யிருக்கும், களிகொண்ட மயிலின் தோகையைப் போன்றிருக்கும்!

வலிய வில்லினையுடைய வீரர்களான வேடர்களின் தலைவன் 'நள்ளி' எனபவன். அவனுக்கு உரிய சோலைகள் மிகுந்த மலைச்சாரலிலே, கடவுளுக்குரிய வண்டு உண்ணலால் விரிந்த காந்தட் பூவினுள்ளும், வியப்புமிக்க அழகிய மலர்கள் பலவுமாக ஒருங்குகூடி நன்மணம் கமழ்வது போன்ற நறு நாற்றத்தினையுடையது அவளது திருமேனி!

பாடுதலிலே வல்லவராயினும் சரி, வல்லமையற்றவ ராயினும் சரி, பரிசில் பெறுவதை விரும்பிச் சென்றவர்களுக்கு மிடாவிலுள்ள சோற்றினை அவர்களுடைய மண்டையின் பெரிய பள்ளமானது நிறையும்படியாக அளிப்பவன், பெரிய யானைகள் நிறைந்த காட்டினையுடைய ஆண் என்பவன். அவனுடைய காட்டிடத்தேயுள்ள தலையாற்றினிடத்தே நிலை பெற்ற, மிகவுயர்ந்த மலையிடத்துள்ள மூங்கிலிற் பொருந்திய கணுக்களின் இடைப்பட்ட பகுதியைப் போல விளங்கிச், சேய்மைக்கண் உள்ளதேயானாலும் நாம் நடுங்கத்தக்க துயரினைத் தருவன அவளுடைய தோள்கள்!" என்று, இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** படர் - துன்பம். 3. செலீஇய பெயர்வோள் - செல்வதற்காகப் பெயர்கின்றவள். 4. அகவுநர். பாணர்கள். 5. தித்தன் வெளியன் - தித்தனும், வெளியனும்; இவரன்று ஒருவரே என்பவரும் உளர். 7. தனம் - செல்வம், பொன். 8. இறவு - இறவு என்னும் மீன். 9. மொய்ம் மூசு - வலிமை மிக்க. 15. பெருமகன் - பெருமான். 17. கடவுள் காந்தள் - கடவுள் சூடுதற்குரிய காந்தள் மலர். 18. இறும்பூது கஞலிய ஆய்மலர் - செருக்கு மிகுந்த குறிப்பிட்ட சில நறும்பூக்களும் ஆம். 20. சால்பெரிய பானை; வாய் அகன்ற பானையுமாம். 22. தலையாற்று - ஆற்றின் பிறப்பிடத்து; தலையாறு என்னும் ஊரினும் ஆம். ஆய்க்கு உரியது பொதியம்; ஆகவே, தாமிரவருணியின் தலையாற்றுப் பகுதியான அடர்ந்த சாரல்களிலே எனவும் கொள்க. பிறங்கல் - மலையிடம்.

**மேற்கோள்:** *இப்பாட்டினைத் திருமகட் புணர்ந்தவன் சேறற்கு உதாரணமாகக் காட்டுவர் அகப்பொருள் விளக்க உரைகாரர் (சூ.158).*

**பாடபேதங்கள்:** *1. நடுக் கரும்படர். 2. குன்றுறை நண். 6. இலங்கு நீர். 7. கனந்தரு. 10. முனைமுரணுடைப்ப.*

## 153. நோதகும் உள்ளம் நோக!

**பாடியவர்:** *சேரமான் இளங்குட்டுவன்.* **திணை:** *பாலை'* **துறை:** *மகட்போக்கிய செவிலித்தாய் கூறியது.*

*(மகள், தன் காதலனுடன் உடன்போக்கிலே சென்று விட்டதறிந்த தாய் துடித்துப் புலம்புகிறாள். தன் நோகின்ற நெஞ்சிற்கு அவள் இப்படிக் கூறுகிறாள்.)*

**நோகோ யானே; நோதகும் உள்ளம்:**
**அம்தீங் கிளவி ஆயமொடு கெழீஇப்.**
**பந்துவழிப் படர்குவள் ஆயினும், நொந்துநனி**
**வெம்புமன், அளியள் தானே-இனியே,**
**வன்க ணாளன் மார்புஉற வளைஇ,**

**இன்சொற் பிணிப்ப நம்பி, நம்கண்**
**உறுதரு விழுமம் உள்ளாள், ஒய்யெனத்**
**தெறுகதிர் உலைஇய வேனின் வெங்காட்டு,**
**உறுவளி ஒலிகழைக் கண்ணுறுபு தீண்டலின்,**
**பொறிபிதிர்பு எடுத்த பொங்கெழு கூர் எரிப்**

**பைதறு சிமையப் பயம்நீங்கு ஆர்இடை**
**நல் அடிக்கு அமைந்த அல்ல; மெல்லியல்**
**வல்லுநள் கொல்லோ தானே-எல்லி**
**ஓங்குவரை அடுக்கத்து உயர்ந்த சென்னி**
**மீனொடு பொலிந்த வானின் தோன்றித்**

**தேம்பாய்ந்து ஆர்க்குந் தெரியிணர்க் கோங்கின்**
**காலுறக் கழன்ற கள்கமழ் புதுமலர்**
**கைவிடு சுடரின் தோன்றும்**
**மைபடு மாமலை விலங்கிய சுரனே?**

*அழகிய இனிய சொற்களையுடைய தன் ஆயத்தாருடனே கூடிப் பந்தாடலிலே ஈடுபட்டு வருவாளாயினும், இரங்கத் தக்கவளாகிய என் மகள், அதற்கே மிகவும் நொந்து வெதும்பி வாடுகின்றவள். அதுவும் கழிந்தது!*

உயர்ந்த மலைச்சாரலிலே, வண்டுகள் பாய்ந்து ஆர்ப்பொலி செய்யும் விளக்கமுடைய கொத்துக்களையுடைய கோங்கின் உயர்ந்த உச்சியிலே, இரவு நேரத்திலே, மீனோடு அழகுற்று விளங்கும் வானத்தைப்போலத் தோன்றிக் காற்று மோதத், தாம் கழன்று வீழ்ந்து வீழுமிடமெங்கும் மணங்கமழச்செய்து கொண்டிருக்கும் புதிய மலர்கள், கையினால் தூண்டத் தெரிக்கும் சுடர்ப்பொறிகள் போலத் தோன்றுகின்ற, மேகம் தவழும் பெரிய மலைமுகடுகள் குறுக்கிட்ட சுரநெறியிலே,

வேனிற்காலத்தில் காய்கின்ற கதிரானது கெடுத்த வெம்மை மிகுந்த காட்டிலே, வீசுகின்ற காற்றானது தழைத்த மூங்கிற் கணுக்கள் ஒன்றுடன் ஒன்று உராயத் தாக்குதலினால் எழுந்த, பொங்குதலையுடைய பொறி சிதறி எழுகின்ற மிகுந்த நெருப்பினால், பசுமையற்ற மலையுச்சிகளின் வளமெல்லாம் நீங்கிப் போனதும், நல்ல பாதங்கள் நடந்து செல்வதற்கு ஏற்புடையது அல்லாததுமாகிய அரிய வழிகளை, மென்மை யான இயல்பினையுடைய அவள், வன்கண்மையினை உடையவனான அவள் காதலன் அவளை மார்புறத் தழுவியவனாக, கழுத்தை வளைத்து அவள் காதோடு சொல்லிய இனிய சொல்லினாலே அவள் உள்ளத்தைப் பிணித்துவிட, அதனை நம்பி, நம்மிடத்தே நேர்கின்றதான பெருந்துன்பத் தினையும் நினையாதவளாகி, இப்பொழுது, விரையச் செல்லுகின்றதற்கும் வல்லவள் ஆவாளோ?

இப்படி நினைந்து நினைந்து வருந்துகின்ற உள்ளத்துடனே யான் தான் நோகின்றேன் (என் செய்வேன்?)

என்று, மக்கட் போக்கிய செவிலித்தாய் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. நோகோ யானே - யானே நோகின்றேன். 3. பந்து வழிப் படர்தல் - பந்தாடலின் பொருட்டுச் செல்லல். 4. வெம்பும்மன் - வாடுவள். 7. விழுமம் துன்பம். 10. பொங்கெழு கூர்எரி - பொங்கி எழுகின்ற பெருநெருப்பு. 13. எல்லி - இரவு. 17. கால் - காற்று.

**உள்ளுறை:** காற்றுவீச இணரினின்றும் கழன்று வீழ்ந்த புதுமலர் சுடர்போல் ஒளிவிட்டாற்போல, 'நாணினும் கற்புச் சிறந்தன்று' என்று, தனது பிறந்த வீட்டினை நீங்கித் தலைமகனுடன் சென்ற த்லைமகனின் செயல் புகழற்குரிய கற்பொழுக்க மாயிற்று என்று செவிலி தேறினாள் என்க.

**பாடபேதங்கள்:** 17. தண்கமழ் புதுமலர், கள்கமழ் பனி மலர்.

## 154. விரைந்து சேர்வோம்!

**பாடியவர்:** *பொதும்பிற் புல்லாளங் கண்ணியார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.*

*(தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்றிருந்தான் ஒரு தலைவன். வினையும் முடிந்தது. அவன் திரும்பவேண்டிய கார் காலமும் வந்துவிட்டது. அதனால், தன் பாகனை விளித்துக் கார்ப்பருவத்தின் வருகையைக் கூறித் தேரை விரைவாகச் செலுத்தச் சொல்லுகின்றான்.)*

**படுமழை பொழிந்த பயமிகு புறவின்**
**நெடுநீர் அவல பகுவாய்த் தேரை**
**சிறுபல் இயத்தின் நெடுநெறிக் கறங்கக்**
**குறும்புதற் பிடவின் நெடுங்கால் அலரி**
**செந்நில மருங்கின் நுண்அயிர் வரிப்ப,**

**வெஞ்சின அரவின் பைஅணந் தன்ன**
**தண்கமழ் கோடல் தாதுபிணி அவிழத்,**
**திரிமருப்பு இரலை தெள்அறல் பருகிக்**
**காமர் துணையொடு ஏமுற வதியக்,**
**காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி**

**ஓடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்**
**தாள்தாழ் தார்மணி தயங்குபு இயம்ப**
**ஊர்மதி-வலவ! தேரே-சீர்மிகுபு**
**நம்வயிற் புரிந்த கொள்கை**
**அம்மா அரிவையைத் துன்னுகம், விரைந்தே.**

*மிகுதியான மழை பொழிந்ததனாலே விளைவுப் பயன் மிகுகின்ற புறவிலேயுள்ள நீண்ட பள்ளங்களெல்லாம் நீர் நிறைந்தன. நீர்நிறைந்துள்ள பள்ளங்களிலே, திறந்த வாயினையுடைய தேரைகள் சிறிய பலவாகிய வாத்தியங்கள் ஒலிப்பது போல, நெடிய பாதைகள்தோறும்அப்படி ஒலித்துக் கொண்டிருக்கும். குறுகிய புதலாக விளங்கும் பிடவிலே நெடிய காம்புகளையுடைய பூக்கள் விளங்கும். அவை சிவந்த நிலத்திடையேயுள்ள நுண்மையான அயிரிடத்தே உதிர்ந்து அழகு செய்திருக்கும். வெம்மையான சினத்தையுடைய அரவின்படம் மேல்நோக்கி விளங்குவதுபோலக் கோடலின் அரும்புகள் தம் பிணிப்பவிழ்ந்து மலர்ந்திருக்கும். முறுக்குண்ட கொம்பினையுடைய ஆண்மானானது, தெளிந்து ஓடும் அறலினைப் பருகித்தன் அழகிய பெண்மானுடன் கூடி*

இன்பமுடன் தங்கியிருக்கும். இவ்வாறு காடே அழகுபெற்று விளங்கும் தண்மையான செவ்வியை உடையது நாம் செல்லவேண்டிய பெரிய வழி. அதில் ஓடுகின்ற, செல்வதனால் மெலிவு கொள்ளாத, கொய்த பிடரி மயிரினையுடைய குதிரைகளின், கால்களிலே வந்து பொருந்துமாறு தாழ்ந்து தொங்கும் சதங்கைத் தண்டைகள் அசைந்து ஒலிக்கும்படியாகத் தேரைச் செலுத்துவாயாக.

சீர்மை மிகுந்த முறைமையோடு, நம்மிடத்தே விரும்பிய கோட்பாட்டினை உடையவளான அந்தச் சிறந்த பெண் அணங்கை நாம் விரைந்துசென்று அணுகுவோமாக! 'ஆகவே, விரைந்து, தேரைச் செலுத்துக' என்று, வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. படுமழை - பெருமழை; ஒலித்தலையுடைய மழையும் ஆகும். பயம் - வளம். புறவு - காடு. 2. அவல் - பள்ளங்கள். பகுவாய் - பிளந்த வாய். 3. சிறு பல்லியம் - சிறய அளவான் இசைக்கும் பல்வேறு இசைக் கருவிகளும் ஆம். 4. குறும் புதற் பிடவு - குறுகிய புதராகப் படர்ந்து கிடக்கும் பிடவு. அலரி - அல்ர்ந்த மலர். 5. அயிர் - நுண் மணல்; மழைபெய்து வடிந்த காலத்தே தோன்றுவது. 6. பை யணந்தன்ன - படம் மேனோக்கி இருந்தாற்போன்ற. 7. தண்கமழ் - தண்மையான மணம் கமழ்தல். கோடல் - வெண்சங்கு. 8. அறல் - அறல்நீர். 9. காமர் துணை - விருப்பமுடைய துணை. ஏமுற - இன்பமுற.12. தாள்தாழ் தார்மணி - குதிரைகளின் கழுத்திலே அவற்றின் கால்கள்வரை நீண்டிருக்குமாறு மாலைபோல விளங்கும் மணி. அம்மா அரிவை - அம்ம' அசைச் சொல்லும் ஆம்; 'அரிவை' பெண்களின் பருவத்தைக் குறிக்குஞ் சொல்; அவன் காதலியை இங்கே குறித்தது. 15. துன்னுகம் - நெருங்குவோம்.

**பாடபேதங்கள்:** 6. பையணர்த்தன்ன. 9. காமர் பிணை யோடு. 12. தயங்குபு இயம்ப. 13. பரிந்த கொள்கை.

## 155. செய்வினை முடித்து வருக!

**பாடியவர்:** பாலை பாடிய பெருங்கடுங்கோ. **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** பாண்டி நாட்டின் வளம்.

(தலைமகன் பிரிந்து சென்றவன் வந்து அருளாதது குறித்து உள்ளம் வருந்தி வாடினாள் தலைமகள். தன் வேதனையைத் தன்னுடைய தோழியிடம் கூறி இப்படிப் புலம்புகிறாள்.)

**'அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்**
**பிறன்கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்**
**பொருளின் ஆகும், புனையிழை!' என்றுநம்**
**இருளேர் ஐம்பால் நீவி யோரே-**
**நோய்நாம் உழக்குவம் ஆயினும், தாந்தம்**

**செய்வினை முடிக்க தோழி! பல்வயின்**
**பயநிரை சேர்த்த பாண்நாட்டு ஆங்கண்**
**நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய**
**கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி,**
**நீர்காய் வருத்தமொடு சேர்விடம் பெறாது**

**பெருங்களிறு மிதித்த அடியகத்து, இரும்புலி**
**ஒதுங்குவன கழிந்த செதும்பல் ஈர்வழி,**
**செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை**
**மண்ஆர் முழவின் கண்ணகத்து அசைத்த**
**விரலூன்று வடுவில் தோன்றும்**

**மரல்வாடு மருங்கின் மலைஇறந் தோரே.**

*தோழி! "எக்காலத்தும்அறநெறியிலே நின்றும் தவறுதல் இல்லாத இல்லறவாழ்க்கையும், பிறன் ஒருவனின் கடை வாயிலிலே சென்று இரந்தும் பணிந்தும் பெறாது, தானே முயன்று ஈட்டியசெல்வமும் ஆகிய இவ்விரண்டின் செப்பமும், பொருளினாலேயே ஆகிவருவதாகும், புனைந்த இழையினை உடையவளே!' என்று, அன்று நம்மிடம் சொல்லித், தம் போக்கிற்கு நாமும் உடன்படும் பொருட்டாக, நம்முடைய இருள்போன்ற கருமையான ஐவகையாக முடித்தலையுடைய கூந்தலைக் கோதிவிட்டவாறே நம்மைத் தெளிவித்துச் சென்றவர் நம் காதலர்.*

*பாற்பசுக்கள் நிரைநிரையாகச் சேர்ந்திருக்கும் வள முடையது பாணனது வளநாடு, அந்த நாட்டின் பற்பல இடங்களிலேயும், நீண்ட சீழ்க்கை ஒலியினை உடையவராகிய கோவலர்கள், தம் ஆநிரைகளுக்கு நீரூட்ட வேண்டித்தோண்டிய கூவலாகிய சிறுசிறு குழிகள் விளங்கும். அவற்றிலே, வளைந்த வாயினையுடைய பத்தல்களிலேயிருந்து வார்ந்து ஒழுகும் நீரானது காய்ந்ததனால் உண்டாகிய வருத்தத்துடன், சேர்ந்து தங்குதற்குரிய நிழலிடமும் பெறாது, பெரிய களிறானது மிதித்துச் சென்ற காலடித்தடத்தில், பெரிய புலியும் அடுத்து அடிவைத்துச் சென்றிருக்கும். அப்படிப்பட்ட சேற்றோடு கூடிய சரமுடைய வழியிலுள்ள, அத் தடங்கள் குற்றமற்ற நாவினரான கூத்தர்களது பின்புறத்தே கிடந்து தொங்குகின்ற, மார்ச்சனை*

பூசிய முழவின் கண்ணிடத்திலே விரல்களை ஊன்றியதனால் ஏற்பட்ட வடுவினைப்போலத் தோன்றும், மரல்களும் வாடிக் கிடக்கும் அத்தகைய மலைப்பகுதியைக் கடந்து, பொருள் தேடச் சென்றிருப்பவர் அவர்.

அவருடைய பிரிவினாலே நாம் நோயுற்று மிகவும் வருந்துகின்றோம். ஆயினும், அவர், தாம் மேற்கொண்ட செய்வினையை வெற்றியுடன் முடிப்பாராக! என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. அறன் கடைப் படாஅ வாழ்க்கை - அறநெறியானது கடைப்பட்டுப் போகாத அறத்தொடுபட்ட இல்வாழ்க்கை. 5. நோய் நாம் உழக்குவம் - நாம் பிரிவினாலாகிய நோயினாலே கிடந்து துன்புறுவோம். 7. பயநிரை - பாற்பசுக்களின் நிரை. பாணாட்டு - பாணனது நாட்டு. 8. நெடுவிளி - நெடிதாக மாடுகளை விளித்துக் கூப்பிடுகின்ற சீழ்க்கை ஒலி. கூவல் - கிணறு. 9. பத்தல் - நீர் முகக்கும் ஓலையால் முடையப்பட்ட வளைந்த வாயினையுடைய பட்டை. 11. இரும் புலி - பெரிய புலி. 12. செதும்பு - சேறு. 15. மத்தளத்திலே, தோலின் நடுப்பகுதியிலே ஒலி ஒழுங்குக்காக வைக்கும் கண்ணிடத்தே நகத்தை வைத்து அழுத்தியது போல விளங்கும்.

**உள்ளுறை:** "யானைத்தடமீது புலித்தடம் பதிந்த காட்சி வழியிடைச் செல்பவர்க்கு, முழவுக் கண்ணிடத்து நகவடுப் போலக் களிப்பூட்டியதுபோல, அவரைப் பிரிந்ததால் வேறு பட்ட நம்மேனியின் தோற்றம் அலர் உரைப்பார்க்கெல்லாம் கூறி மகிழும்விருந்தாக அமைந்துவிட்டதே?" என வருந்தினள்.

**விளக்கம்:** நீர் கொதிக்கும் நெடுவழி, யானைகளை யுடையதும் பெரும் புலிகளையுடைதுமான மலைவழி, மரலும் வாடிக்கிடக்கும் பாலை வழி' என வழியின் கடுமையைக் கூட்டிக்கருதுக. "நாம் நோயுற்று வருந்துதலால், தலைவரின் முயற்சி பழுதுபடுமோ எனக் கலங்கியவள், நாம் நோயுற்றாலும் அவர் தம் செய்வினை முடிக்க!" என வாழ்த்தினாள்.

இச் செய்யுளுள் 'அறன் கடைப்படாஅ வாழ்க்கையும், என்றும் பிறன் கடைச் செலாச் செல்வமும் பொருளுடைமை யாலேயே அமையும்' என்ற நீதி தெளிவாக உரைக்கப் பட்டுள்ளது.

**பாடபேதங்கள்:** 5. நாள் உழக்குவம் - நாள்தோறும் வருந்துவோம். 7. பாழ்நாட்டு ஆங்கண் - பாழ்பட்டநாடாகிய அவ்விடத்தே.

## 156. பிழைத்த தவறோ?

**பாடியவர்:** *ஆவூர் மூலங்கிழார்.* **திணை:** *மருதம்.* **துறை:** *தலைமகளை இடத்து உய்த்துவந்த தோழி; தலைமகனை வரைவுகடாயது; இது மருதத்துக் களவு.* **சிறப்பு:** *குறிஞ்சிக் குறவர் வேலனுக்கு வெறியாட்டு அயர்தலைப்போல, மருத நிலத்தார் நீர்த் துறைக்கண் உள்ள கடவுளுக்குப் பலியிட்டுப் போற்றி வேண்டுவது.*

*(களவிலே தன் காதலனோடு உறவாடி வந்தாள் ஒரு தலைவி. அதனால், அவள் மேனிபுதுப்பொலிவுபெறக் கண்ட தாய், மகள் பொய்கையாடலால் வந்த நீர்த்தெய்வக் குற்றம் போலும் எனக் கலங்கினாள். அத் தெய்வத்துக்குப் பலியிட்டு வழிபட்டும் தன் மகளின் நோய் தணியாதது கண்டு வருந்தினாள். இதனைத் தலைவனிடம் கூறி, விரைந்து மணந்துகொள்ளுமாறு தோழி வற்புறுத்துகிறாள்.)*

**முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டும்
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் சேயுரிப் புனிற்றுக் கதிர்
மூதா தின்றல் அஞ்சிக், காவலர்
பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇக்**

**காஞ்சியின் அகத்துக், கரும்பருத்தி, யாக்கும்
தீம்புனல் ஊர்! திறவிதாகக்
குவளை உண்கண் இவளும் யானும்
கழனி ஆம்பல் முழுநெறிப் பைந்தழை
காயா ஞாயிற் றாகத், தலைப்பெய.**

**'பொய்தல் ஆடிப் பொலிக!' என வந்து,
நின்நகாப் பிழைத்த தவறோ-பெரும!
கள்ளுங் கண்ணியும் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நாள்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சித்,**

**தணிமருங்கு அறியாள், யாய்அழ,
மணிமருள் மேனி பொன்னிறம் கொளலே?**

*வெற்றி தியாகம் வீரம் ஆகியவற்றைக் குறிக்கும் மூவகை முரசங்களும் முழங்குதலையுடைய செல்வர்களான மன்னர் களின் குதிரைக்குச் சூட்டுகின்ற, மூட்டப் பெறுகின்ற கவரியைத் தூக்கி உயர்த்தினாற்போல, செழுமையான வயல்களிலே நெற்பயிர் கதிர்த்தலையுடைய சிவந்த பொதியினை ஈன்று விளங்கும். கன்றை ஈன்ற அணிமையையுடைய பசுக்கள்*

அதனைத் தின்றுவிடுதலை அஞ்சிய அவற்றின் காலவர்கள், அவற்றுக்குக் கரும்பினை வெட்டி உண்பிப்பார்கள். அதன்பின், பாகற் கொடியினையும், நுண்மையான கொடியுடைய பகன்றையையும் அறுத்துக் கொணர்ந்து, அவற்றால் காஞ்சி மரத்தின் அகத்தே அவற்றைக் கட்டியும் வைப்பார்கள். இத்தகைய இனிய புனல்வளத்தினை உடைய ஊரனே! கேட்பாயாக:

எம்முடைய தாயானவள், நீர்த்துறைக் கண்ணே நிலை பெற்றிருக்கின்ற கடவுளுக்கு, நின் தலைவியின் தோற்ற வேறு பாட்டினைத் தெய்வக்குற்றம் எனக் கருதிக், கள்ளும் காந்தள் பூக்களாலாகிய கண்ணியும் நிலையான கொம்புகளையும் தொங்கும் காதுகளையும் உடைய வெள்ளாட்டுக் கிடாயும் உட்பட, எல்லாம் கையுறையாகப் படைத்துப், பலியிட்டுப் போற்றினாள். அப்படிப் போற்றியும் நோய் தணியாததனால், அதனைத் தணிவிக்கும் வேறு வகையினைக் காணாதவளாக அழுது கொண்டிருக்கிறாள்.

அப்படி எம்முடைய தாய் கலங்கி அழுமாறு, தலைவியது மணிபோலும் ஒளியுடைய மேனி பசலைபூத்துப் பொன்னிறங் கொள்ளலாயிற்று. 'கழனியிலேயுள்ள ஆம்பலது புறவிதழ் நீங்காத முழுப்பூவினுடைய பாம்புப்படம் போன்ற தழையானது மார்பிலே கிடந்து அசைந்துகொண்டிருக்க, ஞாயிறு காயாத மாலைவேளையிலே, நீவிர் பொய்தல் ஆடிப் பொலிவு பெறுவீர்களாக' எனத் தாயானவள் கூறி எம்மைப் போக விட்டாள். அப்போது. குவளை மலரினைப்போல விளங்கும் மையுண்ட கண்களையுடைய இவளும் யானுமாக வந்து நின்னை இகழ்ந்து ஒதுக்காமல் தவறு செய்து நின்னுடை காதல் மொழிகளுக்குச் செவிசாய்த்து நினக்கு இசைந்தேமே! அந்தத் தவறு தானோ பெருமானே, இவள் மேனியின் நிறம் இவ்வாறு பசலைதானோ பெருமானே, இவள் மேனியின் நிறம் இவ்வாறு பசலை உண்ணப்பட்டுப் போனது? என்று தலைமகளை இடத்துய்த்து வந்த தோழி, தலைமகனை வரைவுகடாயினாள் என்க.

**சொற்பொருள்:** முரசுடைச் செல்வர் - மூவகை முரசும் உடையவராகிய அரசர்கள். மூட்டுஉறு கவரி - மூட்டுதல் உறுகின்ற காவிரி. 5. ஆய்கொடி - அழகிய கொடியும் ஆம். 7. திறவிதாக - செம்மையுடையதாக; நன்றாக. 9. பைத்தழை நாகப்படம் போலுந் தழை; பசுந்தழையுமாம். 10. காயாஞாயிற்று - ஞாயிறு காய்தலற்ற மாலைப்போது: பொய்தல் - மகளிர் விளையாட்டு. 14. நிலைக்கோட்டு - வளைதலின்றி ஒரேநிலையாக

அமைந்த கொம்பு 15. உளப்பட - உள்ளத்துக் கருணை பிறக்குமாறும் ஆம். ஓச்சி - போற்றி. 17. மணி - செம்மணி; நீலமணியும் ஆம்.

முழுநெறிக் குவளை - இதழ் ஒடிக்கப்படாத குவளை; இவ்வாறு கொள்வர் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையினுள்.

**உள்ளுறை பொருள்:** நெற்கதிர் பழுதுபடாமற் காக்கச் செய்த செயல்களாற் கரும்பும் பாகலும் பகன்றையும் சிதைவுற்றது போலக், களவினை நீட்டிக்க நீ செய்யும் செயலாற் காந்தளும் ஆட்டுக்கிடாயும் சிதைந்தன என்றாள். விளைந்தபின் வரும் பயனை நினைந்து, இளங்கதிரைப் பசு தின்றலுக்கஞ்சி, அதற்குக் கரும்பருத்திக் கட்டிப் பயன் கொள்வார் போல, பின்னே பெரும் பயன் தரும் களவினைக் கெடுத்துப், பயன்தராது செய்யும் அலருரைப்பார் வாயடங்க, நீ வரைந்து கொள்வாயாக என்றாள்.

**மேற்கோள்:** இப்பாட்டுத், 'திணை மயக்குறுதலும் கடி நிலையிலவே' என்ற விதிபற்றி மருதத்துக் களவு ஆயிற்று' எனக் காட்டினர் நச்சினார்கினியர். 'மோத்தையும் தகரும்' என்னுஞ் சூத்திர உரையுள், 'நிலைக்கோட்டு வெள்ளை நால் செவிக்கிடா அய்' என்ற அடியைக் காட்டி, 'யாத்த' என்பதனால், 'கடா' வென்பதனையும் பாட்டிற்குப் பெயராகக் கொள்க என்பார் பேராசிரியர்.

**பாடபேதங்கள்:** 3 - 4. சேயரிப் புனிற்றுக் கதிர் மூதாதின்றல் அஞ்சி - சிவந்த அரியினையுடைய இளங்கதிரைக் கிட்டுப் பசு தின்றலுக்கு அஞ்சி. 9 - 10. கழுநீர் ஆம்பல் முழுநெறிப் பகைத்தழை காமர் ஞாயிற்றுறாகத் தலைப்பெய - செங்கழு நீர் ஆம்பல் என்ற இவற்றின் அகவிதழ் ஒடிக்கப்படாத முழுப் பூவின் தழைகளை ஞாயிற்றின் வெம்மைக்குப் பகையாகத் தலையிலே செருகி. 12. நின் எதிர்ப்பட்டட. 15. உலைத்துறைக். 16. தரமருந்தறி; தணிமருந்தறி

## 157. நெஞ்சு கொள்ளச் சொல்க!

**பாடியவர்:** வேம்பற்றூர்க் குமரனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** பாவைகள் பெயலால் நெகிழ்ந்தும் வெயிலால் சுருங்கியும் போவது பற்றிய செய்தி.

(தலைவன், பிரிந்து பொருள் ஈட்டிவர விரும்பினான். அதனைத் தானே நேரிற் கூறி அவள் படும் வேதனையைக் காணும் மனத்துணிபு அவனிடம இல்லை. அதனால், அந்தப் பொறுப்பை அவளுடைய உயிர்த்தோழியிடம் ஒப்புவிக்கிறான். அவளும்

*தலைவிக்குச் சென்று உணர்த்த, அப்போது தலைவி சொன்ன பதில் இது.)*

**அரியற் பெண்டிர் அல்குற் கொண்ட**
**பகுவாய்ப் பாளைக் குவிமுலை சுரந்த**
**வரிநிறக் கலுழி ஆர மாந்திச்**
**செருவேட்டுச், சிலைக்கும் செங்கண் ஆடவர்.**
**வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின்**

**எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்**
**பெரும்புலர் வைகறை அரும்பொடு வாங்கிக்**
**கான யானை கவளங் கொள்ளும்**
**அஞ்சுவரு நெறியிடைத் தமியர் சென்மார்**
**நெஞ்சுண மொழிப மன்னே-தோழி**

**முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்**
**பெயலுற நெகிழ்ந்து, வெயிலுறச் சா அய்**
**வினையழி பாவையின் உலறி,**
**மனைஒழிந் திருத்தல் வல்லு வோர்க்கே!**

*“கள்விலை மகளிர் அல்குற்புறத்தே சேர்த்துக் கொணர்ந்த, விரிந்த வாயையுடைய பாளையாகிய குவிந்த முலையானது சுரந்ததும், பன்னாடையினாலே அரிக்கப்பெற்றதுமான, கள்ளின் நிறமுடைய வண்டலை வயிறார நிரம்பக் குடித்துவிட்டுப், போரை விரும்பி ஆரவாரிக்கின்ற சிவந்த கண்ணினரான வீரர்கள், வில்லிலே அம்புதொடுத்து எய்ய, அதற்கு இரையாகி வீழ்ந்தோரின் பதுக்கைகளிலேயுள்ள கோங்கமரத்தின் மேலே படர்ந்து, இரவிலே மலர்ந்துள்ள பசுமையான கொடியினை யுடைய அதிரலைப், பெரிய இருளானது புலர்கின்ற வைகறை வேளையிலே, அரும்போடு பற்றி இழுத்துக் காட்டு யானை யானது தானுண்ணும் கவளமாகக் கொள்ளும். அப்படிப்பட்ட அச்சந்தருகின்ற வழியினூடே தன்னந்தனியராகச் செல்பவர் நம் ‘தலைவர்’ என் பாய், தோழி!*

*போர்முனையானது வந்துற்றதனால், மக்களை எல்லாம் ஊரைவிட்டுப் போக்கிவிட்டு, அழகிழந்து கிடக்கின்ற ஊர் மன்றத்திலேயுள்ள பாவையானது, பெயர் உறுவதனாலே நெகிழ்ந்தும், வெயிலுறுவதனாலே சுருங்கியும் தன்னுடைய புனைதற் செயல் நலன் எல்லாம் அழிந்து வாடிக்கிடப்பது போல, அவரைப் பிரிந்து வீட்டிலே தனித்தொழிந்து இருத்தலை வல்லவர் எவராயினும் இருப்பின், அவர்பாற் பிரிதலைப் பற்றி அவர் உள்ளம் ஏற்றுக்கொள்ளுமாறு சொல்வாராக!’ (யான் அவரைப் பிரிந்தால் இறந்து படுவேன்; அந்தப்பாவைபோல*

இரேன் என்பது கருத்து) என்று, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** அரியல் பெண்டு - கள்விலைப் பெண்டு. அல்குற் கொண்ட - அல்குலினிடத்தே தாழிகளிலே எடுத்துச் சுமந்து வருகிற. 3. வரிநிறக் கலுழி - வரி வரியான நிறமுடைய கலங்கல். 4. சிலைக்கும் - ஆரவாரிக்கும். 5. பதக்கை - இறந்தாரைப் புதைத்து மேலே குவித்திருக்கின்ற கற்குவியல். 6. எல்லி மலர்ந்த - இரவிலே மலர்ந்த. அதிரல் - கொடிப் பூவகைகளுள் ஒன்று. 7. பெரம்புலர் - பெரிய இருள் புலர்கின்ற. வைகறை - விடியல். அரும்பு - பூவாத முகைகள். 8. கவளம் கவளமாக உருட்டியே கொள்ளும்இயல்பு உடையது ஆதலினால், யானை உணவாகக் கொள்ளும் என்பதைக் 'கவளங் கொள்ளும்' என்றனர். 10. சென்மார் - செல்ல வேண்டி. நெஞ்சுஉண - நெஞ்சு ஏற்றுக்கொள்ள. 11. முனை - போர்முனை.12. பெயல் - மழை. சாஅய் - வற்றி; ஒடுங்கி. 14. வினை - செய்வினையாகிய புனைதற்றொழில்.

**உள்ளுறை:** எல்லிலே மலர்ந்த பூவும், மறுநாள் இரவிலே மலர்தற்குரிய அரும்புமாகக் கோங்கிலே படர்ந்திருக்கும் அதிரலின் பசுங்கொடியை, அதனை மற்றும்அழித்து யானை யானது தனக்குக் கவளமாக்கிக் கொள்வதுபோலத், தலைவரைப் பற்றுக்கோடாகக் கொண்டு அழகுடன் இல்லிலே விளங்கும் எமையும், அவர் பிரிவின் வெம்மையானது முற்றவும் அழித்து விடும் என்பதாம். யான் இறந்துபடுவேனாதலின், என் நெஞ்சுண மொழிபவர் ஆகார் அவர் என்றும் சொன்னாள்.

**பாடபேதங்கள்:** 1. அல்கில். 2. பகுவா யானைக்; குறு குலை தந்த; 11. புலம் பெயர்ந்த. 14. இருத்தல் ஆற்றுவோர்க்கே,

## 158. அஞ்சுவல் அல்லளோ!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லு வாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

(களவு ஒழுக்கத்தினாலே மகளின் தோற்றப் புதுமாற்றங் களைக் கண்ட தாய் ஐயுற்றாள்; அவளைச் சிறைகாவலுக்கும் உட்படுத்தினாள். அதன்மேல், தன் மகளுடைய தோழியை அழைத்து வினவுவதிலும் ஈடுபடுகிறாள். இரவாகிய அவ்வேளையிலே, இரவுக்குறி நேரீட்டு வந்து காத்திருக்கும் தலைவன் காதுகளிலேயும் அவர்களுடைய உரையாடல் விழ, அவன் வரைந்து வரும் வேட்கையனாகச் செல்லுகிறான்.)

'உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
பெயல்ஆன்று அவிந்த தூங்கிருள் நடுநாள்,
மின்னு நிமிர்ந்தன்ன கனங்குழை இமைப்பப்,
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்,
வரைஇழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி,

மிடைஊர்பு இழியக் கண்டனென், இவள் என
அலையல்-வாழிவேண்டு அன்னை!-நம் படப்பைச்
சூருடைச் சிலம்பில், சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண்டு உருவின் அணங்குமார் வருமே;
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்

கனவாண்டு மருட்டலும் உண்டே: இவள்தான்
சுடரின்று தமியளும் பனிக்கும்; வெறுவர
மன்ற மராஅத்த கூகை குழறினும்
நெஞ்சழித்து அரணஞ் சேரும்: அதன்தலைப்
புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு,

முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையும் இல்லன் ஆக,
அஞ்சுவள் அல்லளோ, இவளிது செயலே!

'இடிமுழக்கம் மிகுந்து தொகுதியை உடையதாகப் பெருமழையும் பெய்தலைத் தொடங்கிப், பெயல் நின்று, எங்கும் ஒலியடங்கியிருக்கிற இருள் செறிந்த நள்ளிரவு வேளையிலே, மின்னல்கள் பளிச்சென ஒளிருவதுபோலக் கனவிய தன் குழைகள் விட்டுவிட்டு ஒளிரவும் பின்னலிட்டு விடுகின்றதனாலே நெறிப்போடு கிளைத்த கூந்தலை உடையவளான இவள், மலைச் சாரலினின்று இறங்கி வருகின்றவொரு மயிலினைப்போலத் தளர்நடை நடந்து, பரணினின்றும்இறங்கிச் செல்லுதலைக் கண்டேன்' என்று கூறி, இவளை வருத்துதலைச் செய்யாதிருப்பாயாக. எம் அன்னையே! நீ வாழ்வாயாக! யான் சொல்லுவனவும் கேட்பாயாக:

தெய்வங்கள் தங்கி இருத்தலையுடைய மலைச்சாரலிலேயுள்ள நம்முடைய தோட்டத்திலே, கோங்கு முதலிய சுடர் ஒளிவீசும் பூக்களைச் சூடிக்கொண்டு, தாந்தாம் விரும்பிய உருவினை எல்லாம் எடுத்துக் கொண்டனவாக, அணங்குகள் தமக்குரிய பலியுண்ணுவதற்கு வருவதும் உண்டு.

நனவினிடத்து வாய்க்கின்ற ஒரு தன்மையினைப் போலவே, கனவானது தூங்குகின்றவர்களைப் பலவற்றையும் காணச் செய்து மயக்கங்கொள்ளச் செய்தலும் உள்ளதாகும்.

ஆனால், இவளோ என்றால்,

விளக்கின் ஒளியில்லாமல் தனியாக வீட்டின்கண் இருப்பதற்குக் கூட நடுநடுங்கும் இயல்பினையுடையவள்; நம் ஊர் மன்றத்து மராமரத்திலே கூகையானது வந்தமர்ந்து குழறினாலுங் கூடத், தன் நெஞ்சின் ஊக்கம்அழிந்துபோய், அரணின் உள்ளே சென்று புகுந்து விடுபவள்.

அதற்குமேலும், புலிக்கூட்டத்தைப் போன்றவான நாய்களைத் தொடரவிட்டும், முருகனைப்போன்ற கடுஞ்சீற்றத்துடனும், பகைவரைக் கடுமையாகத் தாக்கி அழிக்கும் வலிமையினையுடையவன் எம் தந்தை. அன்னோனும் வீட்டினிடத்தேயே இருக்கின்றனன். அங்ஙனமாகவும், இவள் அவ்வாறு செய்வதற்கு அஞ்சுவாள் அல்லளோ? (வீணாக அவள்மீது ஐயுற்று அவளைத் துன்பத்திற்கு உள்ளாக்காதே' என்பது கருத்து.)

என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. உரும் உரறு - முழங்குகின்ற இடி. கருவிய - தொகுப்பாகத் திரண்டெழுந்த. 2. தூங்கிருள் - செறிந்த இருள். நடுநாள் - நள்ளிரவு. 6. மிடை - வரை. 7. அலையல் - துனபுறுத்தாதே கொள். 8. சூர் - அச்சமும்ஆம். 12. சுடர் இன்று - விளக்கில்லாமல். பனிக்கும் - நடுங்கும். 14. அரணம் - அரண்வீடு; உள்வீடு.

**விளக்கம்:** தந்தையும் இல்லிடத்தான் என்றாள், தாயும் தந்தையும் இல்லாதபோது இரவுக்குறிக்குச் செல்லுதல் பொருந்துமேனும், இருவரும் இருக்கும்போது அவள் எங்ஙனம் போயிருக்க முடியும் என்று, அதனை மறுத்துக் கூறுகிறாள். 'இரவுக்குறியிடத்தே தன்மகள் களவிலே சென்றனள்' என்று ஐயுற்ற தாய்க்கு, அணங்கு யாதேனும் இவளுருவில் வந்திருக்குமெனவும், கனவு கண்டிருப்பாயெனவும் கூறி, அத்துடன் நீயும் எந்தையும் வீட்டிலே இருப்ப அங்ஙனம் அவள் செல்வாளோ எனவும் கேட்டு, அந்த ஐயத்தைப் போக்குகிறாள் தோழி.

**மேற்கோள்:** இது மிடையேறி இழிந்தாளென்றது காரணமாக ஐயுற்ற தாயைக் கனவு மருட்டலும் உண்டென்றது முதலாகப் பொய்யென மாற்றி, அணங்கும் வருமென மெய்வழிக் கொடுத்தது. இது, சிறைப்புறமாகக் கூறி வரைவுகடாதல் என்றும், தலைவி புறத்துப்போகக் கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டு கூறினாள் என்றும் கூறினர் நச்சினார்க்கினியர்.

*'உரும் உரறு கருவிய பெருமழை தலைஇய' என்ற அடியினை உருட்டுவண்ணத்திற்கு உதாரணங் காட்டுவர் பேராசிரியர்.*

**பாடபேதங்கள்:** *3. மின்னு மிளிர்ந்தன்ன - மின்னல் ஒளி செய்தாற்போல. 13. மாத்த கூரை. 16. முருகின் அன்ன. 17. எந்தையும் இல்லானாக. 18. இவள் அது செயலே.*

## 159. அவலம் கொள்ளாதே!

**பாடியவர்:** *ஆமூர்க் கவுதமன் சாதேவனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.* **சிறப்பு:** *குறும்பொறை நாடு; கொடுமுடி காக்கும் ஆமூர் முதலியனபற்றிய செய்திகள்.*

*(தலைவன் பிரிந்துபோயினதான தனித்துத் துயருறுகின்ற காலத்திலே. தன்உடலின் கவினெல்லாம் வேறுபட்டவளாகத் தோன்றினாள் தலைவி. அவளுக்குத் தலைவன் குறித்தவாறு வருபவன் என்ற உறுதியைக் கூறி வற்புறுத்தி, அதன் மூலம் அவளை ஆற்றுவிக்க முயல்கிறாள் தோழி.)*

**தெண்கழி விளைந்த வெண்கல் உப்பின்
கொள்ளை சாற்றிய கொடுநுக ஒழுகை
உரறுடைச் சுவல பகடுபல பரப்பி
உமண் உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின்
வடியுறு பகழிக் கொடுவில் ஆடவர்**

**அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்
பல்ஆன் நெடுநிரை தழீஇக் கல்லென
அருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தர்,
கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி,
உவலைக் கண்ணியர் ஊன்புழுக்கு அயரும்**

**கவலை, 'காதலர் இறந்தனர்' என, நனி
அவலம் கொள்ளன்மா காதல் அம் தோழி!
விசும்பின் நல்லேறு சிலைக்குஞ் சேட்சிமை
நறும்பூஞ் சாரற் குறும்பொறைக் குணாஅது
வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்**

**மிஞிறுமூசு கவுள சிறுகண் யானைத்
தொடியுடைத் தடமறுப்பு ஒடிய நூறிக்
கொடுமுடி காக்குங் குரூஉக்கண் நெடுமதில்
சேண்விளங்கு சிறப்பின்-ஆமூர் எய்தினும்,
ஆண்டமைந்து உறையுநர் அல்லர், நின்**

**பூண்தாங்கு ஆகம் பொருந்துதன் மறந்தே.**

தெளிந்த உப்பங்கழியினிடத்தே விளைந்த வெண்மையான கல்லுப்பின் கொள்ளும் விலையைச் சாற்றிய உமணர்கள், தமது வளைந்த நுகத்தினையுடைய உப்புவண்டியினின்றும் வலி பொருந்திய பிடரினையுடைய பகடுகள் பலவற்றையும், அவை எங்கும் பலவாகப் பரந்து மேயும்படியாக அவிழ்த்து விட்டு விட்டு, உப்புப் பாரத்தையும் சொரிந்து இறக்கி வைத்துவிட்டு, வழியிடையிலே சோறாக்கி உண்பார்கள். அப்படி அவர்கள் உண்டுவிட்டுக் கைவிட்டுப்போயிருந்த அடுப்புகள் கல்லிடிந்து போய்ப் பாழ்பட்டுக் கிடக்கும்.

வடித்தல் பொருந்திய முனையினையுடைய அம்பினையும், வளைந்த வில்லினையும் உடைய மறவர்கள், எதிர்த்தார்க்கு நோயினைச் செய்யும் தம்முடைய வலிய வில்லானது வணங்கு மாறு வளைத்து நாணேற்றியவராகச் சென்று, பலவான பசுக்களையுடைய நீண்ட ஆனிரையைக் கவர்ந்து வருவர். அப்படி அவர்கள் கவர்ந்து வருகின்ற முனையிடத்தைக் 'கல்' என்னும் ஒலி எழுமாறு தாக்கி, அவர்களிடமிருந்து ஆனிரைகளை மீட்டுக் கொணர்ந்தனர், பெரிதாகப் பேசக்கூடிய வல்லமை உடையவரான, கரந்தை வீரர்கள்.

அவர்கள், மிக்க குரலினையுடைய 'துடி' என்னும் பறையின் தாளத்திற்கு ஏற்பத் தம் வெற்றிக் களிப்பினால் ஆடி மகிழ்ந்தவராகத், தழையாலாகிய கண்ணியைச் சூடியவராக, அந்தக் கல்லிடந்து கிடக்கும் அடுப்புகளிலே ஊன்புழுக்கினை அட்டு உண்பார்கள்.

அப்படிப்பட்ட கவர்த்த நெறிகளையுடைய சுரநெறியிலே நின் காதலரும் சென்றுள்ளனரே என்று நீ மிகவும் துயரங்கொள்ளாதே; என் அன்பிற்குரிய தோழியே (அவர் எவ்வகையான ஏதமும் இல்லாதே விரைந்து வந்து சேர்வர் என்பது கருத்து.)

நல்ல இடியேறுகள் முழங்குகின்றதும், வானத்தினிடத்தே நெடுந்தொலைவுக்கு உயர்ந்துள்ளதுமான மலையுச்சிகளையும், நறிய பூக்கள் மணக்கும் சோலைகளையுடைய மலைச்சாரலையும் உடையது குறும்பொறை என்பானுக்கு உரிய மலை. அந்த மலைக்குக் கீழ்ப்பால் உள்ளது ஆமூர். வில்லாற்றல் விளங்கும் பெரிய கையினனான போர்களை வெல்லும் ஆற்றலுடையவன் வானவனாகிய சேரன்; அவனுடைய வண்டு மொய்க்கும் கன்னங்களையும் சிறிய கண்களையுமுடைய யானைகளின் கிம்புரிகளையுடைய பெரிய கொம்புகள் பொடிபடுமாறு அழித்துக் கொடுமுடி என்பவன் காத்துவருகின்றதும், செறிந்த

ஏப்புழைகளையுடைய நெடுமதிலையும், நெடுந்தொலைவுக்கு உயர்வுடன் விளங்கும் சிறப்பினையும் உடையது அந்த ஆமூர் என்பது.

அந்த ஆமூரையே தமக்கு உரிமையாக நின் காதலர் பெற்றாராயினும், பூண் அணிந்த நின்னுடைய மார்பகத்தினைத் தழுவுதலை மறந்து அங்கேயே நிலைத்துத் தங்கிவிடுகின்றவர் அல்லர் என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.

**சொற்பொருள்:** 1. தெண் கழி - தெளிந்த நீரையுடைய உப்பங் கழி. 2. கொள்ளை சாற்றுதல் - கொள்ளும் விலையைக் கூறி விற்றல். ஒழுகை - வண்டி. 3. சுவல் - பிடரி. 5. உயிர்த்து இறந்த - உண்டு கைவிட்ட. 5. கொடுவில்: வளைந்த வில். 6. நோன் சிலை - வலிய வில். 6. பெரும்புகல் வலத்தர் - பெரிய மனச் செருக்கினையும் வலிமையையும் உடையவர். 10. உவலை - தழை. ஊன்புழுக்கு - ஊன்சமைத்த உணவு. 11. இறந்தனர் - சென்றனர். 14. குறும்பொறை - குறும்பொறை நாடு - 37. கொடிமுடி - ஒரு தலைவன். 18. குரூஉக்கண் - ஏப்புழைகள் என்னும் காவலிடங்கள்.

**உள்ளுறை:** வெற்றிபெற்ற கரந்தையர்கள் மகிழ்ச்சியுடன் புழுக்கயரும் கவலையிடத்தே செல்லுங் காதலர், அவர்களுடைய கலிமகிழ் இருக்கையினையும் காண்பர்ஆதலின், பொருள் முற்றிய தாமும் விரையவந்து நின்னோடு இல்லறம் நிகழ்த்தி இன்புறுவர்; இவ்வாறு உரைத்தனள் தோழி என்க.

**பாடபேதங்கள்:** 11, கவலைகாதல், 18. தாக்குங், 19. ஆவூர் எய்தினும்.

## 160. பகலிலே வந்தது!

**பாடியவர்:** குமிழி ஞாழலார் நப்பசலையார். **திணை:** நெய்தல். **துறை:** தோழி வரைவுமலிந்து சொல்லியது.

(முன்னெல்லாம் இரவு வேளையிலே மெல்லென யாரும் அறியாது வந்துகொண்டிருந்த தலைவனுடைய தேரானது, ஒரு நாள் பகல்வேளையிலே மிகவும் வேகமாக யாவரும் அறிய வந்துகொண்டிருந்ததைக் கண்டாள் தோழி. அந்தமாற்றம் அவன் வரைந்து மணந்து கொள்வதற்காக வருவதனாலேயே நிகழ்ந்ததென அறிந்து தலைவியிடம் வந்து சொல்லுகிறாள்.)

**ஒடுங்கீர் ஓதி நினக்கும் அற்றோ?**
**நடுங்கின்று, அளித்தென் நிறையில் நெஞ்சம்**
**அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்**

**குப்பை வெண்மணற் பக்கம் சேர்த்தி,**
**நிறைச்சூல் யாமை மறைத்து ஈன்று புதைத்த**
**கேட்டுவட்டு உருவின் புலவுநாறு முட்டைப்**
**பார்புஇடன் ஆகும் அளவை, பகுவாய்க்**
**கணவன் ஓம்பும் கானலஞ் சேர்ப்பன்**
**முள்ளுறின் சிறத்தல் அஞ்சி, மெல்ல**
**வாவுஉடை மையின் வள்பிற் காட்டி,**
**ஏத்தொழில் நவின்ற எழில்நடைப் புரவி**
**செழுநீர்த் தண்கழி நீந்தலின், ஆழி**
**நுதிமுகங் குறைந்த பொதிமுகிழ் நெய்தல்,**
**பாம்புஉயர் தலையின் சாம்புவன நிவப்ப,**
**இரவந் தன்றால் திண்தேர்: கரவாது**
**ஒல்லென ஒலிக்கும்இளையரொடு வல்லாய்**
**அரவச் சீறூர் காணப்**
**பகல்வந் தன்றால் பாய்பரி சிறந்தே.**

*நிறைந்த சூலினை உடையதான ஆமையானது, மணல் மேட்டிலே மறைவாக ஈன்று புதைத்ததும், யானைக் கொம்பினாலே செய்த வட்டினைப் போன்ற உருவுடன் விளங்குவதும், புலால் நாற்றம் கொண்டிருப்பதுமான முட்டையினை, அதன் இடத்திலேயிருந்தும் குஞ்சு வெளிப்படுகின்ற வரையிலும், திறந்த வாயினையுடைய அந்த ஆமையின் கணவனானது பேணிக் கொண்டிருக்கிற, கானற்சோலைக்கு உரியவன் நம் தலைவனாகிய சேர்ப்பன்.*

*அவனுடைய திண்மையினையுடைய தேரானது, தாற்றுக் கோலின் முள்ளால் குத்தப்பட்டால் குதிரைகள் வேகமாக ஓடிப் பலரும் அறியச் செய்துவிடலும் கூடுமென அஞ்சிக், கடிவாள வாயினை இழுத்து மெல்லச்செலுத்தப்பட்டு, அம்பின் விரைவினைப் போலச் செல்லும் தொழிலிலே சிறப்புடைய அழகிய நடையினையுடைய அக் குதிரைகள், செழுமையான நீரினையுடைய தண்மையான கழியினை நீந்துதலால், அத் தேர் உருளைகளின் கூர்மையான முனையால் அறுக்கப்பெற்றுப் பொதிந்த அரும்புகளையுடைய நெய்தலானது, பாம்பின் உயரே தூக்கிய தலையினைப்போல வாடி மேலேஎழ இதுகாறும் இரவுவேளையிலேயே வந்துகொண்டிருந்தது.*

*இப்போதோ, அடும்பின் கொடிகள் சிதையுமாறு அவற்றை வலித்து இழுத்துக் கொணர்ந்து, வளைந்த கழியிடத்து உயர்ந்த வெண்மையான மணல்மேட்டின் பக்கமாகச் சேர்த்தவாறே,*

கொஞ்சமும் தன் வருகையை ஒளியாது, ஒல்லென ஒலிசெய்யும் சிறுவர்களோடு, வலிய வாயினாலே அலர் உரைத்துக் கொண்டிருக்கும் நம்முடைய சிற்றூர் அனைத்தும் காணப், பாய்ந்து செல்லும் குதிரைகளின் வேகத்தால் சிறப்புற்றதாகப், பகல் வேளையிலேயே வந்து கொண்டிருக்கிறதே!

அதனைக் கண்டதும், நிறையில்லாத என்னுடைய நெஞ்சம் நடுங்கியது. அது இரங்குதற்கு உரியது! ஒடுங்கிய கருமையான கூந்தலையுடையவளே! நினக்கும் அப்படித்தான் இருந்ததோ? என்று, தோழி வரைவு மலிந்து சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. ஈர்மை - கருமை. 2. நிறையில் நெஞ்சம் - களவுக்கு உடன்பட்ட காரணத்தால் நிறையற்றதாயிற்று. 3. அடும்பு - ஒருவகை நீர்க்கொடி. 4. குப்பை - மிகுதியான. 5. பகுவாய் - பிளந்த வாய். 9. முள் - தாற்றுக் கோலின் முள். எழில்நடை - தாளக் கட்டுடன் அமைந்த அழகிய நடை, 10. வாவுதல் - தாவிச் செல்லுதல். வள்பு - கடிவாள வார். 14. சாம்புவன - வாடுவன. 16. இளையர் - ஏவல் இளையருமாம்.

**உள்ளுறை:** நிறைசூல் யாமை மறைவாக முட்டையிட அதனைக் குஞ்சுபொறிக்கும் வரை பேணிக்காக்கும் கணவன் ஆமைபோல, நம்முடைய களவு ஒழுக்கம் மறைவாகவே நிகழ்வதாயினும், அது மணமாக உருப்பெறும்வரை உதவிப் பேண வேண்டியவன் காதலனே என்றாள். அப்படிப்பட்டவன் ஆனதால் அவன் வரைந்து வந்தனன் என்பது குறிப்பு. 'என் நெஞ்சம் நடுங்கியது உகக்கும் அவ்வாறோ?' என்றது நகையாடிச் சொன்னதாகும்.

தேராழியினால் முகங் குறைக்கப்பெற்ற நெய்தல் முகையானது சாம்புவனவாய், அலையெழுதோறும் அதனோடு நிவந்தாற்போல, வரைவு கருதிய நம் தலைவரது வரவால் அவல் வாய் அடங்கிய அம்பற் பெண்டிர், செருக்கடங்கிய முகத்தினராய், நம் சுற்றத்தார் களிக்குந்தோறும் தாமும் உடன் களியாநிற்பர் என்றும் உள்ளுறை கொள்க.

## 161. கேட்டே வருந்தினள்!

**பாடியவர்:** மதுரைப் புல்லங் கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவுணர்த்திய தோழி, தலைமகளது வேறுபாடு கண்டு முன்னமே உணர்ந்தாள் நம் பெருமாட்டி என்று தலைமகனைச் செலவு விலக்கியது.

*(தலைவனின் பிரிவுபற்றிய செய்தியைத் தலைவியிடம் கூறி அவளுடைய இசைவைப் பெறல்வேண்டும் என்ற எண்ணத்தோடு சென்றாள் தோழி. ஆனால் அங்கோ, தனக்கு முன்னரே தலைவி அதனை உணர்ந்து வாடிக்கிடந்த நிலையினைக் கண்டாள். தலைவனிடம் வந்து அதனைக் கூறி அவன் போக்கை நிறுத்தச் செய்கின்றாள்.)*

**வினைவயிற் பிரிதல் யாவது?- 'வணர்சுரி**
**வடியாப் பித்தை வன்கண், ஆடவர்**
**அடியமை பகழி ஆர வாங்கி;**
**வம்பலர்ச் செகுத்த அஞ்சுவரு கவலைப்**
**படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி**

**எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்**
**வெருவரு கானம் நீந்தி, பொருள் புரிந்து**
**இறப்ப எண்ணினர்' என்பது சிறப்பக்**
**கேட்டனள் கொல்லோ தானே? தோழ் தாழ்பு**
**சுரும்பு உண ஒலிவரும் இரும்பல் கூந்தல்,**

**அம்மா மேனி,ஆயிழைக் குறுமகள்**
**சுணங்கு சூழ் ஆகத்து அணங்குஎன உருத்த**
**நல்வரல் இளமுலை நனைய;**
**பல்லிதழ் உண்கண் பரந்தன பனியே.**

வளைந்து சுருண்டதும் கோதி ஒப்பனை செய்யப் பெறாததுமான மயிரினை உடைய, வன்கண்மையினை உடையவரான மறவர்கள், குதை அமைந்த அம்பினை முழுவதும் இழுத்துச் செலுத்தி, வழிச்செல்வாரான புதியவர்களைக் கொல்வார்கள். அப்படிக் கொன்றிருக்கும், அச்சந்தோன்றும் கவர்த்தநெறியிலே, மிகுந்த முடைநாற்றம் நாறும் புலாலையே விரும்பி வாழ்தலையுடையதும், சிவந்த செவிகளையுடையதுமான எருவைச் சேவலானது, அப்படி வீழ்ந்தவரைத் தின்னுவதற்காகத் தன்னுடைய நெருங்கிய சுற்றத்தைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கும். அச்சம் தோன்றும் அத்தகைய காட்டினைப் பொருள்மேல் கொண்ட விருப்பத்தால் கடந்துசெல்லவும் நீர் எண்ணினீர் என்பதனை, அவள் எனக்கு முன்னரே கேட்டு விட்டனளோ?

வண்டுகள் மலரிதழ்களினுள்ளே புகுந்து தேனை உண்டு கொண்டிருக்கும் தழைத்த கருமையுடைய பலவாகிய கூந்தலையும், அழகிய மாமை நிறமுடைய மேனியினையும், ஆராய்ந்தணிந்த அணிகளையும் உடைய இளமைப் பருவத்தினளான தலைவியின், திதலை படர்ந்துள்ள மார்பினிடத்தே, அணங்கு போல உருக்கொண்ட, நல்ல வளர்ச்சியினை

உடையதாயிருக்கின்ற, இளைய முலைகள் நனையுமாறு, பல இதழ்களையுடைய குவளைப் பூப்போன்று மையுண்ட அவள் கண்கள், நீர் பரந்து ஒழுகிக் கொண்டிருந்தனவே!

அதனால், நீர், வினையின் பொருட்டாக அவளைப் பிரிந்து செல்லுதல் எங்ஙனம் இயலும்? என்று, பிரிவுணர்த்திய தோழி தலைமகளது வேறுபாடு, கண்டு, முன்னமே உணர்ந்தாள் நம் பெருமாட்டியென்று தலைமகனைச் செலவு விலக்கினாள் என்க.

**சொற்பொருள்:** 1. வணர் சுரி - வளைந்து சுருண்ட. 2 வடியா - ஒப்பனை செய்யாத. 3. அடியமை பகழி - குதையமைந்த அம்பு. ஆர - முழுவதும். 6. ஈண்டு கிளை - நெருங்கிய சுற்றம். 10. இரும்பல் - கரிய பலவான. 12. அணங்கென - மார்பகத்து முலைகளிலே அணங்கு குடிகொண்டிருக்கும் என்பதனாற் கூறினர்; அல்லது தன் தோற்றத்தாலே ஆடவரை வருத்துதலால் அணங்கென்றார் எனினும் ஆம்.

**உள்ளுறை:** வன்கண் ஆடவர் வம்பலர்ச் செகுத்த படு முடை நசைஇன் எருவைச்சேவல் ஈண்டுகிளை பயிரும் வெரு வரும் கானத்தைப்போல, நும் பிரிவால் வாடி நலிந்திருக்கும் தலைவியையும், அலருரைக்கும் பெண்டிர்கள், அவள் அழியுமாறு பழிச்சொல்லாற் பெரிதும் வருத்துவர் என்க.

**பாடபேதங்கள்:** 5. நசைஇய வாழ்கட். 8. எண்ணினர் - 14. பல்லிதழ் மழைக்கண்.

## 162. பெறுதற்கு அரியவள்!

**பாடியவர்:** பரணர். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறிக்கண் தலைமகளைக் கண்ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** அதிகனின் நாட்டு வளம்; பசும்பூண் பாண்டியனின் சிறப்பான தன்மை.

(இரவுக் குறியிடத்தே வந்ததன் காதலியைக் கூடிப் பிரிந்து செல்லுகின்ற தலைமகனின் நெஞ்சம், அவளுடைய பேரழகின் பெருக்கிலேயே நிலைபெற்று நிற்கிறது. அவளையே நினைந்து நினைந்து அவன் இப்படித் தன் நெஞ்சிற்குச் சொல்லுகிறான்.)

**கொளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்து**
**அளப்பு அரிது ஆகிய குவைஇருந் தோன்றல,**
**கடல்கண் டன்ன மாக விசும்பின்**
**அழற்கொடி அன்ன மின்னுவசிபு நுடங்கக்**
**கடிதுஇடி உருமொடு கதழுறை சிதறி,**

விளிவுஇடன் அறியா வான்உமிழ் நடுநாள்,
அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கிப்,
பனிமயங்கு அசைவளி அலைப்பத், தந்தை
நெடுநகர் ஒருசிறை நின்றனென் ஆக;
அறல்என அவிரும் கூந்தல் மலர்என

வாண்முகத்து அலமரும் மாஇதழ் மழைக்கண்,
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்;
நகைமாண்டு இலங்கும் நலம்கெழு துவர்வாய்க்,
கோல்அமை விழுத்தொடி விளங்க வீசிக்,
கால்உறு தளிரின் நடுங்கி ஆனாது,

நோய்அசா வீட முயங்கினன்-வாய்மொழி
நல்லிசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய
நசைபிழைப்பு அறியாக் கழல்தொடி அதிகன்
கோள்அறவு அறியாப் பயம்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய,

வில்கெழு தானைப் பசும்பூண் பாண்டியன்
களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர
ஒளிறுவன இழிதரும் உயர்ந்துதோன்று அருவி
நேர்கொள் நெடுவரைக் கவா அன்
சூரா மகளிரிற் பெறற்குஅரி யோளே.

கொள்ளக் குறையாதபடி சங்கினம் வளர்ந்து கொண்டிருக்கும், ஆழத்தையுடைமையால் அளத்தற்கு அரிதாயதும் திரண்ட கரிய தோற்றத்தினை உடையதும் ஆகிய கடலைக் கண்டாற்போல விளங்கும் அகன்ற வானிலே, அழற்கொடியினை எடுத்து உயர்த்ததுபோல மேகங்களைப் பிளந்துகொண்டு மின்னல்கள் பளிச்சிடக், கடுமையாக முழங்கும் இடியுடன் மிக்க நீர்த்துளிகளைச் சிதறி, முடிவிடம் இதுவென அறிய முடியாத வகையிலே, மேகம் மழைபொழிந்து கொண்டிருக்கின்ற கார்காலத்து நள்ளிரவிலே -

அரிய காத்தல் தொழிலினரான காவலர்கள் நெகிழ்ந்திருந்த பக்குவத்தைப் பார்த்து, குளிர்பொருந்திய அசைந்து வருகின்ற வாடைக் காற்றானது வருத்த, அவளுடைய தந்தையின் நீண்ட மாளிகையினுள் ஒருபுறத்தே சென்று நின்றேன்.

வாய்மை மொழிதலையும், தமக்கு வழங்கியோருக்கு நல்ல புகழைத் தருகின்ற இயல்பினையும் உடைய இரவலர்களுக்கு, அவர்கள் எண்ணிய ஆசைகள் பிழைபட்டுப் போதலையே அறியாத வள்ளன்மையினையும் உடையவன், வீரக்கழலும்

வீரத்தொடியும் அணிந்த அதிகன் என்பவன். அவனது, காய்த்தல் அற்றுப்போதலை அறியாத பயன்நிரம்பிய பலா மரத்தினோடு வேங்கைமரமும் சேர்ந்திருக்கும் மலையிடம் எல்லாம் அழகுறுமாறு, வில்லாற்றல் நிரம்பிய தானையினையுடைய பசும்பூண் பாண்டியனது களிறானது, அழகிய வெற்றிக் கொடியை எடுத்துச் செல்வதைப்போலக், காட்சிக்கு இனிதாக விளங்குவனவாக இழிதருகின்ற, உயர்ந்து காணப்பெறும் அருவிகளையுடைய, நேர்மைகொண்ட நெடிய மேற்கு மலைச் சாரலிலேயுள்ள, அச்சந்தரும் தெய்வமகளிர்களைப் போலப், பெறுதற்கு அரியவள் நம் தலைவி. அவள் -

கருமணல்போல் ஒளியுடன் விளங்கும் கூந்தலினையும், ஒளிபொருந்திய முகத்திலே நீலமலர் என்னும்படியாகச் சுழலும் அழகிய இமைகளையுடைய குளிர்ச்சி பொருந்திய கண்களையும், வண்டினம் விரும்பும் முல்லையரும்புகளை நிரையாக வைத்தாற்போன்ற வெண்மையான பற்களையும், புன்னகையாலே மாண்புற்று இலங்கும் நலம்கெழுமிய பவளம் போன்ற வாயினையும் உடையவளாக, கோல்தொழில் அமைந்த சிறந்த வளையல்கள் விளக்கமுறும்படியாகக் கைகளை வீசிக்கொண்டே, காற்று உறுகின்ற தளிரினைப் போல நடுங்கிநடுங்கி வந்து, நமது காமநோயானது தீர்ந்து நம் வருத்தம் எல்லாம் நீங்குமாறு, அமையாது நம்மை முயங்கினள்! என்று இரவுக்குறிகள் தலைமகளைக் கண்ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. கோடு - கொம்பு: குட்டம் - குட்டம் என்னும் நாடு. கோடு - சங்கம் எனவும், குட்டம் குளம் எனவும் கொள்பவரும் உள்ளனர். 2. குவையிருந் தோன்றல - திரண்ட கருமையோடு தோன்றுவதாகிய. 4. வசிபு நுடங்க - பிளந்துகொண்டு வளைவாக வானிலே தோன்ற. 5. கதழ் உறை - மிக்க நீர்த்துளிகள். 6. விளிவிடன் - முடிவிடம். 7. இகழ்பதம் - நெகிழ்ந்திருக்கும் பக்குவமான சமயம். 8. பனி - குளிர். அலைப்ப - துன்புறுத்த. 10. அறல் - அறல்பட்ட மணல்.

**பாடபேதங்கள்:** 5. நசைஇய வாழ்கட் செஞ்செவி. இறப்ப எண்ணினர். 18. அதியன்.

## 163. வாடை விடு தூது!

**பாடியவர்:** கழார்க் கீரன் எயிற்றியார். **திணை:** பாலை. **துறை:** பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகன் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.

*(தலைவனைப் பிரிந்து தலைவி வருந்தியிருந்த காலத்திலே, கார்காலமும் வந்துவிட, அவன் வரக்குறித்த காலம் கடந்து போனதால், அவள் பெரிதும் வாடி மெலிவடைந்தாள். அவளுடைய பெருவருத்தத்தைத் தணிவிக்கும் வகையால் தோழி ஏதேதோ கூறி ஆற்றுவிக்க முயல, அவள், தன் ஆற்றாமை புலப்பட இப்படிக் கூறுகிறாள்.)*

**விண்அதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்**
**தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்,**
**எமியம் ஆகத் துனிஉளம் கூரச்**
**சென்றோர் உள்ளிச் சில்வளை நெகிழப்**
**பெருநகை உள்ளமொடு வருநசை நோக்கி**

**விளியும் எவ்வமொடு 'அளியள்' என்னாது**
**களிறுஉயிர்த் தன்ன கண்அழி துவலை**
**முளரி கரியும் முன்பனிப் பானாள்,**
**குன்றுநெகிழ்பு அன்ன குளிர்கொள் வாடை!**
**எனக்கே வந்தனை போறி!' புனற்கால்**

**அயிர்இடு குப்பையின் நெஞ்சு நெகிழ்ந்து அவிழக்,**
**கொடியோர் சென்ற தேஎத்து, மடியாது**
**இனையை ஆகிச் செல்மதி;**
**வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே!**

*வானமே அதிரும்படியான இடிமுழக்குடன் கூடியதாகப் பல்வேறு மலர்களும் குழைந்து போகுமாறு, குளிர்ந்த மழையானது பொழிந்தபின், பெயர் விளங்கும் கூதிர்க்காலத்தின கடைநாள் இது. யாம் இங்கே, எமக்கு யாமே கதியாகத் தனித்துக் கிடந்து வருத்தம் கொள்ளுகின்ற உள்ளத்தினர் ஆகுமாறு, நம்மைப் பிரிந்து சென்றார் நம் காதலர்.*

*அவரை நினைத்து, நம் கையில் விளங்கிய சிலவாகிய வளைகளும் நெகிழ்ந்துவிழப், பெரிதும் அவருடைய வரவினை விரும்புகின்ற உள்ளத்தோடு, அவர் வரும் திக்கினை நோக்கியவாறே, இறத்தற்கு ஏதுவாகிய துயரோடு நாம் வாடி நிற்கின்றோம். 'இத்தகையவள் இரக்கங்கொள்ளுதற்கு உரியவள்' என்று கருதாது, களிறானது நிரை முகந்து சொரிவதுபோல, இடமெங்கும் மறையுமாறு வீசும் பனித்துளியினால், தாமரை மலரும் கரிந்துபோகும்; இப்படிப்பட்ட முன்பனிக்காலத்துப் பாதி இரவிலே, குன்றுகளையும் நெகிழ்விப்பது போன்ற கடுங்குளிரினைக் கொண்ட வாடைக் காற்றே! நீ என் ஒருத்தியையே சூழ்ந்து வருத்தும் குறிக்கோளோடு வந்தனை போலும்!*

ஓடும் புனல், கால்வாய்களிடத்திலே மணல்மேடுகளைக் கரைத்து நுண்மணலாக்கி அயிரிடுதல் போலே, எம் காதலரின் நெஞ்சமும் எம்பால் நெகிழ்வுற்றுத் தம் பொருட் பிணிப்பு அவிழுமாறு, கொடியவராகிய அவர் சென்றிருக்கும் நாட்டிடத்தே, கொஞ்சமேனும் அயர்வில்லாமல், இப்படிப்பட்ட தன்மையுடையையாகிச் செல்வாயாக! அப்படி நீ சென்றனை யானால், செயலின் மீதிலேயே பெருவிருப்பம் உடையவராய் எம்மை மறந்திருக்கும் அவர், எம்மை நினைவு கூர்தலும் உளதாகும் என்று, பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. விரவுமலர் - பலவண்ணமாக விரவிக்கிடக்கின்ற மலர்கள். 4. தாழ்பெயல் - குறைந்த பெயல். 6. விளியும் எவ்வம் - இறக்குந் துயரம் 8. கண்ணகரு துவலை - இடங்கள் எல்லாம் பரவுதலான பனித்துளிகள். 8. முளரி - தாமரை. பால்நாள் - பாதிநாள் 9. நெகிழ்ப்பு - நெகிழச் செய்தல். 10. போறி - போலும். 11. குப்பை - மணல்மேடு. 14. விதுப்புறுநா - வேட்டையுடையவர்.

**பாடபேதங்கள்:** 5. வருநசை உள்ளம். 6. விளியா எவ்வம்; விளிய வெவ்வம்.

## 164. நல்ல காலம் இதுவே!

**பாடியவர்:** மதுரைத் தமிழ்க்கூத்தன் நாகன்தேவனார். **திணை:** முல்லை. **துறை:** பாசறைக்கண் இருந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(தன் தலைவியைப் பிரிந்து, வேந்தனின் படையிலே வினையேற்றுச் சென்று, பாசறைக்கண் தங்கியிருந்தான் ஒரு தலைவன். கார்காலம் வந்ததும் அவனுக்குத் தன் காதலி தன் வரவை எதிர்பார்த்து ஏங்கியிருக்கும் காட்சி நினைவுக்கு வருகின்றது. வேந்தன் போரை முடித்துவிட்டானென்றால் நாமும் சென்று அவளை இன்புறுத்தலாமே என்று நினைக்கின்றான்.)

**கதிர்கை யாக வாங்கி ஞாயிறு**
**பைதறத் தெறுதலின் பயங்கரந்து மாறி,**
**விடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலம்**
**காடுகவின் எதிரக் கனைபெயல் பொழிதலின்:**
**பொறிவரி இனவண்டு ஆர்ப்பப் பலவுடன்**

**நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற**
**வெறியேன் றன்றே வீகமழ் கானம்-**

**'எவன்கொல் மற்றுஅவர் நிலை?" என மயங்கி,**
**இகுபனி உறைக்குங் கண்ணொடு இனைபு ஆங்கு**
**இன்னாது உறைவி தொன்னலம் பெறூஉம்**

**இதுநற் காலம்; கண்டிசின்-பகைவர்**
**மதின்முகம் முருக்கிய தொடிசிதை மருப்பின்,**
**கந்துகால் ஒசிக்கும் யானை,**
**வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே!**

தன்னுடைய கதிர்களையே கையாகக் கொண்டு, ஞாயிறானது எங்கும் உள்ள ஈரப்பசையினை எல்லாம் கவர்ந்து பசுமையற்றுப் போகும் படியாகக் காய்ந்தது. அதனால், வளம் ஒழிந்து, தம்முடைய பழைய அழகும் மாறுபட்டுப் போய், மிகுந்த அகற்சியுடைய இந்த உலகத்து இடம் எங்கும் வெடிப் புக்களே மிகுந்தன. அப்படியாகிப்போன காடு தன் பழைய நிலைமையினை எய்துமாறு மிகுதியான பெயலை மேகங்கள் பொழிந்தன. அதனால் புள்ளிகளையும் வரிகளையும் உடைய வண்டினங்கள் ஆர்ப்பரிக்க, நறுமணமுடைய முல்லை மலர்களோடு செங்காந்தள் மலர்களும் வேறு பலப்பல பூக்களுடன் மலர்ந்தன. காடும் மலர்மணம் கமழ்கின்ற நறுநாற்றத்தினைப் பெற்றுவிட்டது.

பகைவர்களது கோட்டைகளின் கதவுகளை மோதிச் சிதைத்ததனால் பூண்சிதைந்த கொம்புகளை உடையனவாயும் கட்டுத்தறியினை ஒடிக்கும் கால்களோடு சினம் உள்ளனவாயும் விளங்கும் யானைப்படையினை யுடையவன், வெம்மையான சினத்தினையுடையவனாக வந்து முற்றியிருப்பவனான நம் வேந்தன். அவனுடைய தொழில் ஒருவாறு முற்றுப் பெற்ற தானால் -

காட்டின் கவினைக்கண்டு உள்ளம் நொந்து, 'அவனுடைய நிலைமை என்னவோ?' என்று மயங்கி ஒழுகும் கண்ணீரானது மார்பிலே வடிந்து கொண்டிருக்கும் கண்களுடன். அவ்விடத்து நம் மனையினிடத்தே வருந்திவருந்தி இன்னாமையுடன் இருப்பவளான நம் தலைவியும், நம்முடன் இணைந்து தன் பழைய அழகினையெல்லாம் பெறுகின்ற நல்ல காலமும் இதுவாகும் என்பதனைக் காண்பாயாக.

என்று, பாசறைக் கண்ணிருந்த தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. வாங்கி - கவர்ந்து. 2. பைதற - பசுமை அற்றுப் போகுமாறு. தெறுதலின் - காய்தலின். 3. விடுவாய்ப் பட்ட - பிளந்துபட்ட. கண் - இடம். மாநிலம் - உலகம். 4. எதிர -

எதிரேற்க. 6. தோன்றி - செங்காந்தள் 7. வெறி - மலர் நாற்றம். 9. இகுபனி - வடியும் கண்ணீர். உறைக்கும் - சிதறும். இனைபு - வருந்தி. 13. கந்து - கட்டுத்தறி.

**விளக்கம்:** களிறுகளின் பூண்சிதைந்த கொம்புகள், பகைவர் கோட்டையானது வீழ்ந்து, போரும்வெற்றியுற்றதென்பதைக் குறிக்கும். எனினும், தன் சினம் தணியாத வேந்தன் என்பதனால், பகைவர் பணிந்து தரும் திறைப்பொருளை ஏற்றுத் திரும்புதலைச் செய்யாதவன் என்க. மழை பெய்யக்காடு கவின் பெற்றது போல, அவன் எய்தினால் அவளும் தொல்கவின் பெறுவாள் எனவும் உணர்க.

**மேற்கோள்:** 'பிரிதற் பகுதியாகிய பாசறைப் புலம்பல் எனினும் நிலம்பற்றி முல்லையாயிற்று' என, இதனை 'ஏனோர் மருங்கினும்' என்னும் பொருளியற் சூத்திர உரையிலே இளம் பூரணர் காட்டினர்.

**பாடபேதங்கள்:** 7. வெறி வென்றன்றே. 8. கண்ணொடு இணையா.

## 165. அருமகளே என அழுமே!

**பாடியவர்... திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய தாயது நிலைமை, கண்டார் சொல்லியது.

(செல்வமாக வளர்ந்து வந்தவள் தலைவி. அவள், தன் தாயையும் ஆயத்தையும் பிரிந்து, தலைவனுடன் உடன்போக்கிலே சென்றுவிட்டாள். அவள் சென்றதனால் ஆயம் அழகிழந்து தோன்றிற்று. தாயோ, தன் மகளின் பிரிவினால் பித்தாகி, அவள் விளையாடிய பாவையைப் புனைந்து, 'மகளே! மகளே!' என்று புலம்பினாள். இதனைக் கண்டோர் சொல்லும் வகையிலே அமைந்தது செய்யுள்.)

**கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டெனக்
களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ,
ஒய்யென எந்த செவ்வாய்க் குழவி
தாதுஎரு மறுகின் மூதூர் ஆங்கண்,
எருமை நல் ஆன் பெறுமுலை மாந்தும்**

**நாடுபல இறந்த நன்ன ராட்டிக்கு
ஆயமும் அணிஇழந்து அழுங்கின்று! தாயும்
'இன்தோள் தாராய், இறீஇயர்என் உயிர்! என,
கண்ணும் நுதலும் நீவித், தண்ணெனத்,
தடவுநிலை நொச்சி வரிநிழல் அசைஇத்,**

**தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்,**
**'தருமணற் கிடந்த பாவைஎன்**
**அருமக ளே' என முயங்கினள் அழுமே!**

'பெரிய தலையினையுடைய இளைய பிடியானது குழியிலே அகப்பட்டுக் கொண்டதாகத், தன் களிற்றை அழைக்குமாறு கூப்பீடுசெய்த பேரொலிக்கு அஞ்சி, ஒய்யென எழுந்த சிவந்த வாயினையுடைய அதன் கன்றானது, தாதாகிய எருவினைக் கொண்ட தெருக்களையுடைய பழைய ஊராகிய அவ்விடத்தே, எருமையாகிய நல்ல மாட்டினின்றும் பெறுகின்ற முலைப் பாலினை உண்டுகொண்டிருக்கும். அப்படிப்பட்ட இடங்களாகிய நாடுகள் பலவற்றையும் கடந்து சென்றனள் நன்மை உடையவளான தலைவி. அவள் பொருட்டாக,

அவளுடன் பிரியாதிருந்த ஆயமும் தன் பொலிவையெல்லாம் இழந்து போனதாகப் பெரிதும் வருந்திக் கொண்டிருக்கின்றது;

'என் உயிர் கெட்டழிவதாக' என்று மனம்நொந்து கூறியவளாக, வீட்டிற் கொணர்ந்து பரப்பியிருந்த மணலிலே கிடந்த தன் மகளது பாவையினை எடுத்து, அதன் கண்களையும் நெற்றியையும் தடவிவிட்டு, வளைந்த நிலையினதான நொச்சியின் வரிப்பட்டுப்போன நிழலிலே தண்ணென்று கிடத்தித், தாழிக்கண் மலர்ந்த குவளையினது வாடிய மலரை அதற்குச் சூட்டித், தாயானவளும் 'என் அருமை மகளே! நின் இனிய தோளினைத் தருவாயாக!' என்று சொல்லி, அதனைத் தன் மார்போடு அணைத்தவளாக அழுது கொண்டிருப்பாள்; என்று, மகட்போக்கிய தாயது நிலைமையைக் கண்டவர் சொன்னார்கள் என்க.

**சொற்பொருள்:** 1. கயந்தலை - பெரிய தலை. பயம்பு - பள்ளம். 2. விளிப்படுத்த - கூப்பிட்டுக் கதறிய. கம்பலை - ஆரவாரம். 3. குழவி - யானைக் கன்று. 5. பெறுமுலை - பால் பெறும் முலையும் ஆம். 8. இறீஇயர் - அழிவதாக. 10. தடவு நிலை - வளைந்த நிலை; அன்றி எட்டுத் தடவும் அளவு தாழ்ந்த நிலையுமாம். அசைஇ - கிடத்தி; ஊசலில் கிடத்தி ஆட்டியுமாம்.

**மேற்கோள்:** இல்நீங்கிச் சென்னளேனும், ஆயமும் தாயும் பேதுறச் செய்தனளேனும், அத்தலைவியின் செயல் அறத்தோடு பட்டதாதலால், அவளை 'நன்னராட்டி' எனச் சொல்லினர். பிடி பயம்பிற் சிக்கி அலமருவதுபோலத், தாய் துயரிற்சிக்கித் தந்தையைக் கூப்பீடு செய்ய, அதற்கு அஞ்சியவள் வழியிடை ஊரார் ஊட்டக் கவலையின்றித் தன் தலைவனுடன் சென்றனள் என்க.

**மேற்கோள்:** *'தாய் நிலையும் ஆயத்து நிலையும் கண்டோர் கூறியவாறு, எனத், 'தன்னும் அவனும் அவளும் சுட்டி, என்னுஞ் சூத்திர உரையினும்; 'நற்றாய் மணற்பாவையைப் பெண்பாலாகக் கூறித் தழீஇக் கொண்ட முதலிற் பல்கெழு கிளிவியாயிற்று' எனப். பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்தே' என்னும் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் காட்டினர்.*

**பாடபேதங்கள்:** *8 ஈன்றோட்டாராய். 11. வாடு மலர் சூடித். 13. மருமகளே யென.*

## 166. அவர் யாரோதான்?

**பாடியவர்:** இடையன் நெடுங்கீரனார். **திணை:** மருதம். **துறை:** *பரத்தையோடு புனல் ஆடிய தலைமகன், தலை மகளிடைப் புக்கு, 'யான் ஆடிற்றிலேன்' என்று சூளுற்றான் என்பது கேட்ட பரத்தை, தன் பாங்கிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *நெல்வளம் மிகுந்த வேளூர் பற்றிய செய்தி.*

*(தன்னுடன் முதல்நாள் காவிரியிலே புதுப்புனலாடி மகிழ்ந்தும் இன்புற்றும் சென்ற தலைவன், தன் மனைவியிடம் 'தான் அங்ஙனமேதும் செய்யவில்லை' எனப் பொய்ம்மை கூறி, அவள் ஊடலைத் தணிவித்தான். அந்தப் பொய்யுரையைக் கேட்ட பரத்தை தன் தோழியிடம் இப்படிக் கூறுகிறாள்.)*

**'நலமரங் குழீஇய நனைமுதிர் சாடி**
**பல்நாள் அரிந்த கோஒய் உடைப்பின்,**
**மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்**
**பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்,**
**நறுவிரை தெளித்த நாறிணர் மாலைப்,**

**பொறிவரி இனவண்டு ஊதல கழியும்**
**உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்,**
**புனைஇருங் கதுப்பின் நீகடுத் தோள்வயின்**
**அனையேன் ஆயின், அணங்குக, என்!' என**
**மனையோட் தேற்றும் மகிழ்நன் ஆயின்,**

**யார்கொல்-வாழி, தோழி!-நெநல்**
**தார்பூண் களிற்றின் தலைப்புணை தழீஇ,**
**வதுவை ஈர்அணிப் பொலிந்து, நம்மொடு,**
**புதுவது வந்த காவிரிக்**
**கோடுதோய் மலிர்நிறை, ஆடி யோரே?**

**தோழியே! நீ வாழ்வாயாக!**

நல்ல மரங்கள் குழுமியிருக்கும் இடத்திலேயுள்ள, பல நாளும் வடிக்கப்பெற்ற புளித்த கள்ளுள்ள சாடியைக், கள் விற்பார் முகக்கும்போது, அந்த முகக்கும் கலம்பட்டு அந்தச் சாடியானது உடைந்து போயினால், விரவிய மழைத்துளிகள் போலத் தெருவெல்லாம் கள்ளின் துளிகள் துளிக்கும், கள்வளம் உடையது, பழைமையான பலவகை நெல்வளமும் கொண்ட வேளூர். அதன் வாயிலிடத்தே,

நறுமணநீர் தெளித்த, நறுநாற்றமுடைய பூங்கொத்துக் களால் ஆகிய மாலையைப், பொறிகளையும் வரிகளையும் உடைய வண்டினங்கள் ஊதாது போய்விடுவதற்கு ஏதுவான உயர்ந்த பலிக்கடன்களைப் பெறுகின்ற அச்சந்தரும் தெய்வம் உள்ளதன்றோ!

புனைதற்றொழிலோடு அமைந்த கரிய கூந்தலினை உடையவளான நின்னால் ஐயுறப் பெற்றவளான பரத்தையுடன், யான் அப்படியெல்லாம் செய்து வந்தவனானால், அந்தத் தெய்வமே என்னை வருத்துவதாக என்று கூறித், தன் மனைவியைத் தேற்றுகின்ற கணவன் இவன் ஆயினான்! அங்ஙனமானால் -

நேற்றுக் கரையுச்சிகளைத் தொட்டபடியாக வந்து கொண்டிருந்த காவிரியின் மிகுதியான புதுவெள்ளப் பெருக்கிலே, தாரணிந்த களிற்றினைப்போலப் புணையின் தலைப்பகுதியைத் தழுவியிருந்து, கூட்டத்திற்குரிய பெரிய அணிகளோடு பொலிவுற்று, நம்முடன் புனலாடியவர்தான் வேறு யாவரோ? என்று, தலைமகன் தலைவியிடம் பொய்ச்சூளுற்றான் எனக் கேட்டபரத்தை, தன் பாங்காயினார் கேட்பச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1,2, 'நன்மரங் குழீஇய பல்நாள் அரித்து முதிர் நனைசாடி' எனக் கூட்டி, நல்ல மரங்களிலேயிருந்து சேமித்ததும், பலநாள் அரித்தரித்து வடிகட்டியதுமான பழைய புளித்த கள் நிறைந்த சாடி எனவும் பொருள்கொள்க. 2. கோஒய் - கள் விற்கும் கலயம். 3. மயங்குமழைத்துவலை - விரவிய மழைத் துளிகள். 5. நறுவிரை - நறுமணஞ்சேர்ந்த நீர். 6. வண்டுகள் தெய்வக் குற்றத்துக்கு அஞ்சி ஊதாது கழியும் என்க. 7. உருகெழு - அச்சந்தருகின்ற 8. கடுத்தோள் - ஐயுறப் பெற்றவள். 9. அணங்குக - வருத்துக. தலைப்புணை - தெப்பத்தின் தலைப்பகுதி. 15. கோடு - கரையுச்சி; கரைமரங்களின் கிளைகளும் ஆம். மலிர் நிறை - மிக்க வெள்ளம்.

**மேற்கோள்:** 'இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்' என்னும் பகுதிக்கு, இதனைக்காட்டி 'இஃது, இளையோர் கூற்று' எனப், 'புல்லுதல் மயக்கும்' என்னும் சூத்திர உரையினும், பரத்தை பிறர் அலர் கூறியவழிக் காமஞ் சிறந்து புலந்தவாறு காண்க' எனக், கோடுதோம் மலிர்நிறை ஆடியோரே' என்ற அடியினைக் காட்டிக், 'கிழவோன் விளையாட்டாங்கும் அற்றே' என்னுஞ் சூத்திர உரையினும், நச்சினார்க்கினியர் உரைத்தனர்.

**பாடபேதங்கள்:** *8. நி வெய்யோள் வயின். 15. தோடு தோய் மலிர் நிறை.*

## 167. பொருந்தாக் கண்ணேம்!

**பாடியவர்:** *கடியலூர் உருத்திரங்கண்ணனார்.* **திணை:** *பாலை* **துறை:** *தலைமகன் பொருள்டைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.*

*(வாணிகச் சாத்துடன் தன்னொத்த இளைஞர் பலரும் பொருள் தேடிவரச் செல்லுதலைக் கண்ட ஒரு தலைவனின் உள்ளத்திலும் அந்த ஆர்வம் தலைதூக்கியது. ஆனால், அதே சமயம், தன் காதலியைப் பிரியவேண்டுமே என்ற துயரமும் உள்ளத்திலே முனைத்து எழுகின்றது. அவன் இப்படித் தன் நெஞ்சிற்குச் சொல்லியவனாகப் போவதையே அப்போதைக்கு நிறுத்திவடுகிறான்.)*

**வயங்குமணி பொருத வகையமை வனப்பின்**
**பசுங்காழ் அல்குல் மாஅயோ ளொடு**
**வினைவனப்பு எய்திய புனைபூஞ் சேக்கை,**
**விண்பொரு நெடுநகர்த் தங்கி, இன்றே**
**இனிதுடன் கழிந்தன்று மன்னே; நாளைப்**

**பொருந்தாக் கண்ணேம் புலம்வந்து உறுதரச்**
**சேக்குவம் கொல்லோ, நெஞ்சே! சாத்துஎறிந்து**
**அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்**
**கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ**
**ஊர்எழுந்து உலறிய பீர்எழு முதுபாழ்,**

**முருங்கை மேய்ந்த பெருங்கை யானை**
**வெரிந்ஓங்கு சிறுபுறம் உரிஞ ஒல்கி**
**இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென,**
**மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து**
**எழுதுஅணி கடவுள் போகலின், புல்லென்று**

**ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன் திணைப்**
**பால்நாய் துன்னிய பறைக்கட் சிற்றில்,**
**குயில்காழ் சிதைய மண்டி, அயில்வாய்க்**
**கூர்முகச் சிதலை வேய்ந்த**
**போர்மடி நல்இறைப் பொதியி லானே!**

ஒளிசெய்யும் மணிகள் ஒன்றுடன் ஒன்று போராடிக் கொண்டிருக்கும் வகையிலே பலவேறு மணிகள் வைத்துச் செய்ததும், அழகானதும். பசுமையானதுமான சரங்களை யுடைய, மேகலைபொருந்திய அல்குல் தடத்தினள், மாமைநிற முடைய நம் தலைவி. அவளுடன் வானோடு பொருதுவது போன்று உயரமானதும், நெடியதுமான மாளிகையிலே, செய்வினைத் தொழில்களால் மிகுதியான வனப்பினைப் பெற்று விளங்கும் புனையப்பெற்ற பூஞ்சேர்க்கையிலே, இற்றைப் பொழுதும் இனிதாகக் கழிந்துவிட்டது.

சுரநெறியினூடே வருகின்ற வாணிகச் சாத்தினரைக் கொன்று, அவர்கள் பொருளைக் கொள்ளையிட்டு உண்பவர் மறவர்கள். வளைந்த வில்லினராக விளங்கும் அவர்கள் பிறருக்கு வருத்தஞ் செய்யும் அம்பினை எய்பவர்கள். அவர்களுடைய பெரிய பகைமைக்கு அஞ்சி, ஊரவர் அனைவருமே வேற்றிடம் போய்விட்டதனால் பாழ்பட்டுக் கிடக்கும் ஊர்; அவ்வூரிலே பீர்க்குப் படர்ந்திருக்கும் ஒரு பாழடைந்த இடம்; பெரிய கையினை உடைய யானை அவ்விடத்தே இருந்த முருங்கையை ஒடித்துத் தின்னும்; முதுகுப்புறத்திலே உயர்ந்திருக்கும் பிடர் சொரியெடுக்க, அந்தஇடத்தின் செங்கற் சுவரிலே உராயும்; அதனால் விட்டமாகிய மரம் தளர்ந்து வீழும்; அதனால் அச்சங்கொண்ட மாடப்புறாக்கள் வெளியேறிப்போக, மரஞ் சோர்ந்தவாக மாடங்கள் விளங்கும்; சுவரிலே எழுதி அழகு செய்யப்பெற்ற கடவுளின் உருவமும் மறைந்துபோய் விட்டதனால், பொலிவு இழந்தும், இடையறாது நிகழ்கின்ற பலி இல்லாமற் போனத்தனால் மெழுகப்படாததாகவும் திண்ணை விளங்கும். அதன் அயலே, ஈன்ற அணிமையை உடைய நாயானது தன் குட்டிகளுடன் தங்கியிருக்கும் பரந்த இடம் தோன்றும்; அத்துடன் இயற்றப்பெற்ற கைம்மரங்கள் சிதையுமாறு, வேல்முனை போன்ற கூர்மையான வாயினை யுடைய கறையான் மொய்த்துப் பற்றிக் கொள்ளுதலினால், கூரையும் இல்லாதுபோன சிறுவீடாகவும் தோன்றும்; அவ்விடமாகிய பொதுவிடத்திலே,

தனிமைத் துன்பம் வந்து வருந்திக்கொண்டிருக்க, இமை பொருந்தாத கண்களையுடையேமாய், நாளைப்பொழுதில் நாம்

தனித்துத் தங்கி இருப்போமோ? என்று, தலைமகன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கினான் என்க.

**சொற்பொருள்:** 1. வயங்கு மணி - பளிங்கு மணி; விளக்கமான மணியும் ஆம். வகை - கூறுபாடு. 2. காழ் - சரம். மா அயோள் - மாமை நிறத்தை உடையவள். 3. வினை வனப்பு - செய்வினைத் திறனாற் கூடிய அழகு. புனைபூஞ் சேக்கை - அலங்கரித்த மலர் மஞ்சம். 4. நகர் - மாளிகை. 7. சேக்குவம் - தங்கியிருப்போம். சாத்து எறிந்து - வாணிகச் சாத்தினைக் கொன்று அதர் கொள்ளைப் பொருள்பட. 10. உலறிய வறட்சியுள்ள. 12. வெரிந் - முதுகு. 15. எழுதணி கடவுள் - சுவரிலே கடவுள் வடிவை நினைந்து எழுதித் தொழப்பெற்று வருகின்ற கடவுள்; இன்றும் இந்த மரபுகளைச் சிற்றூர்களில் காணலாம். 17. பால் நாய் - ஈன்று அணிமையுடைய நாய். 18. குயில் காழ் - குயிற்றப்பட்ட கைமரங்கள். அயில்வாய் - வேல்முனைபோன்ற. 19. சிதலை - கறையான்.

**உள்ளுறை:** குடி போகப்பெற்றுப் பாழ்ப்பட்ட ஊரினைப் போல, தன்னைப் பிரிந்து தலைவியும் தன் அழகழிந்து வாடுவாள்; பீர்க்குப் படர்வதுபோல அவள் மேனியிலே பசலைநோயும் படரும்; எழுது அணி கடவுள் போனதுபோல, அவளுடைய அணங்குபோன்ற புனை எழிலும் மறையும்; என்றெல்லாம் ஒப்பிட்டு அவன் துயருற்றான் என்க. முதல் நாள் இரவின் இன்ப வாழ்வும் மறுநாளைய தனிமை வாழ்வும் மிகவும் நுட்பமாகக் காட்டப்பெற்றிருக்கின்ற தன்மையை அறிந்து இன்புறுக.

**மேற்கோள்:** 'நெஞ்சினாற் பிரியக் கருதி வருந்திக் கூறியது' என்பதற்குத், 'தான் அவட் பிழைத்த நிலையின் கண்ணும்' என்னும் பகுதியில், 'கரணத்தின் அமைந்து' என்னுங் கற்பியற் சூத்திர உரையில், நச்சினார்க்கினியர் இதனைக்காட்டினர்.

**பாடபேதங்கள்:** 12. உரிஞ்ச ஒல்கி. 14. மாடக் கெழுதணி. பானாய் துள்ளி பறைகட் சீறில்.

## 168. பனி வார் கண்ணேம்!

**பாடியவர்:** கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக்குறி வந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது. **சிறப்பு:** குழுமூர் என்னுமிடத்திலே சேரமான் உதியன் இட்ட பெருஞ்சோற்றுக் கொடை பற்றிய செய்தி.

(தலைவன் இரவு நேரத்திலே வந்து தலைவியுடன் கூடி மகிழுகின்ற களவுவாழ்வினை மேற்கொண்டு ஒழுகி வருகின்றான்.

விரைவிலே மணந்து கொள்ளாது, அவன் அதன்பாலே மனஞ்செலுத்தி வருதலைக் கண்ட தோழி, இரவின்கண் கானத்தைக் கடந்துவருகின்ற ஏதத்திற்கு அஞ்சித் தலைவி நடுங்குகின்றான் என்று சொல்வதன் மூலம், தலைவனின் மனத்திலே வரைந்து வருதல் வேண்டும் என்ற எண்ணத்தை எழுப்ப முயல்கிறாள்.)

**யாமம் நும்மொடு கழிப்பி, நோய்மிக,**
**பனிவார் கண்ணேம் வைகுதும், இனியே;**
**ஆன்றல் வேண்டும் வான்தோய் வெற்ப!**
**பல்ஆன் குன்றில் படுநிழல் சேர்ந்த**
**நல்ஆன் பரப்பின் குழுமூர் ஆங்கண்-**

**கொடைக்கடன் ஏன்ற கோடா நெஞ்சின்**
**உதியன் அட்டில் போல ஒலிஎழுந்து,**
**அருவி ஆர்க்கும் பெருவரைச் சிலம்பின்**
**ஈன்றணி இரும்பிடி தழீஇக் களிறு தன்**
**தூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப,**

**ஒடுங்குஅளை புலம்பப் போகிக், கடுங்கண்**
**வாள்வரி வயப்புலி நன்முழை உரற,**
**கானவர் மடிந்த கங்குல்,**
**மான் அதர்ச் சிறுநெறி வருதல், நீயே?**

வானத்தைச் சென்று தடவிக்கொண்டிருப்பது போல உயர்ந்து விளங்கும் மலையுச்சிகளையுடைய வெற்பனே!

இரவு வேளையிலே, யாமப்பொழுதெல்லாம் நும்மோடு கூடி இன்பமுடன் கழிக்கின்றோம். நீர் சென்ற பின்னர், நோய் மிகுதியாகின்றது. நீர் ஒழுகும் கண்களை உடையேமாய் வருந்தி வாடியபடியே இருக்கின்றோம்.

'பல்லான் குன்றம்' என்னும் மலையின் சாரலிடத்து, மிகுதியான நிழலினையுடைய இடங்களிலே சேர்ந்திருக்கும், நல்ல பசுமந்தைகளின் பரப்பினையுடையதாக விளங்குவது குழுமூர். அவ்வூரினிடத்தே, பெருஞ்சோற்றுக் கொடையாகிய கடமையை மேற்கொண்டான், ஈகையினின்றும் கோணுதல் இல்லாத உள்ளத்தினனாகிய சேரமான் உதியன் சேரலாதன். அது காலையிலே, அவனுடைய சமையல் செய்யும் இடத்திலே எழுகின்ற ஆரவாரத்தைப் போல, பெருவரையின் பக்கமலைகளில் எல்லாம் எழுகின்ற பேரொலியுடனே அருவிகள் வீழ்ந்து கொண்டிருக்கும்.

அவ்விடத்திலே, ஈன்ற அணிமையை உடைய தன் பிடியினைத் தழுவிக்கொண்டதாக, அதன் களிறானது, அசைந்தசைந்து நடக்கும்இயல்புடைய தன் கன்று உறங்குகின்ற இடத்தைக் காத்துக் கொண்டிருக்கும். கடுமையான கண்களை யுடையதும், வாள்போன்ற கோடுகளை உடையதுமான வலியபுலியானது, பகல் எல்லாம் தான் ஒடுங்கிக் கிடந்த முழையானது தனித்துக் கிடக்க, அதனைவிட்டுப் புறத்தே சென்று, மலைக்குகையிடத்திலே எதிரொலி எழுமாறு முழங்கிக் கொண்டிருக்கும்.

வேட்டையாடுவோரான கானவர்களும் அயர்ந்து துயில்கின்ற அத்தகைய நள்ளிரவிலே, விலங்கினம் செல்லும் வழியாகிய சிறிய பாதைகளின் வழியாக, நீதான் தமியனாக வருகின்றனை. அதனை இனியேனும் விட்டுவிடுதல் வேண்டும்!

என்று, இரவுக்குறி வந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி வரைவுகடாயினாள் என்க.

**விளக்கம்:** களிறு பிடியினைத் தழுவி உறங்கும் கன்றினைப் பேணிக் காத்து நிற்பதுபோலத், தலைவியை மணந்து இல்லற வாழ்வு மேற்கொண்டு காத்துப் பேணுதல் வேண்டும் என்பது கருத்து. இதனைக் கூறுவாள் வழியினது கொடுமையினையும், இரவின் கடுமையையும், அவற்றால் தான் வருந்தும் வருத்தத்தையும் உரைத்தனள்.

**சொற்பொருள்:** 1. யாமம் - நள்ளிரவின் யாமம். கழிப்பி - கழித்து. 2. பனிவார் - நீர் ஒழுகும். 3. ஆன்றல் - கைவிடுதல். 4. பல்லான் குன்றம் - ஒரு மலையின் பெயர்; பலவான ஆநிரைகளை உடைய குன்றமும் ஆம். 'வல்லாண் குன்றம்' என்பது பாடமாயின், வல்லாண்மை நிகழ்வதற்கு இடனாக அமைந்த குன்றம் என்க. கொடைக்கடன் - கொடையாகிய கடமை. ஏன்ற - ஏற்றுக் கொண்ட. 7. அட்டில் - அடுதலைச் செய்கின்ற இடம். 9. இரும்பிடி - பெரிய விடியானை. 10. தூங்குநடை - அசைந்த தளர்நடை; தூங்கல் நடை என்பார்கள் இந்நாளில் 11. அளை - குகை. 12. புலிஉரற - புலி முழங்க; களிறு காக்கும்படியாகப் புலி முழங்க எனவும் கொள்க. 14. மான் - விலங்குகள்; மானதர் - விலங்கினம் செல்லும் தடம்; மனிதர்கள் செல்ல ஆகாதது என்பது குறிப்பு.

**பாடபேதம்:** 4. வல்லாண் குன்றில் - வல்லாண்மை நிகழு தற்குக் களனாயமைந்த குன்றிடத்திலே.

## 169. அவள் வருந்துவாளே!

**பாடியவர்:** *தொண்டி ஆமூர்ச் சாத்தனார்.* **திணை:** *பாலை* **துறை:** *தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(பொருள் வேட்கையால் தன்னுடைய காதல்மனைவியைப் பிரிந்து சென்றான் ஒருவன். பலப்பல சுரநெறி வழிகளையும் கடந்தான். ஒருநாள மாலைவேளையிலே இடைவழியில் தன் காதலியை நினைத்துக்கொள்ளுகிறான். தன்னைப் பிரிந்து அவள் வருந்தியிருக்கும் நிலைமை அவன் மனக்கண்ணில் தோன்றுகிறது. தன் நெஞ்சிற்கு இப்படிச் சொல்லுகிறான்.)*

**மரம்தலை கரிந்து நிலம்பயம் வாட,**
**அலங்குகதிர் வேய்ந்த அழல்திகழ் புனந்தலைப்,**
**புலிதொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்**
**கலிகெழு மறவர் காழ்க்கோத்து ஒழிந்ததை,**
**ஞெலிகோற் சிறுதீ மாட்டி, ஒலிதிரைக்**

**கடல்விளை அமிழ்தின் கணஞ்சால் உமணர்**
**சுனைகொள் தீநீர்ச் சோற்றுஉலைக் கூட்டும்**
**சுரம்பல கடந்த நம்வயின் படர்ந்து; நனி**
**பசலை பாய்ந்த மேனியள், நெடிதுநினைந்து,**
**செல்கதிர் மழுகிய புலம்புகொள் மாலை**

**மெல்விரல் சேர்த்திய நுதலள், மல்கிக்**
**கயலுமிழ் நீரின் கண்பனி வாரப்**
**பெருந்தோள் நெகிழ்ந்த செல்லலொடு**
**வருந்துமால், அளியள் திருந்திழை தானே!**

*மரங்கள் தம் உச்சிகள் கரிந்துபோகவும், நிலம் தன்வளம் குன்றவும், உலகைச் சுற்றிவருகின்ற ஞாயிற்றுக் கதிர்கள் மூட்டமிட்டிருக்கும் வெம்மை திகழ்கின்றதாக விளங்குவது அகன்ற பாலைநிலம். அதனகண், புலியானது கொன்று உண்டபின் கைவிட்டுப்போன பெரிய களிற்றினது எஞ்சிய ஊனை, ஆரவாரமுடைய மறவர்கள், கோலிலே கோத்து எடுத்துக் கொண்டு செல்வார்கள். அதன்பின் மிகுந்திருப்பதை, ஒலிக்கும் அலைபொருந்திய கடலிலே விளைகின்ற, அமிழ்தான உப்பினைக் கொணரும் உமணர்களின் கூட்டமானது, தீக்கடை கோலாலாகிய சிறுதீயாலே வாட்டிச், சுனையிலிருந்துகொண்ட இனிய நீரினால் அமைந்த தம்முடைய சோற்று உலையிலே, அந்த வாட்டிய தலையினையும் கூட்டிச் சமைத்து உண்பார்கள்.*

திருந்திய அணிகளையுடையவளான அவள், மறையும் கதிரும் மங்கிவிட்ட தனிமைகொண்ட இம்மாலை வேளையிலே, மிகவும் பசலைபடர்ந்த உடலினளா யிருப்பாள்! நெடிதும் நம்மையே நினைந்துநினைந்து, தன் மெல்லிய விரலினை நெற்றியிலே சேர்த்தியவளாகவும் இருப்பாள்! கயல்மீன் உமிழ்கின்ற நீரினைப்போல அவள் கண்களிலே நீர்நிறைந்து ஒழுகிக்கொண்டிருக்கும்! அத்துடன், தன் பெரிய தோள்களும் மெலிந்து போன துயரத்தோடும் அவள் வருந்திக் கொண்டிருப்பாள். நெஞ்சமே! அவள்தான் இரங்கத்தக்கவள்!'

என்று, தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**விளக்கம்:** புலி விட்டுச் சென்ற களிற்றினை, மறவரும், உமணரும் உண்டு களித்தல்போல, அவனாற் கைவிடப்பெற்று அழகு அழிந்த அவள் நலனைப், பசலையும் புலம்பும் கைக்கொண்டு களிக்கும் என்பதாம்.

**சொற்பொருள்:** 1. தலை - உச்சி. 'மரம் முதலாகக் கரிந்து நிலம் எல்லாம் பயன் இழந்து வாடிவிட என்றும் சொல்க. 2. அலங்கு கதிர் - அசைந்து வருகின்ற கதிராகிய ஞாயிறு. வேய்ந்த - சூழ்ந்து மூடிய. 4. கலிகெழு - ஆரவாரம் கெழுமிய. காழ் - கொம்பு. 5. ஞெலிகோல் - தீக்கடை கோல். 6. அமிழ்து - உப்பு. கணம் சால் - கூட்டம் மிகுந்த. 10. செல்கதிர் - மாலைச் சூரியன். மழுகிய - மழுங்கிய. 11. மெல்விரல் சேர்த்திய நுதலின் இது கவலைகொண்டவர் செய்யும் இயல்பான செயல். 12. கயல் உமிழ் நீர் - மீன் உமிழுகின்ற நீர்; ஒப்புமையாயிற்று 3. செல்லல் - துன்பம். 14. திருந்திழை - திருத்தமுற அமைந்த அணிகலன்கள்.

**பாடபேதங்கள்:** 2. வயங்குகதிர்; விளங்கு கதிர். 10. செல்சுடர் மழுங்கிய. 13. நெகிழ்த்த செல்லல்.

## 170. நண்டு விடு தூது

**பாடியவர்:** மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார். **திணை:** நெய்தல். **துறை:** தலைமகள், காமம் மிக்க கழிபடர் கிளவியாற் சொற்றது.

(கடற்கரைப் பாங்கிலேயுள்ள ஊரவளான தலைவி ஒருத்தி, பல நாட்களாகவும் தன் காதலனைக் காணாதவளாக, நினைந்து நினைந்து வருந்தினாள். தாங்கள் கூடிமகிழ்ந்த இடங்கள் பலவும் சென்று, அவையெல்லாம் தங்களுடைய பழைய நினைவுகளை எழுப்ப, இப்படி உரைக்கின்றாள்.)

**கானலும் கழறாது: கழியும் கூறாது:**
**தேன்இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது:**
**ஒருநின் அல்லது பிறிதுயாதும் இலனே;**
**இருங்கழி மலந்த கண்போல் நெய்தல்**
**கமழ்இதழ் நாற்றம்அமிழ்துஎன நசைஇத்;**

**தண்தாது ஊதிய வண்டினம் களிசிறந்து,**
**பறைஇய தளரும் துறைவனை, நீயே,**
**சொல்லல் வேண்டுமால்-அலவ! பல்கால்**
**கைதையம் படுசினை எவ்வமொடு அசாஅம்**
**கடற்சிறு காக்கை காமர் பெடையொடு**

**கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்**
**வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து,**
**நின்னுறு விழுமம் களைந்தோள்**
**'தன்னுறு விழுமம் நீந்துமோ!' எனவே!**

*கரிய கழிக்கானலிலே கண்களைப் போன்றவான நெய்தற் பூக்கள் மலர்ந்திருக்கும். மணங்கமழும் அவற்றின் இதழ் நாற்றத்தினைத் தமக்கு அமிழ்தமாகக் கருதி, வண்டினங்கள் விருப்பமுடன் அவற்றை நாடிச் செல்லும். அப்படி அவைசென்று, அப்பூவினுள்ளே இருக்கும் தண்மையான பூந்தாதினை உண்டு, அதனால் ஏற்பட்ட களிவெறி அதிகமாகிவிடப், பறத்தற்கும்இயலாது, அவ்விடத்தேயே தளர்ந்து கிடக்கும். அத்தகைய துறைக்கு உரியவன் அவன்! அவனிடத்தே என் வருத்தத்தைச் சென்று -*

*கானற் சோலையும் கூறாது; உப்பங்கழியும் சொல்லாது; வண்டினம் மொய்க்கின்ற நறுமலர்களையுடைய புன்னையும் புகலாது; அனால், ஒப்பற்ற நின்னையே அல்லாமல் வேறு ஒரு துணை எதுவும் இல்லாதவளாயுள்ளேன். ஆகவே -*

*"சிறிய உருவினவான கடற்காக்கைகள், தாழைமரத்தின் தாழ்ந்த கிளைகளிலே, விருப்பமிக்க தம்முடைய பெடைகளோடும். இரவின் குளிராலான வருத்தத்துடன் தங்கியிருந்தவாறு, சுறாமீன்கள் இயங்குதலையுடைய, மீன் வேட்டையாடுதல் இல்லாத பரந்த இடத்தேயுள்ள, வெண்மையான இறால் மீனைப்பற்றி உண்பதாகக் கணவு கண்டுகொண்டிருக்கும். அத்தகைய, 'நள்' என்னும் ஒலியினையுடைய இருள்செறிந்த நள்ளிரவு வேளையிலே வந்து, பலகாலும் நினக்குற்ற காம நோயாகிய துயரினைக் களைந்தவள் நின் காதலி. அவள், இப்போது, நின் பிரிவினால் தானுற்ற துயரத்தினையும் நீந்திக் கடப்பாளோ?"*

என்று, அலவனே! நீதான் அவனிடம் சென்று சொல்லுதல் வேண்டும்.

என்று, தலைமகள் காமமிக்க கழிபடர்கிளவியாற், கூறினாள் என்க.

**சொற்பொருள்:** 2. தேன் இமிர் - வண்டு மொய்க்கும். 3. ஒருநின் - ஒப்பற்ற நின்னை. 4. இருங்கழி - கரிய கழி. 6. களி - களிவெறி. 7. பறைஇய தளரும் - பறக்க மாட்டாது தளரும். 8. அலவன் - நண்டு. 9. கைதை - தாளை. படுசினை - தாழ்ந்த கிளை. 11. கோட்டு மீன் - சுறாமீன்.

**உள்ளுறை:** தாதுண்ட வண்டினம் களிவெறியால் மயங்கிப் பறக்கமாட்டாது தளர்வதுபோலத், தான் வேறிடத்துப் பெற்ற இன்பத்தினைவிட்டு நீங்கிவரமாட்டாது தலைவன் அங்கேயே மயங்கிக் கிடந்தனனோ என்றாள். காக்கை இரவின் எவ்வமொடு, பெடையுடனிருந்து இறாமீன் உண்பதாகக் கனவு காண்பது போலத், தலைவனுடனிருந்து தான் இன்ப நுகர்தலைக் கனவு கண்டு கொண்டவாறு இருக்கிறாள் என்றும் அவள்நிலை உணர்க.

**மேற்கோள்:** 'துன்பத்துப் புலம்பல்' என்னும் மெய்ப் பாட்டிற்கு', 'இன்பத்தை வெறுத்தல்' என்னுஞ் சூத்திரரை உயினும்: 'தூது முனிவின்மை' என்னும் மெய்ப்பாட்டிற்கு, 'முட்டு வயிற் கழறல்' என்னுஞ் சூத்திர உரையினும் இச் செய்யுளைப் பேராசிரியர் காட்டினர்.

**பாடபேதங்கள்:** 3. ஒரு நீ யல்லது. 7. பறவை தளரும்: பறைஇ தளரும். தளரும், கிளரும். 8. வேண்டுமாரலவ.

## 171. இனையல் வாழி தோழி!

**பாடியவர்:** கல்லாடனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

(தலைமகன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடிவரச் சென்றனன். அவன் பிரிவினால் வாடிவாடி உழன்றாள் அவன் மனைவி. அவளுடைய ஆற்றாமையைக் கண்டு உள்ளம் நொந்த அவளுடைய தோழியானவள், இவ்வாறு கூறி, அவளை ஆற்றியிருக்கச் செய்ய முயலுகிறாள்.)

**'நுதலும் நுண்பசப்பு இவரும்; தோளும்**
**அகன்மலை இறும்பின் ஆய்ந்துகொண்டு அறுத்த**
**பணைஎழில் அழிய வாடும்; நாளும்**

**நினைவல் மாதுஅவர் பண்பு' என்று ஓவாது**
**இனையல்-வாழி, தோழி! புணர்வர்-**

**இலங்குகோல் ஆய்தொடி நெகிழப், பொருள்புரிந்து**
**அலந்தலை ஞெமையத்து அதர்அடைந் திருந்த**
**மால்வரைச் சீறூர் மருள்பன் மாக்கள்**
**கோள்வல் ஏற்றை ஓசை ஓர்மார்,**
**திருந்திக் கொண்ட அம்பினர், நோன்சிலை**

**எருத்தத்து இரீஇ, இடந்தொறும் படர்தலின்,**
**கீழ்ப்படு தாரம் உண்ணா, மேற்சினைப்**
**பழம்போற் சேற்ற தீம்புழல் உணீஇய,**
**கருங்கோட்டு இருப்பை ஊரும்**
**பெருங்கை எண்கின் சுரன்இறந் தோரே!**

*தோழி! நீ வாழ்வாயாக!*

*பெரிய மலையடிவாரத்திலேயுள்ள சிறியதான ஊரிலே, வாடிய உச்சியை உடைய ஞெமை மரங்கள் அடர்ந்திருக்கும் வழிகளிலே, மருட்சிகொண்ட மக்கள் பலரும், கொல்லுதலிலே வல்ல கரடியேற்று வருகின்ற ஒலியினை உணர்பவராகத், திருத்திக் கொண்ட அம்புகளையுடையவராகவும், வலிய வில்லைத் தோளிலே கொண்டவராகவும், இடமெங்கும் பரவி வந்து கொண்டிருப்பார்கள். அதனால், பெரிய கையினை யுடையவான கரடிகள், தரையிலே கிடப்பதான உணவுகளை எல்லாம் உண்ணாதனவாய், மரங்களின் மேலேயுள்ள கிளைகளிலே பழம்போல் இருக்கும், இனிய துளையினை யுடையவான பூக்களை உண்பதற்காகக், கரிய கொம்புகளை யுடைய இருப்பை மரத்தின் மேலே ஏறி இருக்கும். அத்தகைய சுரநெறியினைக் கடந்து, பொருள் ஈட்டிவருவதனை எண்ணிச் சென்றுள்ளவர் நம் தலைவர்.*

*“விளங்கும் கோற்றொழிலினையுடைய அழகிய நின் தொடிகள் கழன்று வீழ்ந்தன. நெற்றியும் நுண்ணிய பசலைப் புள்ளிகள் படரப்பெற்றதாயுள்ளது. தோள்களும், அகன்ற மலையினிடத்துக் காட்டிலே, ஆராய்ந்து அறுத்த மூங்கில் துண்டைப் போன்ற தன் பழைய எழில் அழிந்துபோய் வாட்டமுற்றன. இதனால், அவருடைய அருட்பண்பினை நாடோறும் யான் நினைவேன்” என்று நீ சொல்லி, ஓயாதே வருந்தாதிருப்பாயாக! அவர் விரைந்து வந்து விடுவார்.”*

*என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீ இயினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. இவரும் - படரும். 2. இறும்பு - காடு. 5. இனையல் - வருந்தாதே. 7. அலந்தலை - வாடிய உச்சி. அதர் - வழி. 8. மால் வரை - பெரிய மலை. 12. தாரம் - உணவுகள்; பண்டம். 15. எண்கு - கரடி.*

**பாடபேதம்:** *4. நினையும் மாதவர் பண்பு.*

## 172. அன்பிலை யாகுதல் அறியேன்!

**பாடியவர்:** *மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தோழி தலைமகளை இடத்து உய்த்து வந்து தலைமகனை வரைவுகடாயது.*

*(தலைமகனும் தலைமகளும் இரவுக்குறியிடத்தே களவிற் கூடிவந்த காலம். பற்பல காரணங்களானும் இரவுக்குறி இடையீடுபடத் தலைவியின் வேதனை மிகுதியாயிற்று. ஒருநாள் தலைமகளைக் குறித்தஇடத்திலே விட்டுவிட்டு வருகின்ற தோழி, தன்னை எதிர்ப்பட்டு வரும், தலைவனிடம் இவ்வாறு கூறுகிறாள்.)*

**வாரணம் உரறும் நீர்திகழ் சிலம்பில்**
**பிரசமொடு விரைஇய வயங்குவெள் அருவி**
**இன்இசை இமிழ்இயம் கடுப்ப, இம்மெனக்**
**கல்முகை விடர்அகம் சிலம்ப, வீழும்**
**காம்புதலை மணந்த ஓங்குமலைச் சாரல்,**

**இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்**
**விரிமலர் மராஅம் பொருந்திக், கோல்தெரிந்து,**
**வரிநுதல் யானை அருநிறந்து அழுத்தி,**
**இகல்இடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்,**
**புல்வேய் குரம்பை புலர ஊன்றி,**

**முன்றில் நீடிய முழவுஉறழ் பலவின்**
**பிழிமகிழ் உவகையன், கிளையொடு கலிசிறந்து,**
**சாந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும்**
**குன்ற நாட! நீ அன்பிலை ஆகுதல்**
**அறியேன் யான்; அஃது அறிந்தனென் ஆயின்-**

**அணி இழை, உண்கண், ஆய்இதழ்க் குறுமகள்**
**மணிஏர் மாண்நலம் சிதையப்,**
**பொன்னேர் பசலை பாவின்று மன்னே!**

*யானைகள் பலவும் நீராடியவாய் முழக்கமிட்டுக் முழக்க மிட்டுக் கொண்டிருக்கும், நீர்வளம் திகழ்கின்ற மலைச்சாரலிலே, தேனுடன் கலந்ததாக விளக்கமுற்ற வெண்மையான அருவிகளும் காணப்படும். இனிய இசையினை முழங்கும் மத்தள ஒலிபோல,*

இம்மென்னும் ஓசையுடன், மலைக்குகைகளும் பிளப்பிடங்களும் எதிரொலிக்க, அவை ஒலியோடும் வீழ்ந்துகொண்டிருக்கும். அத்தகையதும், மூங்கில்கள் நெருக்கமாக வளர்ந்திருப்பதுமான உயர்ந்த மலைச்சாரலிலே -

இரும்பினாலே வடித்துச் செய்தமைத்தாற்போல விளங்கும், கருமையான வலிய கையினை உடைய கானவன், விரிந்த மலர்களை உடைய கடப்பமரத்தின்மேல் இருந்து, புள்ளிகள் பொருந்திய நெற்றியினையுடைய களிற்றினது அரியமார்பிலே அம்பினைத் தெரிந்து எடுத்துத் தொடுத்து எய்வான். பகையினை வெல்லும் வலியுடைய அக்களிற்றை வீழ்த்தி, அதன் வெண் கொம்பினைக் கொண்டுவந்து, தன்னுடைய புல்வேய்ந்துள்ள குடிசையிலே, அதன் புலால் நாற்றம் காயுமாறு ஒருபுறம் ஊன்றியும் வைப்பான். அதன்பின், அந்தக் குடிசையின் முற்றத்திலே நிற்கும் பலாவினது முழவுபோலும் பருத்த கனியி னின்றும் பிழிந்த மதுவினை உண்டு களிப்பான். அந்தக் களிப்பி னால்தன் உறவு முறையாரோடும், ஆரவாரம் மிகுந்தவனாகக் கூடியிருந்து உண்பான். அத்தகைய குன்றுகளையுடைய நாடனே!

நீ அவள்பால் அன்பில்லாதிருத்தலை யான் முன்பே அறியேன். அதனை அறிந்திருந்தேனாயின், அழகிய அணிகலன் களையும், அழகிய இதழ்களையுடைய மையுண்ட கண்களையும் உடைய, இளையவளாகிய தலைவியின் மணிபோலும் சிறந்த அழகெல்லாம் கெடுமாறு, பொன்னொத்த பசலையையானது அவள் மேனியில் இன்று படர்வதும் இல்லையாய் இருந்திருந்திருக்குமே!

**சொற்பொருள்:** 1. உரறும் - முழங்கும். நீர் - நீர்மையுமாம். சிலம்பு - மலைச்சாரல். 2. பிரசம் - தேன். 3. இமிழ் - ஒலித்தலையுடைய. கடுப்ப - போல. 5. காம்பு - மூங்கில். 6. கருங்கை - வலிமையான கை. 8. நிறம் - மார்பு. 9. இகல் - பகை. முன்பு - வலிமை. 12. பிழிமகிழ் - பிழிந்த கள்ளுண்டு மகிழும். 3. சாந்த ஞெகிழி - சந்தன விறகுத் தீ. 17. மணி - ஒளியுடைய மணிகள். 18. பாவின்று - பரந்தது.

**உள்ளுறை:** 'பிரசமொடு விரைஇய அருவியானது விடரகம் சிலம்ப விழும்' என்றது, தலைவியுடன் தலைவன் கூடி இன்பத்திலே திளைக்கும் களவு ஒழுக்கம்பற்றிய செய்தி, அம்பற்பெண்டிர் வாயெல்லாம் அலராக எதிரொலிப்பதாயிற்று என்பதைக் குறிக்கவாம்.

கானவன் மறைந்திருந்து யானையை வென்றானாயினும், பின் அதன் கோட்டைத் தன் குரம்பையில் பலரும் அறியச்

*செருகிவைத்துக், கள்ளுண்டு ஊன்புழுக்கயர்ந்து மகிழ்வான். அதுபோலத் தலைவனும் களவுக்கூட்டத்தை விட்டு, வரைந்து மணந்து கொண்டு, உறவு முறையாருடன் மணவிருந்து அயர்ந்து இன்புறல் வேண்டும் என்பதாம்.*

**பாடபேதங்கள்:** *8. அணிநுதல் யானை - நெற்றிப்பட்டம் அணிந்த நுதலினையுடைய போர் யானை; அழகிய நுதலினையுடைய யானையுமாம். 10. புதற்போர் குரம்பை. 11. முழவு முதற்பலவு. 18. பசலை யாயின்று.*

## 173. வளை திருத்தினர்!

**பாடியவர்:** *முள்ளியூர்ப் பூதியார்* **திணை:** *பாலை,* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.* **சிறப்பு:** *நன்னனுடைய மலைவளம்.*

*(தலைவன் பொருள் வேட்கையினனாகத் தன் தலைவியைப் பிரிந்து சென்றான். அப்படிச் செல்லும்பொழுது, அவளுடைய வளையல்களைத் திருத்தி, தேற்றிச் சென்ற நிகழ்ச்சியை எடுத்துக் கூறிப், பிரிவினால் வாடியிருக்கும் தலைவியைத் தேற்ற முயலுகிறாள் தோழி.)*

**'அறம் தலைப்பிரியாது ஒழுகலும், சிறந்த**
**கேளிர் கேடுபல ஊன்றலும், நாளும்**
**வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்' எனச்**
**செய்வினை புரிந்த நெஞ்சினர், 'நறுநுதல்**
**மைஈர் ஓதி! அரும்படர் உழத்தல்**

**சிலநாள் தாங்கல் வேண்டும்' என்று, நின்**
**நல்மாண் எல்வளை திருத்தினர் ஆயின்,**
**வருவர்-வாழி, தோழி!-பலபுரி**
**வார்கயிற்று ஒழுகை நோன்சுவற் கொளீஇ,**
**பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ,**

**உழைமான் அன்பிணை இனன்இரிந்து ஓடக்,**
**காடுகவின் அழிய உறைஇக், கோடை**
**நின்றுதின விளிந்த அம்புணை, நெடுவேய்க்**
**கண்விடத் தெறிக்கும் மண்ணா முத்தம்**
**கழங்குஉறழ் தோன்றல, பழங்குழித் தாஅம்**

**இன்களி நறவின் இயல்தேர் நன்னன்**
**விண்பொரு நெடுவரைக் கவாஅன்**
**பொன்படு மருங்கின் மலைஇறந் தோரே.**

அறநெறிகளிலேயிருந்தும் நீங்காமல் ஒழுகுதல் வேண்டும்; சிறந்தவர்களான உறவுமுறையார்களது துன்பங்கள் பல வற்றையும் தாங்குதலும் வேண்டும்; இவையிரண்டையும் முறையே இயற்றுதல் வேண்டுமென்ற நினைவினாலே வருத்த மடையும் உள்ளத்தோடே, இல்லத்திலே எந்நாளும் தங்கி யிருந்தவர்களுக்கு, ஒருபோதுமே இன்பம் இல்லை. இவ்வாறு கருதிப், பொருளீட்டி வருவதற்காகச் செய்யும் தொழில் முயற்சிகளை விரும்பிய நெஞ்சினர் ஆயினவர் நம் தலைவர். அவர் -

பல புரிகளால் முறுக்கப் பெற்றதும், நீண்ட கயிற்று ஒழுங்கினையுடையதுமான வண்டியினை, எருமைக் கடாக்களின் வலிமையான பிடரிலே கொளுவிப் பூட்டித், துறைகளின் ஏற்றங்களிலே கொண்டு செல்லுபவர் உப்பு வாணிகர்கள். அவர் உரப்பும் ஓசையைக் கேட்டு, ஆண்மானும் பெண்மானும் ஆகிய மானினங்கள் அச்சமுற்றனவாக நிலைகெட்டு ஓடத் தொடங்கும். காடுகள் தம் அழகெல்லாம் அழிந்து போயினவாகுமாறு கோடையானது பரவி நிலைபெற்று நீரினை உண்டுவிட, வற்றிய அழகிய பெரிய நீண்ட மூங்கில்களின் கணுக்களும் பிளப்புண்டு போகும். அவற்றினின்றும் கழுவப்பெறாத முத்துக்கள் தெறிக்கும். அவை, கழங்காடு காய்களைப் போன்ற தோற்றமுடையவாய்ப் பழைய குழிகளிலே சென்று விழும். அப்படிப்பட்ட இடங்களையுடையன, இனிய களிவெறியினைத் தரும் கள்ளினையும், இயலுகின்ற தேரினையும் உடைய நன்னனது வானளாவிய நெடிய மலைச்சாரல்கள். அவற்றின் ஒருபக்கத்ததாகிய பொன் கிடைக்கும் இடங்களையுடைய மலைப்பகுதியைக் கடந்து சென்றிருக்கின்றனர்.

"நறிய நுதலினை உடையவளே! கரிய தண்மையான கூந்தலை உடையவளே! அரிய துன்பங்கொண்டு வருந்தாதே! சிலநாட்கள் பொறுத்துத் தாங்குதல் வேண்டும்' என்று கூறி, நின்னுடைய நல்ல மாட்சியுடைய ஒளிபொருந்திய வளையல் களைத் திருந்தினவர் அவர். அவர் அப்படிச் செய்தவராயின் விரைவிலே வந்து விடுவார். தோழியே! நீ வாழ்வாயாக" என்று, பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.

**சொற்பொருள்:** 1. அறம் - இல்லறத்திற்கான நெறிமுறைகள். 2. ஊன்றல் - பாதுகாத்தல். 5. மை - கருமை; ஈர் - தண்மை; பெரிய. ஓதி - கூந்தல். படர் - துன்பம். 7. எல்வளை - ஒளியுடைய வளை. 9. வார் - நீண்ட. ஒழுகை - வண்டி. 10. விளி - கூப்பீடு. 11. உழைமான் - ஆண்மான். 12. 13. கோடை நின்றுதின - கோடை நிலைபெற்று

உறிஞ்சிவிட. விளிந்த - காய்ந்த 15. பழங்குழி - பழையதாகிக் கிடந்த கழங்காடு குழிகள். 16. இயல்தேர் - இயற்றப்பட்ட தேரும் ஆம்.

**உள்ளுறை:** உமணர்களின் கூக்குரலுக்கு அஞ்சி, மானும் பிணையும் நிலைகெட்டு ஓடிக்கலங்குவதுபோல, ஊரவர் பழிக்கு அஞ்சித் தலைவனும் தலைவியும் பிரிந்து வாழ்பவராயினர் என்றனள்.

**பாடபேதம்:** பாடியவர் முன்னியூர் வழுதியார்.

## 174. எப்படி ஆவாளோ?

**பாடியவர்:** மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார். **திணை:** முல்லை. **துறை:** பாசறைக்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(தலைமகன் வேந்தனின் படைத்துணையாகச் சென்றவன். நடந்த போரிலே வெற்றியும் பெற்றான். பாசறையிலே, இரவு வேளையிலே, அவன் மனத்திலே அவன் காதலி நிறைந்து நின்றாள். அவள் நினைவினாலே வருந்திய அவன், தன் நெஞ்சிற்கு இப்படிச் சொல்லுகிறான்.)

**'இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத்து,**
**ஒருபடை கொண்டு, வருபடை பெயர்க்கும்**
**செல்வம் உடையோர்க்கு நின்றன்று விறல்'எனப்,**
**பூக்கோள் ஏய தண்ணுமை விலக்கிச்**
**செல்வேம் ஆதல் அறியாள், முல்லை**

**நேர்கால் முதுகொடி குழைப்ப, நீர் சொரிந்து,**
**காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ**
**முழங்குதொறும் கையற்று, ஒடுங்கி, நப் புலந்து,**
**பழங்கண் கொண்ட பசலை மேனியள்,**
**யாங்குஆ குவள் கொல் தானே-வேங்கை**

**ஊழுறு நறுவி கடுப்பக் கேழ்கொள்,**
**ஆகத்து அரும்பிய மாசுஅறு சுணங்கினள்,**
**நன்மணல் வியலிடை நடந்த**
**சின்மெல் ஒதுக்கின், மாஅ யோளே?**

"இரு பேரரசர்கள் தம்முள் மாறுபாடு கொண்டு போரிடற்கு எழுந்த பரந்த போர்க்களத்திலே, தன்னுடைய ஒப்பற்ற படைக்கலத்தினைக் கைகொண்டு, தன்மேல் வரும் எதிர்ப் படைகளை எல்லாம், புறமுதுகிட்டு ஓடச்செய்யும், போர்க்கள வெற்றியாகிய செல்வத்தை உடையவர்களுக்கு,

அப்பெருமை என்றும் நிலைபெற்ற பெருமையாகும் என்று கூறி, அரசன் மனமுவந்து அளிக்கும் பொற்பூவினையும், அப்போது எழுகின்ற தண்ணுமை ஒலியினையும் விலக்கி, நாம் அவளை முதற்கண் அடைவதையே பெரிதாக நாடிச் செல்வோம்" என்பதை அவள்தான் அறியமாட்டாள்,

வேங்கை மரத்தினது முதிர்ந்துவிழும் நறுமண மலரைப் போல, மேனியானது நல்ல நிறத்தினைக்கொள்ள, மார்பிடத்தே அரும்பிய குற்றமற்ற தேமற்புள்ளிகளை உடையவளாய், நல்ல மணலையுடைய அகன்றவிடத்தே நடந்த, சிலவாய மெல்லிய ஒதுக்கத்தினையுடைய மாமை நிறத்தினள் அவள். (பிரிவுவிடை கொண்டபோது, அவள் குறுக அடியிட்டுத் தளர்ந்து நடந்து சென்ற பழைய காட்சியின் நினைவு இது.)

கீழ்த்திசை வானத்திலே எழுந்த கடுங்குரலோடு இடி முழங்கும் மழைமேகங்கள் நீரைச் சொரிந்து முழக்கமிடும் போதெல்லாம், நிரம்பிய கால்களிலே படர்ந்திருக்கும் முல்லையின் பழைய கொடியானது தளிர்க்க, அதனைக் கண்டதும், நம்மை நினைந்து, வெறுப்புற்ற மனத்தளாய்ச் செயலற்று ஒடுங்கி, மிக்க துன்பத்தினை எய்திய, பசலைபாய்ந்த மேனியளாக, அவள் என்ன நிலைமையினை அடைவாளோ நெஞ்சமே?

என்று, பாசறைக்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 2. ஒருபடை - ஒப்பற்ற படைக்கலம். 3. நின்றன்று - நிலைபெற்றது. 4. பூக்கோள் - வெற்றிக்கு அடையாள மாக அளிக்கும் பொற்பூக்களைக் கொள்ளுதல். 6. நேர்கால் - நிரம்பிய கால்வாய்கள். காலைவானம் - கீழ்த்திசைவானம், 8. கையற்று - செயலற்று. பழங்கண் - துன்பம். 14. ஒதுக்கு - ஒதுங்கி ஒதுங்கி நடக்கும் தளர்நடை.

**விளக்கம்:** கோடையினாலே வாடிய முல்லையின் முது கொடிகுழைப்பக் காணும் அவள், பிரிவினால் வாடிய தன் மேனியும் அழகுறக் கார்காலம் வந்தும், யாம் வரக் காணாததால் வாடி மெலிந்து என்ன ஆவாளோ? என, ஏங்குகிறான் தலைவன்.

**மேற்கோள்:** 'மீள்வான் தன் நெஞ்சிற்கு உரைத்தது; இதனுள் 'பூக்கோளேய தண்ணுமை விலக்கிச் செல்வேம்' என்றலின், அரசனால் சிறப்புப்பெற்ற தலைவனாயிற்று' என, 'ஏவன் மரவின்!' என்னுஞ் சூத்திர உரையினும் -

*ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்' என்னுந் துறைக்குத், 'தனக்கு ஆக்கம் சிறந்த நட்புடையோர்ாகி உற்றுழி உதவச் சேரற்கண்ணும்' என்று பொருள் கூறி' இச்செய்யுளை அதற்கு உதாரணமாக, 'ஒன்றாத் தமரினும், என்னுஞ் சூத்திர உரையினும், நச்சினார்க்கினியர் காட்டினர்.*

**பாடபேதங்கள்:** *8. கையற்று இரங்கி, 11. ஊழுறு கிளர்வீ.*

## 175. வருவோம் என்றனரே!

**பாடியவர்:** *ஆலம்பேரிச் சாத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவின்கண் வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகன் சொல்லியது பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றதூஉ மாம்.* **சிறப்பு:** *தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வெற்றிப் பெருமிதம்.*

*(கார் காலம் வந்தது. ஆனால், 'அந்தக் கார் காலம் தொடங்கியதும் வந்துவிடுவேன்' என்று சொல்லிப் பிரிந்து சென்ற அவன் மட்டும் வரவில்லை. அதனை நினைந்து நினைந்து உள்ளம் குமுறினாள் தலைவி. அந்தக் குமுறலைத் தோழியிடம் சொல்லிப் புலம்புகிறாள். அல்லது, அவளுடைய வருத்தத்தை ஆறுதல் கூறித் தேற்ற முயன்ற தோழிக்கு, அவள் கூறியதுமாம்.)*

**வீங்கு விளிம்பு உரீஇய விசை அமை நோன்சிலை**
**வாங்கு தொடை பிழையா வன்கண் ஆடவர்**
**விடுதொறும் விளிக்கும் செவ்வாய் வாளி**
**ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பின்,**
**பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்**

**வெஞ்சுரம் இறந்த காதலர் நெஞ்சுஉணர**
**அரிய வஞ்சினம் சொல்லியும் பல்மாண்**
**தெரிவளை முன்கை பற்றியும், 'வினைமுடித்து**
**வருதும்' என்றனர் அன்றே-தோழி!-**
**கால்இயல் நெடுந்தேர்க் கைவண் செழியன்**

**ஆலங் கானத்து அமர்கடந்து உயர்த்த**
**வேலினும் பல்ஊழ் மின்னி, முரசு என**
**மாஇரு விசும்பிற் கடிஇடி பயிற்றி,**
**நேர்கதிர் நிறைத்த நேமியம் செல்வன்**
**போர் அடங்கு அகலம் பொருந்திய தார்போல்**

**திருவில் தேஎத்துக் இலைஇ, உருகெழு**
**மண்பயம் பூப்பப் பாஅய்த்,**
**தண்பெயல் எழிலி தாழ்ந்த போழ்தே!**

தோழி! தம்முடைய வலிமையான வில்லினைப் பூரித்த தம் தோளிலே 'உராய்ந்து கொண்டிருக்கும்படியாக வைத்துக் கொண்டு, அதன்கண், எய்த குறி பிழையாதலும், வேகமாகச் செல்லக்கூடியதுமான அம்பினை வைத்து எய்கின்ற, வன்கண்மையினை உடையவர் மறவர்கள், பாலைநிலத்து வழியூடே செல்லும் புதியவரது உயிர்கள் எல்லாம், அப்படி அவர்கள் எய்யும் அம்புகள் தைக்க உடலைவிட்டுப் போகும். ஒலியுடன் செல்லும் அந்த அம்புகள் அப்படி அவர்களது உயிரைப்போக்க வீழ்ந்த, மிக்க முடைநாற்றம் வீசுகின்ற பிணங்களைப் பருந்துகள் தம் கிளையினை அழைத்தனவாகக் கூடியிருந்து உண்டுகொண்டிருக்கும். அத்தகைய கொடிய காட்டுவழியினைப், பொருளார்வத்தினாலே, நம்மையும்பிரிந்து கடந்து சென்றவர் நம் காதலர்!

அன்று பிரிவினை நினைந்து என் நெஞ்சம் மயங்கியது. அது தெளிவடையுமாறு, கடுமையான சூளினை உரைத்தும், ஆராய்ந்துகொண்ட வளையல்களையுடைய என் முன்கையினைப் பன்முறைபற்றி என்னைத் தலையளிசெய்தும், தேற்றிச் சென்றவர் அவர்!

காற்றைப்போலக் கடுமையான வேகத்துடன் செல்லுகின்ற நெடிய தேரினையும், கைவண்மையினையும் உடையவன் பாண்டியன் நெடுஞ்செழியன். தலையாலங்கானத்துப் பெரும் போரினை வென்று, அவன் படைஞர் வெற்றிக்களிப்பினால் உயர்த்த வேற்படைகளின் தொகுதியைக் காட்டினும், தண்மையான பெயலையுடைய மேகங்கள் வானத்தே மின்னல் இடுகின்றன அப்போது முழங்கிய வெற்றிமுரசின் ஒலியைப் போன்று வானத்திலே கடுமையான இடிமுழக்கத்தையும் அவை தோற்றுவிக்கின்றன.

செல்வியின் காதலனான திருமால், நிரம்பிய கதிர்களின் ஒழுங்கினைக்கொண்ட சக்கரப்படையினை உடையவன். பகைவர்களும் அச்சங்கொண்டு தம் போர்நினைவை ஒழித்தற்குக் காரணமாக விளங்குவது அவனுடைய பரந்த மார்பு; அதனிடத்தே பொருந்திய மாலையினைப் போலப், பலநிறம் வாய்ந்த அழகிய வில்லையும் அம்மேகங்கள் வானத்தே வளைவாக இட்டு இருக்கின்றன. நிலப்பகுதி எங்கணும் மலர்ச்சியடையவும், அவை பயன்தருமாறும், மேகங்கள் காலிட்டு மழைபெய்யும் கார்காலமும் வந்துவிட்டது.

அவர், தம்முடைய செயலினை முடித்துக்கொண்டு, இங்கு மீண்டும் வந்து நம்மைச் சேர்வோம் என்றது, இந்தக் கார் காலத்திற்றானே?

என்று, பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. வீங்குதல் - பூரித்தல். விளிம்பு - ஓரம். உரீஇய - உரசிய. நோன்சிலை - வலிமையுடைய வில். 2. வாங்குதல் - இழுத்தல். தொடை - தொடுத்தல 3. விளிக்கும் - ஒலிசெய்யும். வெவ்வாய் வாளி - உயிர் போக்குதலினால், வெவ்விய முனையை உடைய அம்பு என்பர். 5. பாறு - பருந்து. 6. உணர - தெளிவாக அறிய 10. கால்இயல் - காற்றுப்போல விரைந்து செல்லும். 12. பல்லூழ் மின்னி - பன்முறையும் மின்னலிட்டு. 16. தேஎம் - தேசம்; வானகம். குலைஇ - வளைத்து. 17. பயம் - பயன். பாஅய் - பரவி. 18. எழிலி - மேகம். தாழ்தல் - காலிட்டுப் பெய்தல்.

**விளக்கம்:** போரிலே வென்று, வெற்றிக் களிப்பிலே திளைத்த பாண்டியனின் படைவீரர் செயலைக் கூறினாள், தன் தலைவனும் தன் வினைமுடித்த பின்னருங்கூட விரைந்து மீண்டுவராமைபற்றிய வருத்தத்தினால், தன்னை முன் தெளிவித்த சூளும் பொய்த்தான்; வருவேன் என்ற காலமும் பொய்த்தான்; பொருள் விருப்பினாலே தன்னுடைய பிரிவினால் தன் காதலிக்கு நேர்கின்ற வேதனையையும் மறந்தான்; கொடிய பாலையையும் கடக்கத் துணிந்தான் என்பனவெல்லாம், அவள் உள்ளத்துப் புலப்பத்தை விளக்கும் சொற்கள் ஆம். 'முன்கை உள்ளத்துப் புலப்பத்தை விளக்கும் சொற்கள் ஆம். 'முன்கை பற்றிச் சூள் உரைத்தல்' என்பது, 'கையடித்துச் சத்தியம் செய்தல்' என இந்நாளினும் வழக்காற்றில் உள்ள மரபாகும்.

**பாடபேதம்:** 14, நிரைத்த, நிரைந்த.

## 176. என்ன கடமையோ?

**பாடியவர்:** மருதம் பாடிய இளங்கடுங்கோ. **திணை:** மருதம். **துறை:** தோழி, தலைமகனை வாயின் மறுத்தது.

(தன் மனைவியை மறந்து, பரத்தையர் உறவிலே களித்திருந்தான் ஒரு தலைவன். அதனால், அவனுடைய செயலைப் பற்றிக் கூறி, ஊரவர் பழித்துப்பேசத் தொடங்கினர். அதற்கு அஞ்சிய அவனும், தன் வீடுநோக்கி வருகின்றான். ஊடியிருந்த தன் மனைவியின் உறவைப் பெறுவதற்குத், தோழியின் உதவியை நாடுகின்றான். அப்போது அவள் மறுத்துக்கூறியது இது.)

**கடல்கண் டன்ன கண் அகன் பரப்பின்**
**நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்**
**கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்,**
**களிற்றுச்செவி அன்ன பாசடை மருங்கில்,**
**கழுநிவந் தன்ன கொழுமுகை இடைஇடை**

**முறுவல் முகத்தின் பன்மலர் தயங்கப்,
பூத்த தாமரைப் புள்இமிழ் பழனத்து,
வேப்புநனை அன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு
இரைதேர் வெண்குருகு அஞ்சி, அயலது
ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல்,**

**திதலையின் வரிப்ப ஓடி, விரைந்து தன்
நீர்மலி மண்அளைச் செறியும் ஊர!
மனைநகு வயலை மரன்இவர் கொழுங்கொடி
அரிமல் ஆம்பலொடு ஆர்தழை தைஇ,
விழவுஆடு மகளிரொடு தழூஉ அணிப் பொலிந்து,**

**மலர்ஏர் உண்கண் மாண்இழை முன்கைக்
குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்தது
உடன்றனள் போலும், நின் காதலி? எம்போல்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து.
நெல்லுடைநெடுநகர் நின்னின்று உறைய,**

**என்ன கடத்தளோ, மற்றோ? தன் முகத்து
எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்கி,
அடித்தென உருத்த தித்திப் பல்ஊழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு,
கூர்நுனை மழுகிய எயிற்றள்**

**ஊர்முழுது நுவலும்நிற் காணிய சென்மே.**

*இடம் அகன்றதாக, எங்கும் நீர்ப்பரப்புடன், கடலினைக் காண்பதுபோல வயற்பகுதிகள் எல்லாம். அவ்வயல்களிலே, நிலம் பிளக்குமாறு இறங்கிய வேர்முதிர்ந்த கிழங்கினை உடையவும், மூங்கிலைப்போல உள்துளை பொருந்திய திரண்ட தண்டினை உடையவுமாகத், தாமரைகள் விளங்கும். களிற்றுயானைகளின் காதுகளைப் போல விளங்கும் அதன் இலைகளுக்கு ஊடாகக், கழுவினை உயர்த்திருப்பதுபோலக் கொழுமையான தாமரை மொட்டுக்கள் காணப்படும். அவற்றுக்கு இடையிடையே, புன்சிரிப்புடன் விளங்கும் முகத்தைப்போல, அழகுடன் மலர்ந்த தாமரை மலர்கள் பலவாக விளங்கும். புள்ளினங்களும் அங்கே ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கும்.*

*அவ்விடத்தே, தனக்குரிய இரையினை ஆராய்ந்து கொண்டிருந்த வெண்மையான நாரைக்கு, வேம்பின் அரும் பினைப் போன்ற நீண்ட கண்களையுடைய நீர் நண்டானது அஞ்சித், தழைத்த பகன்றைக் கொடிகளையுடைய வயலுக்கு*

அயலேயிருந்த சேற்றுப்பிழம்பிலே, தேமல்போல வரி யுண்டாகுமாறு விரைவாக ஓடிச் சென்று, ஈரமிகுந்த தன்னுடைய அளையினுள் புகுந்து பதுங்கிக் கொள்ளும். இத்தகைய வளமுடைய ஊருக்கு உரியவனே!

விளங்கும் மலர்களையுடைய ஆம்பலுடன், வீட்டின் அயலேயுள்ள மரத்திலே படர்ந்திருக்கும் கொழுமையான வயலைக் கொடிகளைப் பிணைத்துக் கட்டிய, ஒலித்தலையுடைய தழையுடையினை உடுத்தி, விழாவின்கண் ஆடுகின்ற மகளிர்க ளோடு தழுவி ஆடும் அழகினால், பொலிவுற்று விளங்குபவள் நின் பரத்தை, குவளை மலரைப் போன்ற மையுண்ட கண்களையும், மாண்புடைய அணி வகைகளையும், முன் கையிலே குறுகிய வளையல்களையும் உடைய அவள், தன் முன்கையினால் பிணித்த நெடிய தொடர்பினை நீ கைவிட்டதற்காக, நின்பால் மிகவும் வெகுண்டிருக்கின்றனள்.

எழுதிக்காணும் சிறப்பினையுடைய தன்னுடைய முகத்தின் அழகெல்லாம் கெட்டுப்போகும்மாறு ஏங்கி அழுதவளாயினள். பொன்னை உருக்கி வார்த்தது போன்றவாக உடலெங்கும் விளங்கும் தேமல்களையும், பன்முறை நொடித்துக் கொள்ளுத லால் சிவந்து போன மென்மையான விரல்களையும், திருகிக் கடித்ததால் கூர்மை மழுங்கிவிட்ட பற்களையும் உடையவ ளாயினள். ஊர்முழுவதும் சொல்லிக்கொண்டு, நின்னைக் கண்டுபிடிப்பதற்காகத் தேடிச் சென்று கொண்டிருப்பவளு மாயினள். அதனால், அவளிடத்திற்கே நீ செல்வாயாக.

அவளோ, நின்னுடைய காதற்பரத்தை! புல்லிய குடு மியையுடைய புதல்வனைப் பெற்று, நெல்வளமுடைய நெடிதான மனையிலே, நீயில்லாமல் தங்கியிருப்பதற்கு, எம்மைப் போல, அவள் என்ன கடப்பாடு உடையவளோ?

என்று, தோழி தலைமகனை வாயின் மறுத்துக் கூறினாள் என்க.

**சொற்பொருள்:** *2. நிலம்பக - பூமி பிளவுபடுமாறு 3. கழை - மூங்கில். 4. பாசடை - பசுமையான இலை. 5. நிவந்தன்ன - உயர்த்திருப்பதைப் போல. 6. முறுவல் முகம் - முறுவலையுடைய மகளிரின் முகம். 8. வேப்பு - வேம்பு. நனை - அரும்பு. 10. அள்ளல் - சேறு; சற்று மேலாக உறைந்துள்ள இடம். 11. திதலை - தேமல். 15. விழவு - நீர் விழா. 17. துடக்கிய - பிணித்த. 18. உடன்றனள் - வெகுண்டனள். 20. நகர் - மனை. 22. எழுது எழில் - புனையும் அழகு; ஒப்பனைகளுமாம்.*

**உள்ளுறை:** தாமரையின் இடையிலே இருந்த நீர் நண்டானது, இரைதேர் வெண்குருகிற்கு அச்சங்கொண்டு ஓடித்தன் வளையினுள்ளே செறிவது போலப் பரத்தையர் உறவுடையவனாயிருந்த நீயும், அலர் கூறலுக்கு அஞ்சி, எம் வீடுநோக்கி வந்தனைபோலும் என்றனளாம்.

**மேற்கோள்:** 'புகன்ற உள்ளமொடு - ஈரத்து மருங்கினும்' என்னும் துறைக்கு, 'அவனறி வாற்ற அறியும் ஆகலின்' என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்; 'எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்கி - நிற்காணிய சென்மே' என்பது, 'தன்கண் தோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது' என்று, 'இளிவே இழவே' என்னுஞ் சூத்திர உரையிலும், "பிறர் கூறும் பழிக்கு வந்தாய்' என்றமையால், இஃது "உள்ளது உவர்த்தல் என்னும் மெய்ப்பாடு" என்று, 'தெய்வம் அஞ்சல்' என்னும் சூத்திர உரையிலும் பேராசிரியர் காட்டினர்.

**பாடபேதம்:** 13. மனைநகு, மனைநடு.

## 177. விரைவிலே வந்துவிடுவார்!

**பாடியவர்:** செல்லூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. **சிறப்பு:** சிறு குடிகிழான் பண்ணனின் போர் மறம்.

(தலைவன் பிரிந்து சென்று, வருவதாகக் குறித்த நாளிலே வராமலும் போய்விட, அதனால் மிகவும் வருந்தி வாடி நலிந்தனள் தலைவி. அவளுக்குத் தோழி, 'அவன் வருவான்' என்று வலியுறுத்தியது இது.)

**'தொன்னலம் சிதையச் சாஅய், அல்கலும்,**
**இன்னும் வாரார்: இனி எவன் செய்கு?' எனப்,**
**பெரும்புலம் புறுதல் ஓம்புமதி-சிறுகண்**
**இரும்பிடித் தடக்கை மான, நெய்அருந்து**
**ஒருங்குபிணித்து இயன்ற நெறிகொள் ஐம்பால்**

**தேம்கமழ் வெறிமலர் பெய்ம்மார், காண்பின்**
**கழைஅமல் சிலம்பின் வழைதலை வாடக்**
**கதிர்கதம் கற்ற ஏகல் நெறியிடைப்,**
**பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்,**
**கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை**

**அயிரியாற்று அடைகரை வயிரின் நரலும்**
**காடுஇறந்து அகன்றோர் நீடினர் ஆயினும்,**

வல்லே வருவர் போலும்-வென்வேல்
இலைநிறம் பெயர ஓச்சி, மாற்றோர்
மலைமருள் யானை மண்டுஅமர் ஒழித்த
கழற்கால் பண்ணன் காவிரி வடவயின்
நிழற்கயம் தழீஇய நெடுங்கால் மாவின்
தளிர்ஏர் ஆகம் தகைபெற முகைந்த
அணங்குடை வனமுலைத் தாஅய நின்
சுணங்கிடை வரித்த தொய்யிலை நினைந்தே.

தோழி! காட்சிக்கு இனியவாக மூங்கில்கள் செறிந்திருக்கின்ற பக்கமலைகளிலே, அவ்விடத்துச் சுரபுன்னையின் உச்சியெல்லாம் வாடிப் போகும்படியாக, ஞாயிற்றின் கதிர்கள் சினத்தைப் பயின்றனவாக எரித்துக் கொண்டிருக்கும். பெரியகற்கள் விளங்கும் அத்தகைய காட்டுவழியிலே, பசுமையான பாகற்கொடியிலேயுள்ள சிவந்த பாகற்பழங்களைத் தின்பதற்கு விரும்பிய, நிறைசூல் கொண்ட காட்டுமயிற் பெடையானது, அயிரியாற்றின் அடைகரையிலேயுள்ள ஊதுகொம்பினைப்போல, ஒலியுடன் அகவிக்கொண்டிருக்கும். அத்தகைய சுரநெறியினையும் கடந்துசென்றவரான நம் தலைவர், குறித்த பருவங் கட்டந்து போகக் காலம் நீட்டித்தனரேனும் விரைவிலே வந்துவிடுவார்.

சிறுத்த கண்களையுடைய பெரிய பிடியானையின் பெரிய துதிக்கையினைப் போல விளங்குவதும், ஒருங்கே சேர்த்து முடித்ததும், நெய் பூசப்பெற்று நறுமணம் உடையதாயிருப்பதும், ஐவகையாக முடித்தற்கு உரியதுமான நின்னுடைய கூந்தலினிடத்தே, நறுமணமலர்களைப் பெய்தலையும் அவர் நினைப்பர்.

தன் வெற்றிவேலின் முனைநிறம் மாறுபட்டுச் சிவப்பு நிறம் அடையுமாறு, அதனை உயர்த்து, மண்டிவரும்பகைப் படைகளின் போர் யானைகளை அழித்துப் போரினை வென்றவன் பண்ணன். வீரக்கழல் விளங்கும் காலினனான அவனுக்கு உரிய, காவிரியின் வடகரையிலேயுள்ள குளிர்ந்த குளத்தினை அடுத்திருக்கின்ற, நெடிய அடிமரத்தினை உடைய மாவின் தளிரைப் போன்றதாக, நினது மார்பு வனப்புடன் காணப்படும். அதன்பால், தகைமைபெற அரும்பியிருக்கும், வருத்தும் இயல்பினை உடையவான அழகிய முலைகளிலே அவர் பிரிவினாற் பரந்திருக்கும் தேமல்கள் மறையுமாறு தொய்யில் எழுதுதலையும் அவர் நினைப்பார். ஆதலினாலே விரைந்து வந்து விடுவார்.

*நின் பழைய அழகுநலம் எல்லாம் சிதைந்து போகுமாறு நீ வருந்தியவளாக இருக்கின்றனை. நாள்தோறும், 'இன்னமும் அவர் வந்திலரே! இனி யான் என் செய்வேனோ?' என்று பெரிதும் புலப்பம் கொண்டவளுமாயினை. அவற்றையெல்லாம் இனியேனும் விட்டு விடுவாயாக.*

*என்று, பிரிவிடை வேறுபட்டாளான தலைமகளைத் தோழி 'அவன் விரைந்து வருவான்' எனக்கூறி வற்புறுத்தினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. தொல் நலம் - அவள் காதலன் பிரிந்து செல்வதற்கு முன்னர்விளங்கிய பழைய அழகு. சாஅய் - வருந்தி. அல்கலும் - நாள்தோறும், 3. புலம்பு - புலப்பம். 4. இரும்பிடி - பெரிய பிடியானை; கரிய பிடியானையுமாம். 5. வெறி - நறு நாற்றம். 6. காண்பின் - காண்பதற்கு இனிய. 7. வழை - சுரபுன்னை. 8. ஏகல் - பெருகிய கற்கள்; அதாவது கற்கள் மலிந்துள்ள. 10. கமஞ்சூல் - நிறைசூல்; முதற்சூலும் ஆம். 13. வல்லே - விரைவாக. 18. தகை பெற - தகுதி பெறும்படியாக.*

**விளக்கம்:** *பாகலின் செங்கனியை உண்ணுதற்கு விருப்பங் கொண்டு, ஊது கொம்பினைப்போல அகவிக் கொண்டிருக்கும் மயிலினைக் காண்பவர், நின்னுடைய நினைவுவரப் பெறாமல் போவாரோ? தம் கையால் நன் கூந்தலிலே பூச்சூடுதலையும், நின் மார்பின் தேமல்கள் மறையத் தொய்யில் வரை தலையும் நினையாரோ? நினைவார்; ஆதலின் விரைந்து வருவார் என்றனள்.*

**பாடபேதங்கள்:** *பாடியவர் பெயர், செல்லூர் இளம் பொன் சாத்தன் கொற்றன் எனவும், உறையூர் இளம்பொன் வாணிகன் சாத்தன் கொற்றன் எனவும் கூறப்படும். 20. 'சுணங்கிடை', 'சுணங்கடை' எனவும் வழங்கும்.*

## 178. என்றும் பிரியாது வாழ்க!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தோழி வரைவு மலிந்து சொல்லியது.*

*(தலைவனும் தலைவியும் இரவுக்குறியிலே ஒழுகி வருகின்றனர். தலைவியும் குறியிடத்தே தன் காதலனின் வரவு நோக்கிக் காத்திருக்கின்றாள். உடன் இருக்கும் தோழியோ, இவர்களைத் திருமண உறவிலே பிணிக்க வேண்டும் என்று கருதுகிறாள். தலைவன் வரைதல் எண்ணமுடன் வந்த ஒதுங்கியிருத்தலை அறிந்து, தலைவிக்குச் சொல்பவள் போலத், தலைவன் கேட்கும்படியாக வரைவுமலிந்து உரைக்கின்றாள்.)*

**வயிரத்தன்ன வைரந்து மருப்பின்,**
**வெதிர்வேர் அன்ன பரூஉமயிர்ப் பன்றி**
**பறைக்கண் அன்ன நிறைச்சுனை பருகி,**
**நீலத் தன்ன அகல்இலைச் சேம்பின்**
**பிண்டம் அன்ன கொழுங்கிழங்கு மாந்தி,**

**பிடிமடிந் தன்ன கல்மிசை ஊழ் இழிபு,**
**யாறுசேர்ந் தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்**
**பைம்புதல் நளிசினைக் இருகுஇருந் தன்ன,**
**வண்பிணி அவிழ்ந்த வெண்கூ தாளத்து**
**அலங்குகுலை அலரி தீண்டித், தாது உக,**

**பொன்உரை கட்டளை கடுப்பக் காண்வரக்,**
**கிளைஅமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து**
**கண்இனிது படுக்கும் நன்மலை நாடனொடு**
**உணர்ந்தனை புணர்ந்த நீயும், நின்தோட்**
**பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந்து, என்றும்,**

**தவல்இல் உலகத்து உறைஇயரோ-தோழி-**
**எல்லையும் இரவும் என்னாது, கல்லெனக்**
**கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்**
**தண்பனி அற்சிரம் தமியோர்க்கு அரிது' எனக்,**
**கனவிலும் பிரிவு அறியலனே; அதன்தலை**

**முன்தான் கண்ட ஞான்றினும்**
**பின்பெரிது அளிக்கும், தன் பண்பினானே.**

*தோழி! வயிரத்தைப்போல ஒளியுடன் விளங்குவதாய் மேல்நோக்கி எழுந்திருக்கும் கூர்மையான கொம்புகளையும், மூங்கில் வேரினைப் போன்ற பருத்த மயிரினையும் உடையது காட்டுப் பன்றி, பறவையின் கண்போலத் தோன்றும் நீர் நிறைந்த சுனையிலே அந்தப் பன்றி நீர் அருந்தும்; நிலத்தைப் போன்ற அகன்ற இலையினையுடைய சேம்பினது, பிண்டித்து வைத்தாற் போல விளங்கும் கொழுமையான கிழங்குகளை நிறையக் கிளைத்துத் தின்னும். பிடியானை கிடந்து உறங்குவது போல விளங்கும் பாறையினின்றும், முறையாகக் கீழே இறங்கிவரும் யாற்றினை அணுகவிருப்பது போன்ற நீர் ஊற்றான இடத்திலேயுள்ள, சிறுதூறாகிய பசிய புதரிலேயுள்ள செறிந்த மரக்கிளைகளிலே, வெண்மையான நாரையானது இருந்தாற் போல விளங்கும், வெண்மையான அசையும் கொத்துக்களிலேயுள்ள, வளமையான இதழ் விரிந்த மலரினைச் சேர்ந்து, அம்மலர்களினின்றும் பூந்தாதுகள் தன்மேல் உதிர, அதனால் பொன்னுரைத்து மாற்றறியுங் கட்டளைக் கல்லினைப்போல*

அழகுபெறத் தோன்றும். பின், கிளைத்தல் மிகுந்த சிறுதினையின் அத்தகைய இடமாகிய நல்ல மலைநாட்டினன் அவன்.

அவனோடு, நீயும் ஊடல் நீங்கிப் புணர்கின்றவளாக, என்றும் மூங்கில் போன்ற நின் தோளழகு அழியாதே, எந்நாளும் அவனுடன் ஒன்றாக வாழ்ந்திருப்பாயாக! இருவீரும், என்றும் கெடுதல் இல்லாத மறுமையுலகத்து இன்பத்தினையும், இங்கேயே பெற்று நிலையாக வாழ்வீர்களாக!

பகலும் இரவும் என்றில்லாமல், கல்லென்னும் ஒலியுடனே மேகங்கள் பெரிய மழையினைச் சொரிந்த விடியற் காலத்திலே, குளிர்ந்த பனியையுடைய பனிக்காலமானது, தனித்துப் பிரிந்திருப்பவர்க்குத் தாங்குதற்கரிய துன்பந்தருவதாகும் என உணர்ந்து, கனவினும் நின்னைப் பிரிதலை அறியாதவன் நின் தலைவன்.

அதன்மேலும், தன்னுடைய பண்பினால், முதன் முதலாகத் தான் நின்னைக் கண்டு காதலித்த நாளினும், பின்னர் பின்னர்ப் பெரிதாக அருள் செய்பவனும் அவனாவன்.

என்று, தோழி வரைவு மலிந்து கூறினாள் என்க.

**சொற்பொருள்:** 1. வயிரம் - ஒளியுடைய வயிரமணி. வை - கூர்மையான. ஏந்துதல் - மேனோக்கி இருத்தல். 2. வெதிர் - மூங்கில். 3. பறைக்கண் பறையின் நடுவிடத்தாகிய கண். 4. நீலம் - நீலநிறம். 5. பிண்டம் - உருண்டை. மாந்தி - நிறையத்தின்று. 6. ஊழ் இழிபு - முறையாக அடிவைத்து இறங்கி வருதல். 7. படாஅர் - சிறு தூறு. 10. அலரி - அலர்ந்த மலர் 11. கட்டளை - உரைகல் 15. பணை - மூங்கில். தவல் - கெடுதல்; தவலில் உலகம் - இன்பக் கெடுதல் இல்லாத போக உலகம்; அந்த உலகத்து இன்பம் போன்று அயராது அநுபவித்து இன்புறுக எனவும் கொள்க. 17. எல் - பகல். 18. கொண்டல் - மேகம். 19. அற்சிரம் - காலைப்பனி.

**உள்ளுறை:** காட்டுப் பன்றியானது, சுனைநீர் பருகிக், கிழங்கினை மாந்திக், கூதளத்தின் பூந்தாது தன்மேல் விளங்கத், தினைப்புனத்துள் நுழைந்து, அதன் விளைகுரல் மேய்ந்து, இனிது கண்படுக்கும் நாடன் என்றனள். அது, தலைவனும் தான் கருதியனவெல்லாம் கைவரப்பெற்றவனாகத், தலைவியை மணந்து இனிது இல்லறம் பேணுபவன் என்பதனால்.

**பாடபேதம்:** 20. பிரிபறியலரே.

## 179. உமக்குத் தகுதியாகுமோ?

**பாடியவர்:** *கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவு உணர்த்திய தலைமகனுக்குத் தோழி செலவு அழுங்கச் சொல்லியது.*

*(பொருளார்வம் மிகுதியான உள்ளத்தினனாகத், தான் தன் தலைவியைப் பிரிந்து சென்று பொருள்தேடிவர விரும்புதலைத், தலைவன் ஒருவன், தன் தலைவியின் தோழியினிடத்தே கூறுகின்றான். அதனைக் கேட்ட அவள், அதனால் தலைவிக்கு நேரும் துன்ப மிகுதியைக் கூறி, அவனுடைய போக்கினைக் கைவிடுமாறு சொல்லுகின்றாள்.)*

**விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்,**
**வெண்தேர் ஓடும் கடம்கால் மருங்கில்,**
**துனைஎரி பரந்த துன்அரும் வியன்காட்டுச்,**
**சிறுகண் யானை நெடுங்கை நீட்டி**
**வான்வாய் திறந்தும் வண்புனல் பெறாஅது,**

**கான்புலந்து கழியும் கண் அகன் பரப்பின்**
**விடுவாய்ச் செங்கணைக் கொடுவில் ஆடவர்**
**நல்நிலை பொறிந்தத கல்நிலை அதர,**
**அரம்கொள் பூசல் களையுநர்க் காணாச்**
**சுரம்செல விரும்பினிர் ஆயின்-இன் நகை,**

**முருந்துஎனத் திரண்ட முள்எயிற்றுத் துவர்வாய்,**
**குவளை நாண்மலர் புரையும் உண்கண், இம்**
**மதிஏர் வாள்நுதல் புலம்ப,**
**பதிபெயர்ந்து உறைதல் ஒல்லுமோ, நுமக்கே?**

*வானிலே தோய்ந்துகொண்டிருப்பது போன்ற உயரமான மலையுச்சிகளையுடைய, பெருமைதங்கிய மலையின் பக்கமலைப் பகுதிகளிலே, பேய்த்தேரானது ஓடிக் கொண்டிருக்கும் பெருமைமிகுந்த கற்காட்டின் பக்கத்தே, வேகமாக நெருப்புப் பரவிய கிட்டுதற்கரிய பெரிய காட்டிலேயுள்ள, சிறுத்த கண்களையுடைய யானையானது, தன்னுடைய நீண்ட துதிக்கையினை நீட்டியும், பெரிய வாயினைத் திறந்தும், நீர் வேட்கையால் துன்புற்று, வளவிய நீரினைப் பெறுவதற்கு இல்லாமல், காட்டினையே வெறுத்துக் கழிந்து போய்க் கொண்டிருக்கும்.*

*அத்தகைய இடமகன்ற பாலை நிலத்தின்கண், விடுதல் வாய்த்த சிவந்த கணைகளைக் கைக்கொண்ட, கொடிய வில்லினை உடைய மறவர்களின், நல்ல வெற்றியின் நிலையினை*

எழுதிய, அவரால் வீழ்ந்துபட்டவர்களின் நடுகற்கள் நிலை பெற்றிருக்கும். அப்படிப்பட்ட கொடிய வழிகளையுடைய வான, குறும்பு செய்வோரின் பூசல்களை நீக்குவோரைக் கண்டறியாத சுர நெறியினைக் கடந்து, பொருள் தேடிவரச் செல்வதற்கு விரும்பினீர். அங்ஙனமாயின், இனிமையான முறுவலினையும், மயிலிறகுக் குருத்துப்போன்ற திரண்ட முட்போலும் கூர்மையினை உடைய பற்களையும், சிவந்த வாயிதழ்களையும், குவளையின் புத்தம் புதிய மலரினைப் போன்ற மைதீற்றிய கண்களையும் உடைய இந்தமதிபோலும் ஒளிபொருந்திய நெற்றியினை உடையவள் வருத்தம் கொள்ளுவாள். அப்படி இவள் வருந்துமாறு, இவ்வூரினைவிட்டு நீங்கிப்போய் வேற்றூரிலே தங்குதல் என்பது நுமக்குப் பொருந்துவதாகுமோ?

என்று, பிரிவுணர்த்திய தலைமகனுக்குத் தோழி செலவழுங்கச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. சிமையம் - மலையுச்சி. கவா அன் - பக்கமலை. 2. வெண்தேர் - பேய்த்தேர். கடம்காய் - காய்கடம்; காய்ந்த கற்காடு. 3. துனை - விரைவு. துன்னுதல் - அடைதல். 5. வான் வாய் - பெரிய வாய். 6. புலந்து கழியும் - வெறுத்து நீங்கிப் போகும். 7. விடுவாய் - விடுதல் வாய்ந்த. 8. நல்நிலை - நல்ல வெற்றியின் நிலையை. கல் - நடுகல். அதர - வழியை உடையவான 9. அரம்பு - குறும்பு. 11. முருந்து - மயிலிறகுக் குருத்து. 12. நாள் மலர் - அன்று மலர்ந்த புதிய மலர்.

**விளக்கம்:** காட்டின் ஏதமும், பிரிவால் தலைவி அடையும் துன்பமிகுதியும் கூறி, அவன் தகுதியையும் சுட்டிப் பேசி, அவன் போவதைத் தடுக்க முயல்கிறாள் தோழி, காட்டு வாழ்வுடைய தாகிய யானையும் அதனை வெறுததுச் செல்லும் நிலைமையைக் கூறியதன் மூலம், நாட்டு வாழ்வினனாகிய அவன் அதனை விரும்புதல் மிகத் தவறு என்பதும் கூறினாள்.

**பாடபேதங்கள்:** 5. வறள்வாய். 9. இரும்புகொள். 13. வாண்முகம்.

## 180. ஊரின் பேதைமை!

**பாடியவர்:** கருவூர்க் கண்ணம்பாளனார். **திணை:** நெய்தல். **துறை:** இரந்து பின்னின்ற தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக் கூறியது; தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியதூஉ மாம்.

(யாதோ ஒரு காரணம்பற்றித் தலைவி தலைவனோடு ஊடி இருக்கின்றனள். அவன் தோழிபால் தனக்கு உதவவேண்டு கின்றான். அவனுக்குச் சாதகமாகத் தலைவியை இசைவிக்கச்

*சென்று வேண்டும் தோழி, இப்படிக் கூறுகின்றாள். அல்லது, தலைவன் வரைதல் வேட்கையற்றுப் பிரிந்துறைதலால் ஊடிய தலைவியானவள், அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குத் தன் நிலைமையை இப்படி விளக்கிக் கூறுகிறாள்.)*

**நகைநனி உடைத்தால்-தோழி! தகைமிக,**
**கோதை ஆயமொடு குவவுமணல் ஏறி,**
**வீததை கானல் வண்டல் அயர,**
**கதழ்பரித் திண்தேர் கடைஇ வந்து,**
**தண்கயத்து அமன்ற ஒண்பூங் குவளை**

**அரும்புஅலைத்து இயற்றிய சுரும்புஆர் கண்ணி**
**பின்னுப்புறம் தாழக் கொன்னே சூட்டி,**
**நல்வரல் இளமுலை நோக்கி, நெடிது நினைந்து,**
**நில்லாது பெயர்ந்தனன், ஒருவன்; அதற்கே**
**புலவுநாறு இருங்கழி துழைஇப் பலஉடன்**

**புள்இறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்**
**தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்**
**படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்**
**பொன்நேர் நுண்தாது நோக்கி,**
**என்னும் நோக்கும், இவ் அழுங்கல் ஊரே.**

*தகைமை மிகுந்த தலைமாலைகளைச் சூடியவரான தோழி மாருடன், திரண்ட மணல்மேட்டின்மீது யானும் ஏறினேன். மலர்கள் நிரம்பிய கானற்சோலையிலே வண்டலிழைத்து யாம் விளையாடியிருந்தோம். அவ்விடத்தே, விரைவாகச் செல்லும் குதிரைகளைக் கொண்ட வலியதேரினைச் செலுத்தியவனாக ஒருவன் வந்தான். குளிர்ச்சியான குளத்திலே நிறைந்திருக்கிற ஒள்ளிய பூக்களையுடைய குவளையின் அரும்புகளை விரித்துக் கட்டிய, வண்டு மொய்க்கின்ற கண்ணியினை, எனது பின்னலைக் கொண்ட முதுகுப்புறத்திலே தாழ்ந்து தொங்கும்படியாக யான் வேண்டாமலேயே வீணே சூட்டினான். நல்ல வளர்ச்சியினை நெடுக நினைந்தவனாக நின்றான். பின், அவ்விடத்தே மேலும் நில்லாமற் சென்றும் விட்டான்.*

*அந்த அளவிற்கே, இந்த ஆரவாரம் மிகுந்த ஊரானது, புலால் நாற்றமுடைய பெரிய கழியினைத் துழாவியவாறே, பலவகையான நீர்ப் பறவைகளும் தங்கிக்கொண்டிருக்கும் முட்களையுடைய நெடுந்தோடுகளைக்கொண்ட தாழையினைச் சார்ந்து, புலிநகக் கொன்றையுடன் பொருந்தித், தோட்டத்தில் நிற்கும் வளைந்த அடிமரத்தினையும் பார்த்து, என்னையும் பார்த்துக்கொண்டிருக்குமே!*

*தோழி! இது மிகவும் நகைப்பைத் தருவதாகும்!*

*என்று,இரந்த பின்னிற் தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக் கூறினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. தகை - தகைமை. தகைதலும் ஆம். 2. கோதை ஆயம் - கோதை சூடிய ஆயமகளிர். குவவுமணல் - உயர்ந்துள்ள மணல்; மணல் மேடு. 3. வண்டல் அயர்தல் - நெய்தல் மகளிர் விளையாட்டு வகையுள் ஒன்று. 4. கடைஇ - செலுத்தி. 5. அமன்ற - நெருங்கிய. 7. கொன்னே - வீணே; அவள் விரும்பாதே சூட்டியதால் வீணே சூட்டியதாயிற்று. 8. நல்வரல் - நல்ல வளர்ச்சியை உடைய; முகிழ்த்து வளர்ந்து வருதலால் 'வரல்' ஆயிற்று. இளமுலை - இளைய முலை; பருவம் குறித்தது. 10. இருங்கழி - பெரிய கழி; கரிய கழியும் ஆம். துழைஇ - துழாவி. 11. இறை கொள் - தங்கியிருத்தல். 12. ஞாழல் - புலிநகக்கொன்றை. 13. படப்பை - தோட்டம். 15. அழுங்கல் - ஆரவாரம்.*

**விளக்கம்:** *அவள் மேனியிற் படர்ந்த பசலையினை நோக்கிய ஊரவர். அவளுடைய களவு உறவுபற்றி அலர் உரைக்கத் தொடங்கினர். அதனைத் 'தாழை மணந்து, ஞாழலொடு கெழீஇ, புன்னை நுண்தாது நோக்கி, என்னையும் நோக்கி' என உரைத்தமை நயம் உடையதாகும். தோழி கூற்றாகக் கொள்ளும்போது, படைத்து மொழிதலாகவும், தலைவி கூற்றாகக் கொள்ளும்போது தன் மேனி பசந்ததையும் ஊரலர் எழுதலையும் உரைத்து உரைவுவேட்டலாகவும் கொள்க.*

**பாடபேதம்:** *பாடியவர்: கருவூர்க் கண்ணம்பாணனார்; கண்ணன் பரணனார்.*

## 181. என் நிலைமை உரைப்பாய்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை** *: பாலை.* **துறை:** *இடைச்சுரத்து ஒழியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *மிஞிலி யோடு பொருது களத்திலே வீழ்ந்த ஆய் எயினனின் சிறப்பும்; புகார்நாட்டுப் பெருமையும்.*

*(பொருளார்வம் மேலிடத், தன் ஆருயிர் மனைவியைப் பிரிந்து, கானம் பல கடந்து சென்று கொண்டிருந்தான் ஒருவன். இடைவழியிலே, அவனுடைய மனமானது தன் காதலியின் நினைவால் பெரிதும் பேதுற, அவன் தன் நெஞ்சிற்கு இப்படிக் கூறுகின்றான்.)*

**துன்அருங் கானமும் துணிதல் ஆற்றாய்,**
**பின்நின்று பெயரச் சூழ்ந்தனை ஆயின்,**

என்நிலை உரைமோ-நெஞ்சே!-ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
அடுபோர் மிஞிலி செருவேல் கடைஇ,

முருகுறழ் முன்பொடு பொருதுகளம் சிவப்ப,
ஆஅய் எயினன் வீழ்ந்தென, ஞாயிற்று
ஒண்கதிர் உருப்பம் புதைய ஓராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
விசும்பிடை தூரஆடி, மொசிந்து உடன்,

பூவிரி அகன்துறைக் கனைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேர்யாற்று அயிர்கொண்டு ஈண்டி,
எக்கர் இட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளம்கெழு வேந்தர்
ஞாலம் நாறும் நலம்கெழு நல்இசை,

நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்,
ஆல முற்றம் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்
கைசெய் பாவைத் துறைக்கண் இறுக்கும்
மகர நெற்றி வான்தோய் புரிசைச்

சிகரம் தோன்றாச் சேண்உயர் நல்இல்
புகாஅர் நல்நாட் டதுவே-பகாஅர்
பண்டம் நாறும் வண்டுஅடர் ஐம்பால்,
பணைத்தகைத் தடைஇய காண்புஇன் மென்தோள்,
அணங்குசால், அரிவை இருந்த

மணம்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே.

*மணப்பொருள்களை விலைகூறி விற்பவரது பண்டங்களின் மணம் கமழுகின்ற, வண்டுகள் மொய்க்கும் ஐம்பகுதியாகிய கூந்தலினை உடையவள்; மூங்கிலின் தகைமையினைக் கொண்டதாக, வளைந்த, காட்சிக்கு இனிதான மென்மையான தோளினை உடையவள்; அழகிலே மிகுந்தவளான நம் தலைவி. 'அவள் இருந்த, மணம் கமழுகின்ற தெருக்களையுடைய பெரிய மணல் மேடாகிய குன்றமானது -*

*ஆஅய் எயினன் என்பவன், முருகனைப்போன்ற வலிமையுடனே பகைவர் பாதுகாத்து நிற்கும் கோட்டைகளை வென்ற வெற்றிச் சிறப்பினையுடைய பெரிய படைகளையுடைவனும், அடுதல் தொழிலிலே வல்லவனுமான மிஞிலி என்பவனோடு செய்த போரின்கண், அக்களமெல்லாம் குருதியால் சிவப்பு நிறம் அடையுமாறு கடுமையாகப் போரிட்டு, முடிவிலே தானும் தோற்று மடிந்தனன்.*

ஞாயிற்றினது ஒண்மையான கதிர்களின் வெம்மையானது அவன் உடலிலே படாது மறையுமாறு, ஒரு பெற்றியே, புதிய பறவைகளின் ஆரவாரம் பொருந்திய பெருந்திரளானது, வானத்திடையே வட்டமிட்டு உயரே நிழலிட்டுப் பறந்தன. பின், அவை ஒருங்கே கூடிப்,

பூக்கள் விரிந்த அகன்ற துறையினையுடைய காவிரியாகிய பேராற்றினது, மிக வேகத்துடன் வரும் வெள்ளமானது நுண் மணலைக் கொண்டுவந்து சேர்த்து மேடாக்கிய வெண்மையான மணற்குவியல்களையும், புது வருவாயினையுடைய ஊர்களையும் உடைய, வலிமையால் மிக்க சோழ மன்னர்களால் காக்கப்படும், உலகம் எல்லாம் புகழ்மணம் பரவிய, நன்மை பொருந்திய, நற்புகழையுடைய, நான்கு மறைகளாகிய பழைய நூலினை அருள்செய்த முக்கண்களையுடைய பரமனது ஆலமுற்றம் என்னுமிடத்திலே, அழகுபெறுமாறு இயற்றப் பெற்ற பொய்கைகள் சூழ்ந்துள்ள பொழிலின்கண்ணே, சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமியர்களது கையாற்செய்யப் பெற்ற மணற்பாவைகள் விளங்கும் துறையினிடத்தே சென்று தங்கும். அவ்விடத்ததாகிய -

மகரக்கொடியினை உச்சியிற்கொண்ட வான்தோய் மதிலையும், சிகரம் தோன்றாத அளவுக்கு மிகவுயர்ந்த மாடங்களைக் கொண்ட நல்ல அரண்மனைகளையும் உடைய, புகாஅர் என்னும் நல்ல நாட்டினிடத்தே உள்ளதாகும்.

செல்லுதற்கு அருமையுடையதான காட்டினைக் கடந்து செல்லவும் துணிதலைச் செய்யமாட்டாய் ஆகிப், பின் நினைவிலேயே நிலைபெற்று மீண்டு செல்வதற்குக் கருதினை யானால் எனது நிலைமையினை அவளுக்குச் சென்று சொல்வாயாக.

என்று, இடைச்சுரத்து ஒழியக் கருதிய நெஞ்சிற்குச் சொன்னான் தலைவன் என்க.

**சொற்பொருள்:** 1. துன்னுதல் - அடைதல். துன்னருங்கானம் - அடைதற்கு, அதாவது செல்லுதற்கு அரிய காட்டு வழி. துணிதல் - செல்லத் துணிவு கொள்ளல். 2. பின் நின்று - பின் நினைவிலே நிலைபெற்று, 3. ஒன்னார் - பகைவர். 4. வீங்கு பெருந்தானை - பூரிப்பினையுடைய பெரிய சேனை. 5. உடைஇ - தோற்று வீழ்ந்து. உருப்பு - வெப்பம்; புதையமறைய. ஓராங்கு - ஒரு பெற்றியே. 9. வம்பப் புள் - புதிய பறவை. கம்பலை - ஆரவாரம். பெருந்தோடு - பெரிய தொகுதி. 10. தூர ஆடி - உயரத்தே வட்டமிட்டுப் பறந்து. 11. கனைவிசைக் கடுநீர் - மிக்க

வேகத்தையுடைய புதுவெள்ளம். 12. அயிர் - கருமணல். 13. எக்கர் - மணல்மேடு. 14. வைப்பின் யாணர் - புது வருவாயினையுடைய ஊர்கள். 15. நான் மறை முதுநூல் - நான் மறையாகிய பழைய வேதங்கள்; அன்றாலின் கீழ் அறம் உரைத்த சிவபிரானைப் பற்றிக் கூறியது. 18. மனைமகளிர் - வீட்டுச் சிறுமியர். 20. மகர நெற்றி - மகரதோரணம் உயர்ந்ததைக் குறித்தது; அது காமன் விழாத் தொடக்கம் என்பதைக் காட்டுதற்கு. 23. பண்டம் - மணப் பொருள்கள். 26. மறுகு - தெருக்கள்.

**உள்ளுறை:** ஆய் எயினனாற் பட்டுவீழ்ந்த மிஞிலியின் உடற்குப் பறவையினம் நிழலிட்டாற்போன்று, அவள் பிரிவால் நலிந்த வெப்பந்தீர நீயும் சென்று தூதுரைப்பாயாக என்று குறிப்பால் உணர்த்தினன்.

**விளக்கம்:** ஆய் எயினன் பறவை இனங்கட்கெல்லாம் பாதுகாவலனாக இருந்தனன் என்பதுபற்றி அவனைக் காத்து நின்றன பறவைகள் என்பது, அகம் 142 இலும் சொல்லப் பட்டது. அவை சென்று தங்கும் துறை என்றதன் மூலம் அத்துறையின் சிறப்புப் பெறப்படும்; அஃது ஆலமுற்றம்.

**பாடபேதங்கள்:** 7. வண்மை எயினன். 12. அயிர் கொடு ஈண்டி, 17, கவின் பெறத் தைஇப். 18. பொழின் மணமகளிர். 22. பகர்வர். 23. வண்டாடு ஐம்பால்.

## 182. கடும் பகல் வருக!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** தோழி இராவருவானைப் பகல் வா என்றது. **சிறப்பு:** வேலன் வெறியாடும் வியன்களம்போன்று மலைச்சாரல் விளங்கும் என்பது.

(இரவுக் குறியிலே தன் காதலியைச் சந்தித்துக் கூடிமகிழ்ந்து வருகின்ற தலைவன், விரைவிலே வரைந்து வந்து மணந்து கொள்ளுதலிலே முயற்சியுடையவனாதல் வேண்டும் என்று விரும்புகிறாள் தோழி. அதனால், இரவுக்குறி மறுத்துப் பகற்குறி நேர்வாள்போலச் சொல்லுகிறாள். அதுவும் கை கூடாமையால் அவன் வரைந்து கோடற்கு முயல்வான் என்பது தேற்றம்.)

**பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து,**
**வாங்கமை நோன்சிலை எருத்தத்து இரீஇ,**
**தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்**
**வீளை அம்பின் இளையரொடு மாந்தி,**
**ஒட்டியல் பிழையா வயநாய் பிற்பட,**

**வேட்டம் போகிய குறவன் காட்ட**
**குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர,**
**முளவுமாத் தொலைச்சும் குன்ற நாடே!**
**அரவுஎறி உருமொடு ஒன்றிக் கால்வீழ்த்து**
**உரவுமழை பொழிந்த பானாட் கங்குல்,**

**தனியை வந்த ஆறுநினைந்து அல்கலும்,**
**பனியொடுகலுழும் இவள் கண்ணே; அதனால்,**
**கடும்பகல் வருதல் வேண்டும்-தெய்ய**
**அதிர்குரல் முதுகலை கறிமுறி முனைஇ,**
**உயர்சிமை நெடுங்கோட்டு உகள, உக்க**

**கமழ்இதழ் அலரி தாஅய் வேலன்**
**வெறிஅயர் வியன்களம் கடுக்கும்**
**பெருவரை நண்ணிய சார லானே.**

*அழகிய தோற்றத்தையுடைய வேங்கைமரத்தின் பொன் போலும் பூங்கொத்துக்களைச் சூடிக்கொண்டான்; வளைந்த மூங்கிலினாலாகிய வலியமைந்த வில்லினைத் தோளிலே இட்டுக் கொண்டான்; இனிய பழத்தினையுடைய பலாவினது சுளையி னின்றும் ஆக்கிய கள்ளினைச் சீழ்க்கை ஒலியுடன் அம்பினைச் செலுத்தும் வீரர்களுடன் சேர்ந்து நிரப்பக் குடித்துக் கொண்டான்; விலங்குகளைத் துரத்தும் இயல்பிலே தப்புதல் இல்லாத வலியுடைய நாய்கள் பின்னாகத் தொடர்ந்து வந்துகொண்டிருக்க வேட்டைமேற் சென்றான்; குறவன் ஒருவன். அவன், காட்டு மல்லிகையின் தண்மையான புதர் குருதியுடன் அசைந்தாடுமாறு, முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்துவான். அத்தகைய குன்றுகளையுடைய மலைநாடனே!*

*முன்னொரு சமயம், வலியுடைய மேகம், பாம்பினைத் தாக்கிக் கொல்லுகின்ற இடி முழக்கத்துடன் கூடியதாகக் காலிட்டுப் பெய்து மழையினைப் பொழிந்த இரவின் பாதிநாட்பொழுதிலே, நீ தனிமையாகி வந்த வழியின் துன்பத்தினை நினைந்து, அவள் கண்கள் நாள்தோறும் கலங்கி நீர் சொரிந்து அழுதுகொண்டே யிருக்கும்.*

*அதனால் அதிர்கின்ற குரலினையுடைய முதிய முசுக்கலையானது, மிளகுக் கொடியின் தளிரினைத் தின்று, அதனை வெறுத்து உயர்த்த உச்சியினையுடைய நீண்ட மலைமுடிகளிலே தாவிச் செல்லுதலால் உதிர்ந்த, மணங்கமழும் இதழினையுடைய பூக்களானவை எங்கும் பரந்து, வேலன் வெறியாடுவதற்கு இழைத்திருக்கும் பெரிய களத்தினைப் போலத் தோன்றும், பெரிய மலையினை அடுத்திருக்கின்ற அத்தகைய*

சாரலின் இடத்தே, இனி, நீ கடும்பகல் வேளையிலேயே வருதல் வேண்டும்.

என்று, தோழி இராவருவானை அதனை விட்டுப் பகலில் வருக என்றனள்.

**சொற்பொருள்:** 1. பூங்கண் வேங்கை - அழகிய இடத்தை யுடைய வேங்கையுமாம். மிலைந்து - சூடி. 2. வாங்கு அமை - வளைந்த மூங்கில். நோன்மை - வலிமை. எருத்தம் - தோள். 4. விளை - சீழ்க்கை ஒலி. 5. ஓட்டியல் - ஓடித்துரத்துகின்ற இயல்பு வயநாய் - வலியுடைய வேட்டைநாய். 2. வேட்டம் - வேட்டை. 7. குளவி - மல்லிகை. புதல் - புதர். துயல்வர - அசைந்தாட. 8. முளவுமா - முள்ளம் பன்றி. 13. கடும்பகல் - நண்பகல். 24. கலை - குரங்கு வகையுள் ஒன்று; முசுக்கலை. 17. கடுக்கும் - போன்று விளங்கும்.

**உள்ளுறை:** வேட்டையாடுதலிற் சென்ற குறவன், முள்ளம் பன்றியை அம்பெய்து கொன்று தன்னுடைய செயலினைச் செய்தனனாக ,அதனால் காட்டுமல்லிகைப் புதர் குருதியுடன் அசைந்தாடிற்று. அங்ஙனமே, தலைவனும் களவாகிய ஒழுக்கத்தினையே மிகவும் விரும்பியவனாகத் தலைவியைக் கூடி வர, அதனால் தலைவியின் உடலின்கண் தோன்றிய மாற்றங்கள் தாய் முதலியோருக்கும் புலனாக, ஊரலர் எழலும் ஆயிற்று என்றனள்.

இதனால், பகற்குறி நேர்தலும் கூடாமையால் வரைவு வேட்டனள் என்றே கொள்க. மலைச்சாரல் வேலன் வெறியயர் களம்போலத் தோற்றும் என்றது, அன்னை முதலியோர் வேலனை வேண்டி வெறியாட்டயர்தலையும் தொடங்கினர் என்பதனைக் குறிப்பால் உணர்த்தும்.

**பாடபேதம்:** 1. பொன்னிணர் மலைந்து..

## 183. வருந்துவோம் அல்லமோ!

**பாடியவர்:** கருவூர்க் கலிங்கத்தார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் குறித்த பருவ வரவு கண்டு, தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பிரிந்து சென்றவனாகிய தலைமகன், தான் மீண்டு வருவதாகக் குறித்த பருவம் வந்தும் வராதவனாக, அந்தப் பருவத்தின் வரவினைக் கண்டு, தன் உள்ளத்தின் துயரம் மிகுதியாகத் தலைவி தன் தோழியினிடம் இவ்வாறு கூறிப் புலம்புகின்றனள்.)

'குவளை உண்கண் கலுழவும், திருந்திழைத்
திதலை அல்குல் அவ்வரி வாடவும்,
அத்தம்ஆர் அழுவம் நத்துறந்து அருளார்
சென்றுசேண் இடையர் ஆயினும், நன்றும்
நீடலர், என்றி-தோழி!-பாடுஆன்று

பனித்துறைப் பெருங்கடல் இறந்து, நீர் பருகி,
குவவுத்திரை அரந்த கொள்ளைய குடக்குஏர்பு,
வயவுப்பிடி இனத்தின் வயின்வயின் தோன்றி
இருங்கிளைக் கொண்மூ ஒருங்குடன் துவன்றி,
காலை வந்தன்றால் காரே-மாலைக்

குளிர்கொள் பிடவின் கூர்முகை அலரி
வண்டுவாய் திறக்கும் தண்டா நாற்றம்
கூதிர்அற் சிரத்து ஊதை தூற்ற,
பனிஅலைக் கலங்கிய நெஞ்சமொடு
வருந்துவம் அல்லமோ, பிரிந்திசினோர் திறத்தே?

*தோழி! குவளை மலரினைப்போல விளங்கும் மைதீற்றிய கண்கள் கலங்கவும், திருந்திய அணியினையும் தேமலையும் உடைய அல்குலின் அழகிய ரேகைகள் வாடி மறையவும், நமக்கு அருளாதவராக நம்மைத் தனித்து வாடவிட்டுப் பிரிந்து, அருநெறிகளையுடைய பரந்த பாலையினைக் கடந்து சென்றார் நம் தலைவர். அவர் மிகவும் தொலைவிடத்தே உள்ளவராயினும், மிகவும் காலந் தாழ்க்காது வந்துவிடுவர் என்கின்றனை.*

*பெருங்கூட்டமான மேகங்கள், வளைந்த அலைகளையும் குளிர்ச்சியான துறையினையும் உடைய பெரிய கடல்களிலே சென்று, நீரினைப் பருகி, அருந்திய கொள்ளையினையுடைய வாக, மேற்றிசையிலே எழுந்து, சூலுற்ற பெண்யானைகளின் கூட்டத்தைப்போல இடந்தோறும் இடந்தோறும் தோன்றி, ஒலி மிகுந்தனவாக, ஒருங்கே உடன் சேர்ந்து பெய்தற்குத் திரண்டிருக்கும் கார்காலமும் வந்துவிட்டது.*

*மாலைப் பொழுதிலே, குளிர்ச்சிகொண்ட பிடவினது கூர்மையான அரும்புகள் அலர்தற்கு உரியதனை, வண்டினம் வாயினைத் திறத்தலால் எழுகின்ற அமையாத நறுமணத்தினைக், கூதிர் முன்பனிக் காலங்களுக்கு உரிய வாடைக்காற்றானது எங்கும் பரப்பப், பனி அலைத்தலால் கலங்கிய நெஞ்சத்துடனே, பிரிந்து சென்றவராகிய தலைவரின் பொருட்டு, நாமும் வருந்துவோம் அல்லமோ?*

என்று, தலைமகன் குறித்த பருவவரவு கண்டு, தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. கலுழ்தல் - கலங்கி அழுதல். திருந்து இழை - திருந்திய அணி; மேகலை காஞ்சி போல்வன். 2. அவ்வரி - அழகிய இரேகைகள், 3. அழுவம் - பாலை. 5. நீடலர் - நீட்டிக்கமாட்டார். பாடு ஆன்று - ஒலி மிகுந்து. 6. இறந்து - கடந்து சொன்று. 7. குவவுத்திரை - வளைவு கொண்டு எழுகின்ற அலைகள். கொள்ளை - மிகுதியான கொள்ளுதல். 8. வயவுப்பிடி - சூல்கொண்ட பெண்யானை. வயின் வயின் - இடந்தோறும். 9. துவன்றி - நெருங்கித் திரண்டு. 12. தண்டா நாற்றம் - அமையாத மணம்; அளவு கடந்த நறுமணம். 13. ஊதை - வாடை. 14. பனி அலைக் கலங்கியநெஞ்சம் - துன்பம் அலைக்கழித்ததால் கலக்கமுற்ற நெஞ்சம்.

**பாடபேதம்:** 6. விரைந்து நீர் பருகி.

## 184. சிறக்க நின் ஆயுள்!

**பாடியவர்:** மதுரை மருதன் இளநாகனார். **திணை:** முல்லை **துறை:** தலைமகன் வினைவயிற் பிரிந்துவந்து எய்தியவிடத்துத் தோழி புல்லு மகிழ்வு உரைத்தது.

*(தொழில்மேற் பிரிந்து சென்ற, தலைவன், தான் மேற்கொண்ட வினையினைச் செவ்வையாக முடித்த பெருமிதத் துடன் வீடு திரும்பிவிட்டான். அப்போது, அவனைப் பாராட்டி அவன் மனைவியின் தோழி, இவ்வாறு சொல்லுகின்றனள்.)*

**கடவுட் கற்பொடு குடிக்குவிளக்கு ஆகிய**
**புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**
**நன்ன ராட்டிக்கு அன்றியும், எனக்கும்**
**இனியஆ கின்றால், சிறக்க, நின் ஆயுள்!**
**அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளமொடு**

**சுரும்புஇமிர் மலர கானம் பிற்பட,**
**வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவில்**
**குண்டைக் கோட்ட குறுமுள் கள்ளிப்**
**புன்தலை புதைத்த கொழுங்கொடி முல்லை**
**ஆர்கழல் புதுப்பூ உயிர்ப்பின் நீக்கித்,**

**தெள்அறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை**
**புள்ளிஅம் பிணையொடு வதியும் ஆங்கண்,**
**கோடுடைக் கையர், துளர்எறி வினைஞர்,**

**அரியல் ஆர்கையர், விளைமகிழ் தூங்கச்,
செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்றுச்**

**செக்கர் வானம் சென்ற பொழுதில்,
கற்பால் அருவியின் ஒலிக்கும் நாற்றேர்த்
தார்மணி பலஉடன் இயம்ப-
சீர்மிகு குருசில்! - நீ வந்துநின் றதுவே.
சிறப்பு மிகுந்த தலைவனே!**

*வெண்மையான பிடவமரத்தின் இதழ்விரிந்த பூக்களின் மணம் வீசுகின்ற முல்லை நிலத்திலே, குறுகிய கிளைகளையும் குறுகிய முட்களையும் உடைய கள்ளியினது புன்மையான உச்சியினை மூடிப் படர்ந்திருக்கும் வளவிய கொடிமுல்லையினது, ஆர்க்குக் கழன்ற புதிய பூக்களை ஊதி ஒதுக்கிவிட்டுத் தெளிந்த நீரினை, முறுக்குண்ட கொம்புகளையுடைய அழகிய கலைமான்கள் குடித்துவிட்டுப், புள்ளிகளையுடைய அழகிய தம் பிணைகளோடும் தங்கியிருக்கும் அவ்விடத்திலே,*

*களைக்கொட்டினை உடைய கையினர்களாகக், களைகளை வெட்டி எறியும் தொழிலையுடையவர்கள், கள்ளினை நிறையக் குடித்தவர்களாக, அதனாலாகிய களிப்பு மிகுதியாக வருவர். செல்லும் கதிரின் வெம்மை குறைந்த சிவந்த நிறத்தினையுடைய ஞாயிற்றுடன், செவ்வானம் பரவிய அக்காலத்திலே, மலையினின்று விழுகின்ற அருவியைப்போல, நல்ல தேரிலுள்ள மாலையாகிய மணிகள் பலவும் ஒன்றாகச் சேர்ந்து ஒலிக்க, வண்டினம் ஒலிக்கும் மலர்களையுடைய காடுகள் பிற்பட்டுப் போகும்படியாக, அருமையான தொழிலினைச் செய்துமுடித்த தலைமை மேவிய உள்ளத்துடனே, நீயும் இங்கு வந்து நின்றனை!*

*தெய்வத் தன்மை பொருந்திய கற்புடனே, நின் குடிக்கு விளக்கம் ஆகிய புதல்வனைப் பெற்ற, புகழ்மிகுந்த சிறப்பினையுடைய நன்மையுடையவளான நின் மனைவிக்கே அல்லாமலும், நின் வருகை, எனக்கும் இனிய தருவதாகின்றது. நின் ஆயுள் சிறப்பதாக!*

*என்று, தலைமகன் வினைவயிற் பிரிந்து வந்து எய்திய விடத்துத், தோழி புல்லுமகிழ்வு உரைத்தனள் என்க.*

**சொற்பொருள்:** *விளக்கு - விளக்கம்; ஒளி தருவதும் ஆம். 5. அருந்தொழில் - செய்தற்கு அரியதான தொழில். செம்மல் உள்ளம் - செம்மாந்த உள்ளம். 6 இமிர்தல் - மொய்த்தல். 8.குண்டைக் கோட்ட - குட்டையான கிளைகளையுடையன. 10. ஆர் - ஆர்க்கு. உயிர்ப்பின் - மூச்சு விடுதலான. 11. தெள்அறல் -*

*தெளிந்த அறல்நீர். திரிமருப்பு - முறுக்குண்ட கொம்பு 13. கோடு - களைக்கொட்டு. துளர் எறி - களையினை வெட்டி எறிதல் 15. உருவ ஞாயிறு சிவந்த ஞாயிறு 18. தார் மணி - மாலைபோலக் கட்டித் தொங்க விட்டிருக்கும் மணிகள்.*

**உள்ளுறை:** *முல்லையானது கள்ளியை மூடி மறைத்திருந்தது போலத், தலைவியும் தன்னை வருத்திய பிரிவினாலுண்டாகிய நோயினை எல்லாம் புறந்தோன்றாமற் கற்பினாலே ஆற்றியிருந்தனள் என்க. தெளிந்த நீரினை மூடிய பூவினைத் தன் பிணையொடு வதியும் என்றாற்போலத், தலைவனும் தன் தலைவியின் மெலிவினை எல்லாம் நீக்கி, அவளுடன் கூடி இன்புற்று வாழ்வான் எனவும் கூறினாள்.*

**பாடபேதம்:** *13. கோடுடைத் தலை.*

## 185. இரும்பால் செய்த உயிரோ?

**பாடியவர்:** *பாலைபாடிய பெருங் கடுங்கோ.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைவன் தன்னைப் பிரிந்து சென்றதன் காரணமாக ஏற்பட்ட துயரநோயினால் வாட்டமடைந்து, உடல் நலனும் கெட்டவளான தலைவி ஒருத்தி, தன் தோழியிடம் தன் வருத்தத்தைக் கூறிப் புலம்புகிறாள்.)*

**எல்வளை ஞெகிழச் சாஅய், ஆய்இழை**
**நல்எழிற் பணைத்தோள் இருங்கவின் அழிய,**
**பெருங்கை யற்ற நெஞ்சமொடு நத்துறந்து,**
**இரும்பின் இன்உயிர் உடையோர் போல,**
**வலித்து வல்லினர், காதலர்; வாடல்**

**ஒலிகழை நிவந்த நெல்லுடை நெடுவெதிர்**
**கலிகொள் மள்ளர் வில்விசையின் உடைய,**
**பைதுஅற வெம்பிய கல்பொரு பரப்பின்**
**வேனில் அத்தத்து ஆங்கண், வான் உலந்து**
**அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்,**

**பெருவிழா விளக்கம் போலப், பலவுடன்**
**இலைஇல மலர்ந்த இலவமொடு**
**நிலையுயர் பிறங்கல் மலைஇறந் தோரே.**

*'ஒலிக்கின்ற தன்மையினையும், மேல்நோக்கி உயர்ந்து வளர்ந்த தண்டினையும், நெற்களையும் உடைய நீண்ட மூங்கில்கள் எல்லாம், கோடையின் வெம்மையால் வாடிப்*

போயிருக்கும். ஆரவாரங்கொண்ட மறவரது வில்லினின்று எழும் அம்புகளின் வேகத்தால் அவை பிளந்துபடுவனவாயு மிருக்கும். பசுமை அற்றுப்போகக், காய்ந்த பருக்கைக் கற்கள் விளங்கும் அகன்ற இடத்தையுடைய, வேனிலின் வெம்மையி னாலே கொதித்திருக்கும் அத்தகைய காட்டினிடத்தே, மேகமும் பெய்யாது ஒழியும். அதனால், உயர்ந்த சிகரங்களில் அருவிகளும் இல்லையாகும். பெருவிழாவாகிய கார்த்திகை விளக்கீட்டிற்கு இடும் விளக்குகளைப்போல, இலைகளே இல்லாமல் பூக்களாகவே ஒருங்கே பல்கி மலர்ந்திருக்கும் இலவமரங்கள். உயர்ந்த நிலையினையுடைய, அத்தகைய பக்கமலைகளைக் கடந்து சென்றவர் நம் தலைவர்.

ஆராய்ந்தெடுத்த நல்ல அணிகளையும், நல்ல அழகினையும், மூங்கில் போன்ற பூரிப்பினையும் உடையன நமது தோள்கள். அவற்றின் ஒளிபொருந்திய வளைகள் நெகிழ்ந்து விழுமாறு அவையும் இப்போது மெலிவுற்றன. அத்துடன் நம்முடைய பெரிய அழகுகள் எல்லாம் கெடுமாறு பெரிய கையற்ற நெஞ்சமோடு நாம வருந்துகின்றோம். நம்மைக் கைவிட்டு, இரும்பினால் ஆகிய, அழிவற்ற இனிய உயிரினை உடையவர்போல நம்மைக் கருதும், வன்கண்மை உடைய வருமாயினர் அவர்.

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. எல்வளை - ஒளிபொருந்திய வளை. 2. இருங்கவின் - மிக்க. அழகு. 5. வலித்து - வலித்திருக்க. 6. வெதிர் - மூங்கில். 8. கல்பொரு - கற்கள் பொருகின்ற; பொருந்தியும் ஆம். 11. பெருவிழா - கார்த்திகை விழா.

**விளக்கம்:** அவன் இவ்வாறு பிரிந்திருப்பின் நாம் இறந்து விடுவோம் என்பதையும் நினையாது, நம் உயிரை இரும்பினால் ஆனதுபோல எண்ணி, இப்படி வன்கண்மையுடன் இருக்கின்றான் போலும் என்கிறாள். அவள் ஆற்றாமையின் மிகுதியை உணர்த்துவது இது.

**பாடபேதம்:** வலித்து, வலிது.

## 186. பிறள்பால் இருக்கிறான்!

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம். **துறை:** தலை மகளுக்குப் பாங்காயினார் கேட்ப, இல்லிடைக் பரத்தை சொல்லியது. **சிறப்பு:** காவிரிக் கரையிலுள்ள பழையன்

*என்பவனின் வளஞ்செறிந்த 'போஒர்' என்னும் ஊரைப் பற்றிய செய்தி.*

*(தன்னுடைய தலைவன் பரத்தை ஒருத்தியோடு தொடர்பு உடையவனாயினான்; தன்னைப் பிரிந்து அவளுடைய வீட்டிலேயே தங்குதலும் செய்பவனானான் எனத், தலைவி ஒருத்தி நினைத்தாள். அவள் ஆற்றாமை சினமாக அந்தப் பரத்தையைப் பழிக்கும் அளவிற்குக் கொண்டுபோய்விட்டது. அந்தப்பரத்தையையும் கைவிட்டுப் புதியவள் ஒருத்தியுடன் அவன் தொடர்பு கொண்டு போய்விட அவளும் வாடியிருப்பவள். தன்னைத் தலைவி பழித்தது கேட்டு நொந்த அவள், தலைவியின் தோழிமார் கேட்குமாறு தன்னுடைய நிலைமையைக் கூறுகின்றாள்.)*

**வானம் வேண்டா வறனில் வாழ்க்கை**
**நோன்ஞாண் வினைஞர் கோளறிந்து ஈர்க்கும்**
**மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை**
**நீர்மிசை நிவந்த நெடுந்தாள் அகலிலை**
**இருங்கயம் துளங்கக், கால்உறு தோறும்**

**பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு**
**எழுந்த கௌவையோ பெரிதே; நட்பே,**
**கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்**
**புனல்ஆடு கேண்மை அனைத்தே: அவனே,**
**ஒண்தொடி மகளிர் பண்டையாழ் பாட,**

**ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப,**
**தண்நறுஞ் சாந்தம் கமழும் தோள்மணந்து,**
**இன்னும் பிறள்வயி னானே; மனையோள்**
**எம்மொடு புலக்கும் என்ப, வென்வேல்**
**மாரி அம்பின், மழைத்தோற் பழையன்**

**காவிரி வைப்பின் போஓர் அன்ன, என்**
**செறிவளை உடைத்தலோ இலனே; உரிதினின்**
**யாம்தன் பகையேம் அல்லேம்; சேர்ந்தோர்**
**திருநுதல் பசப்ப நீங்கும்**
**கொழுநனும் சாலும், தன் உடன்உறை பகையே.**

*வலிமையான தூண்டிற் கயிற்றினை உடையவர் மீன் பிடித்து உண்பவரான வலைஞர்கள்; அவர்கள், மழைவளத்தை வேண்டிநிற்றல் இல்லாத, வறுமையற்ற வளமான வாழ்வையும் உடையவர். மீன்கள் நிறைந்துள்ள நீர்நிலைகளிலே தூண்டி விட்டுத், தூண்டிலிலே மீன்பற்றியதை அறிந்து, தூண்டிற்*

கயிற்றைப்பற்றி இழுத்துக் கொண்டிருப்பவரும் அவர்கள். அத்தகைய நிர்நிலையிலே, தாமரை தழைத்து அதன் அகன்ற இலைகளை நீருக்குமேலாக உயர்த்த தண்டுகளுடன் விளங்கும். பெரிய குளமும் அலையுமாறு காற்று மோதும்போது, பெரிய களிற்றியானை தன் காதுகளை அசைத்துக் கொண்டிருப்பது போல, அந்தத் தாமரை இலைகள் தாமும் அசைந்து கொண்டிருக்கும். அத்தகைய ஊருக்கு உரியவனாகிய தலைவனால் ஊரிலே எழுந்துள்ள அலரோ பெரிதாயிருக்கிறது. ஆனால்,

எமக்கும் அவனுக்கும் இடையேயுள்ள தொடர்போ, செழித்த வேழக்கோலாகிய புணையே எமக்குத் துணையாக அன்றொருநாள் புனல் விளையாடல் ஆடிய நட்பு மாத்திரமே யாகும்.

ஒளியுடைய தொடியணிந்த மகளிர்கள் பழைமையான யாழினை இசைத்துப் பாடவும், மிகவும் தண்மைவாய்ந்த முழவிலே குறுந்தடியினால் அடித்து ஒலிமுழக்கவும், குளிர்ந்த நறுமணம் உடைய சந்தனம் மணக்கும் அவர்களின் தோள்களைத் தழுவியவனாக, இந்நேரம் வரையிலும் பிறிதோர் இடத்திலேயே இருக்கின்றான் அவன்.

அங்ஙனமாகவும், அவனுடைய மனைவியானவள், எம்முடன் மனவெறுப்புக் கொள்ளுகின்றாள் என்று சொல்லுகின்றனர்.

வெற்றிச் சிறப்புடைய வேலினைக் கொண்டவன்; மழைத்துளிகள்போல அம்புகளைச் சொரிபவன்; மழைமேகம் போன்ற கரிய கேடகத்தினை உடையவன்; பழையன் என்பவன். அவனுக்குரிய காவிரிக்கரை நாட்டிலேயுள்ள 'போஒர்' என்னும் ஊரினைப்போன்ற, செறிந்த என்னுடைய கைவளைகளை உரிமை கொண்டவனாக, அவள் வந்து உடையச் செய்தானும் அல்லன்.

எனவே, யாம் அவன் மனைவிக்குப் பகையுடையேம் அல்லேம். தன்னைச் சேர்ந்த மகளிரது அழகிய நெற்றி பசலைபடருமாறு அவரைக் கைவிட்டுப் பிரிந்துபோகும் அவளுடைய கணவனே, அவளுடன் கூடிப் பிரியாதிருக்கும் பகையாவதற்குப் பொருத்தமுடையவன் ஆவன்.

என்று, தலைமகட்குப் பாங்காயினார் கேட்ப இல்லிடைப் பரத்தை சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. வானம் - மழை. வறன் - வறுமை. 2. நோன் - வலிமை. ஞாண் - தூண்டிற் கயிறு. கோள் - கொள்ளுதல்; தூண்டிலைக் கௌவிக் கொள்ளுதல். 3. முதிர் - மிகுதி. இலஞ்சி - நீர்நிலை. கலித்த - தழைத்த. 5. துளங்க - - அசைவுற்றுக் கலங்க. கால் - காற்று. உறுதல் - வீசி அடித்தல். 8. வேழப்புணை - வேழக்கோலாலாகிய புணை. 10. பண்டையாழ் - பழைமையான சிறப்புடைய யாழ்; ஈர்ந்தண் - மிக்க தண்மை. குணில் - சிறுகொம்பு. விதிர்ப்பு - அடித்து ஓசை எழச்சய்தல். 16. போஒர் - ஓர் ஊர். 17. செறிவளை உடைத்தல் - முன்கை பற்றிக் கூடுதலால் வளை உடைதல். 20 உடனுறைபகை - உடன் வாழும் நீங்காத பகை.

**உள்ளுறை:** காற்று குளத்திலே வீச, அதனால் தாமரை இலைகள் அசைந்து வருந்துவதுபோலத் தலைவனின் பிரிவாலான வருத்தம் தலைவிக்கு எழ அதன் பயனாக இல்லிடைப் பரத்தையான தான், அவனால் தூற்றுதலுக்கு ஆட்பட நேர்ந்தது என்றாள். புணை துணையாக நீராடுவோம், தம் நீர் விளையாடல் முடிந்ததும், அதனைக் கரையிலேயே கைவிட்டுப் போய்விடுவர். அதுபோல, என்னைக் கூடிய அவனும், என்னை இங்கேயிருந்து தனித்து வருந்துமாறு விட்டுவிட்டு போயினான் என்றனள். அவன் உறவு அவ்வளவே என்றது, அவ்ளுடைய பிரிவினாலான ஏக்கத்தை உணர்த்துவதாம்.

**விளக்கம்:** உழுது பயன்கொள்வார்போல வானம் வேண்டாத வாழ்வினர் மீன்பிடிப்போர். வானம் வேண்டாதது, இயல்பாகவே மழைவளம் உடைமையாலும் ஆம். யாழிசையும் முழவொலியும் கூறியதுஅவன் சேரிப் பரத்தையருடன் கூடிக் களித்திருக்கத்தான் வருத்தியிருப்பதை உணர்த்துவதற்காக. 'வளை உடைத்தலோ, இலன்' என்பதை அவள் கூற்றாகக் கொண்டால், 'அவன் பிரிவினால் வெறுப்புற்று வளைகளை உடைத்தலும் செய்திலேன்; அதுபற்றியே தலைவி ஐயுற்று என்னை நோகின்றாள் போலும்?' என உரைத்ததாகக் கொள்க. 'கொற்றவை கோயில் பொற்றொடி தகர்த்து' என வரும் சிலம்பின் தொடரும், 'உடைகவென் நேரிறை முன்கை வீங்கிய வளையே' எனப் பின்னும் (அகம். 336) வருவதும், காதலரைப் பிரிந்த மகளிர் வளையுடைத்து வெறுப்பு மிகுதியால் வாடி நிற்றலை உணர்த்துவன.

**பாடபேதங்கள்:** 5. இருங்கயம் தயங்க. 10. மண்டை பாழ்பட. 14. வெல்பரி. 17. உரிதினின் அயர்ந்த; உரிதினின் ஆர்ந்த.

## 187. உயர்வு நினைத்தவர்!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது: தலைமகன் பிரிவின்கண் தலைமகட்குத் தோழி சொல்லியதூஉம் ஆம்.* **சிறப்பு:** *மழவர்கள் கொண்டாடும் பூந்தொடை விழா.*

*(இல்வாழ்வின் செப்பம் பொருளின்றி அமையாது எனக் கருதித், தான் அதனை ஈட்டி வாராதிருத்தலுக்கு வெட்கப் பட்டுத், தன் தலைவியைப் பிரிந்து பாலையையுங் கடந்து வேற்று நாட்டிற்குஞ் செல்லத் துணிந்தான் ஒரு தலைவன். அதனை வந்து சொன்ன தோழிக்குத் தலைவி உரைத்ததாகவும், அன்றி அவன் பிரிந்து போய்விட்ட காலத்து வருந்தியிருந்த தலைவிக்குத் தோழி இப்படிச் சொல்லித் தேற்றியதாகவும் கொள்க.)*

**தோள்புலம்பு அகலத் துஞ்சி, நம்மொடு
நாள்பல நீடிய கரந்துஉறை புணர்ச்சி
நாண் உடைமையின் நீங்கிச் சேய்நாட்டு
அரும்பொருள் வலித்த நெஞ்சமொடு ஏகி,
நம் உயர்வு உள்ளினர் காதலர்-கறுத்தோர்
தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி,
வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன,
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்
புலம்புறும் கொல்லோ-தோழி!-சேண்ஓங்கு
அலந்தலை ஞெமையத்து ஆள்இல் ஆங்கண்,
கல்சேர்பு இருந்த சில்குடிப் பாக்கத்து,
எல்விருந்து அயர, ஏமத்து அல்கி,
மனைஉறை கோழி அணல்தாழ்பு அன்ன
கவைஒண் தளிர கருங்கால் யாஅத்து
வேனில் வெற்பின் கானம் காய,
முனைஎழுந்து ஓடிய கெடுநாட்டு ஆர்இடை,
பனைவெளிறு அருந்து பைங்கண் யானை
ஒண்சுடர் முதிரா இளங்கதிர் அமையத்து,
கண்படு பாயல் கைஒடுங்கு அசைநிலை
வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி,
நாள்வேட்டு எழுந்த நயன்இல் பரதவர்
வைகுகடல் அம்பியின் தோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே?**

தோழி! நம் காதலர், நம் தோள்களின் துன்பம் நீங்குமாறு நம்முடன் உறங்கிப் பலநாள் கடந்துபோயின. களவுப் புணர்ச்சியையும், வினையின்றி இருப்பதற்கு நாணங் கொண்டமையினாலே கைவிட்டனர். தொலைவான நாட்டிலுள்ள அரிய பொருள்களை ஈட்டிக் கொணர்வதற்குத் துணிந்த உள்ளம் உடையவருமாயினர்.

வீட்டிலே வாழும் சேவற்கோழியினது தாடி தொங்கிக் கொண்டிருப்பதுபோல விளங்கும், பிளவுண்ட ஒளியுடைய தளிரினையும், கரிய அடிமரத்தினையும் உடையது யா மரம். அவற்றைக் கொண்ட வேனல் விளங்கும் மலைப்பகுதியிலேயுள்ள காடும் காய்ந்துபோயிற்று. அதனால், அதன் முனைப் பகுதியிலேயிருந்த ஊர்மக்களும் ஊருடன் எழுந்து வெளி நாட்டிற்கு ஓடிவிட்டனர். அதனால் கெட்டழிந்துபோய்க் கிடந்த அரிய இடத்தே பனங்குருத்தை ஒடித்துத் தின்னும் பசுமையான கண்களையுடைய யானையானது, ஒளியுடைய ஞாயிறானது முதிராது இளவெயில் விளங்கும் காலைவேளையிலே, செயலொடுங்கி அசைந்தசைந்து கிடந்து உறங்கிக் கொண்டிருக்கும். அப்படி அசைந்து உறங்கும் யானையானது, வாள் போலும் வாயினையுடைய சுறாமீன்கள் உள்ள, அச்ச முடைய துறைகளைக் கடந்து, நாள்வேட்டை ஆடி வருவதற்காகப் புறப்பட்ட, நயமில்லாத பரதவர்களுடைய, கடலிலே விளங்கும் தோணியினைப் போலவும் தோன்றும். மேகம் வந்து படியும் பெரிய மலையானது குறுக்கிட்டுக் கிடக்கும் அத்தகைய பாலைவழியிலே,

மிகவுயரமாக வளர்ந்து, காய்ந்த உச்சியினையுடையதாகக் காணப்படும் ஞெமை மரங்களையுடைய, ஆள்வாடை இல்லாத இடங்களிலே, மலையைச் சார்ந்திருந்த சிலவான குடிகளையே உடைய குடியிருப்பிலே, இரவில் விருந்துண்ணப் பாதுகாப்புடன் தங்கித்தங்கித் தொடர்ந்து செல்பவர், நம்முடைய உயர்வையே கருதினர்! கருதியே அங்ஙனம் செல்லத் துணிந்தனர்!

சினந்தெழுந்தோரது வெம்மையான போர்முனையை அழித்த, கடுஞ் செலவினையுடைய குதிரைகளையும், நீண்ட கழலால் பொலிவுற்ற கால்களையும், தறுகண்மையினையும் உடையவர் மழவர்கள். அவர்கள் கொண்டாடும் பூந்தொடை விழாவின் தலைநாளைப்போலக் கொணர்ந்து இட்ட மணல் பரந்துள்ள அழகிய நம் மனையின் முற்றம், அதனால் தனிமையுற்றுத் தன் அழகு கெடுமோ?

என்று, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. புலம்பு - வருத்தம். துஞ்சி - உடன் உறங்கி; கந்து உறவாடி. 2. கரந்துறை புணர்ச்சி - களவுக் கூட்டம். 3. சேய் நாடு - தொலைவிலுள்ள நாடு. 4. வலித்த - ஈட்டிக் கொணர்தற் கான. 5. கறுத்தோர் - சினந்தோர்; பகைவர். 6. தெம்முனை - போர்முனை. 8. பூந்தொடை விழா - படைக்கலப் பயிற்சி பெற்ற இளையோரை அரங்கேற்றிக் கொற்றவைக்குச் செய்யும் விழா. 9. ஞெமிரிய - திமிர்ந்த. 9. திருநகர் - மாளிகை. 10. புலம்புறும் - தனித்து அழகு கெடும். 10. சேண் ஓங்கு - மிகவுயரமாக வளர்ந்த. 11. அலந்தலை - காய்ந்த உச்சி. 12. கல் - மலை. 12. பாக்கம் - குடியிருப்பு. 13. ஏமத்து அல்கி - பாதுகாப்பான காட்டரண்களுட் சேர்ந்திருந்து. 14. அணல் - தாடி; சிவப்பாகப் பிளவுபட்டுத் தொங்கும் தசை. 15. யா - ஒருவகை மரம், 17. கெடுநாட்டார் - கெடுதலுற்ற நாட்டினர். 18. வெளிறு - குருத்து; வெண்மைபற்றி வந்தது. 19. இளங்கதிர் அமையம் - அதிகாலைவேளை. 21. பனித்துறை - அஞ்சுதலையுடைய கடற்றுறையுமாம். 22. வேட்டு - வேட்டம் 23. நயனில் பரதவர் - வாழ்விலே பலப்பல துன்பங்களை அநுபவித்தலால் இப்படிக் கூறப்பட்டனர். 23. அம்பி - படகு.

**விளக்கம்:** நாமும் அவருடைய பிரிவின் காரணமாக வருந்தித் துன்புற, அவரும் சுரத்திடைப் பலப்பல அல்லல்களுக்கு எல்லாம் ஆட்பட்டுத் தொலைநாட்டிற்குச் சென்றனர். பொருள் தேடி வருவதனால் வரும் உயர்வுக்காகவே இப்படிச் சென்றனர் போலும் என்றனள்.

**பாடபேதங்கள்:** 10. சேய்நாட்டு. 12. கலை சேர்பு இருந்த. 16. வேனில் வைப்பிற் கானிலம் காய. 17. நெடு நாட்டாரிடை 19. விலங்கு கதிர்; விளங்கு கதிர்.

## 188. வாழிய மழையே!

**பாடியவர்:** வீரை வெளியன் தித்தனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

(வேங்கை மலர்ந்தது; தினையும் விளைந்தது. தலைவியின் கூட்டத்தை விரும்பியவனாகத் தலைமகன் வந்து ஒருபுறத்தே காத்திருக்கின்றான். இனித் தாம் சந்திக்க இயலாத தன்மையை அவனுக்குக் குறிப்பாகப் புலப்படுத்தி, வரைந்து வேட்டு மணந்து கொள்ளச் செய்யத் தோழி இப்படிக் கூறுகின்றாள்.)

**பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ!**
**இருண்டுஉயர் விசும்பின் வலன்ஏர்பு வளைஇப்,**
**போர்ப்புஉறு முரசின் இரங்கி, முறைபுரிந்து**
**அறன்நெறி பிழையாத் திறன்அறி மன்னர்**
**அருஞ்சமத்து எதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்**

**கழித்துஎறி வாளின், நளிப்பன. விளங்கும்**
**மின்னுடைக் கருவியை ஆகி, நாளும்**
**கொன்னே செய்தியோ, அரவம்? பொன்னென**
**மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்.**
**பொலிந்த ஆயமொடு காண்தக இயலித்,**

**தழலை வாங்கியும், தட்டை ஓப்பியும்.**
**அழலேர் செயலை அம்தழை அசைஇயும்,**
**குறமகள் காக்கும் ஏனல்**
**புறமும் தருதியோ? வாழிய, மழையே!**

*பெரிய கடலிலே நீர் முகந்து கொண்டு பெருங் கூட்டமாக திரண்டு வருகின்ற மேகமே!*

*உயர்ந்த வானிலே வலமாக எழுந்த வளைத்துக்கொண்டு இருண்டிருக்கின்றாய். தோற்போர்வையுற்ற முரசினைப்போல இடிமுழக்குகின்றாய். முறையாக ஆட்சிபுரிந்து, அறநெறிகளினின்றும் பிழையாது விளங்கும், போர்த்திறன் அறிந்த மன்னரது அரிய போர்க்களத்திலே, எதிர்த்துப் போரிடும் பேராண்மை மிக்க வீரர்கள், தம் உறையினின்றும் உருவிய வாளினைப் போன்று, செறிவுகொண்டதாக விளங்கும் மின்னலின் தொகுதியையும் உடைய ஆயினை. நீ நாளும் செய்யும் இந்த ஆரவாரம் எல்லாம் வீணுக்குத்தான் செய்கின்றாயோ?*

*பொன்போல அழகுடன் மலர்ந்த வேங்கைப் பூக்களாலாகிய செறிவுற்ற மாலையினைத் தரித்து, பொலிவுடன் விளங்கும் தன்னுடைய ஆயத்தாருடன், காண்பதற்கு இனிதான ஒயிலுடன் நடந்து, தழலினைச் சுற்றியும் தட்டையினை அடித்தும் தினை கவரவரும் பறவைகளைக் கடிந்து, தீக்கொழுந்துபோன்ற அசோகின் அழகிய தழையினாலான தழையுடையை உடுத்த, குறவர்மகளாகிய எம் தலைவி, காத்துக்கொண்டிருக்கும் தினைப்புனத்தின் பக்கமும் சென்று மழை பெய்வாயோ? நீ வாழ்க!*

*என்று, இரவில் தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** 1. கொண்மூ - மேகம். 2. வளைஇ - சுற்றி வளைத்து. 3. போர்ப்புஉறு - தோலால் போர்த்திருத்தல் பொருந்திய. 4. திறன் அறிதல் - ஆட்சிக் கூறுபாட்டினை அறிதலும் ஆம். 5. பெருஞ்செய் ஆடவர் - பெரிய செயலாற்றலுடைய வீரர். 6. கழித்தெறிவாள் - உறையினின்றும் உருவி வீசிப் போரிடும் வாள். 10. காண்தக இயலி - காண்பதற்குத் தகுதியுடையதாக அழகுடன் நடந்து.

**விளக்கம்:** களவிலே ஒழுகிவருகின்ற தலைமகன் வரைந்து கொள்ளலிலே மனம் கொள்ளாதவனாக, அவனை அதற்குத் தூண்டுவாள், மழையைச் சுட்டி உரைப்பதுபோலச் சொல்லுகின்றாள். மேகங்களின் ஆரவாரம் போல ஊரலரும் வீணே மிகுந்தது; வேங்கை பூக்க மணங்கொள்ளும் காலமும் வந்தது; தலைவியை இனி நீ களவிலே துய்த்தல் அரிது என்றனள். இதனால் வரைவு கடாவியதாகக் கொள்க.

**மேற்கோள்:** 'சுட்டு' என்னும் உள்ளுறைக்கு இச் செய்யுளைக் காட்டிக், "கொன்னே செய்தியோ அரவம் என்றதனால், பயனின்றி அலர் விளைத்தியோ எனவும் கூறி, ஏனற் புறமும் தருதியோ என்பதனால், வரைந்து கொள்வையோ எனவும் கூறித், தலைமகனை மழைமேல்வைத்துக் கூறலின் சுட்டாயிற்று. கொன்னே செய்தியோ என்றதனால், வழுவா யினும் வரைதல் வேட்கையாற் கூறினமையின் அமைந்தது.' என, 'உடனுறை உவமம் சுட்டு நகை சிறப்பென' என்னுஞ் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் கூறினர்.

**பாடபேதங்கள்:** 1. பல் கிளைக் கொண்டு. 11. தட்டை ஓச்சியும். 12. அந்தழை தைஇயும்.

## 189. ஊரும் இழந்ததே!

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய செவிலி சொல்லியது.

(தலைமகள் தன் காதலனுடன் உடன்போக்கிலே சென்று விட, அவள் சென்றதறிந்து வருந்துகின்றாள் செவிலித்தாய். மகள் செல்லவிருக்கும் பாலைவழியின் கடுமையின் நினைவும், அவளைப் பிரிந்து வாடியிருக்கும் தன் வருத்தமும் மிகுதியாக 'அவளை இந்த ஊரே இழந்துவிட்டதே' எனப் புலம்புகிறாள்.)

**பசும்பழப் பலவின் கானம் வெம்பி,**
**விசும்புகண் அழிய, வேனில் நீடிக்,**
**கயம்கண் அற்ற கல்லோங்கு வைப்பின்**

நாறுஉயிர் மடப்பிடி தழீஇ, வேறுநாட்டு
விழவுப்படர் மள்ளரின் முழவெட்டுத்து உயரிக்,
களிறுஅதர்ப் படுத்த கல்லுயர் 'கவாஅன்
வெவ்வரை அத்தம் சுட்டிப்' பையென,
வயல்அம் பிணையல் வார்ந்த கவாஅன்
திதலை அல்குல் குறுமகள் அவனொடு
சென்று பிறள் ஆகிய அளவை, என்றும்
படர்மலி எவ்வமொடு மாதிரம் துழைஇ,
மனைமருண்டு இருந்த என்னினும், நனைமகிழ்
நன்ன ராளர் கூடுகொள் இன்னியம்
தேர்ஊர் தெருவில் ததும்பும்
ஊர்இழந் தன்று, தன் வீழ்வுஉறு பொருளே.

முன்னர்ப் பசுமையான பழங்களைக் கொண்ட பலாமரங்களை உடையதாயிருந்த காடும் இப்போது வெம்பிக் கிடக்கும். மேகம் வானத்திலே தோன்றாது ஒழிதலால், வேனிலின் வெப்பமும் மிகுதியாயிருக்கும். குளங்கள் எல்லாம் நீரற்று வறண்டு போகும். கற்கள் நிறைந்த அத்தகைய வழியிடங்களிலே, பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கும் இளைய தம் பிடிகளைத் தழுவியவாறே, களிறுகள், தங்கள் முழவுகளை எடுத்து உயர்த்துக்கொண்டு, வேற்றுநாட்டு விழவினை நினைத்துச் செல்லும் மள்ளர்களைப்போல நெறிப்படுத்திச் சென்று கொண்டிருக்கும். மலைகள் உயர்ந்து விளங்கும் கொடிய பக்கமலையைச் சார்ந்த, இத்தகைய சுரத்தினைக் கடந்து செல்லத் துணிந்தனள் அவள்.

வயலைக் கொடியினாலாகிய அழகிய தழையுடை தாழ்ந்த துடைகளை யுடையவள்; தேமல் படர்ந்திருக்கும் அல்குல் தடத்தினை உடையவள்; எம் இளைய மகள், அவள், மெல்லென அவனோடு சென்றனள். எம்மை மறந்து பிறள் ஒருத்தியாகவும் ஆயினள். அவள் அப்படியாயின பொழுதிலே, எக்காலத்தும் பெருகி நிறையும் மனத்துயரோடு, திசையெல்லாம் தேடித் தேடி நொந்து வீட்டின்கண் மயங்கியவளாக இருப்பேன் யான். அப்படியிருந்த என்னைக் காட்டிலும், கள்ளுண்டு மகிழும் நல்ல இசைவாணர்களாகிய பாணர்கள் ஒன்றுகூடி ஒலிக்கும்இனிய வாத்தியங்கள், தேர்கள் ஓடும் பெருந்தெருவிலே இடையறாது ஒலிக்கும் இவ்வூரானது, தனக்கு விருப்பம் மிக்கதா யிருந்தவொரு சிறந்த பொருளினை இழந்ததாயிருக்கின்றதே!

என்று, மகட்போக்கிய செவிலித்தாய் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *2. விசும்பு கண்ணழிதல் - மேகம் வானத்து இல்லாது போதல். 4. நாடுயிர் மடப்பிடி - நெட்டுயிர்ப்புடன் விளங்கும் இளைய பிடி யானை. 8. கவா அன் - துடைகள். 11. மாதிரம் - திசைகள். 11. துழைஇ - துழாவித் தேடி. 15. வீழ்வு - விருப்பம்.*

**விளக்கம்:** *மள்ளர்கள், களிறுகள் நெட்டுயிர்ப்புவிடும் தம் பிடிகளை அணைத்துச் செல்வதுபோலத் தம்முடைய விறலியரை அணைத்துக்கொண்டும், களிறுகள் பலாப் பழத்தினை எடுத்துச் செல்வதுபோல முழவுகளைத் தாம் எடுத்துக் கொண்டும், வேற்றுநாட்டு விழாவிலே ஆடலை விரும்பிச் சென்று கொண்டிருப்பவர் என்க. ஊர் இழந்தது என்றது, தானன்றியும் ஆயமும் சுற்றமும் போன்ற பிறரும் அவள் பிரிவுக்கு வருந்துதலை உரைத்ததாம்.*

## 190. அலையல் அன்னை!

**பாடியவர்:** *உலோச்சனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தோழி, செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது.*

*('கானற்சோலையிலே கண்டான் ஒருவனுடன் தன் மகள் களவு ஒழுக்கத்தே ஈடுபட்டிருக்கின்றனள்' என, ஊரிலே எழுந்த அலர் உரையால், செவிலித்தாய் மகளைக் கடிந்து கொண்டனள். இற்செறிப்பு முதலிய செய்யவும் தொடங்கினள். அதனைக் கண்டதோழி, குறிப்பினாலே தன் தலைவியின் காதலை அவட்கு உரைத்து அறத்தோடு நிற்கின்றனள்.)*

**திரைஉழந்து அசைஇய நிரைவளை ஆயமொடு**
**உப்பின் குப்பை ஏறி எற்பட,**
**வருதிமில் எண்ணும் துறைவனொடு, ஊரே**
**ஒருதன் கொடுமையின் அலர்பா டும்மே;**
**அலமரல் மழைக்கண் அமர்ந்து நோக்காள்**

**அலையல்-வாழி! வேண்டு, அன்னை!-உயர்சிமைப்**
**பொதும்பில், புன்னைச் சினைசேர்பு இருந்த**
**வம்ப நாரை இரிய, ஒருநாள்,**
**பொங்குவரல் உதையொடு புணரி அலைப்பவும்,**
**உழைக்கடல் வழங்கலும் உரியன்; அதன்தலை**

**இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி**
**வயச்சுறா எறிந்தென; வலவன் அழிப்ப.**
**எழிற்பயம் குன்றிய சிறை அழி தொழில்**

**நிரைமணிப் புரவி விரைநடை தவிர,**
**இழுமென் கானல் விழுமணல் அசைஇ,**

**ஆய்ந்த பரியன் வந்து, இவண்**
**மான்ற மாலைச் சேர்ந்தன்றோ இலனே!**

*வாழ்க அன்னையே! யான் சொல்வதையும் விரும்பிக் கேட்பாயாக:*

*ஒரு நாள், பொங்குதலுடன் வருகின்ற ஊதைக்காற்றோடு, அலைகளும் வந்த கரையிலே மோதிக்கொண்டிருந்தன. உயர்ந்த உச்சியையுடைய கடற்கரைச் சோலையிலேயுள்ள, புன்னை மரத்தின் கிளையிலே வந்து தங்கியிருந்த, புதிய நாரை யொன்று அஞ்சிப் போகுமாறு, தலைவன் ஒருவன், கடலோரத் திலே தேரூர்ந்து வருவதற்கும் உரியவனானான்.*

*அதன்மேலும், பெரிய கழியினையுடைய ஆற்றின் புகுமிடத்தே, அவன் தேர் கடந்து வரும்போது, வலிய சுறாமீன் தம் உடம்பிற் பொருந்தத் தாக்கி எறிந்ததென்று, தேர்க் குதிரைகள் தளர்ந்தன. தேர்ப் பாகன் தேரின் செலவை நிறுத்தினான். எழுச்சியும் பயனும் குன்றியனவும், பூட்டு அவிழ்ந்த நிலையினை உடையனவுமாக நிரைத்த மணிமாலைகள் பூண்ட குதிரைகளும், விரைந்து செல்லும் தம் நடை ஒய்ந்தவாய்த் தங்கின. 'இழும்' என்னும் ஒலியினையுடைய கானலிடத்தே, சிறந்த மணலிலே அத் தலைவன் வந்து தங்கினான். அவ்வளவேயன்றி, அவன் சிறந்த குதிரைகளையுடையவனாக இவ்விடத்தே வந்து, மயங்கிய மாலைவேளையிலே, தலைவியுடன் கூடிச் சேர்ந்திருந்தவன் அல்லன்.*

*அன்று அவ்வாறு வந்திருந்த அவனை, நின் மகள் சுழலும் தன் குளிர்ந்த கண்களால், விருப்பமுடன் பார்த்தவளுங்கூட அல்லள்! அங்ஙனமாகவும்,*

*அலைகளிலே நீந்தி விளையாடினமையால் தளர்ச்சியுற்ற, நிறைந்த வளையினையுடைய மகளிர் கூட்டத்தினை, உப்பு மேட்டிலே ஏறிநின்று, இருள்படரும் வேளையிலே, கரை நோக்கி வரும் படகுகளை எண்ணும் துறைவனான அவனோடும் சார்த்தி, இந்த ஊரானது, ஒப்பற்ற தன் கொடுமைக் குணத்தின் காரணமாக, அலர்கூறித் தூற்றும். அதனை மெய்யெனக் கொண்டு, அவளை நீயும் வருத்தாதிருப்பாயாக.*

*என்று, தோழி செவிலித்தாய்க்கு எடுத்துக்கூறி அறத்தொடு நின்றனள் என்க.*

**சொற்பொருள்:** *1. அசைஇய - தளர்ச்சியுற்ற. 2. குப்பை - மேடு. எற்பட - கதிர் மறைய; கருக்கில் வேளை. 4. 'ஒரு தன் கொடுமையின் - ஒப்பற்ற தன் கொடுமையின் காரணமாக. 5. அலமரல் - சுழல்தல். 6. சினை - கிளை. 8. இரிய - அஞ்சிப் பறந்துபோக. 9. ஊதை - வாடைக்காற்று. புணரி - அலை. 10. உழைக்கடல் - கடலோரத்தில். 12. வயச்சுறா - வலிமையுடைய சுறா. 13. எழில் - அழகு. பயம் - செல்லலாகிய பயன். 17. மான்ற - மயக்கமுடைத்தாகிய.*

**விளக்கம்:** *அவன் வந்தான், தங்கியிருந்தான் என்பதல்லாது, உப்புமேட்டிலேறி நின்று வருதிமில் எண்ணும் அவனோடு, திரை உழந்து தளர்ந்துவரும் எம்மையும் தொடர்புப்படுத்திப் பேசுதல் பொய்யென்றால், இவை யாவும் அவை நிகழ்ந்தன எனக் குறிப்பாற் புலப்படுத்தியதும் ஆகும். இதனால், தலைவி அவன்பாற் காதல் கொண்டனள் என்பதைச் செவிலி உணர்வாள்.*

## 191. முடிந்தால் சொல்லுவாய்!

**பாடியவர்:** *ஒரோடகத்துக் கந்தரத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவு அழுங்கியது.*

*(பொருளார்வம், தன் காதலியைப் பிரிந்து தொலைநாடு செல்வதற்குத் தூண்டிற்று. உள்ளமோ, பிரிவினைத் தாளாது அவள் படும் வேதனையின் நினைவினைச் சுட்டிப் போக்கைத் தடுத்தது. இரண்டு அலைமோதும் நெஞ்சினனான அவன், தன் நெஞ்சுடன் இவ்வாறு கூறுகின்றான்.*

**அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ**
**எரிஇதழ் அலரியொடு இடைபட விரைஇ,**
**வண்தோட்டுத் தொடுத்த வண்படு கண்ணி,**
**தோல்புதை சிரற்றுஅடிக், கோலுடை உமணர்**
**ஊர்கண் டன்ன ஆரம் வாங்கி,**

**அருஞ்சுரம் இவர்ந்த அசைவுஇல் நோன்தாள்**
**திருந்துபகட்டு இயம்பும் கொடுமணி, புரிந்துஅவர்**
**மடிவிடு விளையொடு, கடிதுஎதிர் ஓடி,**
**ஓமைஅம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்கு**
**ஏமம் செப்பும் என்றூழ் நீள்இடை,**

**அரும்பொருள் நசைஇப், பிரிந்துஉறை வல்லி**
**சென்று; வினை எண்ணுதி ஆயின், நன்று.**
**உரைத்திசின் வாழி-என் நெஞ்சே!-'நிரைமுகை**

**முல்லை அருந்தும் மெல்லிய ஆகி,**
**அறல்என விரிந்த உறல்இன் சாயல்**

**ஒலிஇருங் கூந்தல் தேறும்' என,**
**வலிய கூறவும் வல்லையோ, மற்றே?**

*வாழிய என் நெஞ்சமே!*

*பாலைநிலத்தின் பாதிரியிலே மலர்ந்த தலையிலே துய்யினையுடைய அதன் புதுப்பூக்களை, எரியும் நெருப்பினைப் போலத் தோன்றும் இதழ்களையுடைய அலரிப்பூக்களுடன் இடையிடையே கலந்து, வெண்மையான தாழம்பூவின் தோட்டிலே தொடுத்துக் கட்டிய வண்டுமொய்க்கும் கண்ணியைத் தரித்தவர்களாகவும், காலிலே தோற்செருப்புகள் அணிந்து ஒலியெழ நடப்பவர்களாகவும், கையிலே கோலினை உடையவர்களாகவும் உமணர்கள் சென்று கொண்டிருப் பார்கள். ஊர் திரண்டு வருவதுபோலக் கூட்டமாகச் சேர்ந்துவரும் அவர்கள், தம் வண்டியினை இழுத்துப் பிடிப்பவர்களாக, ஏறுவதற்கு அரியதான மேடுகளிலே ஏறுவர். அப்போது, தளர்ச்சியில்லாத வலிமையான கால்களையுடைய, வண்டியிலே பூட்டப்பட்டிருக்கும் எருமைக் கடாக்களின் வளைந்த மணிகள் ஒலி செய்யும். அத்துடன், அவற்றைச் செலுத்தும் அவர்கள் தம் வாயை மடித்து எழுப்பும் சீழ்க்கை ஒலியும் சேர்ந்து காட்டிலே ஆரவாரம் எழும் ஓமை மரங்களையுடைய காட்டினூடே, அஞ்சிஅஞ்சி வந்து கொண்டிருக்கும் புதியவர்களுக்கு, அந்த ஒலிகள் தமக்குப் பாதுகாப்பு வருகிறதென்பதை எதிர்ப்பட்டுச் சென்று கூறுவதாயிருக்கும். வெப்பம் மிகுந்த நெடிய அத்தகையை காட்டு வழியிலே, அருமையுடையதான பொருளினைத் தேடி வருவதற்கு விரும்பி, நம் தலைவியைப் பிரிந்து உறைதலான வன்மையுடன் விடாதுசென்று பொருளீட்டி வரவும் நீ கருதினையானால் -*

*உறுதற்கு இனிமையான சாயலுடன், நிரைத்த முல்லை அரும்புகள் சூடியதாக, மென்மையான கருமணல்போல விரிந்த, தழைத்த கருங்கூந்தலையுடைய நம் தலைவியானவள், நம்மைப் பிரிந்து தேறுதல் கொண்டிருப்பவளாவாள் என்று கருதி, அவளிடம் சென்று பிரிவுபற்றிய வலிய சொற்களைக் கூறவும் நீ வன்மை உடையையோ? அதனை உடையையாயின், நன்மை பொருந்தச் சென்று நீயே சொல்லுவாயாக!*

*என்று, தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செல வழுங்கினான் என்க.*

**சொற்பொருள்:** 2. எரி - நெருப்பு; அதன் நிறமானது அலரியின் நிறத்துக்கு உவமையாகச் சொல்லப்பட்டது. 3, தோடு - தாழைப் பூவின் இதழ். 4. தோல் - செருப்பு. சிரற்றடி - ஒலிக்கும் அடி; சிதறிய அடியும்: ஆம், 6 அசைவில் தளர்ச்சியில்லாத. 7. இயம்பும் - ஒலிக்கும். 10. என்றூழ் - வெப்பம். 16. ஒலி - தழைத்த.

**விளக்கம்:** உமணர்கள் வரும் பேரொலி. 'இனிப் பயமில்லை' என்ற ஒரு பாதுகாப்பைப் புதியவர்களுக்குத் தரும் என்பதன் மூலம், காட்டின் கடத்தற்கரிய தன்மையைக் கூறினான். பிரிவினை அவள்பாற் சொல்லி ஆற்றியிருக்கச் செய்யமுடியாத நிலைமையைக் கூறுவான், 'வலிய கூறவும் வல்லையோ?' என்றான்.

**பாடபேதங்கள்:** பாடியவர் பெயர்; உரோடகக் கவுணியன் சேந்தன். 3. வண்டோட்டு. 11. வவ்வி. 13. உரையினி.

## 192. விரைவில் மணப்பாய்!

**பாடியவர்:** பொதும்பில் கிழான் வெண்கண்ணனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** தோழி, தலைமகனைச் செறிப்பு அறிவுறீஇ இரவுக்குறி மறுத்து; செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது என்பதும் பாடம்.

(தலைவனும் தலைவியும் பகற்குறியிலே சந்தித்த தமது களவு உறவினைத், தினைமுற்றித் தலைவி புனங்காவல் நீங்கிய பின்னரும், இரவுக்குறியிலே ஈடுபடுதலின் மூலம் நீட்டித்துக் கொள்ள விரும்புகின்றனர். அதனை நெடுகவும் தொடரவிடாது, விரைவிலே அவர்களை மணவாழ்விலே ஈடுபடுத்த விரும்புகிறாள் தோழி. அவள் சொல்லியது இது.)

**மதிஇருப் பன்ன மாசுஅறு சுடர்நுதல்**
**பொன்நேர் வண்ணம் கொண்டன்று; அன்னோ!**
**யாங்குஆ குவள்கொல் தானே? விசும்பின்**
**எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்,**
**செவ்வாய்ச், சிறுகிளி சிதைய வாங்கி,**

**பொறைமெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்**
**வளைசிறை வாரணம் கிளையொடு கவர,**
**ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன; பானாள்**
**வந்து அளிக்குவை எனினே மால்வரை**
**மைபடு விடரகம் துழைஇ, ஒய்யென**

**அருவிதந்த, அரவுஉமிழ், திருமணி**
**பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின்**

**இரவும் இழந்தனள்; அளியள்-உரவுப்பெயல்**
**உருமிறை கொண்ட உயர்சிமைப்**
**பெருமலை நாட-நின் மலர்ந்த மார்பே.**

*கடுமையான மழையுடனே, முழங்கும் இடிகளும் தங்கு தலை உடையதான, உயர்ந்த முடிகளையுடைய பெரிய மலைகள் கொண்ட நாட்டினனே!*

*வானிலே இட்டுத்தோன்றுகின்ற எய்யப்பெறாத அழகிய வில்லினைப்போல விளங்கும் பசுமையான ஆரத்தைக் கழுத்திலே கொண்ட, சிவந்த வாயையுடைய சிறு கிளியானது, தினைப்பயிர் சிதையும்படியாகக் கொய்து, சுமந்து செல்ல இயலாமல் போட்டுவிட்ட, புல்லிய புறத்தினையுடைய பெரிய தினைக்கதிரினை, வளைந்த சிறகுகளையுடைய கானங்கோழி யானது, தன் இனத்துடனேகூடிக் கவர்ந்து கொண்டுபோகும். அது நிகழுமாறு, தினையும் வளைந்து தலைதாழ்ந்த பெரிய கதிர்களை இக்காலத்தே ஈன்றன.*

*நள்ளிரவிலே நீயும் வந்து அவளுக்கு அருள்வாய் என்பாயானால், பெரிய மலையின் இருள் பொருந்திய குகையிடங்களைத் துழாவி, அருவியின் ஒய்யென்ற ஒலியுடனே கொண்டுதந்த, பாம்பு உமிழ்ந்த அழகிய மணிகள், பெரிய மலைச்சாரலிலேயுள்ள எமது சிற்றூரின் தெருக்களை ஒளியுடையதாகச் செய்வதனால், நின் அகன்ற மார்பின் கூட்டத்தினை, அவள் இரவினும் இழந்தவளாவாள்.*

*பிறைமதியினைப் போன்ற, மாசற்ற ஒளியுடைய அவள் நெற்றி, அதனால் பொன்னையொத்த நிறத்தினையும் கொண்டது அந்தோ! அவள் எங்ஙனம் ஆவாளோ? இரங்கத் தக்கவளே!*

*என்று, தோழி செறிப்பு அறிவுறீஇ வரைவுகடாயினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. மதியரும்பு - பிறைமதி. சுடர் நுதல் - ஒளிசிதறும் நெற்றி. 2. பொன்நேர் வண்ணம் கொண்டது. பசலை பாய்ந்தது. 4. வரிவில் - வானவில், 5. செவ்வாய் - சிவந்தவாய். 6. பொறை - பொறுத்தல்; சுமத்தல். 7. வாரணம் - கானங்கோழி. 8. இறங்குபொறை உயிர்த்தன - கதிர்கள் முற்றி வளைந்து தாழ்ந்தன. 10. மைபடு - இருள்படு. பிடவரகம் - குகையிடம். 12. மறுகு - தெரு. 13. உரவுப் பெயல் - கடும் பெயல்.*

**விளக்கம்:** *'ஏனல் பொறை உயிர்த்தன' என்றதால், தலைவி இற்செறிக்கப் பட்டமை கூறினாள். அதனால் பகற்குறி*

வாய்த்தலும் இல்லை என்றாள். இரவில் மறுகு அரவு உமிழ் மணியால் விளக்குறும் என்றதால், இரவுக்குறி இடையீடு உணர்த்தி அதுவும் அரிது என்றனள். அதனால், தலைவியின் ஆற்றாமை கூறினாள், நெற்றி பொன்னிறங் கொண்டது என்றாள். ஆகவே விரைவில் அவன் வந்து மணத்தலே செய்யத்தக்கது என்பது குறிப்பு.

**பாடபேதங்கள்:** *பாடியவர்: வெங்கண்ணன். 1. மதியிருப் பன்ன. 6. பின்புறப். 8. இறங்கு குரல் இறுத்தன, இறங்கு பொறை இறுத்தன. 10. வியலகம் துழைஇ.*

## 193. கைவிடல் ஆற்றேன்!

**பாடியவர்:** *மதுரை மருதனிள நாகனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவு அழுங்கியது.*

*(பொருளார்வத்தால் வேற்றுநாடு செல்ல எண்ணிய தன் நெஞ்சிற்குத் தலைவன் ஒருவன், இவ்வாறு கூறியவனாகத், தான் போகும் எண்ணத்தையே கைவிட்டு விடுகிறான்.)*

**கானுயர் மருங்கில் கவலை அல்லது,**
**வானம் வேண்டா வில்லேர் உழவர்**
**பெருநாள் வேட்டம், கிளைஎழ வாய்த்த**
**பொருகளத்து ஒழிந்த குருதிச் செவ்வாய்ப்,**
**பொறித்த போலும் வால்நிற எருத்தின்;**

**அணிந்த போலும் செஞ்செவி, எருவை,**
**குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து**
**அருங்கவட்டு உயர்சினைப் பிள்ளை ஊட்ட,**
**விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி**
**கொல்பசி முதுநரி வல்சி ஆகும்**

**சுரன்நமக்கு எளிய மன்னே; நல்மனைப்**
**பன்மாண் தங்கிய சாயல், இன்மொழி,**
**முருந்தேர் முறுவல், இளையோள்**
**பெருந்தோள் இன்துயில் கைவிடு கலனே.**

*நெஞ்சமே! வில்லாகிய தம்முடைய ஏரினாலே, கொள்ளை யிடலாகிய உழவைசெய்து வாழ்பவர் ஆறலைப்போர். அவர் காட்டிடத்தே உயரமான பகுதிகளிலேயுள்ள கவர்த்த வழிகளை அல்லாமல், மழை வளத்தினை ஒருபோதும் வேண்டுவதில்லை. அவர், தம் இனத்துடனும் எழுச்சிகொள்ள வாய்த்த பெரிய நாள்வேட்டையிலே, போர்க்களத்திலே செத்து வீழ்ந்தவர் களுடைய குருதியை உண்டாமையால், எருவைச் சேவல் சிவந்த வாயுடையதாயிற்று. பொறித்து வைத்தாற்போலும் புள்ளிக*

ளோடு கூடிய வெண்ணிறம் கொண்டது அதன் கழுத்து. அதன் சிவந்த காதுகள், ஆபரணமாகச் செய்து சூட்டியது போல அழகுடன் விளங்கும். குட்டையான மலையிலே, நெடிய வளர்ந்த அடிமரத்தினையுடைய மாமரத்தின், அரிய கவட்டினின்றும் எழுந்த உயர்ந்த கிளையிலேயுள்ள, தன் குஞ்சினை உண்பிக்க அது விரைந்து முயலும்போது, அக்குஞ்சின் வாயினின்றும் வழுக்கி வீழ்ந்த கொழுத்த கண்ணின் ஊன் துண்டு, பழைய பசியினை உடைய கிழட்டு நரிக்கு உணவாகும். அத்தகைய கொடிய காடும் கடந்து செல்வதற்கு நம்மளவில் எளியதே. ஆயினும்,

நமது நல்ல வீட்டிலேயுள்ள, பலவகையான மாண்புகளையும், நிலைபெற்ற சாயலினையும், இனிய பேச்சினையும், மயிலிறகுக் குருத்தினைப் போன்ற பல்வரிசையினையும் உடைய இளமைப் பருவத்தினளாகிய நம் தலைவியின், பெருத்த தோள்களைத் தழுவிப் பெறும் இனிய துயிலினை, யான் கைவிடுவதற்கு ஆற்றாதே இருக்கின்றேனே!

என்று, பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவழுங்கினான் என்க.

**சொற்பொருள்:** கான்உயர் மருங்கு - காட்டிடத்தேயுள்ள மேட்டுப் பகுதிகள். கவலை - கவறுபட்ட வழி. 2. வானம் - மழை. 3. பெருநாள் வேட்டம் - பெரிதான நாள்வேட்டம். 5. வானிறம் - வெண்மை நிறம். எருத்து - கழுத்து. 6. குறும் பொறை - குட்டையான மலை. 9. வாய் வழுக்கிய - குஞ்சுகளின் வாயினின்றும் வழுக்கிய. 19. தொல் பசி - பழம்பசி; பலநாள் உணவற்றதால் வருவது. வல்சி - உணவு.

**விளக்கம்:** ஆறலை கள்வர், வழிவருவாரைக் கொள்ளையிட்டே வாழ்பவராதலின் மழைவளம் வேண்டாராயினர். எருவை, தன் குஞ்சுக்கு இறந்தவர்களின் கண்ணினைக் கொண்டு கொடுக்கும் என்பர். தரன் இடம்விட்டு நகர்ந்து செல்லமாட்டாது எருவைக் குஞ்சின் வாயினின்றும் வழுக்கிவிழும் ஊனைத்தின்று உயிர்வாழும் முதுநரிபோலத், தானும் பொருள்தேட இயலாதவன் அன்று; காதலியைப் பிரிய மனமில்லாதது பற்றியே செல்லத் துணிந்திலேன் என்றான். வழியேதத்திற்கும் அஞ்சாது, ‘எளிய’ என்னும் அவன், தன் காதலியைப் பிரிய ஆற்றாத உள்ளம் உடையவனாயிருத்தல் வாழ்வியலின் சிறந்த பண்பைப் புலப்படுத்தும்.

**பாடபேதம்:** 19. கொல்பசி முது நரி.

## 194. கார் காலம் இதுதானே!

**பாடியவர்:** இடைக்காடனார். **திணை:** முல்லை. **துறை:** பருவங்கண்டு ஆற்றாமை மீதூரத் தலைமகள் சொல்லியது.

*(வேந்து வினைமுடித்தலுக்காகத், தன்னுடைய காதல் தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு சென்றவன் தலைவன். அவளிடம் விடைபெறுங் காலத்திலே, கார்காலத்து வருவதாக உரைத்த உறுதியை அவன் பொய்த்துவிட்டான். கார்காலம் வந்தும், அவன் வரவை அவள் பெற்றிலள். அதனை நினைந்து இப்படித் தன் தோழியிடம் கூறிப் புலம்புகிறாள்-)*

**பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை,**
**ஏர்இடம் படுத்த இருமறுப் பூழிப்**
**புறமாறு பெற்ற பூவல் ஈரத்து,**
**ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்,**
**வித்திய மருங்கின் விதைபல நாறி,**

**இரலைநல் மானினம் பரந்தவை போலக்,**
**கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்,**
**கறங்குபறை சீரின் இரங்க வாங்கி,**
**களைகால் கழீஇய பெரும்பீபன வரகின்**
**கவைக்கதிர் இரும்புறம் கதூஉ உண்ட,**

**குடுமி நெற்றி, நெடுமாத் தோகை**
**காமர் கலவம் பரப்பி, ஏமுறக்**
**கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த**
**வல்லிலைக் குருந்தின் வாங்குசினை இருந்து,**
**கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்**

**கார்மன் இதுவால்-தோழி!-போர்மிகக்**
**கொடுஞ்சி நெடுந்தேர் பூண்ட, கடும்பரி,**
**விரிஉளை, நல்மான கடைஇ**
**வருதும்' என்று, அவர் தெளித்த போழ்தே.**

*தோழி! 'போர் மிகுதியாக மூண்டுவிட்டது. அதற்கு யான் செல்லவேண்டும். கொடுஞ்சியையுடைய நெடிய தேரிலே பூட்டம் பெற்றிருக்கும், விரைந்து செல்லும் இயல்பினையும் விரிந்த பிடரிமயிரினையும் உடைய நல்ல குதிரைகளைச் செலுத்திக் கொண்டு, சென்று கார்காலத்தில் தவறாது மீண்டு வருவேன்' என்று கூறி, அந்நாள் அவர் நம்மைத் தெளிவித்தாரே!*

*பெருமழை பெய்த, பேரிருள் புலர்கின்ற காலைப் பொழுதிலே, ஏர்களால் உழுது இடம்படுத்த, இருமருங்கிலும்*

புழுதி கீழ்மேலாகப் புரண்டிருக்கும் செம்மண்நிலத்தின் ஈரத்திலே, ஊனைக் கிழித்தாற்போன்ற சிவப்பான மேட்டு நிலத்தைப் பிளந்து சென்ற, நெடிய உழவுசாலிடத்து, விதைத்த இடங்களிலே, விதைகள் பலவும் முளைத்து வளர்ந்தன. நல்ல கலைமானின் கூட்டமானது பரவி நிற்பதுபோலக் கொம்புடைய தலைக்குடைகளைச் சூடிய உழவர்கள், ஒலிக்கும் பறையின் ஒலி முறையோடு, பூமியிலே இறங்கும்படி களைக்கொட்டுக்களை இழுத்து வாங்கிக் களைவெட்டித் தூய்மைசெய்த பெரிய புனத்திலே, வரகுகளும் விளைந்தன. கவைத்த வரகுக்கதிர்களின் கரிய புறத்தினைப் பற்றிக், குடுமிபொருந்திய தலையையுடைய நீண்ட பெரிய தோகையினவான மயில்கள் உண்ணும், உண்ட அவை, தம் அழகிய தோகையை விரித்து, இன்பமுறக் கொல்லை யிலே வேலை செய்யும் உழவர்கள் கூழ் உண்ணுவதற்கு நிழலுக்காக விட்டுவைத்திருக்கின்ற, வன்மையான இலையினை யுடைய குருந்தமரத்தின் வளைந்த கிளையிலேயிருந்து கொண்டு, கிளிகளை ஓட்டும் குறமகளிரின் ஒலி போலத் தம் துணையை விளித்தும் அகவிக்கொண்டிருக்கும். அந்தக் கார்காலம் என்பதும் இதுதானோ?

என்று, பருவங் கண்டு ஆற்றாமை மீதூரத் தலைமகள் தோழிபாற் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. பேருறை - பெரும் பெயல். தலைஇய - பெய்யத் தொடங்கிய. 4. சுவல் - செம்மண் நிலம். 5. நாறி - முளைத்து. 7. கோடுடைத் தலைக்குடை - பனையோலையால் முடையப்பட்ட கொம்புடைய குடை. 3. பறைச்சீரின் இறங்க வாங்கி - பறையின் தாளச் சீருக்கு ஒத்தாற்போல களைக் கொட்டால் கொத்தி இழுத்து. 9. களைகால் கழீஇய - களையை வேரோடும் களைந்த.10. கவைக் கதிர் - சுவையுடையகதிர்.11. குடுமி - கொண்டை.12. காமர் கலவம் - அழகிய தோகை.14. வாங்கு சினை - வளந்த கிளை. 17. கொடுஞ்சி - தேர்மொட்டு; தேர்க்கலசம் எனவும் சொல்வர். 18. உளை - பிடரிமயிர். 19. தெளித்த - தெளிவித்த.

**விளக்கம்:** தன் தலைவன் பிரிந்தபின், உழவர் செய்த தொழில் நிகழ்வுகளின் முற்றுப்பெற்ற தன்மையைக் கூறி, குறித்த கார்ப்பருவம் வந்தும், தெளிவித்த அவர், தம் வினையை முடித்தவராக வரவில்லையே என ஏங்குகிறாள் தலைவி.

**பாடபேதங்கள்:** 9. கணைக்கால் கழீஇய. 13. கரடுழவு ஒழிந்த. 14. பல்லிலைக் குருந்தின். 16. கார்மன் இகுளை தோழி.

## 195. சொல்லுக வேலனே!

**பாடியவர்:** *கயமனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *மகட்போக்கிய நற்றாய் சொல்லியது.*

*(தன் மனத்திற்கு இசைந்தான் ஒருவனைக் கண்டு காதலுற்றுக் களவிலே ஒழுகி வந்தனள் ஓர் இளம்பெண். ஊரலர் மிகுதியாக, தினைமுற்றலால் புனத்திடைப் பகற்கூட்டமும் இல்லாதுபோக, இற்செறித்தலால் இரவுக்குறியும் இடையீடு பட்டுப்போக, மிகவும் மனம்வருந்தி, ஆற்றாமை கொண்டவளுமாயினாள். ஒருநாள், தன் காதலனின்றித் தான் வாழ்தலும் முடியாதென உணர்ந்த அவள், அவனோடு உடன்போக்கிலும் துணிந்து சென்றுவிட்டாள், அதனால், வருந்திய நற்றாய், வேலனிடம் இப்படித் தன் மகள் பற்றிய குறியினைக் கேட்கின்றாள்.)*

**'அருஞ்சுரம் இறந்தஎன் பெருந்தோட் குறுமகள்**
**திருந்துவேல் விடலையொடு வரும்' எனத் தாயே**
**புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி,**
**மனைமணல் அடுத்து, மாலை நாற்றி,**
**உவந்து, இனிது அயரும் என்ப; யானும்,**

**மான்பிணை நோக்கின் மடநல் லாளை**
**ஈன்ற நட்பிற்கு அருளான் ஆயினும்,**
**இன்னகை முறுவல் ஏழையைப் பல்நாள்,**
**கூந்தல் வாரி; நுசுப்புஇவர்ந்து, ஓம்பிய**
**நலம்புனை உதவியோ உடையன் மன்னே:**

**அஃது அறி கிற்பினோ நன்றுமன் தில்ல,**
**அறுவை தோயும் ஒருபெருங் குடுமி,**
**சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல்,**
**ஆகுவது அறியும் முதுவாய் வேல!**
**கூறுக மாதோ, நின் கழங்கின் திட்பம்;**

**மாறா வருபனி கலுழும் கங்குலில்,**
**ஆனாது துயருமெம் கண்இனிது படீஇயர்,**
**எம்மனை முந்தறத் தருமோ?**
**தன்மனை உய்க்குமோ? யாதவன் குறிப்பே?**

*'அரிதான சுரநெறியைக் கடந்து சென்றவள், என்னுடைய பெருத்த தோளினளான இளையமகள், அவள், திருந்திய வேலினை உடையவனான, விடலையான அவள் தலைவனுடனே, மீண்டும் வருவாள்' என்று எண்ணினள் செவிலித்தாய். புனைவுகளால் மாண்புற்ற வீட்டின் வெளிச்சுவருக்குச் செம்மண் பூசியும்,மனையின் முற்றத்திலே மணலைப் பெய்து வைத்தும்,*

எங்கும் மாலைகளைத் தொங்க விட்டும், கோலஞ்செய்து, 'அவர்கள் மகிழ்வுடன் வந்து இனிமை நுகர்வார்கள்' என்றுஞ் சொல்லியிருப்பாள்.

யானும், மானின் பிணைபோன்ற பார்வையினையும் மடப்பத்தினையுமுடைய நல்லாளான அவளைப் பெற்றவள் ஆவேன். பெற்றவள் என்ற அந்த உரிமைக்காக, அவன் அருள் செய்யாமற் போனாலும், இனிய நகைதவழும் பல் வரிசையினை உடைய அவளைப் பலநாள் கூந்தலை வாரி முடித்தும், இடுப்பிலே தூக்கிச் சுமந்தும், நன்மை பொருந்திய புனைவுகள் பலவற்றைப் புனைந்து உதவியும் வந்த தொடர்பும் யான் பெரிதும் உடையவள் ஆவேன். அதனையேனும் அவன் அறிந்தன னென்றால் நன்றாயிருக்குமே!

ஆடை சூழ்ந்திருக்கும் ஒப்பற்ற பெரிய குடுமியினையும், சிறிய பையினைத் தொங்கிவிடப்பெற்ற பல தலைகளையுடைய வளைந்த கோலினையும், இனிமேல் நிகழ்வதனை அறியும் வல்ல மையினையுமுடைய, அறிவிற்சிறந்த வேலனே!

இரவிலேயும் அமையாது துயரமுற்றுக் கொண்டிருக்கும் எம்முடைய, இடையறாது வரும் நீருடன் விளங்கும் கலங்கிய கண்கள் இனிதாகத் துயிலும் பொருட்டாக, அவன், அவளை எம்முடைய மனையினிடத்தே முற்படக் கொண்டுவந்து தருவானோ? அல்லது, தன்னுடைய மனைக்கே முதலில் கொண்டு செல்வானோ? அந்தத் தலைமகனின் குறிப்புத்தான் யாதோ? கழங்கின் திண்மையை அறிந்து எம்க்குக் கூறுவாயாக.

என்று, மகட்போக்கிய நற்றாய் வெறியாடும் வேலனுக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. இறந்த - கடந்த. குறுமகள் - இளையவளான மகள். 2. திருந்துவேல் - திருத்தமான வேல்; தீட்டிய கூர்மையுடைய வேலை. விடளை - காளை; தலைவனைக் குறித்தது, 3. இஞ்சி - சுற்றுப்புறச் சுவர். பூவல் - செம்மண். 4. மணல் அடுத்து - மணல் நிரப்பி. நாற்றி - தொங்கவிட்டு. 7. நட்பிற்கு - தொடர்பிற்கு. 9. நுசுப்பிவர்ந்து - இடையிலே ஏற்றிச்சுமந்து. 12. அறுவை தோயும் ஒரு பெரும் குடுமி - தலையிலே குடுமியைச்சுற்றித் துணி கட்டியிருக்கும் கோலம். முதுவாய் - அறிவு முதிர்ச்சியுடைய. 15. கழங்கின் திட்பம் - சோழிகளை வைத்து இன்று குறிசொல்பவர் போல, அந்நாளிலே கழங்கினை வைத்துக் கொண்டு குறிகண்டு கூறினர்; அந்த உறுதி. 17. படீஇயர் - கண் துயிலும் பொருட்டு.

**விளக்கம்:** *முதலிலே வீட்டை மணமனையாகப் புனைந்து, தன் மகளையும் அவள் காதலனையும எதிர்பார்த்திருக்கும் பித்துக் கொண்டவள் செவிலித்தாய் ஆவள்; பெற்ற தாயோ, இரவுத் துயிலற்று, வடியும் கண்ணீர் மாறாதவளாக, இப்படிக் குறி கேட்கிறாள். உடன் போக்கிலே சென்றாலும், இடை வழியிலே, தாயின் அன்பை நினைந்து மகள் திரும்பி வந்து விடுவாள் என்ற சபலம், அவளுக்கு இருக்கிறது.*

**மேற்கோள்:** *'இது, தெய்வத்தொடு படுத்துப் புலம்பியது. எனத், 'தன்னும் அவனும் அவளும் சுட்டி' என்னும் சூத்திர உரையினும்; 'போக்குடன் அறிந்தபின் தோழியோடு கெழீஇக் கற்பின் அக்கத்து நிற்றற்கண்ணும்' என்னும் துறைக்கு, 'எம் மனை முந்துறத் தருமோ, தன் மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே' என்ற பகுதியை உதாரணமாகக், 'களவலராயினும் காம மெய்ப்படும்' என்னும் சூத்திர உரையினும்; 'இச்செய்யுள் கொடுப்போரின்றிக் கரணம் நிகழ்ந்தது' என்க 'கொடுப்போ ரின்றியும் கரணம் உண்டே' என்னும் சூத்திர உரையினும் காட்டிக் கூறுவர் நச்சினார்க்கினியர். 'எம்மனை... யாதவன் குறிப்பே' என்பது 'மறைவெளிப்பாடு' என, 'மறைவெளிப் படுதலும்' என்னும் சூத்திர உரையிற் காட்டுவர் பேராசிரியர்.*

**பாடபேதங்கள்:** *10. நலம்புனை உதவியோ உடையன், 11. அஃதறி கற்பின் நன்று.*

## 196. பக்கத்து வாராதே!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி சொல்லியது.* **சிறப்பு:** *தன் தகப்பனின் கண்ணழகைக் கெடுத்த கோசர்களைத் தித்தனின் துணைகொண்டு கொன்று பழிதீர்த்துக் கொண்ட அன்னி மிஞிலியின் செய்தி.*

*(தன் தலைவியை மறந்து, சிலகாலம் பரத்தை ஒருத்தியுடன் உறவுகொண்டிருந்த தலைவன் ஒருவன், அங்குக் கொண்ட ஊடலாலோ, அன்றி எழுந்த ஊரலரின் மிகுதியாலோ, அவளைப் பிரிந்து வீட்டிற்கு வருகின்றான். அப்போது, தலைவி இப்படி மறுத்துக் கூறுகின்றாள்.)*

**நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து,**
**நாள்துறைப் பட்ட மோட்டிரு வராஅல்**
**துடிக்கண் கொழுங்குறை நொடுத்து, உண்டுஆடி,**
**வேட்டம் மறந்து, துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி**
**ஆம்பல் அகலிலை, அமலைவெஞ் சோறு** 5

**தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து,**
**விடியல் வைகறை இடூஉம் ஊர!**
**தொடுகலம்; குறுக வாரல்-தந்தை**
**கண்கவின் அழித்ததன் தப்பல், தெறுவர,**
**ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று, முரண்போகிய,**

**கடுந்தேர்த் திதியன் அழுந்தை, கொடுங்குழை**
**அன்னி மிஞிலியின் இயலும்**
**நின்நலத் தகுவியை முயங்கிய மார்பே!**

*கள் மலிந்த பாக்கத்திலே, எடுத்த நெடுங்கொடிகள் பலவும் அசைந்துகொண்டிருக்கும். வேட்டத்தின் கண்ணே, துறைக் கண்ணேயே பெரிய வராஅல் மீன் அகப்பட்டது; துடியின் கண்போன்ற அதன் கொழுவிய இறைச்சித் துண்டுகளை விற்றனர்; அந்த விலையினைக் கொடுத்துக் கள்ளுண்டு ஆடினர்; மீண்டும் மீன்வேட்டைக்குப் போவதையும் மறந்து கிடந்து உறங்கினர், பரதவருட்சிலர்! அப்படி உறங்கிக் கிடந்ததம் கொழுநர்க்கு, அவர்களுடைய மனைவியராகிய பாண்மகளிர், ஆம்பலது அகன்ற இலைகளிலே திரளையான வெம்மையுடைய சோற்றினைப், பிரம்பின் இனிப்பினையுடைய புளிப்பான திரண்ட பழத்தினைப் பெய்து ஆக்கிய புளிக்கறியுடன், இருள்புலரும் விடியற்காலத்திலே இட்டு உண்பிப்பர். அத்தகைய தன்மையுடைய ஊரனே!*

*ஒரே சொல்லே சொல்லும் இயல்புடையவரான கோசர்கள், தன் தந்தையின் கண்ணின் எழிலைக் கெடுத்ததாகிய தவற்றிற்காக, விரைந்த தேரினை உடையவனான தித்தனது அழுந்தூர் என்னுமிடத்தே, அவன் உதவியால்,அவர்கள் அஞ்சியோடுமாறு அவரைக் கொல்வித்துத், தன் மாறுபாடு தீர்ந்தவள், வளைந்த குழையினை உடையவளான அன்னி மிஞிலி என்பவள். அந்த வெற்றிச் செருக்கினாலே நடக்கும் அவளைப்போல, நின் நலத்திற்குத் தக்கவளான பரத்தையும் இன்று செம்மாந்து நடப்பவளாயினாள். அவளைத் தழுவிய நின் மார்பினை யாம் தொடவே மாட்டோம். எம் அருகேயும் நீதான் வராதிருப்பாயாக!*

*என்று, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. நுடங்கும் - அசைந்தாடும். நறவு - கள். பாக்கம் - கடற்கரைக் குடியிருப்புப் பகுதிகள். 2. மோட்டிருவரால் - பெரிய அகட்டினையுடைய வரால். 3. குறை - கறித்துண்டு. நொடுத்தல் - விலைக்கு விற்றல். 4. பாட்டி - பாண் மகள். 5. அமலை*

- திரளை. வெஞ்சோறு - சூடான சோறு; விருப்பான சோறும் ஆம். 6. தீம்புளிப் பிரம்பின் திரள்கனி - புளிப்பும் இனிப்பும் உடையதான பிரம்பின் திரண்ட பழம்; இதனையிட்டுப் புளிக்கறி செய்திருக்கின்றனர் அந்த நாளைய மகளிர். 8. குறுக - அணுக. 9. அழித்ததன் தப்பல் - அழித்ததான தவறுதல். தெறுவர - அச்சம் கொள்ளுமாறு. 11. அழுந்தை அழுந்தூர்; தேரழுந்தூர் என்னும் ஊராக இருக்கலாம். 12. இயல் - இங்கு அவளுடைய பழிதீர்த்த செம்மாந்த நிமிர்ந்த நடையைக் கூறினர். 13. தகுவி - தகுதியுடையவள்.

**உள்ளுறை:** வராலின் கொழுங்குறை விற்றுக் கள்ளுண்டு ஆடி அயர்ந்துகிடந்து இரவெல்லாம் உறங்கிய தலைவனுக்குக், காலையிலே வெஞ்சோறு அளிக்கும் பாண்மகளைக் கூறினாள், அதுபோல, இரவெல்லாம் பரத்தையர் சேரியே துணையாகத் திரிந்த அவன், வைகறை வேளையிலே தன் மனைவியின் நலம் விரும்பி வந்ததனை எள்ளுதற் பொருட்டாக. அவரைப் போன்றே, அவன் பரத்தைமை மயக்கிலே அறிவிழந்தாலும், தான் தன் கற்பிலே சிறந்தவள் என்பதையும் கூறினாள். பரத்தையின் இளமைச் செருக்கைக் கூறுவாள், 'கோசரைக் கொன்று முரண்போக்கிய அன்னி மிஞிலியின் செம்மாந்த நடைபோலும்' என்றாள். அவள் தன்னை வென்று அவனை வெற்றி கொண்டதையும் இதனால் கூறி வருந்தினாள்.

**விளக்கம்:** பெரிதான வரால் படவும், அதனை விற்றுத் தாம் களித்துத் திரிதலிலேயே மனஞ்செலுத்தி, வேட்டமும் மறந்து துயிலும் கடமை மறந்தவர் செயலைக் கூறினாள், தலைவனும் செல்வச்செருக்கினால் தன் இன்பமே கருதி இல்லறக் கடமைகளையும் மறந்து, பரத்தை மயக்கிலே அலைவதனைக் காட்டுப் பொருட்டாக அவள் தழுவிய நின் மார்பை யான் தழுவேன்; அருகே வரவேண்டாம் என்றது, அவளுடைய ஊடலை உணர்த்தும். அத்துடன் அவளுடைய பிரிவின் வேதனையையும் காட்டும். அவன் தழுவலை அவள் விரும்புவதையும் அவளுடைய கற்பையும் குறிப்பால் உணர்த்தும்.

**பாடபேதங்கள்:** 7. இடுமுதூர. 9. அழித்தன்றவற்றெறுவற 11. நறந்தை.

## 197. எதற்கும் வருந்தாதே!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. **சிறப்பு:** கண்ணன் எழினி என்பவனின் போராற்றலின் சிறப்பும், அவனுக்கு உரியதான முதுகுன்றம் என்னும் நாட்டுப் பகுதியின் வளமும்பற்றிய செய்திகள்.

*(தலைவன் குறித்தகாலத்து வராதவனாக, அவனைப் பிரிந்த ஏக்கத்தின் மிகுதியினாலே, தன் எழில் நலம் எல்லாம் குன்றிய வளாகத், தலைவி வாடி நலிந்தாள். அவளுடைய நலிவு கண்டு உள்ளம் வருந்தினாள் அவளுடைய தோழி. அவளைத் தேற்று பவளாக இவ்வாறு கூறுகின்றாள்.)*

**மாமலர் வண்ணம் இழந்த கண்ணும்,**
**பூநெகிழ் அணையின் சாஅய தோளும்**
**நன்னர் மாக்கள் விழைவனர் ஆய்ந்த**
**தொன்னலம் இழந்த துயரமொடு, என்னதூஉம்**
**இனையல்-வாழி; தோழி!-முனை எழ**

**முன்னுவர் ஓட்டிய முரண்மிகு திருவின்,**
**மறமிகு தானைக், கண்ணன் எழினி**
**தேமுது குன்றம் இறந்தனர் ஆயினும்,**
**நீடலர் யாழநின் நிரைவளை நெகிழத்-**
**தோள்தாழ்வு இருளிய குவைஇருங் கூந்தல்**

**மடவோள் தழீஇய விறலோன் மார்பில்**
**புன்தலைப் புதல்வன் ஊர்புஇழிந் தாங்கு,**
**கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு**
**இனம்சால் வேழம், கன்றுஊர்பு இழிதரப்,**
**பள்ளி கொள்ளும் பனிச்சுரம் நீத்தி,**

**ஒள்ளிணர்க் கொன்றை ஓங்குமலை அத்தம்**
**வினைவலி யுறூஉம் நெஞ்சமொடு**
**இனையர்ஆகி, நப் பிரிந்திசி னோரே.**

*தோழியே நீ வாழ்வாயாக! தம் கரிய குவளை மலரினைப் போன்ற அழகினை, நின் கண்கள் இழந்தன. அழகு நெகிழ்ந்த தலையணையைப்போல, நின் தோள்களும் தம் பூரிப்பற்று வாடின. இப்படி, நன்மை உடையவரான ஆயமகளிர்கள் தாமும் பெற விரும்பினவராக, முன்னெல்லாம் ஆராயும் நின் பழைய நலத்தினை இழந்தனை யாயினை. இத்தகைய துயரத்துடன், எள்ளளவும் இனியும் வருந்தாதிருப்பாயாக!*

*தோள்களிலே தாழ்ந்து தொங்கிய இருண்டு திரண்ட அடர்த்தியான கூந்தலை உடையவளான, மடப்பத்தையுடைய தன் இளைய மனைவியைத் தழுவிக் கொண்டிருக்கும் ஆற்றல் மிகுந்தவனின் மார்பிலே, புல்லிய தலையினையுடைய அவர்களின் புதல்வன் ஏறி இறங்குவதுபோல -*

நிறைந்த சூல்கொண்ட மடப்பத்தையுடைய தன் பிடியினைத் தழுவிக் கிடந்த, வெண்மையான கொம்புகளையுடைய, தன்னினத்திலேயே சிறந்து விளங்கிய களிறானது, தன் கன்று தன்மீது ஏறி இறங்கி விளையாடப் படுத்துக் கொண்டிருக்கும்

நடுக்கத்தைத் தருவதான அத்தகைய சுரநெறியைக் கடந்து, ஒள்ளிய பூங்கொத்துக்களையுடைய கொன்றை மரங்கள் உயரமாக வளர்ந்திருக்கும், மலைகளைச் சார்ந்த நெறியிலே, தம் பொருளீட்டலாகிய செயலை வலிபெறுத்தும் நெஞ்சத்துடன், நின்னுடைய நிரைத்த வளைகள் நெகிழுமாறு, இங்ஙனம் அருள் அற்றவராகிப் பிரிந்த சென்றவர் நம் தலைவர்.

போரிடலை விரும்பிப் போர்முனைக்கு எழுவதற்கு நினைப்பவரையும், அச்சத்தால் ஓடச்செய்த, வலிமிகுந்த வீரச்செல்வத்தினை உடையவனும், வீரமிகுந்த படையினை உடையவனுமான கண்ணன் எழினி என்பவனது, தேன்மிகுந்த முதுகுன்றம் என்ற மலைப்பகுதியைக் கடந்து சென்றனராயினும், அவர் இனியும் காலம் நீட்டித்திருப்பவரல்லர்; விரைவிலே வந்து விடுவர்.

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத், தலைமகளின் சிறந்த பண்பைக் கூறித் தெளிவித்தனள் தோழி என்க.

**சொற்பொருள்:** 1. மாமலர் - கரிய மலர்; நீலோற்பலம்; மாமலர் - பெரிய மலராயின் தாமரை மலர் என்க. மலர் வண்ணம் - மலரின் தன்மை. 2. பூநெகிழ் அணை - அழகு குலைந்து போன தலையணை; தொய்ந்துபோன தலையணை என்க. சாஅய் - வாடிய 3. நன்னர் மக்கள் - ஆய மகளிர்கள். 5. இனையல் - வருந்தாதே. முனை - போர் முனை. 6. முரண் - போர்ச் செருக்கு. திரு - செல்வம்; வெற்றித் திரு. 8. தேமுது குன்றம் - இனிய முதுகுன்றமும் ஆம்; முதுகுன்றம், விருத்தாசலம் என இந்நாள் வழங்கும். இறந்தனர் - கடந்தனர். 9. யாழ - அசை நிரை. வளை - நிரைத்த வளையல்கள்; அவை நெகிழ்தல் மேனியின் மெலிவினால். 10. குவையிரும் கூந்தல் - அடர்ந்த பெரிய கூந்தல், 11. மடவோள் - மடப்பத்தையுடைய இளையவள். விறல் - ஆற்றல்; மேம்பாடு. 13. கடுஞ்சூல் - நிறை சூல். 15. பனிச்சுரம் - நடுக்கந்தரும் சுரநெறி. நீந்தி - கடந்து. 17. வினை வலியுறூஉம் - செயலிலே வலிமை கொண்ட தான; ஊழ்வினை வந்து வலியுறுத்தும் எனலும்ஆம்.

**உள்ளுறை:** நிறைசூலுற்ற மடப்பிடியைத் தழுவிக் கிடக்கும் களிற்றின்மீது அதன் கன்று ஏறி இறங்கி விளையாடுவதையும், அது தலைவியைத் தழுவிக் கிடக்கும் தலைவனின் மார்பிலே

சிறுமகன் ஏறி இறங்கி விளையாடுவது போல்வதாயிருக்கும் என்பதையும் கூறினாள். தலைவியும் மகனைப் பெற்றவளான தன்மையையும் தன் மகனைக் காணும் ஆர்வமிகுதியுடையவன் தலைவன் என்பதையும் உணர்த்துவதற்காக.

## 198. சூர்மகள் அவள்!

**பாடியவர்:** பரணர். **திணை :** குறிஞ்சி. **துறை:** புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(இரவுக் குறியிலே, நள்ளிருள் வேளையிலே வந்து தன்னுடன் கூடிக் கலந்து மகிழ்ந்த தலைவியின் நினைவு, அவள் வீடு திரும்பிய பின்னரும், அந்தத் தலைவனின் உள்ளத்திலே நின்றும் நீங்கவில்லை. அவளுடைய அந்த அருளை நினைந்து நினைந்து பெருமிதங்கொள்ளும் அவனுடைய நெஞ்சத்தின் விளக்கமே இப் பாடல்.)

**'கூறுவம் கொல்லோ? கூறலம் கொல்?' எனக்**
**கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது,**
**நயந்துநாம் விட்ட நல்மொழி நம்பி,**
**அரைநாள் யாமத்து விழுமழை கரந்து,**
**கார்விரை கமழும் கூந்தல், தூவினை**

**நுண்நூல் ஆகம் பொருந்தினள், வெற்பின்**
**இளமழை சூழ்ந்த மடமயில் போல,**
**வண்டுவழிப் படரத், தண்மலர் மேய்ந்து,**
**வில்வகுப் புற்ற நல்வாங்கு குடைச்சூல்**
**அஞ்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து,**

**துஞ்சுஊர் யாமத்து மயங்கினள், பெயர்வோள்,**
**ஆன்ற கற்பின் சான்ற பெரியள்,**
**அம்மா அரிவையோ அல்லள்; தெனாஅது**
**ஆஅய் நல்நாட்டு அணங்குடைச் சிலம்பிற்.**
**கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்,**

**ஏர்மலர் நிறைசுனை உறையும்**
**சூர்மகள் மாதோ என்னும்-என் நெஞ்சே!**

என்னுடைய நெஞ்சமே! நம்முள்ளே ஒளித்துக் கொண்டிருக்கும் காமத்தினைப்பற்றிச் சொல்லுவோமோ, சொல்லாதிருப்போமோ என முதலில் எண்ணினேன். முடிவிலே, அதனை அடக்கவியலாது அவளை அடைய விரும்பி நாம் விடுத்த நன்மொழியாகிய தூதினையும் அவள் நம்பினாள். பாதி

யிரவிலே, பெய்து கொண்டிருக்கும் மிகுதியான மழையிலே, மறைந்து மறைந்தும் வந்தாள். கார்காலத்து நறுமணம் கமழுகின்ற கூந்தலுடன், தூய்மையான செய்வினை பொருந்திய நுண்மையான நூலால் நெய்யப்பட்ட ஆடை தன் உடம்பிடத்தே பொருந்தியவளாக, மலைச்சாரலின் கண்ணே, இளமழையினைக் கருதிய மடமயிலினைப் போல, வண்டுகள் பின் தொடர்ந்து வருமாறு குளிர்ந்த மலர்களைச் சூடியவளாக, ஒயிலுடன் அவளும் வந்தாள். வில்லினைப் போன்றதாக வளைந்த, வகையமைந்த நல்ல முறையிலே செய்யப்பெற்ற, குடச்சூல் ஆகிய தன் சிலம்புகளையும் ஒலியெழாத வண்ணம் அடக்கியவளாக, அஞ்சி அஞ்சி மெல்லென நடந்து வந்தாள். ஊர் முழுவதும் உறங்கிக் கொண்டிருக்கின்ற நள்ளிரவான யாமத்திலே, அங்ஙனம் வந்து நம்மைத் தழுவினாள்; தன் வீட்டிற்கு மீண்டும் பெயர்ந்து சென்றாள். அவள் -

நிறைந்த கற்பினாலே உயர்ந்த பெருமையுடையவளான, அழகிய மாமை நிறத்தினையுடைய பெண்ணே என்றால், அவள் அத்தகைய சாதாரணப் பெண் அல்லள்!

தென்னாட்டின்கண் உள்ளதாகிய ஆய் என்பவனது நல்ல நாட்டிலே, தெய்வங்களை உடைய மலைச்சாரல்களிலே, 'கவிரம்' என்னும் பெயரையுடைய அச்சம் கெழுமிய பக்கமலையிலே, நேரிய மலர்கள் நிறைந்துள்ள சுனையிலே வாழ்பவளான சூரர மகளிருள் ஒருத்தியே அவள் என்று யாம் சொல்வோம்.

என்று, புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன் தன் நெஞ்சுக்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 2. கரந்த காமம் - உள்ளத்து நிறைந்து புறத்தே புலப்படாது நிலவிய காமம். கைநிறுக்கலாது - கட்டுப்படுத்தி வைக்க இயலாது. 3. விட்ட நன்மொழி - விட்டதூது; அது தோழியின் மூலம் உரைத்தது என்று கொள்க. 4. அரை நாள் யாமம் - நள்ளிரவு வேளையாகிய இரவின் நடுச்சாமம். 4 - 5. விழுமழை கரந்து கார் விரை கமழும் - பெய்த மழையானது நின்று கார்காலத்தின் மண் வாடை கமழ்ந்து கொண்டிருக்கும் தன்மைபோன்று மணங்கமழும் என்றும் கொள்ளலாம். 6. நுண் நூல் - நுண்மையான நூலால் நெய்த ஆடை; நூலின் நுண்மையே ஆடையின் மென்மைக்குக் காரணமாகும் என்பதையும் நினைக்கவும். 7. இளமழை சூழ்ந்த மடமயில் நடனமாடி ஒயிலுடன் விளங்குவதுபோல, அவளும் எழில்மிகு சாயலுடன் வந்தனள் என்க. 8. வழிப்படர - தொடர்ந்து

பின்பற்றிவர. தண் மலர் - தேன் நிரம்பிய புத்தம் புதுமல ராதலினால் தண் மலர் ஆயிற்று. வேய்ந்து - மிகுதியாகச் சூடி. 9. வகுப்பு - அமைப்பு. குடச்சூல் - உள்ளே பரல்கள் இடப் பெற்ற சிலம்பிற்குப் பெயர். 10. சிலம்பு ஒடுக்கி - சிலம்பினை ஒலி எழாதவாறு அடக்கி, மெல்ல அடியிட்டு நடந்தனள் என்பது கருத்து. 11. துஞ்சூர் யாமம் - ஊர் துஞ்சும் யாமம். 17. சூரர மகளிர் என்போர் முருகனுக்கு ஆடிப் பாடித் தொண்டு செய்யும் தேவமகளிர் என்று திருமுருகாற்றுப் படை கூறும்; அவர் அழகியருள் அழகியர் என்னலாம்.

**விளக்கம்:** அவள், ஊர் துஞ்சும் வேளையில்,அத்துணைப் பலவான இடையூறுகளையும் பொருட்படுத்தாது, தன்னை வந்து இன்புறுத்திச் சென்றதன் செவ்வியை நினைப்பவன், அவளைத் தேவமகளாகவே கருதிப் போற்றுகின்றான்.

**மேற்கோள்:** 'இரவுக் குறிக்கண் அவட்பெற்று மலிந்து' என, பண்பில் பெயர்ப்பினும் என்னுஞ் சூத்திர உரையினும்; 'அஞ்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து, துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்' என வருவது, "மனையோர் கிளவி கேட்கும் வழியது" என, 'இரவுக் குறியே இல்லகத்துள்ளும், மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே, என்னும் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் காட்டினர்.

**பாடபேதங்கள்:** 5. கார் மலர் கமழும். 7. இள் மழை சூழ்ந்த, 12. கற்பில் சான்ற பெரியவள், அம்மா.

## 199. வாரலன் யானே!

**பாடியவர்:** கல்லாடனார். **திணை:** பாலை. **துறை:** பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது. **சிறப்பு:** வாகைப் பெருந்துறை என்னுமிடத்தே நடந்த போரில் நன்னனைக் கொன்று, தான் இழந்த தன் நாட்டுப்பகுதியை மீட்டும் பெற்று மகிழ்ந்த களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் வெற்றிப் பெருமிதம்.

(பொருள் தேடிவரவேண்டும் என்ற எண்ணம் ஒரு தலைவனின் உள்ளத்திலே மிகுதியாக எழுகின்றது. பிறர் செல்லும்போது. தான் வாளாவிருப்பதா என்னும் நாணமும் வருத்துகின்றது. ஆனாலும், தன் காதலியைப் பிரிந்து போவதான ஒன்றைப்பற்றி அவனால் கருதவே முடியவில்லை. அதனால், தன் நெஞ்சிற்கு இப்படிக் கூறியவனாகத் தான் போவதையே நிறுத்தி விடுகின்றான்.)

**கரைபாய் வெண்திரை கடுப்பப், பலஉடன்,**
**நிரைகால் ஒற்றலின், கல்சேர்பு உதிரும்**
**வரைசேர் மராஅத்து ஊர்மலர் பெயர் செத்து,**
**உயங்கல் யானை நீர்நசைக்கு அலமரச்,**
**சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்**

**அலங்கல் உலவை அரிநிழல் அசைஇத்,**
**திரங்குமரல் கவ்விய கையறு தொகுநிலை,**
**அரம்தின் ஊசித் திரள்நுதி அன்ன,**
**திண்ணிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்;**
**வளிமுனைப் பூளையன் ஒய்யென்று அலறிய**

**கெடுமான் இனநிரை தரீஇய கலையே**
**கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்கும்**
**கடல்போற் கானம் பிற்படப், 'பிறர்போல்**
**செல்வேம்ஆயின், எம் செலவு நன்று' என்னும்**
**ஆசை உள்ளம் அசைவின்று துரப்ப,**

**நீ செலற்கு உரியை-நெஞ்சே!-வேய்போல்**
**தடையின மன்னும், தண்ணிய, திரண்ட,**
**பெருந்தோள் அரிவை ஒழியக், குடாஅது,**
**இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்,**
**பொலம்பூண் நன்னன் பொருதுகளத்து ஒழிய,**

**வலம்படு கொற்றம் தந்த வாய்வாள்,**
**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்**
**இழந்த நாடு தந்தன்ன**
**வளம்பெரிது பெறினும், வாரலென் யானே.**

*நெஞ்சமே!*

*மலையைச் சார்ந்திருக்கும் வெண்கடம்பினது முற்றிய மலர்களைக், கரையிலே வந்து. மோதுகின்ற வெண்மையான அலைகளைப்போல அலையலையாக வரும் காற்று மோதுதலால், அவை பலவும் உடன்சேர்ந்து பாறையின்மேலே உதிர்ந்து கிடக்கும். நீர் வேட்கையினாலே வருந்திய யானை யானது அம் மலர்கள் வீழ்வதை மழை பெய்வதாகக் கருதி, அவ்விடத்தே நீர் விரும்பிச் சென்று காணாது வருந்தி வாடும். மரங்கள் வற்றி உலர்ந்தனவாக, அவற்றின் இலையற்று வறிதாயிருக்கும் கிளைகளிலே, சிலம்பி நூல் பின்னர் பட்டிருப்பதாக விளங்கும். அசைகின்ற அத்தகைய மரங்களின் அறல்பட்ட நிழலிலே தங்கித்தங்கிச் செல்ல வேண்டும்.*

வாடிப்போன மாலையாகிய கள்ளியைக் கவ்விக் கொண்டிருந்த, செயலற்று வாடியிருந்த மான் கூட்டத்திலே, அரத்தால் அராவப்பட ஊசியினது திரண்ட முனையைப் போன்ற உறுதி பொருந்திய பற்களையுடைய செந்நாய் தாக்கும். அது தாக்குதலினால், காற்றின் முன்னே பறந்தோடும் பூளைப் பூவினைப் போல, ஒய்யென்ற அலறலுடன் மானினம் எல்லாம் தம்நிலை கெட்டு ஓடும். அப்படி ஓடிப்போன தன் இனமாகிய கூட்டத்தை ஒன்று சேர்ப்பதற்காகக், கலைமா னானது, ஞாயிறு மறையும் மாலைப் பொழுதிலே, தன்னுடைய ஆண்மையான குரல் தோன்றுமாறு கூப்பிட்டுக் கொண்டிருக்கும்.

அத்தகைய, கடல்போலப் பரந்து கிடக்கும் காடும் பிற்பட்டுப் போகுமாறு, அதனைக் கடந்துபோக எண்ணுவை. 'பிறரைப்போல யாமும் செல்வோம் ஆனால், எமது போக்கும் நன்றாகவே விளங்கும் என்று கருதும் பொருளாசை கொண்ட உள்ளமானது, கொஞ்சமும் தளர்வில்லாமல் செலுத்தச் செல்வதற்கு உரியையும் ஆகுவை!

மேம்பாடுடைய வெற்றியை ஈட்டித்தந்த, வாய்த்த வெற்றி வாளினை உடையவன் களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல். அவன், மேலைத் திசையிலே உள்ளதாகிய பெரிய பொன்னினை யுடைய வாகை மரம் நிற்கும் பெருந்துறை என்னும் இடத்திலே நிகழ்ந்த போரிலே, பொற்பூண் அணிந்த நன்னன் என்பவனைப் போக்களத்திலேயே மடிந்து ஒழியச் செய்தான். முன்பு சேரநாட்டார் இழந்த நாட்டை மீட்டுத் தந்தான். அவன் அன்று பெற்றதைப் போன்ற பெரிதான செல்வத்தையே பெறுவதாக இருந்தாலும், -

மூங்கிலைப் போல வளைந்தனவாக ஒத்திருக்கும், தண்மையான திரண்ட பூரித்த தோள்களை உடையவள் என் தலைவி. அவள் இவ்விடத்தே தனித்திருந்து வாடி உயிர் துறக்குமாறு அவளைப் பிரிந்து, யானோ நின்னுடன் வருவேன் அல்லேன்.

என்று, பொருள் கடைக்கூட்டிய தன் நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவழுங்கினான் என்க.

**சொற்பொருள்:** *2. நிரை கால் - நிரை. நிரையாக வருகின்ற காற்று. ஒற்றலின் - மோதுதலினால். 3. பெயல் - மழை. 4. உயங்கல் யானை - வருத்தங் கொண்ட யானை. நசை - வேட்கை. அலமரல் - சுழன்று வருந்தல். 5. சிலம்பி வலந்த - சிலம்பி வலைபின்னியிருந்த. வறுஞ்சினை - தழையற்று வறிதாகிப் போன கிளைகள். 6. உலவை - மரச் செறிவு. அரிநிழல் - அரியரியாகத் தோன்றும்*

நிழல்; அறல்பட்ட நிழல். 7. திரங்கு - வாடிய, மரல் - கள்ளி வகையுள் ஒன்று; கையறு - வாட்டங்கொண்ட, தொகுநிலை - தொகுதியா யிருந்த நிலைமை. 9. எடுத்தலின் - தாக்குதலால். 10. பூளை - ஒருவகைப் பூ; கண்ணிற் பீளை எனத் தென்னாட்டுள் கூறப்படுவது. 12. ஆண்குரல் - ஆண்மை தோன்றும் குரல். அசைவின்று - நிலையாக. துரப்ப - செலுத்த, 17. தடையின் - வளைந்தனவாக. மன்னும் - ஒத்திருக்கும். 19. இரும்பொன் - இரும்பும் ஆம். வாகை பெருந்துறை - வாகைப் பறந்தலை எனவும் கூறப்படும். இதுவே, மணிவ்ாசகர் காலத்துப் பெருந்துறை என்னும் துறைமுகமாக விளங்கியது என்பர் சிலர்; இது மேலைக் கடற்கரையூர். 20. நன்னன் - கடம்பின் பெருவாயில் நன்னன் என்பவன்.

**விளக்கம்:** தான் இழந்த நாட்டை மீளவும் பெற்றதுடன், நன்னன் பிறரைவென்று சேமித்து வைத்திருந்த வளம் அனைத்தையும் பெற்றுச் சிறந்தவன் சேரன். அவனைப் போலத் தானும் திரண்ட செல்வம் பெறினும் என்றது, சேரன் பெற்ற பெருஞ் செல்வத்தின் மிகுதியை உரைத்ததாகும். வாகை, நன்னனின் காவன் மரம் எனவும், அதனைச் சேரமான் முழு முதல் தடித்தனன் எனவும் பதிற்றுப்பத்துக் கூறும்.

**மேற்கோள்:** 'களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல், இழந்த நாடு தந்தன்ன வளம் பெரிது பெறினும், வாரலென் யானே' என்னும் தொடர்களை; 'இவை வன்புறை குறித்துச் செலவு அழுங்குதலின் பாலையாயிற்று' எனச் 'செலவிடை அழுங்கல் செல்லாமையன்றே' என்னும் சூத்திர உரையுள் நச்சினார்க்கினியர் காட்டிக் கூறுவர்.

**பாடபேதங்கள்:** 7. கையறு தொகை நிலை. 10. ஒய்யென வலறிய. 11. இன நிரை தேரிய. 20. பொருளகத்து ஒழிய.

## 200. எமக்குச் சொல்வீராக!

**பாடியவர்:** உலோச்சனார்; நக்கீரன் எனவும் பாடம். **திணை:** நெய்தல். **துறை:** தலைமகன் குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறைநயப்பக் கூறியது.

(தலைமகன் ஒருவன் தலைமகள் ஒருத்திபாற் காதலுற்ற வனானான். தன் குறையை அவளுடைய தோழியிடம் கூறித் தலைவியைத் தனக்கு இசைவிக்க வேண்டி நின்றான். தோழியும் தலைமகளின் குறிப்பும் அவனுக்கு இசைவதாக இருப்பதனை அறிகிறாள். வந்து, அவனிடம் சொல்லுகிறாள்;)

**நிலாவின் இலங்கு மணல்மலி மறுகில்,**
**புலால்அம் சேரிப், புல்வேய் குரம்பை,**
**ஊர்என உணராச் சிறுமையொடு, நீர்உடுத்து,**
**இன்னா உறையுட்டு ஆயினும், இன்பம்**
**ஒருநாள் உறைந்திசி னோர்க்கும், வரிநாள்,**

**தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி**
**வந்தனை சென்மோ -வளைமேய் பரப்ப!-**
**பொம்மற் படுதிரை கம்மென உடைதரும்**
**மரன்ஓங்கு ஒருசிறை பல பாராட்டி,**
**எல்லை எம்மொடு கழிப்பி, எல்உற,**

**நல்தேர் பூட்டலும் உரியீர்; அற்றன்று,**
**சேந்தனிர் செல்குவிர் ஆயின், யாமும்**
**எம்வரை அளவையின் பெட்குவம்,**
**நும் ஒப்பதுவோ? உரைத்திசின் எமக்கே,-**

*சங்கினங்கள் மேய்ந்து கொண்டிருக்கின்ற கடற்பரப்பினுக்கு உரியவனான தலைவனே!*

*நிலாவினைப்போல வெண்மையுடன் விளங்கும் மணல் மிகுந்த தெருக்களை உடையது எம் ஊர். அத்தெருக்களிலே, புலால் வேயப்பெற்ற குடிசைகளை உடையதாயிருக்கும் புலால் நாற்றமுடைய சேரியே அது. ஓர் ஊர் என்று உணர்வதற்கும் ஆகாத சிறுமையுடனே, நீர் சூழப்பெற்றதாகத், துன்பமிகுந்த உறையுளை உடையதும் அது. ஆனாலும் அதன் கண் பெறும் இன்பமோ, ஒரு நாள் தங்கியிருந்தவர்க்கும் பிற்றைநாள் தம்முடைய ஊரினையே மறக்கச் செய்யும் பண்பினை உடையதாகும். அதனால், எம் ஊருக்கு நீயும் வந்து போவாயாக,*

*பொலிவுற்று ஒலிக்கும் அலைகள் விரைந்து உடைந்து சிதறுகின்ற, மரன் ஓங்கியிருக்கின்ற ஒரு பக்கத்திலே, பலப்பல வகையும் பாராட்டியவனாகப், பகல் வேளையெல்லாம் எம் முடனே கழிப்பாயாக. இரவு உறுங்காலத்தே, நின்னது நல்ல தேரினைப் பூட்டிச் செல்வதற்கும் உரியையாகுக.*

*அங்ஙனமன்றி, இரவிலும் எம் ஊரிலேயே தங்கிச் செல்வாயானால், யாமும், எம் வரையிலும் இயன்ற அளவுக்கு நின்னைப் பேணுவோம். நின்னுடைய மனத்திற்கு ஒப்பது எதுவோ? அதனை எமக்கும் உரைப்பாயாக.*

*என்று, தலைமகள் குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறை நயப்பக் கூறினாள் என்க.*

**சொற்பொருள்:** *2. புலால் அஞ்சேரி - புலால் நாற்ற முடையசேரி. 3. நீருடுத்து - நீராற் சூழப்பெற்று. 7. வளை - சங்கு. 9. சிறை - பக்கம். 10. எல்லை - பகல். 13. பெட்குவம் - பேணுவோம்.*

**விளக்கம்:** *சேரி சிறியதாயினும், பற்பல இன்னாமைகளை உடைய உறையுள்களை உடையதாயினும், அவள் இருப்பதனால் அது நினக்கு இன்பமாகவே விளங்கும் என்றனள். ஒரு நாள் தங்கியவர்க்குத் தம் ஊரையும் மறக்கச் செய்யும் இன்பம் தரும் பண்புடையது எம் ஊர் என்றாள். பகற் கூட்டமோ, இரவுக் கூட்டமோ, எது நுமக்கு இசைந்தது என்பாள். இரண்டையும் கூறி, 'நும் ஒப்பதுவோ எமக்கு உரைத்திசின் என்றாள்.*

## 201. சோழநாடும் தலைவியும்!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை :** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளுக்குத் தோழி சொல்லியது.* **சிறப்பு:** *உவாநாளிலே பாண்டிநாட்டுக் கடற்கரைப் பகுதியினர், கடல் தெய்வத்திற்கு வழிபாடு செய்தல்.*

*(தலைமகன், தலைமகளைப் பிரிந்து வேற்று நாடு சென்றிருந்தான். குறித்துச் சென்ற காலம் வந்தும் அவன் வரவில்லை. பிரிவுத் துயரினைத் தாளாதவளாக வாடி நலிந்து தலைமகளுக்குத் தோழி இப்படிக் கூறி அவள் துயரை மாற்ற முயலுகின்றாள்.)*

**அம்ம, வாழி-தோழி-பொன்னின்**
**அவிர்எழில் நுடங்கும் அணிகிளர் ஓடை**
**வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்**
**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை**
**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து.**

**தழைஅணிப் பொலிந்த கோடுஏந்து அல்குல்**
**பழையர் மகளிர் பனித்துறைப் பரவ,**
**பகலோன் மறைந்த அந்தி ஆர்இடை,**
**உருகெழு பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு,**
**அலரும் மன்று பட்டன்றே; அன்னையும்**

**பொருந்தாக் கண்ணன், வெய்ய உயிர்க்கும்' என்று**
**எவன் கையற்றனை, இகுளை? சோழர்**
**வெண்ணெல் வைப்பின் நல்நாடு பெறினும்,**
**ஆண்டு அமைந்து உறைகுநர் அல்லர் - முனாஅது**
**வான்புகு தலைய குன்றத்துக் கவாஅன்,**

**பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை**
**இருள்துணிந் தன்ன குவவுமயிர்க் குருளைத்**
**தோல்முலைப் பிணவொடு திளைக்கும்**
**வேனில் நீடிய சுரன் இறந்தோரே.**

*தோழியே! என் அம்மையே, நீ வாழ்க! "போர்ச் செயல் களிலே நல்ல பயிற்சிபெற்று விளங்கும் யானைகளையுடையவன், வெற்றியுடன் போர் புரிபவனான பாண்டியன். அந்த யானைகள், பொன்னாலாகிய விட்டுவிட்டு ஒளிரும் அழகிய ஒளியுடன் அசைந்து கொண்டிருக்கும். அழகு மிகுந்த நெற்றிப் பட்டத்தினை உடையவையாயும் இருக்கும். அவனுக்கு உரியது, புகழ் மலிந்த சிறப்பினையுடையதான கொற்கை என்னும் முன்துறை. அவ்விடத்தே, தழையுடை அணிதலாற் பொலிவுற்ற, பக்கங்கள் உயர்ந்து விளங்கும் அல்குலினை உடையவரான பழையரின் பெண்கள், விளங்கும் ஒளியினையுடைய முத்துக்களுடன் வலம்புரிச் சங்கினையும் சொரிந்து, குளிர்ந்த கடற்றுறைக்கண் தெய்வத்தைப் பரவுவர். பகலோனாகிய ஞாயிறானது மறைந்த அந்தி வேளையாகிய அந்த அரிய பொழுதிலே, அச்சம் பொருந்திய பெருங்கடலானது நிறைமதி நாளிலே பொங்கி எழுந்தாற்போல, அலரும் மன்றினிடத்தே பொங்கிப் பரவும். தாயும், இமை பொருந்தாத கண்ணினளாக வெம்மையுடன் மூச்செறிந்து கொண்டிருப்பாள்," என்றெல்லாம் கூறியவளாக, ஏனோ மிகவும் வருந்தியவள் ஆயினை!*

*தோழியே! பழையதாகிய, வானத்திலே புகுந்தாலொத்த சிகரங்களையுடைய மலையின் சாரலிடத்தே, பெருங்கை யினையும் பிளந்த வாயினையுமுடைய ஆண் கரடியானது, இருளைத் துணித்து வைத்தாற்போன்ற கருமயிரடர்ந்த குட்டியுடனும், திறங்கிய முலையினையுடைய தன் பெண் கரடியுடனும் கூடி மகிழ்ந்திருக்கும். வேனில் நெடிதாகப் படர்ந்த அத்தகைய சுரநெறியைக் கடந்து சென்றவர் நம் தலைவர்.*

*அவர், சோழரது வெண்ணெல் விளையும் ஊர்களை யுடைய நல்ல நாட்டையே பெறுவதானாலும் கூட, நின்னை மறந்து அங்கே மனம் பொருந்தித் தங்கிவிடுபவர் அல்லர்.*

*என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளுக்குத் தோழி சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *2. ஓடை - நெற்றிப் பட்டம். வினைநவில் - போர்த் தொழில் பயின்ற. 6. கோடேந்து அல்குல் - பக்கம் உயர்ந்த அல்குல். 7. பழையர் மகளிர் - பரதவர் மகளிர். 12. கை அற்றனை - வருந்தினை. இகுளை - தோழி! 15. தலைய - உச்சிகளையுடைய*

*17. குவவு மயிர் - அடர்ந்திருக்கும் மயிர். 18. தோல் முலை - திறங்கிய முலை. பிணவு - கரடியின் பெண்.*

**உள்ளுறை:** *பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை இருள் துணிந்தன்ன குவவுமயிர்க் குருளை தோன்முலைப் பிணவொடு திணைக்கும் வேனில் என்றது, அவ்வாறே தலைவனும் நின்னைத் தழுவி மகிழ்விப்பான் என்பதாம்.*

**விளக்கம் :** *கரடியின் குடும்பபாசம் இவரையும் நின்பாற் பாசமுடையவராக விரைந்து திரும்பத் தூண்டிவிடும் என்றனள். உவாநாள் - பௌர்ணமி நாள்; அந்நாளிலே கடல் பொங்கும் என்பது மரபு.*

## 202. தேராது வருவாய் நீ!

**பாடியவர்:** *ஆவூர்கிழார் மகனார் கண்ணனார்: ஆவூர்கிழார் மள்ளனானார் என்பதும் பாடம்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகனுக்குத் தோழி சொல்லி வரைவுகடாயது.*

*(தலைவன், இரவுக்குறியிலே வந்து தலைவியைக் கூடி இன்புறும் களவு உறவினையே மேற்கொண்டு வருகின்றான். அவன் மனம், 'தலைவியை மணந்து கொள்வதிலே ஈடுபடல் வேண்டும்' என்று கருதும் தோழி, அவனிடம் இப்படி உரைக்கின்றாள்.)*

**வயங்குவெள் அருவிய குன்றத்துக் கவாஅன்,**
**கயந்தலை மடப்பிடி இனன் ஏமார்ப்பப்,**
**புலிப்பகை வென்ற புண்கூர் யானை**
**கல்லகச் சிலம்பில் கைஎடுத்து உயிர்ப்பின்.**
**நல்இணர் வேங்கை நறுவீ கொல்லன்**

**குருகுஊது மிதிஉலைப் பிதிர்வின் பொங்கி,**
**சிறுபல் மின்மினி போலப், பலஉடன்**
**மணிநிற இரும்புதல் தாவும் நாட!**
**யாமே அன்றியும் உளர்கொல்-பானாள்,**
**உத்தி அரவின் பைத்தலை துமிய**

**உரஉரும் உட்குவரு நனந்தலைத்,**
**தவிர்வுஇல் உள்ளமொடு எஃகு துணையாகக்,**
**கனைஇருள் பரந்த கல்லதர்ச் சிறுநெறி**
**தேராது உரூஉம் நின்வயின்**
**ஆர்அஞர் அரும்படர் நீந்து வோரே?**

குன்றுகள், விளங்கும் வெண்மையான அருவிகளை உடையன; அவற்றின் சாரலிலே, களிறு, தன் இளைய பிடியுடன் கூடி இன்பமாக இருக்கும். அந்தப் பிடி மென்மையான தலையினையுடையதும் ஆகும். புலியாகிய தன்னுடைய பகையை வென்றுவரும் அந்தக் களிற்றின் உடலோ, புண்களுடன் விளங்கும். அந்தச் சீற்றத்தாலும் களைப்பினாலும் மலையிடத்தே அது தன் துதிக்கையை உயர்த்துத் தூக்கிப் பெருமூச்சு விடும்.

நல்ல பூங்கொத்துக்களையுடைய வேங்கையின் நறுமணப் பூக்கள், அந்தக் களிற்றின் பெருமூச்சினால் பொங்கி மேலே எழும் கொல்லன் துருத்தியை மிதித்து ஊத, உலையிலிருந்து சிதறி அனற்பொறிகளைப் போல, அப்பூக்கள் எங்கும் பரந்து சிதறி வீழும், பலவும் ஒருங்கே நெருங்கி, நீல மணியின் நிறத்தைக் கொண்டு விளங்கும் பெரிய புதரிலே, அப் பூக்கள் வீழ்ந்து பரவிக் கிடக்கும். அப்படிக் கிடப்பது, சிறுசிறு மின்மினிப் பூச்சிகள், பரவலாகப் புதரிலே பரவி மொய்த்துக் கொண்டிருப்பன போலத் தோன்றும். அத்தகைய மலைநாட்டை உடையவனே!

பாம்பினது புள்ளிகளையுடைய படம் பொருந்திய தலையானது துண்டுபட்டு விழுமாறு, வலிமிக்க இடிகள் முழங்கும். அச்சம் வருகின்ற அகன்ற மலையிடத்தின் வழியே, இரவின் நடுச்சாம வேளையிலும், நீ கடந்து வருகின்றாய். உள்ளத்திலே ஊக்கம் குறையாதவனாகவும், ஏந்திய வேலை துணையாகவும் கொண்டு நீ வருவாய். அடர்ந்த இருள் பரவிய கற்களை உடைய வழியாகிய சிறு நெறியிலே, நினக்கு ஏற்படக்கூடிய துன்பங்களைச் சற்றும் கருதாதே நீயும் வருகின்றாய். அப்படி வருகின்ற நின்னிடத்திலே, பொறுத்தற்கும் அரியதான துன்ப நினைவினை நீந்திக் கொண்டிருக்கும் நிலையுடையவர், எம்மையல்லாமல் வேறு யாரேனும் உள்ளனரோ?

என்று, இரவுக்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவுகடாயினாள் என்க.

**சொற்பொருள்:** 1. வயங்கு - விளங்கும். 2. கயந்தலை - மென்தலை; அகன்ற தலையுமாம். ஏம் ஆர்ப்ப - இன்பம் நுகர. 3. புண்கூர் - புண்பட்ட. 4. கல்லகச் சிலம்பு - மலையிடத்ததாகிய குன்று. 6. குருகு - துருத்தி. பிதிர்வு - பொறிகள். 8. மணிநிறம் - நீலமணியின் நிறம். 10. உத்தி - புள்ளி. பைதலை - படம் பொருந்திய தலை. துமிய - துண்டுபட. 11. உரவு - வலிமை. உரும் - இடி. உட்கு வரு - அச்சம் வருகின்ற. 12. தவிர்வில் உள்ளம் - தளர்வற்ற உள்ளம்.

**உள்ளுறை:** *புலிப்பகை வென்ற களிறு உயிர்ப்ப, வேங்கையின் நறுமலர்கள் மினிமினி போலக் கரும்புதரிலே தாவும் என்றது. அவன் தனக்கு எதிரான துன்பங்கள் அனைத்தையும் கடந்து வந்து களவிற்கூடி இன்புறுதலால், ஊரலர் பெரிதாக எழுந்து பரவுகின்றது என உணர்த்துவதாம்.*

**விளக்கம்:** *'யாமே அன்றியும் உளர்கொல்' என்றதனால், நினக்காக வருந்தும் எம்மை, நீளவும் வருந்தி வாடுதலே துணையாக விட்டுவிடாது, மணந்து, எம் கவலையைத் தீர்ப்பாயாக' எனக் கூறி வரைவுகடாயினாளும் ஆயிற்று. நீ அது பற்றிக் கருதலை, களவிலேயே மனஞ்செலுத்துவாய் ஆயினை எனக் கூறியதுமாம்.*

## 203. நொச்சிமனைப் பெண்டு!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *பாலை* **துறை:** *மகட்போக்கிய செவிலி சொல்லியது; மகட்போக்கிய தாய் சொல்லியது எனவும் பாடம்.*

*(மகள் தன் காதலுனுடன் உடன்போக்கிலே சென்று விட, அதனால் வாடியிருக்கும் தாய், இப்படி எல்லாம் நினைக்கின்றாள். முன் ஊரவர் கூறிய அலரும், அதனை அவளிடம் கேட்டால் அவள் நாணுவள் எனத் தான் கேளாதிருந்தமையும், அவள் நினைவுத் திரையிலே தோன்றுகின்றன. 'வழியிடையே செல்லும் அவர்களுக்கு விருந்துவைத்து இன்புறுத்த, யானும் அவ்விடத்திலே அவர்கட்கு முற்படச் சென்று இருப்பேனாக' என்று கருதுகிறாள் அவள்.)*

**'உவக்குநள் ஆயினும்,உடலுநள் ஆயினும்,**
**யாய் அறிந்து உணர்க என்னார், தீ வாய்**
**அலர்வினை மேவல் அம்பற் பெண்டிர்,**
**'இன்னள் இனையள், நின்மகள்' என்ப பல்நாள்**
**எனக்கு வந்து உரைப்பவும், தனக்குஉரைப்பு அறியேன்.**

**'நாணுவள் இவள்' என, நனிகரந்து உறையும்**
**யான்இவ் வறுமனை ஒழிய, தானே,**
**'அன்னை அறியின், இவணுறை வாழ்க்கை**
**எனக்கு எளிது ஆகல் இல்' எனக், கழற்கால்**
**மின்னொளிர் நெடுவேல் இளையோன் முன்னுறப்,**

**பன்மலை அருஞ்சுரம் போகிய தனக்கு, யான்**
**அன்னேன் அன்மை நன்வா யாக,**
**மான்அதர் மயங்கிய மலைமுதல் சிறுநெறி**

**வெய்து இடையுறாஅது எய்தி, முன்னர்ப்**
**புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்,**

**செல்விருந்து ஆற்றித், துச்சில் இருத்த,**
**நுனை குழைத்து அலமரும் நொச்சி**
**மனகெழு பெண்டுயான் ஆகுக மன்னே!**

*கொடிய வாயினரான, அலர் கூறுதலையே தொழிலாகக் கொண்டு, அதன் பால் விரு;பபுற்றுப் புறங்கூறித் திரியும் பெண்டிர்கள், 'மகிழ்ச்சியடைவாள் என்றாலும் வருத்த மடைவாள் என்றாலும் அதனை அவள் தாயே ஆராய்ந்து உணர்வாளாக' என்று கருதித், தாம் வாயடக்கி இருக்கமாட்டார்கள். "நின் மகள் இப்பபடிப்பட்ட தன்மை உடையவள்; இப்படிப்பட்ட ஒழுக்கம் உடையவள்!" என்று, பலநாளும் எனக்கு வந்து சொல்லுவார்கள்.*

*அதனைக் கேட்டும், 'இவள் நாணங் கொள்வாளே' என்று எண்ணி, அவளுக்குச் சொல்லவும் செய்யாதவளாக இருந்தேன். அவள் உள்ளம் வருந்துமென, அப்படி மிகவும் அலரினை மறைத்து வாழ்ந்த யான், இந்த வறிய மனையிலே தனித்து ஒழிந்துவிட, அவளோ அவனுடன் போயினள்.*

*என் மகள், 'தாய் அறிந்தால் இங்கு வாழும் வாழ்க்கை எளிதாயிருப்பது இல்லை' என்று எண்ணியவளாக, கழல் தரித்த காலையும், மின்னொளி பரப்பும் நீண்ட வேலையும் உடைய இளையோன் தன் முன்னே செல்லத், தான் அவனைப் பின்தொடர்ந்து செல்பவளாகப், பல மலையடுக்குகளை உடைய காட்டின் வழியாகவும் சென்றனள்.*

*அவளுக்கு, யான் அப்படிப்பட்டவள் அல்லாமை நன்கு வெளிப்படுமாறு செய்தல் வேண்டும். விலங்குகள் சென்ற தடங்கள் ஒன்றுடன் ஒன்று பின்னிக் கிடக்கும் மலையடியிலே யுள்ள ஒடுக்கமான பாதைகளிலே, அவளுக்கு யாதும் இடையூறு ஏற்படாதவாறு, அவளுக்கு முன்னரே சென்று, பொலிவு இழந்திருக்கும் பெரிய மலையைச் சார்ந்த தனிமை கொண்ட சிறிய ஊரிலே, வரும் விருந்தாக அவர்களை ஏற்று உண்பித்துத் தங்குமிடத்திலும் இருத்தி உதவுவேன். அதற்கு.*

*முனைகள் தளிர்களுடன் அசைந்தாடும் நொச்சி சூழ்ந்த மனைக்குரிய பெண்டாக யானும் சென்று ஆவேனாகுக!*

*என்று, மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியவளாக வருந்தியிருந்தாள் என்க.*

**சொற்பொருள்:** *1. உடலுநள் - வரந்துபவள். 2. தீவாய் - கொடுமை கூறும் வாய். 7. வறுமனை - செல்வமகள் இல்லாததால் வறுமனையாயிற்று. 13. நன் வாயாக - உண்மை தோன்ற 14. மான் - விலங்கு. 16. செல்விரந்து - வழிப்போக்கரான புதியவர்க்கு அளிக்கும் விருந்து.*

**விளக்கம்:** *தன் மகள் நாணுவாள் எனத் தான் அலர்பற்றிக் கேளாதிருந்த தன்மையை உணராது, அவள் 'தாய் அறிந்தால் கோபிப்பாள்' எனச் சென்ற பேதைமையைத் தாய் எண்ணிக் கலங்குகிறாள் அவர்களுடைய உடன்போக்கிலே, இடை யிடையே அவர்கள் தங்கி இளைப்பாறிச் செல்ல, விருந்தாற்றி மகிழும்வண்ணம் செல்லமாட்டோமா எனவும் துடிக்கிறாள்.*

**பாடபேதங்கள்:** *2. உணர.*

## 204. மிக விரைந்து செல்க!

**பாடியவர்:** *மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *வாணனின் சிறு குடியினது வளம். (பண்ணனின் சிறு குடி எனவும் பாடம்); பாண்டியனின் போர் வெற்றி.*

*(பாண்டியனுக்குப் படைத்துணையாகச் சென்ற தலைவன் ஒருவன், போர் வெற்றியுடன் முடிந்ததும், தன் தலைவியின் நினைவு மீதூறத் தன் பாகரிடம் தேரினை விரையச் செலுத்துக வென இப்படிச் சொல்லுகிறான்.)*

**உலகுடன் நிழற்றிய தொலையா வெண்குடைக்,**
**கடல்போல் தானைக், கலிமா வழுதி**
**வென்றுஅமர் உழந்த வியன்பெரும் பாசறைச்**
**சென்றுவினை முடித்தனம் ஆயின், இன்றே**
**கார்ப்பெயற்கு எதிரிய காண்தகு புறவில்,**

**கணங்கொள் வண்டின் அம்சிறைத் தொழுதி**
**மணங்கமழ் முல்லை மாலை ஆர்ப்ப,**
**உதுக்காண் வந்தன்று பொழுதே: வல்விரைந்து,**
**செல்க, பாக! நின் நல்வினை நெடுந்தேர்-**
**வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை**

**பன்மலர்ப் பொய்கைப் படுபுள் ஓப்பும்**
**காய்நெல் படப்பை வாணன் சிறுகுடித்**
**தண்டலை கமழும் கூந்தல்,**
**ஒண்தொடி மடந்தை தோள்இணை பெறவே.**

உலகம் முழுவதற்குமாக ஒருங்கே நிழல்செய்து கொண்டிருக்கும் கெடாத வெண்கொற்றக்குடையினை உடையவன்; கடல் போன்ற தானைப்பெருக்கத்தையும், செருக் குடைய குதிரைப் படையினையும் உடையவன், பாண்டியன், போரிலே வெற்றியுடன் அமரினைச் செய்து முடித்து, அந்த மகிழ்வினாலே களித்திருப்பது அவனுடைய அகன்ற பெரிய பாசறை. அதனிடத்தே சென்று விடைபெறுவதான செயலையும் நாம் முடித்துவிட்டோம். அதனால்.

கார்மழை பெய்ததனால் எதிர்ப்பட்டுக் காட்சிக்கு இனி தாகக் காடும் விளங்கும்; தொகுதி கொண்டுவரும் வண்டினங் களின் அழகிய சிறகினையுடைய கூட்டங்கள்; மணம் கமழுகின்ற முல்லை மலர்களிலே, மாலைப் பொழுதிலே, மொய்த்து ஆரவாரித்துக் கொண்டுமிருக்கும். நாம் திரும்புவதற்கான பொழுது வந்துவிட்டதனை அதோ நீயும் பாராய்! அதனால்,

வெண்மையான நெல்லினை அரிவோர் முழக்கும், தோல் மடங்கிய ஓரங்களையுடைய தண்ணுமையின் ஒலியானது, பல்வகை மலர்களையுடைய பொய்கையிலே தங்கியிருக்கும் பறவைகளை எல்லாம் ஓட்டும், விளைந்த நெற்பயிர் செறிந்த வயல்களையுடையது வாணனது சிறுகுடி என்னும் ஊர். அவ்வூரிலுள்ள குளிர்ந்த சோலையினைப்போல மணக்கும் கூந்தலையும், ஒளிபொருந்திய வளையல்களையும் உடைய எம் தலைவியின் தோள்களை, யாம் சென்று தழுவுதலைப் பெறுவதற்கு, இன்றே, பாகனே, நின்னுடைய நல்ல தொழில்திறம் உடைய நெடுந்தேர் மிகவும் விரையச் செல்வதாக!

என்று, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குத் தேரை விரையச் செலுத்துமாறு கூறினான் என்க.

**சொற்பொருள்:** 1. தொலையா - கெடாத. 2. தானை - காலாட்படை. கலிமா - செருக்குடைய குதிரைப் படை. 4. வினைமுடித்தனம் - பாண்டியனிடம் விடைபெற்று வருதலான வினையை முடித்துவிட்டோம். 5. எதிரிய - எதிரிட்டுத் தோன்றிய. புறவு - காடு. 6. கணங்கொள் - தொகுதி கொள்ளும். 10. மடிவாய் - மடிந்த வாய்; தண்ணுமையின் தோல் மடிந்திருப்பதனால் சொல்லப்பட்டது. 12. வாணன் - ஒரு குறுநிலத் தலைவன்; பண்ணன் என்பது வேறு பாடம்.

**உள்ளுறை:** முல்லை மலரிலே வண்டினம் மாலைக் காலத்திலே மொய்க்கச் சென்றதைக் கூறினான். கார்காலம்

வந்ததனையும், தானும் தன் காதலியுடன் கூடி இன்புறும் நினைவுடையவனாகிய நிலையினையும் குறிப்பாகக் காட்டுதற்கு.

**பாடபேதங்கள்:** *3. வேத்தமர் உழந்த. 12. பண்ணன் சிறுகுடி.*

## 205. எளிதாக அடைக!

**பாடியவர்:** *நக்கீரர்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி, வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *கோசரை வென்ற பொலம்பூண் கிள்ளியின் காவிரிப்பூம் பட்டினத்துச் சிறப்பு.*

*(தலைமகன், பிரிந்து சென்றவன், குறித்த காலம் வந்தும் வராததனால், தலைவி வாடி வருத்தமுற்று மெலிவுற்றனள். அது கண்டு, அவளுடைய தோழி, அவளை ஆற்றியுரைப்பது கருதிச் சிலபல சொல்லத், தலைவி, இவ்வாறு தன் தோழிக்குத் தன் நிலையைக் கூறுகின்றாள்)*

**'உயிர்கலந்து ஒன்றிய தொன்றுபடு நட்பின்**
**செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போலத்,**
**தையல்! நின்வயின் பிரியலம் யாம்' எனப்**
**பொய்வல் உள்ளமொடு புரிவுஉணக் கூறி,**
**துணிவில் கொள்கையர் ஆகி, இனியே**

**நோய்மலி வருத்தமொடு நுதல்பசப் பூர**
**நாம்அழத் துறந்தனர் ஆயினும், தாமே**
**வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை**
**வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி,**
**நிலங்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி,**

**பூவிரி நெடுங்கழி நாப்பண், பெரும்பெயர்க்**
**காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன**
**செழுநகர் நல்விருந்து அயர்மார், ஏமுற**
**விழுநிதி எளிதினின் எய்துக தில்ல-**
**மழைகால் அற்சிரத்து மாலிருள் நீக்கி,**

**நீடுஅமை நிவந்த நிழல்படு சிலம்பில்;**
**கடாஅ யானைக் கவுள்மருங்கு உதிர**
**ஆம்ஊர்பு இழிதரு காமர் சென்னி,**
**புலிஉரி வரியதள் கடுப்பக், கலிசிறந்து,**
**நாட்பூ வேங்கை நறுமலர் உதிர,**

**மேக்குஎழு பெருஞ்சினை ஏறிக் கணக்கலை**
**கூப்பிடூஉ உகளும் குன்றகச் சிறுநெறிக்**

**கல்பிறங்கு ஆரிடை விலங்கிய**
**சொல்பெயர் தேஎத்த சுரன் இறந்தோரே.**

உயிர்கள் ஒன்று கலந்து இணைந்த, பழைமையாக வரும் தொடர்ந்த நட்பினாலே, குற்றமற்ற காதல் நெஞ்சத்துடனே, நம்மோடு இணைந்திருந்தவர் போலப், 'பெண்ணே! நின்னிடத்தே இருந்து யாம் என்றும் பிரியோம்' என்று, பொய் மையிலே வல்லமையுடைய தன் உள்ளத்துடனே யாம் விரும்புமாறு கூறி, அன்று எம்மைத் தலையளி செய்தவரும் அவரே இனி, அந்த உறுதியானது இல்லாமற்போன கொள்கை யினராகிப், பிரிவுத் துன்பமானது அதிகமாகிய வருத்தத்துடன் நம்நெற்றியிலே பசலை படரவும், நாம் அழவுமாக, நம்மைப் பிரிந்து சென்றனர். என்றாலும்,

மழைபோலப் பனி பெய்துகொண்டிருக்கும் முன்பனிக் காலத்தின் மயங்கிய இருளும் நீங்கியது; நீண்ட மூங்கில்கள் உயரமாக வளர்ந்துள்ள நிழல்பொருந்திய மலைச்சாரலிலே, மதயானையின் கன்னத்தின் பக்கத்தைப்போல விருப்பமூட்டும் மலையுச்சிகளிலே இருந்து, நீரும் ஊர்ந்து இறங்கிக் கொண்டிருக்கிறது. அவ்விடத்தே, புலியினின்றும் உரித்த வரிகளையுடைய தோலைப் போன்று விளங்கும், மணநாளிலே பூக்கும் வேங்கையின் நறுமணமுடைய மலர்கள் உதிருமாறு, செருக்கு மிகுந்த, அந்த வேங்கையினது மேனோக்கி உயர்ந்து எழுந்த பெரிய கிளையிலே, கூட்டமான ஆண்குரங்குகள் ஏறித், தம்முடைய பெண் குரங்குகளைக் கூப்பிட்டுத் தாவிக்கொண்டு மிருக்கும். அத்தகைய, குன்றிடையேயுள்ள ஒடுங்கிய நெறியாகிய, கற்கள் விளங்கும்அரிய இடங்கள் குறுக்கிட்ட அதனையும் கடந்து, மொழிவேறுபட்ட தேயங்களுக்கும் சென்றவர் அவர்.

சொன்ன சொல்லிலே நிலைபெற்ற உறுதியுடைய, நெடுந்தொலைவுக்கு விளங்கும் புகழையும் உடைய, வளமிக்க கோசர்களது விளக்கமுற்ற படைகளை அழித்து, அவர்களுடைய நாட்டையும் கைக்கொள்ள விரும்பியவன், 'பொலம் பூண்கிள்ளி' என்பவன். அவனுடைய, நெய்தற் பூக்கள் விரிந்து மணம் பரப்பும் நீண்ட கழியின் நடுவே, தோட்டக் கால்களையுடைய பெரும் புகழ்பெற்ற காவிரிப்பூம் பட்டினத்தைப் போன்ற செழுமையான நம் வீட்டிலே, நல்ல விருந்து செய்வதற்கு இனபம் உண்டாகுமாறு, சிறந்த பொருள்களை அவர்சென்ற விடத்திலே எளிதாக அடைவாராக!

என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி வற்புறுக்கும் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. உயிர் கலத்தல் - முன் பற்பல பிறவிகளினும் கணவன் மனைவியராக இணைந்து வாழ்ந்த உயிரின் கலப்பு; இதனை உழுவலன்பு என்பர். ஒன்றிய - ஒன்றுபட்ட. தொன்றுபடு நட்பு - பழைமையாக வருகின்ற தொடர்பு. 2. செயிர் - குற்றம். செறிந்தோர் - கலந்தவர். 4. பொய்வல் உள்ளம் - உள்ளத்திலே ஒன்றைக்கொண்டு வெளியே ஒன்றாகப் பேசும் உள்ளம். 6. கொள்கை - குறிக்கோள். 8. சேண் விளங்குதல் - தொலை தூரங்கட்கும் பரவியிருத்தல். 9. நூறி - அழித்து. 10. வெஃகிய - கவர்ந்த. பொலம்பூண் - பொன்னாலான பூண் கிள்ளி - சோழன். 11. நாப்பண் - நடுவிடத்தே. 12. படப்பை - தோட்டக் கால்கள் 14. விழுநிதி - சிறந்த செல்வம். அற்சிரம் - முன்பனி. 17. கவுள் - கன்னம். கடாஅ யானை - களிற்று யானை. 20. நாட்பூ - புதுப்பூ; அன்று மலர்ந்த பூ. 21. மேக்கெழு - மேனோக்கி எழுந்த.

**விளக்கம்:** கார்காலத்து வருவதாக உறுதிகூறிப் பிரிந்தவன், முன்பனிக்காலம் வந்தும் வந்தானில்லையே என்ற ஏக்கம், அவள் சொற்களிலே இழையோடினாலும், 'நம்மை வருந்தவிட்டுச், சொல்லும் பொய்த்துப் பிரிந்தனர் என்றாலும், பொருளாயினும் அவருக்கு எளிதிலே வாய்ப்பதாக' என்று சொல்லுகிறாள். அது அவள் ஆற்றியிருப்பாள் என்பது படச் சொன்னது போலத் தோன்றினும், அவளுடைய ஆற்றாமையின் மிகுதியையே உரைத்ததாகும்.

**பாடபேதங்கள்:** 5. துனியில் கொள்கையர். 18. வாழுர்பு இழியும். 22. குன்றச் சிறுநெறி.

## 206. என்ன சொல்லப்படுமோ?

**பாடியவர்:** மதுரை மருதனிள நாகனார். **திணை:** மருதம். **துறை:** வாயில் வேண்டிச் சென்ற விறலிக்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

(பரத்தையின் உறவிலே திளைத்திருந்த தலைவன், தன் மனைவியின் நினைவு மேலெழ, அவளிடம் திரும்புதற்கு விரும்புகின்றான். தன் செயலால் அவள் ஊடிச் சினங்கொண் டிருப்பாள் என்பதை அவனும் அறிவான். ஆகவே, விறலியை முதலில் தூதனுப்பத், தலைவி அவளிடம் இப்படிக் கூறுகிறாள்.)

**என்னெனப் படுங்கொல்-தோழி!-நல்மகிழ்ப்**
**பேடிப் பெண்கொண்டு!ஆடுகை கடுப்ப**
**நகுவரப் பணைத்த திரிமருப்பு எருமை**

**மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்,**
**சிறுதொழின் மகாஅர் ஏறிச், சேணோர்க்குத்**

**துறுகல் மந்தியின் தோன்றும் ஊரன்,**
**மாரி ஈங்கை மாத்தளிர் அன்ன**
**அம்மா மேனி, ஆயிழை, மகளிர்**
**ஆரந் தாங்கிய அலர்முலை ஆகத்து**
**ஆராக் காதலொடு தாரிடை குழைய,**

**முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்**
**வதுவை மேவலன் ஆகலின், அது புலந்து**
**அடுபோர் வேளிர் வீரை முன்றுறை,**
**நெடுவெள் உப்பின் நிரம்பாக் குப்பை,**
**பெரும் பெயற்கு உருகியா அங்குத்**

**திருந்திழை நெகிழ்ந்தன, தடமென் தோளே!**

*தோழி! நல்ல களிப்புடனே பேடிப்பெண்ணின் வேடத்தைப் பூண்டு கூத்தர்கள் ஆடுவார்கள். அப்படி ஆடும்போது கைகளைப் பின்னாக மேல்நோக்கி வளைத்து அவர்கள் அபிநயமும் செய்வார்கள். அப்படி வளைந்து மேலே நோக்கிய தாகப் பின்புறம் விளங்கும் அவர்களின் கைகளைப்போல எருமையின் கொம்புகள் பின்னாக வளைந்தனவாய் விளங்கும். விளக்கமுறப் பெருத்தும் முறுக்குண்டாகவும் அக் கொம்புகள் காணப்படும். அத்தகைய எருமையினது மயிரோடு அழகு பெற்றுத் தோன்றும் கரிய தோலினையுடைய முழவுகளின் பெரிய முதுகிலே, எவிய சிறுதொழில்களைச் செய்யும் சிறுவர்கள் ஏறி விளையாடிக் கொண்டிருப்பார்கள். அது தூரத்திலிருப்பவர்களுக்கு, உருண்டைக் கல்லின்மேலே இருக்கும் மந்திகளைப் போலத் தோன்றும். அத்தகைய வளமான ஊருக்கு உரியவன் நம் தலைவன்.*

*மாரிக்காலத்திலே விளங்கும் ஈங்கைச் செடியின் சிறந்த தளிரினைப் போன்ற, அழகிய மாமை நிறத்தினையுடைய மேனி வனப்பையும், ஆய்ந்த ஆபரணங்களையும் உடையவர் பரத்தை யர்கள். முத்தாரத்தைத் தாங்கியிருக்கும் பூரித்த முலைகளை யுடைய அவர்களது மார்பகத்தே, ஆராத காதலுடனே தழுவலின், தார் இடையிலே பட்டுக் குழையுமாறு, முடிவின் ஒலி ஓய்தலில்லாத, விழாவினையுடைய அவரது பெரிய மனையிலே மணத்தினைப் பொருந்தியவனாயினான் அவன். ஆதலினால்,*

*அவனோடு மீண்டும் கூடிக்கலந்து வாழும் செயலினை யானும் வெறுத்தேன். வேளிர்கள், போரிலே வெற்றி காணும்*

ஆற்றல் உடையவர்கள். அவர்கட்கு உரியது வீரை முன்துறை என்னும் இடம். அதன்கண், உப்பின் அளவற்ற குவியல்கள் வெண்மையாக நெடுகக் கிடக்கும். பெருமழைக்கு அவை கரைந்து ஓடினாற் போல, எனது பரந்த மென்மையான தோள்களும் வளமழிந்து மெலிந்த. அதனால் திருத்தமான என் தோள் வளைகளும் நெகிழ்ந்தன. இனி, என் நிலைமை என்னவென்று ஊரிற் சொல்லப்படுமோ? யானே அறியேன்!

என், வாயில் வேண்டிச்சென்ற விறலிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 2. பேடிப் பெண் கொண்டு - பேடியாகப் புனைந்து ஆடும் பேடிக்கூத்து. 3. நகுவர - வணங்குதலுற. 4. இரும் புறம் - பெரிய புறமும் ஆம். 5. சிறுதொழில் மகா அர் - குற்றேவல் செய்யும் சிறுவர்கள். 6. துறுகல் - வட்டக்கல். 7. ஈங்கை - ஈங்கைச் செடி. . அலர் முலை - பணைத்துப் பெருத்த முகிழ்த்த முலைகள். 12. வதுவை மேவலன் - மணம் பொருந்துதலை உடையவன். 14. நிரம்பாக் குப்பை - அளவற்ற குவியல்கள்; விளையாத குவியல் களுமாம். உப்பு எடுத்து இவ்வளவு காலங்கழித்தே பயன்படுத்தலாம் என்ற நியதியுண்டு; அதுவரை அதனைக் கடற்கரையிலே குவித்து வைத்திருப்பார்கள்; அவையே நிரம்பா உப்பு ஆகும். 15. உப்பு உருகியாங்கு - உப்பு கரைந்து போதலைப் போல. 16. திருந்திழை - திருத்தமான ஆபரணங்கள்.

**விளக்கம்:** அவன், பரத்தையரோடு கூடி மகிழும் ஆரவாரம் ஓயாமல் கேட்கின்றதனால், அவனோடு சேர்வதையே நான் வெறுத்தேன் என்றனள். உப்புக் கரைதல்போல அவள் நலன்களும் அழிந்தன என்க.

**பாடபேதங்கள்:** 3. நகுவரப் படைத்த. 4. மயிர் கவின். 5. சேணார்க்கும்.

## 207. முகவை உண்டாளோ?

**பாடியவர்:** மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார். **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய தாய் சொல்லியது: மகட் போக்கிய செவிலி சொல்லியது எனவும் பாடம்.

(தன் மகள் தலைவனுடன் உடன்போக்கிலே சென்றுவிட்ட வருத்தம் தாளாது புலம்பும் தாய், 'அவள் அந்த வேனிற்காட்டிலே வேகையால் வாடி வருந்துவாளே' எனவும் நினைக்கின்றாள். தேனும் பாலும் கலந்து வேண்டி வேண்டி ஊட்டவும் உண்ணாது ஒதுக்கும் தன் மகளின் பழைய நிலையும், தலைவன் வறண்ட கூவலைத் தோண்ட அதன்பால் கிடைத்த உவர்நீரை வியத்துக்

களைத்துக் குடித்து விடாய் தீரும் தன் மகளின் புதிய நிலையும், தாயின் மனக் கண்முன் தோன்ற. அவள் இப்படிக் கூறுகின்றாள்.)

**அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார், புள்ளோர்த்துப்**
**படைஅமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்**
**நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்**

**குறைக்குளம்பு உதைத்த கற்பிறழ் இயவின்,**
**வெஞ்சுரம் போழ்ந்த அஞ்சுவரு கவலை,**
**மிஞிறுஆர் கடாஅம் கரந்துவிடு கவுள,**
**வெயில்தின வருந்திய, நீடுமருப்பு ஒருத்தல்**
**பிணரழி பெருங்கை புரண்ட கூவல்**

**தெண்கண் உவரிக் குறைக்குட முகவை.**
**அறனிலாளன் தோண்ட, வெய் துயிர்த்துப்,**
**பிறைநுதல் வியப்ப,உண்டனள் கொல்லோ-**
**தேம்கலந்து அளைஇய தீம்பால் ஏந்திக்**
**கூழை உளர்ந்து மொழிமை கூறவும்,**

**மறுத்த சொல்லள் ஆகி,**
**வெறுத்த உள்ளமொடு உண்ணா தோளே!**

அச்சம் உடைய கடல் நீர் பாய்ந்து, உப்பு வயல்களிலே காய்ந்து வெம்மையால் தம்மை மாறி உப்பாகிய வெண்கல்லான அமிழ்தினை, மேற்குத் திசைப் பகுதிகளுக்கு விற்பனைக்குக் கொண்டு செல்வார்கள். அப்படிச் செல்லுவதற்கான நல்ல நிமித்தமும் பார்த்துப், பாதுகாவலுக்குப் படைத்துணையும் அமைத்துக் கொண்டு, பெரிய செயலாற்றலையுடைய ஆடவர்கள் எழுவார்கள். அவர்களுடைய, அடுக்கிய உப்பு மூட்டைகளைச் சுமந்து செல்லும் வெண்மையான முதுகினை யுடைய கழுதைகளின் தேய்ந்த குளம்புகள் உதைத்தலால், கற்கள் தடம்புரண்டு கிடக்கும் நிலையினையுடையன, கொடிய பாலைநிலத்து வழிகள், அவ்வழிகள் பாலைநிலத்தை ஊடறுத்துச் செல்வன போன்றும் விளங்கும்.

வண்டுகள் மொய்க்கும் மதநீரும் தன் கன்னங்களில் இல்லாது போன, வெயில் வருந்துதலால் வருத்தங்கொண்ட, நீண்ட கொம்புகளையுடைய களிறானது, சருச்சரை அழிந்த தன்பெரிய கையினாலே துழாவிப் பார்த்துச் சென்றுள்ள கிணற்றிலே, அறனற்றவனான அவள் காதலன், தோண்டத் தெளிவாக ஊறிவரும் உவர் நீரைக் குறைக்குடமாவே முகந்து, எடுக்க வேண்டும்,

தேனைக் கலந்து அளாவிய இனிய பாலை ஏந்திக்கொண்டு, கூந்தலைக் கோதியும் நயமான சொற்களைச் சொல்லியும், உண்ண மறுத்துப் பேசுபவளாகி, அதனையும் வெறுத்த உள்ளத்துடன் முன்னர் உண்ணாதிருப்பவள் எம் மகள்.

அவள், வெம்மையால் நெடுமூச்செறிந்து, பிறை போன்ற தன் நெற்றியும் வியர்ப்ப, அந்த நீரையும் எங்ஙனம் தான் பருகினாளோ?

என்று, மகட்போக்கிய தாய் தனக்குட் சொல்லி வருந்தினாள் என்க.

**சொற்பொருள்:** 1. அணங்கு - கண்டோரை அழகால் மயக்கிக் கொல்லும் பெண் தெய்வம்; ஆகவே, அணங்குடை முந்நீர் - அச்சந்தரும் கடல் எனவும் கொள்ளலாம். செறு - வயல்; உப்புப் பாத்திகள் என்பர். 3. புள்ளோர்த்தல் - 'படுபட்சிப் பார்த்தல்' என இந்நாள் வழங்கும் நிமித்தம் பார்த்தல் 5. பொறைய - சுமையையுடையன. 10. பிணர் - சருச்சரை. 11. முகவை - முகக்கப்பட்ட நீர். 13. அறன் இலாளன் - அவள் காதலன்; அவளை அங்ஙனம் கொண்டு வருத்தியும், அவள் பிரிவால் பலரையும் வருத்தியும் செய்த செயல் குறித்துக் கூறியது. 15. கூழை - கூந்தல். மொழிமை - நயமான மொழிகள்; மோழைமை பாடமானால், பணி மொழிகள்.

**பாடபேதங்கள்:** 15. மோழைமை கூறவும். 16. சொல்லாளாகி.

## 208. உப்புச் சிறை!

**பாடியவர்:** பரணர். **திணை:** குறிஞ்சி. **துறை:** புணர்ந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் பாழிப் பறந்தலையிலே நன்னனோடு போரிட்டு வீழ்ந்ததும், துயருற்ற வேண் மகளிருக்கு அவன் அருளாது போக, அகுதை, அவர்களது துயர் ஒழித்ததும் ஆகிய செய்திகள்.

(தன் தலைவியைக் களவிலே கூடி மகிழ்ந்து நீங்கும் தலைமகன், அவளுடைய சிறந்த தன்மைகளையும், அவளைத் தான் கூடிய பேற்றையும் நினைந்து, இவ்வாறு அவளைப் போற்றி உரைக்கின்றான்.)

**யாம இரவின் நெடுங்கடை நின்று,**
**தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்**
**நுண்கோல் அகவுநர் வேண்டின், வெண்கோட்டு**

**அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்**
**வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்,**

**அளிஇயல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை,**
**இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு**
**நண்பகல் உற்ற செருவில் புண்கூர்ந்து,**
**ஒள்வாள் மயங்குஅமர் வீழ்ந்தெனப், 'புள்ஒருங்கு**
**அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று**

**ஒண்கதிர் தெறாமை, சிறகரிற் கோலி,**
**நிழல்செய்து உழறல் காணேன், யான் எனப்**
**படுகளம் காண்டல் செல்லான், சினஞ் சிறந்து,**
**உருவினை நன்னன், அருளான் கரப்பப்,**
**பெருவிதுப் புற்ற பல்வேள் மகளிர்**

**குரூஉப்பூம் பைந்தார் அருக்கிய பூசல்,**
**வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை**
**அகுதை களைதந் தாங்கு, மிகுபெயர்**
**உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல,**
**நாணுவரை நில்லாக் காமம் நண்ணி**

**நல்கினள், வாழியர், வந்தே-ஓரி**
**பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்**
**கார்மலர் கடுப்ப நாறும்,**
**ஓர்நுண் ஓதி மாஅ யோளே!**

'வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்' என்பான். பெரிதும் வள்ளன்மை நிறைந்த உள்ளம் உடையவன். இரவின் கடையாமத்திலே யானாலும், அவனுடைய நீண்ட கடைவாயிலிலே சென்றுநின்று, தேன் முதிர்ந்த அவனுடைய மலையுச்சிகளைக் கொண்ட குன்றத்தைப் போற்றிப்பாடும் சிறிய பிரப்பங் கோலையுடைய அகவுநர்கள் விரும்பினால், வெண்மையான கொம்புகளையும், தலைமைச் செருக்கையுமுடைய யானை யானாலும், அவருக்குக் கொடுத்து, அந்த வள்ளன்மையிலே மகிழ்வும் கொள்பவன் அவன். அத்துடன், அனைத்து உயிர்களிடத்தும் அருள் பொருந்தும் வாழ்க்கையினையும் உடையவன். நெற்றிப் பட்டம் அணிந்த யானைகளையும், விரைந்து செல்லும் தேரினையும் உடைய மிஞிலி என்பவனோடு, பாழிப்பறந்தலை என்னுமிடத்திலே அவன் செய்த போரிலே, நண்பகற் பொழுதிலேயே, ஒள்ளிய வாட்படை மயங்கிய போரினாலே புண்பட்டு அவன் மடிந்து வீழ்ந்தான்.

அழகிய இடத்தையுடைய வானத்திலே விளங்கும் ஞாயிற்றினது ஒளியுடைய கதிர்கள், அவன் உடலைக் காய்ந்து வருத்தமற் பொருட்டுப் பறவைகள் எல்லாம் ஒன்றாகக் கூடித், தம் சிறகுகளால் பந்தரிட்டு நிழல்செய்து காத்தன. 'அதனை என் கண்ணால் யான் காணமாட்டேன்' என்று, படுகளம் காண்பதற்கும் செல்லாதவனாகச், சினம் மிகுந்தவனாக, அச்சமூட்டும் போர்த்தொழிலனான நன்னன் என்பான், உள்ளத்திலே அருள் இல்லாதவனாக, எங்கோ சென்று மறைந்து கொண்டான்.

மிகவும் வருத்தமுற்று வந்த வேளிர் மகளிர்கள் பலரும், விளங்கிய பூக்களாலாகிய தம் அழகிய மாலைகளைப் பிய்த்தெறிந்து, அக்களத்திலே அழுது கலங்கினர். அவர்களுடைய வருத்த மிகுதியைப், பழி நீங்க மாற்றார் படையினை வெல்லும், விளங்குகின்ற பெரிய சேனையையுடைய அகுதை என்பவன் சென்று நீக்கினான். அது போல,

ஓரி என்பானது பல பழங்கள் தூங்கும் பலாமரங்களின் பயன் நிறைந்துள்ள கொல்லிமலையிலே, பூக்கும் கார்காலத்துப் பூக்களைப்போன்ற, நறுமணமுடைய அழகும் மென்மையுமுடைய கூந்தலினாளும் மாமை நிறத்தினளுமான நம் தலைவியும், உப்பினால் அடைத்தவிடத்து அந்தத் தடையினால் கட்டுப்பட்டு நில்லாது உடைத்துக் கொண்டு பெருகிச் செல்லும் பெரு மழையின் வெள்ளத்தைப் போல, நாணத்தின் எல்லையிலே அடங்கிக் கட்டுப்பட்டு நில்லாத, காமத்தைப் பொருந்தியவளாயினாள். நம்பால் வந்து நமக்கு அருளும் செய்தனள், அவள் வாழ்வாளாக!

என்று, புணர்ந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. யாம இரவு - இரவின் நடுச்சாமமும் ஆகும். நெடுங்கடை - நெடிய கடைவாயில். 2. தே முதிர் சிமையம் - தேன் முதிர்ந்திருக்கும் மலையுச்சிகள். குன்றம் பாடும் - குன்றத்தைப் போற்றிப் பாடும். 3. நுண்கோல் - சிறு பிரப்பங்கோல். 6. அளியியல் வாழ்க்கை - அருளோடு பொருந்திய வாழ்க்கை. 9. வாள் மயங்கு அமர் - வாள் ஒன்றுடன் ஒன்று மோதி மயக்கங் கொள்ளுகின்ற போர். 12. உழறல் - வட்டமிட்டுப் பறந்து கொண்டிருத்தல். 16. குரூஉப் பூம் பைந்தார் - விளங்கும் பூக்களால் ஆகிய அழகிய மாலை. அருக்கிய - சிதைத்த. 19. சிறை - அணை; தடை. 20. வரை - எல்லை. 24. ஏர் - அழகு. நுண்மை - மென்மை.

**விளக்கம்:** *ஆய் எயினன் வீழ்ந்தானாகக் கலங்கிய மகளிர்க்கு, அகுதை உதவிப் பழிதுடைத்தது போலக், காமத்தால் உளமழிந்த தனக்கும் அவள் வந்து தண்ணளி செய்தாள் என்றாள். காமம் மீதூறும்போது, அதனை நாணத்தாலும் தடை செய்ய முடியாது என்ற கருத்தினை, 'நாண்வரை நில்லாக் காமம்' என்ற தொடர் சிறப்பான முறையிலே விளக்குவதாகும்.*

*அகுதை, நன்னன், வெளியன், வேண்மான் ஆய் எயினன் ஆகியோரின் வரலாறுகளை எல்லாம் பின்னிணைப்பிலே காண்க.*

**பாடபேதங்கள்:** *11. தெருமற் சிறகரில். 12. காணெனச் சினைஇ. 16. தாராக்கிய. 17. வரைவிடக் கடக்கும். 20. நாணுவரையில்லா.*

## 209. நினையாது இருத்தலோ அரிதே!

**பாடியவர்:** *கல்லாடனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது; பிரிவிடை வேறுபட்ட தலைமகளை வற்புறுத்தும் தோழி சொல்லியது எனவும் பாடம்.* **சிறப்பு:** *பாண்டியன் நெடுஞ்செழியனின் ஆலங்கானப் போர்; கள்வர் கோமான் புல்லியின் வேங்கட நெடுவரை; முள்ளூர்க்கு மன்னனான காரி ஓரியைக் கொன்று கொல்லியைச் சேரர்களுக்குத் தந்தது; கொல்லிப் பாவையின் பேரழகு முதலியன,*

*(தலைமகனின் பிரிவினால் வாடி மெலிந்திருக்கும் தலைவிக்குத் தோழி, அவளை ஆற்றுவித்து அமைதி கொள்ளச் செய்வது கருதி இப்படி உரைக்கின்றாள். 'எத்துணைச் செல்வமும் புகழும் பிறவும் பெற்றாலும், நின்னுடைய பேரெழிலை அவர் நினையாதிருத்தல் அரிது' என்று சொல்லும் தோழியின் சொல் நயத்தினை இச் செய்யுளிற் காணலாம்.)*

**'தோளும் தொல்கவின் தொலைந்தன; நாளும்**
**அன்னையும் அருந்துயர் உற்றனள், அலரே,**
**பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்,**
**எழுஉறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்,**
**நேரா எழுவர் அடிப்படக் கடந்த**

**ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிது என,**
**ஆழல் வாழி, தோழி!-அவரே,**
**மாஅல் யானை மறப்போர்ப் புல்லி**
**காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்**
**அறைஇறந்துஅகன்றனர் ஆயினும், நிறைஇறந்து**

**உள்ளார் ஆதலோ அரிதே-செவ்வேல்**
**முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி**
**செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்**
**ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த**
**செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி,**

**நிலைபெறு கடவுள் ஆக்கிய,**
**பலர்புகழ் பாவை அன்னநின் நலனே.**

தோழியே, நீ வாழ்வாயாக! "என் தோள்களும் தம்முடைய பழைய அழகு கெட்டுப்போயின. நாள்தோறும் அன்னையும் பொறுத்தற்கு அரிய துயரம் கொண்டவள் ஆயினாள். பொன் தகடுகள் வேய்ந்த நீண்ட தேரினையுடையவன் தென்னவர் கோமானாகிய பாண்டியன்; கணைய மரத்தினைப் போன்ற திரண்ட தோள்களையும் விரைந்து செல்லும் தேரினையும் உடையவனான அந்த நெடுஞ்செழியன், தன்னைப் பகைத்த எழுவரையும் வேரோடு அழித்து வென்றனன். அன்று, அந்த ஆலங்கானத்திலே எழுந்த வெற்றி ஆரவாரத்தினும், இன்று நம் ஊரிலே எழுந்த பழிச்சொல் பெரிது' என்று கூறித், துயரத்திலே ஆழ்ந்து வருந்தாதிருப்பாயாக.

நம்முடைய தலைவரான அவர், மதம்கொண்ட யானைகளையும் போர்வன்மையினையும் உடைய புல்லி என்பானது, மூங்கில்களை உடைய நீண்ட சாரல்களைக் கொண்ட வேங்கட மலைத்தொடர்களுக்கு அப்பாலுள்ள, குன்றுகளைக் கடந்து சென்றுள்ளனர். ஆனாலும்,

குருதி தோய்ந்து சிவந்த வேலினையும், வீரக் கழல்களையும், வீரவளையினையும் கொண்டவன், முள்ளூர் மன்னனாகிய காரி என்பவன். அவன், கெடாத நல்ல புகழினை இவ்வுலகிலே நிலைபெறுத்திய, வில்லாற்றலிலே வன்மையுடையவனான ஓரியைக் கொன்று, சிவந்த வேர்களையுடைய பலாமரத்தின் பயன் நிறைந்த அவனுடைய கொல்லிமலையினைச் சேரலனுக்குத் தந்தான். அந்தக் கொல்லிமலையிலே, நிலைபெற்ற தெய்வத்தச்சனால் நிருவிக்கப்பெற்ற, பலரும் புகழும் பாவை கொல்லிப்பாவை எனப்படும். அந்தக் கொல்லிப் பாவையைப் போன்ற நின்னுடைய அழகினைத் தம்முடைய உள்ளத்திலே நிறைவாகக் கொள்ளும் நிலையினைக் கடந்து, நின்னை நினையாதிருப்பவர் ஆதல், நம்தலைவர்பால் ஒரு போதும் இல்லையாகும்.

என்று, தலைமகனின் பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயினாள் என்க.

**சொற்பொருள்:** *தொல்கவின் - தொன்மையான அழகு. எழு - கணைய மரம். திணிதோள் - திண்மையான தோள்கள். 5. நேரா எழுவர் - பகைத்து வந்த எழுவர்; இவர் விவரம் அகம் 36 ஆவது பாடலுள் காண்க. 6. ஆலங்கானம் - தலையாலங்கானம். 8. மா அல் யானை - பெரிய யானையுமாம். 9. உம்பர் - அப்பால், 10. அறை - குன்று. நிறை - நிறைந்துள்ள தன்மை. 11. செவ்வேல் - பகைவரைக் கொன்று குருதிக் கறை படிந்துள்ள வேல். 16. கடவுளாகிய - கடவுட் கோலம் செய்த எனவும் ஆம்.*

**மேற்கோள்:** *இயற்பட மொழிந்து வற்புறுத்தற்கு இச்செய்யுளை, 'என்பு நெகப் பிரிந்தோர் வழிச்சென்று கடைஇ, அன்பு தலையெடுத்த வன்புறைக் கண்ணும்' என்னும் பகுதிக் கண், 'நாற்றமும் தோற்றமும்' என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்.*

**பாடபேதம்:** *14. சேரலற் கீத்த.*

## 210. பல கேட்டனம் தோழி!

**பாடியவர்:** *உலோச்சனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தோழி, தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.*

*(உறவாடிக் கைவிட்ட தலைவன், நெடுநாட்களுக்குப் பின்னர் ஒருபுறமாக வந்திருக்க, அவன் செயலால் தாம் சாவது தவிர வேறு வழியில்லை எனக்கூறி, அவனை வரைந்து கொள்ளச் செய்ய முயலும் தோழி, இப்படிக் கூறுகின்றாள்.)*

**குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்**
**எறியுளி பொருத ஏமுறு பெருமீன்**
**புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட**
**விசும்பணி வில்லின் போகி, பசும்பிசிர்த்**
**திரைபயில் அழுவம் உழக்கி, உரனழிந்து,**

**நிரைதிமில் மருங்கில் படர்தரும் துறைவன்,**
**பானாள் இரவில்நம், பணைத்தோள் உள்ளி,**
**தானிவண் வந்த காலை, நம்ஊர்க்**
**கானலம் பெருந்துறைக் கவின்பா ராட்டி,**
**ஆனாது புகழ்ந்திசி னோனே; இனித்தன்,**

**சாயல் மார்பின் பாயல் மாற்றிக்,**
**'கைதைஅம் படுசினைக் கடுந்தேர் விலங்கச்**
**செலவுஅரிது என்னும்' என்பது**
**பலகேட் டனமால்-தோழி!-நாமே**

கொலைத் தொழிலினை உடையவரான கொடிய பரதவர்கள் குறுகிய இறைப்பினையுடைய குடிசையிலே வாழ் பவர்கள். அவர்களால் எறியப்பட்ட உளியினால் தாக்கப்பட்ட களிப்புப் பொருந்திய பெரிய மீன், வானத்தை அழகு செய்யும் வானவில்லைப்போல உயரே தாவித் துள்ளும். அதன் புண்ணினின்றும் ஒழுகும் குருதியினால் புலால் நாற்றமுடைய கடலின் நிறமும் நெந்நிறமாக மாறுபடும். திவலைகளையுடைய அலைகள் செறிந்த கடற்பரப்பை எல்லாம் அம்மீன் கலக்கிவிட்டுப், பின் தன்னுடைய வலியனைத்தும் அழிந்து போக, வரிசையாக இருக்கும் படகுகளின் பக்கத்திலே வந்து சேரும். அத்தகைய துறையினை உடையவன் நம் தலைவன்.

நள்ளிரவிலே, நம்முடைய பணைத்த தோள்களைத் தழுவுதலை நினைத்து, இவ்விடத்தே வந்த அந்நாளிலே, அவன் நம் ஊர்க் கானற் சோலையினையுடைய பெருந்துறையின் அழகினைப் பாராட்டி, அளவில்லாமல் புகழ்ந்தனன்.

இப்பொழுதோ, தன்னுடைய வனப்புடைய மார்பிலே யாம் கண்துயிலும் அந்த உறவினை அவன் மாற்றிவிட்டனன். 'தாழைகள் தாழ்ந்து கிடக்க, அதன்கிளைகள் தேரின் செலவைத் தடுக்க, நாம் அவ்விடத்தே செல்வதும் அரிது' என்றும் சொல்லுகிறான் என்பார்கள். அதனை நாமும் பலமுறை கேட்டுவிட்டோம்.

என்று, தோழி தலைமகன் சிறைப்புறமாக இருக்கத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. குறியிறை - தாழ்வான இறைப்பு. குரம்பை - குடிசை. 2. உளி - மீன் எறியும் கருவி. ஏமுறு - களிப்புப் பொருந்திய. 3. மறுப்பட - நிறம் வேறுபட. 4. விசும் பணி வில் - வானவில். பிதிர் - திவலைகள். 5. அழுவம் - நெருங்கிய கடற்பரப்பு. உரன் - வலிமை.
6. திமில் - படகு. 9. கவின் - அழகு. 12. கைதை - தாழை. படுசினை - தாழ்ந்த கிளை.

**உள்ளுறை:** பரதவரின் உளி பொருது புண்பட்ட மீன், கடல் நிறத்தை மாறுபடுத்தக், கடல் துறையையும் கலக்கி, தன் வலியழிந்து, படகு ஓரத்திலே வந்து ஒதுங்கும் என்றனள்; அது தலைவனால் நலன் நுகர்ந்து கைவிடப்பட்ட தலைவியானவள், பிரிவுத்துயரால் தன் அழகு கெட, அதனால் இற்பழியாகி, ஊரும் அலர்தூற்றக் கலங்கி, முடிவிலே வலியழிந்து இறந்து போவதே நிலைமையாயினள் என்பதனைச் சுட்டிச் சொன்னதாகும்.

**பாடபேதம்:** 6.படருந் துறைவன்.

## 211. நீரின் ஒலியும் ஊரலரும்!

**பாடியவர் :** *மாமூலனார்.* **திணை :** *பாலை.* **துறை:** *பிரிவின் கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.* **சிறப்பு:** *எழினியின் பற்களைப் பறித்து வந்து வெண்மணிவாயில் என்னும் இடத்திலே மத்தி என்பவன் பதித்து வைத்ததும், வேங்கடமலையின் சிறப்பும் பற்றிய செய்திகள்.*

*(தலைவியைத் தலைவன் பிரிந்து வேற்றுநாட்டிற்குச் சென்றிருந்தான். அவன், 'வருவேன்' என்று உறுதிகூறிச் சென்ற கார் காலமும் வந்து கழிந்தது. ஆனால், அவன் அப்போதும் வரவில்லை. அதனால், தலைவியின் ஏக்கமும் மெலிவும் அதிக மாகத், தோழி 'அவன் தவறாது வருவான்' எனத் தலைவிக்கு ஆறுதல் கூறுகிறாள்.)*

**கேளாய், எல்ல! தோழி-வாலிய**
**சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்**
**பறைகண் டன்ன பாவடி நோன்தாள்**
**திண்நிலை மருப்பின் வயக்களிறு உரிஞுதொறும்,**
**தண்மழை ஆலியின் தாஅய், உழவர்**

**வெண்ணெல் வித்தின் அறைமிசை உணங்கும்**
**பனிபடு சோலை வேங்கடத்து உம்பர்,**
**மொழிபெயர் தேஎத்தர் ஆயினும், நல்குவர்-**
**குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை**
**பிடிபடு பூசலின் எய்தாது ஒழியக்,**

**கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி,**
**நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட**
**கல்லா எழினி பல்லெறிந்து அழுத்திய**
**வன்கண் கதவின் வெண்மணி வாயில்,**
**மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை,**

**நீர்ஒலித் தன்ன பேஎர்**
**அலர்நமக்கு ஒழிய, அழப்பிரிந் தோரே.**

*ஏடீ, தோழி! யான் சொல்வதனைக் கேட்பாயாக:*

*கன்றுகளையுடைய பெரிய யானைநிரையானது பள்ளத் திடையிலே வீழ்ந்து அகப்பட்டுக்கொள்ள, அவற்றைப் பிடிப்பதான அந்தப் பூசலிடத்தே, எழினி என்பவன் மட்டும் தன் ஆணைப்படி வராமற் போகவே, சோழன் மிகவும் சினங் கொண்டவனாயினான். சோழனின் ஏவலின்மேல், மத்தி என் பவன், எழியினின்மீது படைகொண்டு போரிடச் சென்றான்.*

அரசநெறியினை அறியாத எழினியும் களத்தின் முன்னணியிலேயே அகப்பட்டு வீழ்ந்துபட்டான். வீழ்ந்த அவனுடைய பல்லைப் பறித்து வந்து, மத்தி என்பவன் அழுத்தி வைத்த வன்மையான கதவினை உடையது வெண்மணிவாயில் என்னும் கோட்டை. அந்தக் கோட்டை வாயிலிலே, மத்தி நாட்டிய வெற்றிக்கல் விளங்கும் குளிர்ந்த நீர்த்துறையினிடத்தே, நீர் மோதி மோதி ஒலி செய்வதுபோன்ற, பெரிய ஊரலர் ஒன்றே, இப்போது நமக்கு எஞ்சியிருக்கின்றது. அத்துடன், நாம் அழுதுகொண்டே இருக்கவுமாக, நம்மைத் தனித்துவிட்டு நம் காதலர் பிரிந்தும் சென்றனர்.

பறையினைக் கண்டாற்போல விளங்கும் வட்டமான பெரிய வலிமையுடைய தாளினையும், திண்மை நிலைபெற்ற கொம்பினையும் உடைய வலிபொருந்திய களிறானது, வெண் கடம்பிலே சென்று உராயுந்தோறும், வெண்மையான சுண்ணாம்பு பரந்து கிடப்பதுபோலத் தோன்றும் கடம்பின் பூக்கள், குளிர்ந்த மழைக் காலத்திலே பெய்யும் பனியைப்போல உதிர்ந்து எங்கும் பரவும். உழவர்கள் காயவைத்திருக்கும் வெள்ளை நெல்லின் வித்துக் களைப்போல, அப்படி உதிர்ந்த பூக்கள், பாறையில் வீழ்ந்து காய்ந்து கிடக்கும். குளிர்ச்சி பொருந்திய அத்தகைய சோலைகளைக்கொண்ட, வேங்கட மலைக்கு அப்பாலிருக்கின்ற, வேற்றுமொழிகள் வழங்கும் நாட்டினிடத்திலேயே, இப்போது அவர் இருப்பவரானாலும், அவர் விரைந்து வந்து அருள் செய்வார்.

என்று, பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு, தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** எல்லா - ஏடி! வாலிய - வெண்மையான. 2. சுதை - சுண்ணாம்பு. மராஅம் - வெண்கடப்ப மரம். 3. பாவடி - பரந்த அடி. 4. உரினுதொறும் - உராயுந்தோறும். 5. ஆலி - வெண்பனி. 6. அறை - பாறை. 8. கல்லா - அரசநெறி அறியாத. 12. தலைத்தார்ப்பட்ட - முன்னணியிலேயே போரிட்டு உயிர் துறந்த.

**விளக்கம்:** 'எழினி என்பான் யானை வேட்டைக்குச் சென்றிருந்ததனால் சோழனின் ஏவலின்படி வராதுபோக' எனவும் 9,10 அடிகளுக்குப் பொருள் கொள்வது உண்டு.

**பாடபேதங்கள்:** 2. சுரை. 8. தே எத்தர் என்ப அல்கலும். 14. அகன்கட் கதவின். 16 - 17. பாஅ, ரலர்.

## 212. நின் செருக்கு அழிக!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *அல்ல குறிப்பட்டு நீங்கும் தலைமகன் தன் நெஞ்சினை நோக்கிச் சொல்லியது; நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது எனவும் பாடம்.* **சிறப்பு:** *சேரன் செங்குட்டுவன் கடற்பிறக் கோட்டிய செயல்.*

*(ஒரு நங்கையைக் காதலித்துக் களவிலே கூடி மகிழ்ந்து வரும் ஒரு தலைவன். அவள் இற்செறிக்கப்பட்டாளாக, இரவுக் கூறி பெற்றுக் கூடும் விருப்புடன் பல நாட்கள் முயன்றும் பெற வியலாது போகத், தன் நெஞ்சிற்கு இப்படிச் சொல்லுகின்றான்.)*

**தாஇல் நன்பொன் தைஇய பாவை**
**விண்தவழ் இளவெயிற் கொண்டுநின் றன்ன,**
**மிகுகவின் எய்திய, தொகுகுரல் ஐம்பால்,**
**கிளை அரில் நாணற் கிழங்கு மணற்கு ஈன்ற**
**முளைஓ ரன்ன மின்எயிற்றுத் துவர் வாய்,**

**நயவன் தைவரம் செவ்வழி நல்யாழ்**
**இசைஓர்த் தன்ன இன்தீங் கிளவி,**
**அணங்குசால் அரிவையை நசைஇப், பெருங்களிற்று**
**இனம்படி நீரின் கலங்கிய பொழுதில்,**
**பெறலருங் குரையள் என்னாய், வைகலும்,**

**இன்னா அருஞ்சுரம் நீந்தி, நீயே**
**என்னை இன்னற் படுத்தனை; மின்னுவசிபு**
**உரவுக்கார் கடுப்ப மறலி மைந்தற்று,**
**விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇ,**
**படைநிலா இலங்கும் கடல்மருள் தானை**

**மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்**
**பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து,**
**செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி,**
**ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய**
**நீர்மாண் எஃகம் நிறத்துச்சென்று அழுந்தக்**

**கூர்மதன் அழியரோ-நெஞ்சே!-ஆனாது**
**எளியள் அல்லோட் கருதி,**
**விளியா எவ்வம் தலைத் தந்தோயே**

ஒப்புமையில்லாத மாற்றுயர்ந்த பசும் பொன்னினாலே வடித்தெடுத்த பொற்பாவையினைப் போன்றவள்; வானிலே தவழும் இளவெயிலைத் தன் மேனியிலே போர்த்துக்

கொண்டிருப்பாளைப் போல விளங்கும் ஒளியுடைய அழகு குடியிருக்கும் திருமேனி வனப்பினை உடையவள்; தொகுதியான கொத்தாகிய ஐவகையான முடிக்கின்ற கூந்தலை உடையவள்; கிளைத்த தூறாகிய நாணற்கிழங்கானது மணற்பாங்குகளிலே ஈன்றிருக்கும் முளையினைப்போன்று விளங்கும் கூர்மையான பற்களை உடையவள்; சிவந்த வாயினை உடையவள்; யாழின் நயம் உணர்ந்த வல்லான் ஒருவன் இயக்க, அந்த நல்ல யாழிலே யிருந்தும் எழுகின்ற செவ்வழிப் பண்ணின் இசை நயத்தைக் கேட்டாற்போன்ற, மிக்க இனிமையான பேச்சினை உடையவள்; அணங்கினைப் போன்ற பேரழகுப் பெண்ணான அவள்! நெஞ்சே, அவளை நீயும் விரும்பினாய்.

பெரிய களிற்றியானைகளினது கூட்டமானது இறங்கிக் குடிக்க, அதனால் கலங்கற்பட்டுத் தோன்றும் நீரினைப்போல நீயும் கலக்கமுறுவாய். அப்போதும், 'இவள் நம்மால் அடைவதற்கு அரியவள்' என உணர்ந்து ஒதுங்கமாட்டாய். நாள் தோறும் அவளை அடைய விரும்பித், துன்பத்தையுடைய அரிய சுரநெறியைக் கடந்துவருமாறும் செய்தாய். அதனால், என்னைத் துன்பத்தின்பாலும் செலுத்தினாய். எளியவள் அல்லளாகிய அவளையே இடைவிடாது எண்ணி, நீங்காத அந்த நினைவி னாலேயே, தீராத துயரத்தினையும் என்பாற் சோத்துவிட்டாய்.

தேனொழுகும் மாலையினை அணிந்திருக்கும், போர்மறம் சிறந்த சேரன் செங்குட்டுவன், படைக்கலன்களின் ஒலி நிலவொளி போல விளங்கிக் கொண்டிருக்கும், கடல்போன்ற தன் பெரும் படையுடன் விளங்குபவன். அவன், மின்னலிட்டு வானைப்பிளந்து வலிமையுடன் விளங்கும் கார்மேகத்தைப் போலப் பகைத்து எழுந்தான். கூற்றத்தைப்போன்ற வலிமையுடன் புறப்பட்டான். பல மொழியாளர்களும் விரவியிருக்கும் தன்னுடைய போர்ப்பாசறையைத் தேவையான இடங்களிலே எல்லாம் அமைத்துக்கொண்டு எங்கும் சுற்றினான். அவனுடன் போரிடத் துணிந்த பகைவர்கள் எவரையும் பெறாமற்போக, அதனால் எழும் சினமும் அதிகமாகப், போர் செய்யும் வலிமையுடன் கடலையே வளைத்து முற்றுகையிட்டான். உயர்ந்த அலைகளையுடைய கடலும் பிறக்கிட்டுச் செல்லுமாறு ஓட்டி வெற்றியும் பெற்றான். அப்படி வெற்றிபெற்ற அவனுடைய நீர்மையால் மாண்புற்ற வேலானது நின் மார்பிடத்தே சென்று தைப்பதாக! நினது மிகுதியான செருக்கும் அழியப் பெறுவாயாக!

என்று, அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் தன் நெஞ்சினை நோக்கிச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** *1. தாவில் - குற்றமற்ற. தைஇய - செய்யப் பெற்ற. 2. இளவெயில் கொண்டு - இளவெயிலைப் போர்த்துக் கொண்டு. 4. அரில் - தூறு. 5. துவர் வாய் - சிவந்த வாய். 6. நயவன் - நயமறிந்த யாழ் வல்லோன். தைவரும் - நரம்புகளைத் தடவி இசை எழுப்பும் 7. இன்தீம் கிளவி - இனிமை மிகுந்த பேச்சு. 10. பெறலருங் குரையள் - பெறுவதற்கு அருமையான தன்மை யுடையவள். 12. மின்னு வசிபு - மின்னலிட்டுப் பிளந்து. 13. கார் - மேகம்; இங்கு இடியேற்றைக் குறிப்பதுமாகலாம். 14. கட்டூர் - கட்டுதலைக் கொண்ட ஊராகிய பாசறை. 16. மட்டு - தேன். தெரியல் - மாலை. 20. நீர் மாண் எஃகம் - தகைமையால் மாண்புடைய வேல். 21. மதன் - செருக்கு. 23. விளியா எவ்வம் - நீங்காத பெருந் துயரம்.*

**விளக்கம்:** *செங்குட்டுவன், கடல் பிறக்கோட்டிய செய்தியைப் பதிற்றுப்பத்தும் பிறவும் கூறும். இது, கடலிடையேயுள்ள ஒரு தீவிலே இருந்துகொண்டு, வரும் கலங்களை எல்லாம் கொள்ளையிட்டு வந்த ஓர் கூட்டத் தினரைக், கடற்படையுடன் சென்று வென்றது என்பர். இவன் வெற்றிகளுள் இதுவே சிறப்பாகக் கருதப்பட்டு, இவனும் கடற் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்ற புகழ்ப்பெயரையும் பெற்றான். இதனாற் பண்டை நாளில் கடல் வாணிபத்தில் நம்மவர் சிறப்புற்றிருந்ததும், அவரது நாவாய்ப் பெருக்கமும் புலனாகும்.*

**பாடபேதங்கள்:** *14. மொழித் தகடூர். 17. விலங்கிய சினம். 18. முன்னர்முற்றி. 22. அல்லோட்கு வருந்தி.*

## 213. சுவர்க்கமும் அமிழ்தும்!

**பாடியவர்:** *தாயங் கண்ணனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.* **சிறப்பு:** *வடுகர் இடுகின்ற நாட்பலி; வானவனின் கொல்லிக் குடவரையின் மூங்கில், காவிரியின் அறல் பட்ட மணல், ஆகியவை பற்றிய செய்திகள்.*

***(பிரிந்து சென்ற தலைவன், குறித்த காலம் கடந்தும் மீளாதவனாக வருந்திய தலைவிக்கு, அவளுடைய தோழி, அவனுடைய காதல் உறுதியைக் கூறி, அவன் வருவான் என வற்புறுத்தி, இப்படித் தேறுதல் உரைக்கின்றாள்.)***

**வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்**
**இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு**
**ஓங்குவெள் அருவி வேங்கடத்து உம்பர்க்,**

**கொண்குழை அதிரல் வைகுபுலர் அலரி**
**சுரிஇரும் பித்தை சுரும்புபடச் சூடி,**

**இகல்முனைத் தரீஇய ஏருடைப் பெருநிரை**
**நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்**
**வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து,**
**நிழற்கவின் இழந்த நீர்இல் நீள்இடை**
**அழலவிர் அருஞ்சுரம் நெடிய என்னாது,**

**அகறல் ஆய்ந்தனர் ஆயினும், பகல்செலப்**
**பல்கதிர் வாங்கிய படுசுடர் அமையத்துப்**
**பெருமரம் கொன்ற கால்புகு வியன்புனத்து,**
**எரிமருள் கதிர திருமணி இமைக்கும்**
**வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை**

**வேய்ஒழுக்கு அன்ன, சாய்இறைப் பணைத்தோள்**
**பெருங்கவின் சிதைய நீங்கி, ஆன்றோர்**
**அரும்பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும்,**
**சென்று, தாம் நீடலோ இலரே; என்றும்**
**கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கை,**

**வலம்படு வென்றி வாய்வாள், சோழர்**
**இலங்குநீர்க் காவிரி இழிபுனல் வரித்த**
**அறலென நெறிந்த கூந்தல்,**
**உறலின் சாயலொடு ஒன்றுதல் மறந்தே.**

*தோழி! போர்த் தொழிலிலே சிறந்த யானைகளை உடையவர் தொண்டை நாட்டு மன்னர். அவர்களுக்கு உரியது, மேகத் திரள்கள் தவழ்வதும், ஏறுவதற்கு அரியதுமான, உயர்ந்த மலையுச்சிகளினின்றும், உயர்ந்த வெண்மையான அருவிகள் வீழ்ந்து கொண்டிருப்பதான வேங்கடமலை, அதற்கு அப்பால் -*

*கொய்யும் தளிரையுடைய காட்டு மல்லிகையிலே பொழுது விடியுங்காலத்திலே மலரும் பூவினைத் தம்முடைய சுருண்ட கரிய கொண்டையிலே வண்டுகள் மொய்க்கும்படியாகச் சூடிக்கொண்டு, போர்முனையிலே வென்று கொண்ட ஏறுகளையுடைய பெரிய ஆனிரைக்காக, முதிர்ந்த கள்ளாகிய நறவினை நாட்பலியாகக் கொடுப்பவர்கள், வெண்மையான நிணச்சோற்றினை உடையவரான வடுகர்கள், அவர்கள் நாட்டிலேயுள்ள, நிழலின் அழகினை இழந்துவிட்டதும், நீரற்றுக் கிடப்பதுமான நீண்ட இடைப்படும் வழியையும், நெருப்பாக எரியும் கடத்தற்கு அரியதான காட்டுவழியையும், நீண்டு*

கிடக்கின்றதே என மனந்தளராது, நம்மைப் பிரிந்து கடந்து செல்லுதலைத் துணிந்தவர் நம் தலைவர். ஆயினும்.

எஞ்ஞான்றும் அணிகலன்களைப் பெய்வதற்காகக் கவிழ்ந்திருக்கும் கழலும் தொடியினையுடைய பெரிய கையின்கண், வெற்றி பொருந்திய வலிமை சேர்ந்த வாளினைக் கொண்டிருப்பவர் சோழர்கள். அவர்களது நீர்வளம் விளங்கும் காவிரியின் வடிந்த புனலானது. வரிவரியாகச் செய்திருக்கும் அறல்பட்ட கருமணல் போன்ற சுருண்ட கூந்தலையும், உறுதற்கு இனியதான ச்ாயலையும் உடைய நம்முடன், சேர்ந்திருத்தலையும் அவர் மறந்தவர் அல்லர்.

பகற்பொழுது நீங்கத் தனது பல கதிர்களையும் ஒடுக்கிக் கொண்டு, ஞாயிறு மேற்றிசையிலே மறையப் போகின்ற மாலைப் பொழுதிலே, பெரிய மரத்தினை வெட்டியதனாலே காற்றுப் புகுந்து வீசுகின்ற அகன்ற கொல்லையிலே, தீக்கங்குகள் போன்று ஒளிவீசும் அழகிய மாணிக்கங்கள் விட்டு விட்டு ஒளி செய்து கொண்டிருக்கும். வெல்லும் போராற்றலையுடைய சேரனின், கொல்லி மலைக்கு மேற்கிலேயுள்ள மலைகளிலே காணப்படும் மூங்கிலின் நேரான தன்மைபோன்ற முன்கையுடன் கூடிய பணைத்த தோள்களின் பேரழகெல்லாம் சிதையுமாறு, நம்மைப் பிரிந்து சென்றவர் அவர். ஆயினும், அவர் -

ஆன்றோர்களது பெறுவதற்கு அரிய தேவருலகத்தையே அதன்பாலுள்ள அமிழ்தத்தோடும் கூடிப் பெறுவாரானாலும், தாம் காலந்தாழ்த்திருப்பவரே அல்லர். (விரைவில் வருவார் என்பது கருத்து.)

என்று பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீ இயினாள் என்க.

**சொற்பொருள்:** 1. வினை நவில் யானை - போர்ப் பயிற்சியை யுடைய யானை. தொண்டையர் - தொண்டை நாட்டார். 2. இனமழை - தொகுதியான மேகங்கள். ஏற்றரும் - ஏறுவதற்கு அரிய. 4. கொய் குழை - கொய்யப்படும் தழை. அதிரல் - காட்டு மல்லிகை. 5. பித்தை - ஆணின் மயிர். 6. இகல் முனை - போரிடுகின்ற போர் முனை. 7. நனை முதிர் நறவு - புளித்த நாட்பட்ட கள். 12. படுகதிர். அமையம் - மாலைவேளை. 15. வானவன் - சேரன். 15. கொல்லிக் குடவரை - கொல்லியாகிய குடவரையுமாம். 18. அரும் பெறல் உலகம் - வானுலகம். 20. கலம் - அணிகலன். 22. இழிபுனல் - வடியும் வெள்ளம். 24. உறலின்சாயல் - அடைவதற்கு இனிதான சாயல்

**விளக்கம்:** *'அரும் பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும் நீடலர்' என்றதனால், அதனினும் தலைவியின்பால் அவன் பெறும் இன்பச்செவ்வி சிறப்புடையது என்பதனையும், அவள் அவற்றினும் சிறந்தவள் என்பதனையும்,அதனால் அவன் அவளை மறவாது வந்து சேர்வான் என்பதனையும் கூறினாள்.*

## 214. ஆருயிர் அணங்கும்!

**பாடியவர்:** *வடம வண்ணக்கண் பேரிசாத்தனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *பாசறைக்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(வேந்தனுக்கு உதவியாகப் படைத்தொழில் ஏற்றுச் சென்ற தலைமகன் ஒருவன், பாசறையிலே தனித்திருந்து, தன் அன்புக் காதலியை நினைந்து இவ்வாறு தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.)*

**அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்,**
**பகலுடன் கரந்த, பல்கதிர் வானம்**
**இருங்களிற்று இனநிரை குளிர்ப்ப வீசிப்,**
**பெரும்பெயல் அழிதுளி பொழிதல் ஆனாது,**
**வேந்தனும் வெம்பகை முரணி, ஏந்திலை,**

**விடுகதிர் நெடுவேல் இமைக்கும் பாசறை,**
**அடுபுகழ் மேவலொடு கண்படை இலனே;**
**அமரும் நம்வயி னதுவே: நமர்என**
**நம்மறிவு தெளிந்த பொம்மல் ஓதி**
**யாங்குஆ குவள்கொள் தானே - ஓங்குவிடைப்**

**படுசுவற் கொண்ட பகுவாய்த் தெள்மணி**
**ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇப்,**
**பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப,**
**ஆருயிர் அணங்கும் தெள்இசை**
**மாரி மாலையும் தமியள் கேட்டே?**

*அகற்சியையுடைய பெரிய வானத்து இடமெல்லாம் மறையுமாறு, எங்கும் கவிந்து, பல கதிர்களையுடைய ஞாயிற்றையும் முழுக்கவும் மறைத்துக் கொண்டிருக்கின்றன, கார் மேகங்கள்; பெரிய களிறுகளின் பிடிகளுடன் கூடிய யானை யினத் தொகுதிகளின் உள்ளம் குளிருமாறு, பெரும் பெயலாகிய மிக்க மழைத்துளிகளை வீசிப் பொழிதலையும் அவை விடாதிருக்கின்றன.*

*நம் வேந்தனும், வெம்மையான பகைவரோடு மாறுபட்டு, நிமிர்த்த இலையினையுடைய ஒளிவிடுகின்ற நீண்ட வேல்கள்*

மின்னிக் கொண்டிருக்கும் பாசறையிலே, போரிட்டு வெல்லும் புகழினை அடைவதனையே விரும்பிக், கண்களும் மூடாதவனாக இருக்கின்றான். போரும் நம்மிடத்திலேதான் பொறுப்பாக உள்ளது. 'நம்மவர்' என்று, நம்மைத் தன் அறிவினாலே தெளிந்து ஏற்றுக்கொண்டவள், பொலிவுற்ற கூந்தலை உடையவளான நம் தலைவி. அவள், -

உயர்ந்த ஏற்றின் பொருந்திய கழுத்திலே கட்டிய, பெரிய வாயினையுடைய, தெளிவாக ஒலிக்கும் மணிகள் ஒலியினைச் செய்யவும், ஆக்களை ஓட்டிவரும் கோவலர்கள் ஆம்பற் குழலினை இசைக்கவும், அவற்றுடன் பொருந்துமாறு, பிரிந்தவர்களுக்குத் துன்பந்தரும் நல்ல யாழின்கண்ணே செவ்வழிப் பண்ணினைச் சிலர் இசைக்கவும், அரிய உயிர்களை வருத்தும் அந்தத் தெளிவான இசைகளையெல்லாம், மாரிக்காலத்து மாலையினும் தனியளாயிருந்தே கேட்பதனால், என்ன நிலையினை அடைவாளோ?

என்று, பாசறைக்கண், தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. புதைய - மூடி மறைய. பா அய்ப் - பரவி. 2. குளிர்ப்ப - குளிர்ச்சியுடைய. 9. பொம்மல் ஓதி - பொலிவுற்ற கூந்தலையுடையவள். 11. சுவல் - பிடருமாம், பகுவாய் - பெரிய வாய். 12. ஆம்பல் - ஆம்பற் குழல். 14. அணங்கும் - வருத்தும்.

**விளக்கம்:** 'அமரும் நம்வயின் அதுவே' என்றமையால், தலைவன் போர்ப்படைகளின் தலைவனாகப் பொறுப்பு வகிப்பவனாதல் வேண்டும்.

**மேற்கோள்:** 'பொருள் நோக்கினால் தூதுகண்டு வருந்திக் கூறியது என, 'இதனை, 'ஏவன் மரபின் ஏனோரும் உரிய' என்னும் சூத்திர உரையிலே காட்டுவர் நச்சினார்க்கினியர்.

**பாடபேதங்கள்:** 7. அடுபுகழ் வேலொடு. 8. நம்மறிவு தெளித்த.

## 215. வாழ்தல் ஆற்றேம்!

**பாடியவர்:** இறங்குகுடிக் குன்ற நாடன். **திணை:** பாலை. **துறை:** செலவு உணர்த்திய தோழி, தலைமகள் குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்குவித்தது.

*(தலைமகன், தான் தலைவியைப் பிரிந்துசெல்ல நினைத்திருப்பது பற்றிய செய்தியைத் தோழி மூலமாகத் தலைவிக்குத் தெரிவிக்க, அவள் தலைமகளின் மனநிலையினை அறிந்துவந்து அவனிடம் கூறி அவனைப் போகாதிருக்கச் செய்கிறாள்.)*

**'விலங்கிருஞ் சிமையக் குன்றத்து உம்பர்,**
**வேறுபன் மொழிய தேஎம் முன்னி,**
**வினைநசைஇப் பரிக்கும் உரன்மிகு நெஞ்சமொடு**
**புனைமாண் எஃகம் வல்வயின், ஏந்தி,**
**செலல்மாண்பு உற்ற நும்வயின், வல்லே,**

**வலன்ஆகு! என்றலும் நன்றுமன் தில்ல**
**கடுத்தது பிழைக்குவது ஆயின், தொடுத்த**
**கைவிரல் கவ்வும் கல்லாக் காட்சிக்,**
**கொடுமரம் பிடித்த கோடா வன்கண்,**
**வடிநவில் அம்பின் ஏவல் ஆடவர்,**

**ஆளழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கைக்,**
**கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்**
**படுபிணப் பைந்தலை தொடுவன இழீஇ,**
**மல்லல் மொசிவிரல் ஒற்றி, மணிகொண்டு,**
**வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்,**

**கழிந்தோர்க்கு இரங்கும் நெஞ்சமொடு**
**ஒழிந்திவண் உறைதல் ஆற்று வோர்க்கே.**

*தாம் குறித்த இலக்குத் தவறிவிட்டதனால், அம்பினைத் தொடுத்த தம்முடைய கைவிரலினையே வாயாற் கௌவிக் கொண்டு வருந்துபவர். வில்லின் தொழிலை முறையே கல்லாத அறிவினையும், வில்லைக் கையிலே பிடித்திருக்கும் மாறாத் கொடுமையினையும் உடைய, வடித்தல் செய்த அம்பினைச் செலுத்துவோராகிய, மறவர்கள்.*

*வழியே போகும் ஆட்களை அழித்து, அவர்கள் உயர்த்துள்ள அச்சம் வரும் கற்குவியல்களிலே, கூர்மையான அலகினைக் கொண்ட சிவந்த வாயினவான எருவைச்சேவல்கள், இறந்துபட்ட பிணங்களின் பசிய தலையினைத் தோண்டி உண்பதற்காக வந்துகூடித், தம்முடைய வலிமையான நெருங்கிய விரல்களால் தோண்டி, அத்தலைகளின் கண்மணிகளைப் பெயர்த்துக்கொண்டு போய், வலிய வாயினையுடைய தம் பேடைகட்குச் சொரிந்து கொண்டிருக்கும்.*

அவ்விடத்தே, பிரிந்து சென்றவரான தம் தலைவருக்காக இரங்கித் துன்புறும் நெஞ்சத்துடன், அவரைப் பிரிந்து இவ்விடத்தே வாழ்ந்திருத்தலைச் செய்யக்கூடிய மகளிர்க்கு,

குறுக்கிடும் பெரிய மலையுச்சிகளையுடைய மலைக்கு அப்பாலுள்ள, வேறுபட்ட பலப்பல மொழிகள் வழங்கும் நாடுகளை நினைவிற் கொண்டு, வினை செய்தலை விரும்பிச் செலுத்தும் வலிமிகுந்த நெஞ்சத்துடனே, அழகிய மாண்புற்ற வேலினை வலக்கையிலே ஏந்தியவராகச் செல்லுதலிலே மாட்சியுற்ற நும்மிடத்திலே, 'விரைவிலே வெற்றி பெறுவீராக' என வாழ்த்தி விடை தருதலும் நன்றாகும்; (ஆனால், யாம் அங்ஙனம் பிரிந்து வாழ்தலை ஆற்றோமே? என் செய்வோம்? எப்படிப் பிரிவிற்கு இசைவோம்?)

என்று, செலவுணர்த்திய தோழி தலைமகள் குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்குவித்தனள் என்க.

**சொற்பொருள்:** 2. விலங்குதல் - குறுக்கிடுதல். 2. வேறுபன் மொழிய தேஎம் - பல்வேறு மொழிகளையுடையவாகிய வடதிசை நாடுகள். 3. பரிக்கும் - செலுத்தும். 5. வல்லே - விரைந்து. 7. கருத்தது - எண்ணியது. 8. கவ்வும் - கடிக்கும். 10. வடி நவில் அம்பு - வடித்தல் செய்த கூரிய அம்பு. 11. பதுக்கை - புதைகுழியின் மேலுள்ள கற்குவியல். 14. மொசி விரல் - நெருக்கமான விரல்.

**மேற்கோள்:** 'வேறு பன்மொழிய தேஎத்தைக் கொள்ளக் கருதிப் போர்த்தொழிலைச் செலுத்தும் உரன்மிக்க நெஞ்சம்' என்றலின், இது குறுநில மன்னன் தன் பகைவன் நாடு கொள்ளச் சென்றதாம், வேந்தன் எனப் பெயர் கூறாமையின்' என்று, முடியுடைய வேந்தர்க்குரிய தொழிலாகிய இலக்கணங்கள் குறுநில மன்னரிடத்தும் பொருந்தும் இடனுடையது என, இதனை, 'வேந்து வினை யியற்கை' என்னும் பொருளியற் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டுவர்.

## 216. வேல் பாய்ந்த களிறு!

**பாடியவர்:** ஐயூர் முடவனார். **திணை:** மருதம். **துறை:** தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தனக்குப் பாங்காயி னார்க்குப் பரத்தை சொல்லியது. **சிறப்பு:** ஆதன் எழினியில் ஆற்றலை உரைத்திருப்பது.

(தான் ஒரு தலைவனுடன் தொடர்புகொண்டதனால், அவனுடைய மனை, தன்னைப் பழித்தது கேட்டவளாகிய ஒரு பரத்தை, சினமுற்றுத், தன் தோழியர்க்குச் சொல்வது போலத், தலைவியின் தோழியர் கேட்குமாறு கூறுகிறாள்.)

**நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்-**
**தாள்புனல் அடைகரைப் படுத்த வராஅல்,**
**நாரரி நறவுண்டு இருந்த தந்தைக்கு,**
**வஞ்சி விறகின் சுட்டு, வாய் உறுக்கும்**
**தண்துறை ஊரன் பெண்டிர் எம்மைப்**
**பெட்டாங்கு மொழிப' என்ப; அவ்வலர்**
**பட்டனம் ஆயின், இனியெவன் ஆகியர்:**
**கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்,**
**கழனி உழவர் குற்ற குவளையும்,**
**கடிமிளைப் புறவின் பூத்த முல்லையொடு,**
**பல்லிளங் கோசர் கண்ணி அயரும்,**
**மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்**
**எறிவிடத்து உலையாச் செறிசுரை வெள்வேல்**
**ஆதன் எழினி அருநிறத்து அழுத்திய**
**பெருங்களிற்று எவ்வம் போல**
**வருந்துப மாதுஅவர் சேரியாம் செலினே!**

*கயிற்றினைக் கொண்ட மெல்லிய கோலினாலே மீன் பிடித்துக் கொண்டிருக்கும் பாணர்களது மகள், புனலின் அடைகரையிலே அகப்படுத்திய வரால்மீனைப், பன்னாடையி னாலே அரிக்கப்பெற்ற கள்ளினைக் குடித்துக் களித்திருந்த தன்னுடைய தந்தைக்கு, வஞ்சிமரத்து விறகினாலே தீயெரித்துச் சுட்டு வாயிலே உண்பிப்பாள். அத்தகைய குளிர்ந்த நீர்த் துறைகளையுடைய ஊரனின் பெண்கள், எம்மைத் தம் மனம் போன படியெல்லாம் இகழ்ந்து பேசுவார்கள் என்பர்.*

*அந்தப் பழிக்கு யாம் ஆட்பட்டனமானால், இனி யாதாயினும்ஆகுக!*

*அவர்களுடைய சேரியிடத்தே யாம் செல்வோமானால், கடலாடும மகளிர்கள் கொய்துவந்த புலிநகக் கொன்றைப் பூவினையும், வயல் உழுபவர் பறித்துவந்த குவளைப் பூவினையும், காவலையுடைய காட்டிடத்தே பூத்த முல்லைப்பூவுடனே சேர்த்துப், பலரான இளங்கோசர்களும் கண்ணியாகக் கட்டிச் சூடி மகிழ்வர்; அத்தகைய மிக்க வளம் பொருந்திய செல்லூர்க்குக் கோமானாகிய ஆதன் எழினி என்பவனின், மாற்றாரைக் குறித்து எறியுமிடத்துக் குறிபிழையாத சுரை செறிந்த வெள்ளிய வேலானது, தன்னுடைய அரிய மார்பிலே வந்துதைத்த பெரிய களிற்றினது துன்பத்தைப்போல, எம்மைப் பழித்த நெஞ்சம் புண்பட்டு, அவரும் வருந்துவர் என்பதுமட்டும் உண்மையாகும்.*

என்று, தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தனக்குப் பாங்காயினார்க்குப் பரத்தை சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. நாண் - கயிறு. நுண்கோல் - மெல்லிய தூண்டிற்கோல். 2. படுத்த - அகப்படுத்த. 4. வஞ்சி - ஒரு மரம். வாயுறுக்கும் - வாயிலே ஊட்டும். 6. பெட்டாங்கு - மனம் போனபடி. 11. கண்ணி அயர்தல் - கண்ணி சூடி விளையாட்டு அயர்தல். 15. எவ்வம் - துன்பம்.*

**விளக்கம்:** *'தானும் அவர்களுக்கு அஞ்சியவள் அல்லள்' எனக் கூறுவாள், தான் அவர்களுடைய சேரிக்குள் சென்றாலே அவர்கள் உள்ளம்,வேல் மார்பிலே தைக்கத் துடித்து வந்தும் களிறுபோலப் படாதபாடு படும் என்றனள். அதனால், அவர்களை எச்சரித்ததும், தலைவனுக்குத் தன் பாலுள்ள விருப்பத்தை உறுதிப்படுத்தியதும் ஆயிற்று.*

**பாடபேதம்:** *2. தண்புனல் அடைகரை.*

## 217. எயிறு தீப்பிறப்ப நடுங்குவோம்!

**பாடியவர்:** *கழாஅர்க் கீரனெயிற்றியார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.*

*(தலைமகன், தான் தலைவியைப் பிரிந்து வினைசெயப் போகின்றது பற்றிய செய்தியைத் தோழியின்மூலம் சொல்லி யனுப்புகின்றான். அவளும் சென்று தலைவியுடனே அதனைப் பற்றி உரைக்க, அப்போது அவள் தன்னுடைய ஆற்றாமை மிகுதியால் சொல்லுகின்றாள்.)*

**பெய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை,**
**எஃகுஉறு பஞ்சித் துய்ப்பட் டன்ன,**
**துவலை தூவல் கழிய, அகல்வயல்**
**நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்**
**கோடைப் பூளையின் வரடையொடு துயல்வர,**

**பாசிலை பெதுளிய புதல்தொறும் பகன்றை**
**நீல்உண் பச்சை நிறமறைத்து அடைச்சிய**
**'தோலெறி பாண்டிலின் வாலிய மலரக்**
**கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ,**
**ஊழுறு தோன்றி ஒண்பூத் தளைவிட,**

**புலம்தொறும் குருகினம் நரலக் கல்லென**
**அகன்றுறை மகளிர் அணிதுறந்து நடுங்க,**
**அற்சிரம் வந்தன்று; அமைந்தன்று இதுவென,**

**எப்பொருள் பெறினும் பிரியன்மினோ, எனச்**
**செப்புவல் வாழியோ, துணையடை யீர்க்கோ;**

**நல்காக் காதலர் நலன்உண்டு துறந்த**
**பாழ்படு மேனி நோக்கி நோய்பொர,**
**இணர்இறுபு உடையும் நெஞ்சமொடு, புணர்வு வேட்டு,**
**எயிறுதீப் பிறப்பத் திருகி**
**நடுங்குதும்- பிரியின்யாம் கடும்பனி உழந்தே.**

*தோழி! மழை பொழிந்து, பின் எத்திசைகளையும் வெளியாக்கிய வெண்மேகம், கொட்டப்பெற்ற பஞ்சானது வெண்மையுற்றாற்போல விளங்கும் சிறிய தூவலைத் தூவுதலையும் ஒழிந்தது. அகன்ற வயலிலே நீண்ட மூங்கில் போலத் தோன்றும் கரும்பின் திரண்ட காம்புகளையுடைய பெரிய பூக்கள் கோடைகாலத்துப் பூளைப்பூவைப்போல வாடைக் காற்றோடு சேர்ந்து எங்கும்பரவும். பசுமையான இலைகள் நெருங்கியிருக்கும் புதர்களில் எல்லாம் பகன்றை யானது நீலம் ஊட்டப்பெற்ற பச்சை நிறத்தை மறைத்துக் கிடுகிற்பதித்த வட்டக் கண்ணாடிபோல, வெண்மையாக மலர்ந்திருக்கும். கொழுமையான இலைகளை யுடைய அவரையின் வளமான அரும்புகள் இதழ் விரிந்திருக்கும். முறையாகத் தோன்றிய தோன்றியின் ஒள்ளிய பூக்களும் தம் கட்டவிழ்ந்து மலர்ந்தன. கொல்லை எல்லாம் பறவையினங்கள் கல்லென்னும் ஒலியோடு ஆரவாரஞ் செய்யும். தம் காதலரைப் பிரிந்து வாழும் காதலியர் தம் அழகெல்லாம் இழந்தவராக நடுங்கித் துன்புறுகின்ற, அத்தகைய பனிக்காலமும் வந்துவிட்டது. அதனால்,*

*'இந்தப் பருவம் பொருத்தமானது அன்று எனவும், எத்தகைய பொருளைப் பெறுவதானாலும், பிரியாதீர் எனவும், எமக்குத் துணையுடையவரான அவர்க்கு நான் சொன்னேன்' என்று, நீ அவரிடத்தே சென்று சொல்வாயாக.*

*அதற்கு இசைந்து நமக்கு அருள் செய்யாதவராகக் காதலர் பிரிந்து சென்றால், யாம், நமது நலத்தினை உண்டு கைவிட்டதனால் பாழ்பட்டுப் போகும் உடலினை நோக்கி, நோய் படர்ந்து வருத்த, மதுகை இற்று உடைந்துபோன நெஞ்சத்துடன், அவருடைய கூடலை விரும்பிக், கடுமையான பனித்துன்பத்திலே கிடந்து வாடிப், பற்களிலே தீப்பொறி பறக்கப் பற்கடித்தபடி குளிரால் நடுங்குவோம் என்பதனையும் சொல்வாயாக.*

*என்று, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. பொங்கல் வெண்மழை - பொங்குதலை யுடைய வெண்மேகம். 2. எஃகு - பஞ்சு கொட்டும் கருவி. 3. துய்ப்பட்டன்ன - பஞ்சு கொட்டுதலாற் பறந்து மென்மைப் படுதல் போன்ற. 5 துயல்வர - அசைய. 7. பாண்டில் - கேடகத்திலே இருக்கும் வட்டக் குமிழ்கள். 17. பாழ்படு மேனி - பாழாகிப் போகும் உடல்.*

**பாடபேதங்கள்:** *1. செய்து புறந்தந்த; பெய்து புறந்தந்த 9. கொழுமுகை உடைய. 11. குயினா நரல. 19. பரப்ப.*

## 218. பகல் வந்து அருள்க!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தோழி, தலைமகளை இடத்து உய்த்துவந்து, பகற்குறி நேர்ந்த வாய் பாட்டால் தலைமகனை வரைவு கடாயது.*

*(புனக்காவலிலே கண்டு காதலித்துக் களவுக் கூட்டமும் பெற்ற தலைவி, புனம் காவல் ஒழிந்த பின்னர், இரவுக் குறியிலே ஒழுகி வருகின்றனள். அவர்கள் உறவைத் திருமணத்தால் பிணித்து நிலைபெறச் செய்யக் கருதிய தோழி, ஒருநாள் தலைமகளைக் குறித்த இடத்திலே கொண்டுவிட்டுவிட்டு வருபவள், தலைவனிடம் இப்படிக் கூறுகின்றாள்.)*

**'கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு**
**முளைதருபு ஊட்டி, வேண்டுகுளகு அருத்த,**
**வாள்நிற உரவின் ஒளிறுபு மின்னி,**
**பருஉஉறைப் பல்துளி சிதறி, வான் நாவின்று,**
**பெருவரை நளிர்சிமை அதிர வட்டித்துப்**

**புயலேறு உறைஇய வியலிருள் நடுநாள்,**
**விறலிழைப் பொலிந்த காண்பின் சாயல்,**
**தடைஇத் திரண்டநின் தோள்சேர்பு அல்லதை**
**படாஅ வாகும்,எம் கண் என, நீயும்**
**இருள்மயங்கு யாமத்து இயவுக்கெட விலங்கி,**

**வரிவயங்கு இரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்**
**பெருமலை விடரகம் வர அரிது' என்னாய்,**
**வரவெளி தாக எண்ணுதி, அதனால்,**
**நுண்ணிதின் கூட்டிய படுமாண் ஆரம்**
**தண்ணிது கமழும்நின் மார்பு, ஒருநாள்**

**அடைய முயங்கேம் ஆயின், யாமும்**
**விறலிழை நெகிழச் சாஅய்தும்; அதுவே**
**அன்னை அறியினும் அறிக! அலர்வாய்**

**அம்பல் மூதூர் கேட்பினும் கேட்க!**
**வண்டிறை கொண்ட எரிமருள் தோன்றியொடு.**

**ஒண்பூ வேங்கை கமழும்**
**தண்பெருஞ் சாரல் பகல்வந் தீமே!**

எம் தலைவனே! தன் இனத்தினைப் பேணிப்போற்றுகின்ற தன்மையினையும், கடுமையான நடையினையுமுடைய வலிமையான களிறானது, மூங்கில் முளைகளைத் தன் இனத்திற்கு எல்லாம் உண்பித்துப், பின் வேண்டும் அளவு தழைகளையும் உண்பித்திருக்கும் தன்மை உடையது காடு. வாளின் நிறம் போன்ற உருவத்துடன், ஒன்றுபடுவதுபோல மின்னலிட்டுப் பெரிய பலவாகிய மழைத் துளிகளையும் சிதறி, வானத்திலே எங்கும் பரந்து, பெருமலையின் குளிர்ந்த உச்சிகளும் அதிருமாறு கவிந்து கொண்டு, மேகமானது, இடி முழக்கத்துடன் பரந்திருக்கும் இருள்மிகுந்த நள்ளிரவு வேளையிலே,

"சிறந்த அணிகலன்களால் பொலிவுற்று விளங்கும் காண்பதற்கு இனிய சாயலினை யுடையவளே! வளைந்து திரட்சியுற்றிருக்கும் தன்மையினையுடைய நின்னுடைய தோள்களைச் சேர்ந்திருத்தல் அல்லாமற் போனால், எம் கண்கள், ஒரு போதும் துயிலாவாகும்' என்று கூறியவனாக,

நீயும் இருள் மயக்கம் உடைய நடு யாமத்திலே வழி தடுமாறுதலால் விலகி வழிவருவாரை, வரிகள் விளங்கும் புலியானது கொல்லுதற்கு எதிர்பார்த்திருக்கும், பெரிய மலையின் பிளப்பினையுடைய இடமும் வருவதற்கு அரிதாகும் என்று கருதாதவனாக, வருவதற்கு மிகவும் எளிதானதாகவே எண்ணுகின்றனை.

நுண்மையாக அறைத்துக் கூட்டிப் பல மணங்களைக் கலந்த, மாட்சியுள்ள சந்தனம் குளிர்ச்சியாக மணம் வீசிக் கொண்டிருக்கின்ற நின்னுடைய மார்பினை, ஒரு நாளேனும் இறுகத் தழுவாதிருந்தோமானால், யாங்களும்,மேம்பட்ட அணிகள் நெகிழ்ந்துசரிய, உடல் மெலிந்து விடுகின்றோம். அதனால்.

எம் அந்த நிலையினை எம் அன்னையே அறிந்தாலும் அறிவாளாக! அலர் உரைக்கும் வாயினரான பெண்டிர்களது சொற்களை எம் பழைமையான ஊரே கேட்டுப் பழித்தாலும் பழிக்க! வண்டுகள் மொய்க்கின்ற நெருப்பைப் போன்ற தோன்றிப் பூவுடனே, ஒள்ளிய வேங்கைப் பூவின் மணமும்

சேர்ந்து கமழுகின்ற தண்மையான பெரிய மலைச் சாரலினிடத்தே, இனிப் பகற்போதிலேயே வந்து அருள்வாயாக.

என்று, தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து, பகற்குறி நேர்ந்த வாய்பாட்டால், தலைமகனை வரைவுகடாயினாள் என்க.

**சொற்பொருள்:** *1. கிளை - இனம். கடு நடை - விரைந்த நடை. வயக்களிறு - வலிமையுள்ள தலைமை யானை. 2. முளை - மூங்கில் முளை. குளகு - தழை. 4. பரூஉ உறை - பெரிய துளிகளாகப் பெய்யும் மழை. வான் நவின்று - வானிலே பயின்று. 5. வட்டித்தல் - சூழ்ந்து கொள்ளல். 6. புயலேறு - இடியேறு. வியலிருள் நடுநாள் - இருள்மிகுந்த நள்ளிரவு 7. விறல் - மேம்பாடு. 9. படா அவாகும் - மூடாதனவாகும். 10. இயவுக் கெடுதல் - வழி தடுமாறுதல். 16. அடைய முயங்குதல் - உடலிறுகத் தழுவுதல். 20. தோன்றி - தோன்றிப்பூ.*

**உள்ளுறை:** *யானை தான் இன்புறுவதோடல்லாது தன் கிளைகளையும் உண்பித்துப் போற்றுவதுபோல, நீயும் இவளை மணந்து இல்லறம் பேணிச் சுற்றத்தார் மகிழுமாறு விருந்தருந்தி வாழ்தல் வேண்டும் என்பதாம்.*

**விளக்கம்:** *இரவுக்குறியிலே அவன் வரும் வழியின் துன்பம் கூறினாள், தாம் அதுபற்றிப் பெரிதும் துன்பத்திற்கு உள்ளானதை உணர்த்தும் பொருட்டாக. 'அன்னை அறியினும் அறிக; அலர் வாய் அம்பல் மூதூர் கேட்பினும் கேட்க' என்றதனால், பகற்குறி வாய்ப்பதன் அருமையையும் குறிப்பாகப் புலப்படுத்தினாள். இதனால், விரைந்து வரைந்து கோடலை வற்புறுத்தினாள் என்க.*

**மேற்கோள்:** *'இது, குறிஞ்சிக்கு முதலும் கருவும் வந்து உரிப்பொருளால் சிறப்பு எய்தி முடிந்தது' என, 'முதல் கரு உரிப் பொருள்' என்னும் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்.*

**பாடபேதங்கள்:** *2. குளகு அருந்த. 12. வரல் அரிது என்னாய். 20 - 21. தோன்றல் ஒண்பூ.*

### 219. யானே வருந்துவேன்!

**பாடியவர்:** *கயமனார்.* **திணை** *: பாலை.* **துறை:** *மகட் போக்கிய தாய் சொல்லியது.*

*(தன் மகள் தன் காதலனுடன் உடன் போக்கிலே சென்று விட, அதனால் உள்ளம் வருத்தி நலிந்தனள் தாய். அப்பொழுது, அவளுடைய உள்ளம் தன் மகள் காதலனோடு சென்றுவிட்ட*

*பழியொடுபட்ட தன்மையை நினைந்து வருந்த வில்லை. செல்வமாக வளர்ந்த அவள், எவ்வாறு பாலை வழியிலே தன் பாதம் நோக நடந்து செல்வாளோ என்பதை நினைந்தே வருந்துகிறது.)*

**சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக இயலி.**
**ஓரை ஆயமொடு பந்துசிறிது எறியினும்,**
**'வாராயோ!' என்று ஏத்திப் பேர்இலைப்**
**பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோல்**
**பால்பெய் வள்ளம் சால்கை பற்றி,**

**'என்பாடு உண்டனை ஆயின் ஒருகால்**
**நுந்தை பாடும் உண்' என்று ஊட்டிப்,**
**'பிறந்ததற் கொண்டு சிறந்தவை செய்துயான்,**
**நலம்புனைந்து எடுத்தஎன் பொலந்தொடிக் குறுமகள்**
**அறனி லாளனொடு இறந்தனள் இனி' என,**

**மறந்து அமைந்து இராஅ நெஞ்சம் நோவேன்-**
**பொன்வார்ந் தன்ன வைவால் எயிற்றுச்**
**செந்நாய் வெரீஇய புகர்உழை ஒருத்தல்**
**பொரி அரை விளவின் புன்புற விளைபுழல்,**
**அழல்எறி கோடை தூக்கலின், கோவலர்,**

**குழல்என் நினையும் நீர்இல் நீள்இடை,**
**மடத்தகை மெலியச் சாஅய்,**
**நடக்கும் கொல்?" என, நோவல் யானே.**

*சீர்மை கெழுமிய பெரிய மனையின்கண்ணே, சிலம்புகள் ஒலிமுழங்க நடந்து கொண்டிருந்தவள் அவள், விளையாடும் தன் தோழியர்களுடன் சிறிதுபொழுதே பந்து எறிந்து விளையாடினாளாயினும், களைத்திருப்பாளே எனக் கருதிப், 'பெரிய இலையினையுடைய பகன்றையின் வெண்மலர்களிலே பனி நிறைந்ததுபோலப்' பால் பெய்த கிண்ணத்தைச் சால்புடைய கையிலே பற்றிக் கொண்டு, 'என் பகுதிக்கு இதனை உண்டனையானால் இனி ஒருமுறை உன் தந்தையின் பகுதிக்கும் உண்பாயாக' என்று,அவளை ஊட்டி வளர்த்தேன். அவள் பிறந்ததன் முதலே பற்பல சிறப்புக்களையும் செய்து, யான் அவள் நலத்தைப் பேணினேன். பொற்றொடி அணிந்த என்னுடைய இளைய மகளான அவளோ, அறன் இல்லாத தன்மையாளனான அவள் காதலனுடன், இப்போது, எம் இல்லை விட்டு நீங்கிச் சென்றனள் என்பதை மறந்து அமைந்து இருக்கமாட்டாத, என் உள்ளத்திற்காகவும் யான் வருந்துவேன் அல்லேன் - ஆனால்,*

பொன்னால் செய்ததுபோன்ற கூர்மையான வெண் பற்களையுடைய செந்நாயினுக்கு அஞ்சிய புள்ளிகளையுடைய கலைமானானது, பொறிகள் பொருந்திய அரையினையுடைய விளாங்கனியின் புல்லிய ஓட்டிலே தோன்றிய துளையிலே, ஒலி எழுப்புதலினால், கோவலரது குழலோசை எனக் கருதித், தனக்குப் பாதுகாவல் என நினைத்து, அவ்விடம் நோக்கிச் செல்லும், நீரற்ற நெடிதான அத்தகைய நெறியிலே, மடப்பத்தையுடைய தன் அழகுத்தன்மை எல்லாம் அழிய வாட்ட முற்று, அவள்நடக்கவும் செய்வாளோ என்பதனை நினைந்தே, யானும் வருந்துகின்றேன்.

என்று, மகட்போக்கிய தாய் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** நகர் - பெருமனை, சிலம்பு நக - சிலம்பு ஒலி செய்ய. இயலுதல் - நடத்தல். 2. ஓரை ஆயம் - விளையாட்டுத் தோழியர். 4. வான் மலர் - வெண்மலர்; வெள்ளிக் கிண்ணத்தை உணர்த்தும். 5. சால் கை - சால்பு உடைய கை. 6. பாடு - பகுதி. 10. இறந்தனள் - கடந்து போயினாள். 15. கோடை - கோடையிலே வீசும் மேல் காற்று. எடுத்தல் - துளை வழியே புகுந்து ஒலி எழுப்புதல். 17. மடத்தகை - மடமையான மென்மைத் தன்மை.

**உள்ளுறை:** செந்நாய்க்கு அஞ்சிய கலைமான், விளாங்கனித் துளையிலே காற்றுப் புகுந்து எழுப்பும் ஒலியினை, அறியாமை யால் கோவலரின் குழல் என மயங்கித், தனக்குப் பாதுகாவல் கிடைத்தது என மகிழ்ந்தாற்போல, ஊரலருக்கு அஞ்சியமகள் காதலனின் பேச்சிலே மயங்கி, நீரற்ற நெடுவழியைத் தனக்குத் துணையாகக் கொண்டனளே என்று வருந்தியதாகக் கொள்க. இது, மகளின் பேதைமையையும் காதல் உறுதியையும் குடிப்பண்பையும் உணர்த்தும்.

**விளக்கம்:** 'பந்தாடினும் களைப்பாளே' என, யான், பாலினை என்பாடு எண்டனையாயின் இனி ஒருகால் நுந்தை பாடும் உண்ணென்று ஊட்டிப் பேணிய என் மகள், நீரற்ற நெடுவழியில் எப்படி நடந்து செல்வாளோ என நோகின்றாள் தாய். அந்த எண்ணம் மேலெழ, அவள் தன் காதலுனுடன் தன்னையும் மறைத்துச் சென்ற செயலையும்கூட அவள் மறந்து விட்டாள். தாய்மைப் பண்பின் விளக்கம் இந்தச் செய்யுள்.

**பாடபேதங்கள்:** 7. பிறந்ததற்கு ஒன்றும்.

## 220. நல் எழில் சிதையா ஏமம்!

**பாடியவர்:** மதுரை மருதனிளநாகனார். **திணை:** நெய்தல். **துறை:** இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனை எதிர்ப்பட்டுத் தோழி சொல்லியது **சிறப்பு:** செல்லூர், ஊணூர், திருச்

*சாய்க்கானம் ஆகிய ஊர்களின் சிறப்புக்களும், பரசுராமன் மன்னர்களின் மரபையே அறுப்பேன் என்று தமிழ்நாட்டில் வந்து செய்த பெருவேள்வியும் பற்றிய செய்திகள்.*

*(இற்செறிக்கப்பட்ட தலைவியுடன் இரவுக்குறியிடத்தே வந்து கூடிச் செல்லும் தலைமகனைக் கண்டு, தலைவியின் தோழி இங்ஙனம் கூறி, விரைந்து மணவினை மேற்கொள்ளுதலின் கடமையை வற்புறுத்துகின்றாள்.)*

**ஊருஞ் சேரியும் உடன்இயைந்து அலர்எழத்,**
**தேரொடு மறுகியும், பணிமொழி பயிற்றியும்,**
**கெடா அத் தீயின் உருகெழு செல்லூர்க்,**
**கடாஅ யானைக் குழூஉச் சமம் ததைய,**
**மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்**

**முன்முயன்று அரிதினின் முடித்த வேள்வி,**
**கயிறுஅரை யாத்த காண்தகு வனப்பின்,**
**அருங்கடி நெடுந்தூண் போல, யாவரும்**
**காண லாகா மாண் எழில் ஆகம்**
**உள்ளுதொறும் பனிக்கும் நெடுஞ்சினை, நீயே**

**நெடும்புற நிலையினை, வருந்தினை ஆயின்,**
**முழங்குகடல் ஓதம் காலைக் கொட்கும்,**
**பழம்பல் நெல்லின் ஊணூர் ஆங்கண்**
**நோலா இரும்புள் போல, நெஞ்சு அமர்ந்து**
**காதல் மாறாக் காமர் புணர்ச்சியின்,**

**இருங்கழி முகந்த செங்கோல் அவ்வலை**
**முடங்குபுற இறவோடு இனமீன் செறிக்கும்**
**நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து**
**யாணர்த் தண்பணை உறும் எனக் கானல்**
**ஆயம் ஆய்ந்த சாய்இறைப் புணைத்தோள்**

**நல்எழில் சிதையா ஏமம்**
**சொல்லினித் தெய்ய, யாம் தெளியு மாறே.**

*ஊரும் சேரியும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு, பழிச் சொற்கள் மேலெழுந்து நிற்குமாறு தேரோடுவந்து சுற்றியும், பணிவான சொற்கள் பலவற்றைக் கூறியும் வருகின்றனை, தலைவனே!*

*என்றும் அவியாத வேள்வித் தீயினை உடையது அழகு விளங்கும் செல்லூர். அதன்கண் -*

மதம் பொருந்திய யானையின் கூட்டம் எல்லாம் போர் முனையிலே அழியுமாறு, மன்னர்களின் பரம்பரைகளையே வேருடன் அறுத்த பரசாகிய வாளினையுடைய பரசுராமன், முன் காலத்திலே முயற்சியுடன் அரிதான முறையிலே செய்து முடித்த வேள்வியினிடத்தே, கயிற்றினை அரையிலே கட்டியிருந்த காணத்தகுந்த வனப்பினையுடைய அரிய காவலைக் கொண்ட உயரமான வேள்வித் தூணைப்போல, யாவரும் காண்பதற்கும் இயலாத மாண்புற்ற எழிலினையுடைய எம் தலைவியின் மார்பினை நினையுந்தோறும், நடுங்கும் உள்ளம் உடையவனாகிய, நீயும், நினது நெடிதான புறநிலையினைக் கருதி வருந்தினையானால் -

முழக்கமிடும் கடலின் ஓதமானது, காலை வேளையிலேயும் அலைந்துகொண்டிருக்கும் மிகுதியான பழைய நெல்லையுடைய ஊணூர் என்னும் அவ்விடத்திலே, ஒன்றைவிட்டு மற்றொன்று பிரிந்து இருத்தலைப் பெறாது கூடியேயிருக்கும் பெரிய பறவையாகிய மகன்றிலைப்போல நெஞ்சம் பொருந்தி, என்றும் காதல் மாறாத விருப்பமுடைய புணர்ச்சியினாலே -

பெரிய கழியிலே யிருந்தும் முகந்த நேரிய கோல்களை யுடைய அழகிய வலையானது, வளைந்த புறத்தினையுடைய இறாமீனுடன் ஏனைய மீனினங்களையும் குவித்துக் கொண்டிருக்கும், நீண்ட கதிர்களையுடைய வயல்கள் நிறைந்த, தண்ணிய சாய்க்கானம் என்னும் இடத்திலயுள்ள, அழகிய குளிர்ந்த மூங்கிலை ஒப்பாகும் என்று, கடற்சோலையிலே தோழிமார்கள் ஆராய்ந்து பாராட்டிய வளைந்த முன்கையினை யுடைய இவளது பணைத்த தோள்களின், நல்ல அழகானது சிதையாதிருப்பதற்குரிய அரணாகிய ஒரு செய்தியை, யாம் தெளிவு கொள்ளுமாறு இனிச் சொல்வாயாக.

என்று, இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகனை எதிர்ப்பட்டுத் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. ஊர் - பெருங்குடியினர் வாழ்வது; சேரி - சிறு குடியினர் வாழ்வது. 2. தேரொடு மறுகுதல் - தேருடன் வந்து சுற்றித் திரிதல், பணிமொழி - பணிவான வேண்டுதற் சொற்கள். 3. உருகெழு - அழகு கெழுமிய. 4. சமம் - போர் முனை. ததைய - அழிய. 5. மன்மருங்கு - மன்னர் பரம்பரை. மழு - பரசு. மழுவாள் - பரசாகிய வாள். நெடியோன் - பரசுராமன்; அவன் திருமாலின் அவதாரமாதலினால்அவனையே திருமால் என்றனர்; இக்கதை வழக்கு அந்நாள் தமிழகத்தில் நிலைவியதனை இது காட்டும். 10. பனிக்கும் - நடுங்கும்.11.புற நிலையினை - புறத்தனாக நிற்கும்*

நிலையினை உடையவனானநீயும்' எனலும் ஆம். 14. நோலா - பிரிந்துவருந்தியிராத. இரும்பு - பெரிய புள்; மகன்றில். 15. காமர் புணர்ச்சி - விருப்பந்தரும் புணர்ச்சி. 17. முடங்குதல் - வளைதல். 18. சாய்க்கானம் - திருச்சாய்க்காடு என வழங்கும் ஊர். 19. யாணர் - அழகிய செழுமை. 20. சாய் இறை - வளைந்த முன்கை. 21. ஏமம் - பாதுகாவல்.

**விளக்கம்:** 'சேரி' என்பது ஊரின் பகுதியாக விளங்குவது. தனித்தனி இனத்தவர் ஒருங்கே சேர்ந்துவாழும் பகுதி. பறைச்சேரி. பார்ப்பனச்சேரி, இடைச் சேரி எனவெல்லாம் வழங்கும். பரசுராமன், 'மன்னர் பரம்பரையினரை எல்லாம் அழிப்பேன்' எனச் சபதம் செய்தான் எனவும், அதற்குப் பலியானவர் பலர் எனவும் வழங்கும் செய்திகளை நினைக்கவும். செல்லூர், கோசர்களுக்கு உரியது எனப் பலவிடத்துங் கூறப்படுவது. அங்கே பரசுராமன் யாகம் செய்தான் என்று கூறுகிறார் புலவர். அந்த யாகத்தூண்போல யாவரும் காணலாகா மாண் எழில் ஆகம் என்றது,மன்னரும் காண்பதற்கு முடியாத மாண்புற்ற எழில் நிறைந்த ஆகம் என்ற செல்வியைக் குறித்ததாகும். தோள் எழில் சிதையா ஏமம் என்றது, அவற்றைப் பிரியாது தழுவியிருத்தலான வரைந்து கோடலாகிய மணவினை என்னும் காவல்.

**பாடபேதங்கள்:** 4. குரூஉடச் சமம். 11. நிலையின் வருந்தினை 14. இருபுள்.

## 221. போவதற்கு இசைந்தேன்!

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகற்குப் போக்கு உடன்பட்ட தோழி தலைமகட்குப் போக்கு உடன் படச் சொல்லியது.

(ஒரு தலைவனும் தலைவியும் களவு ஒழுக்கத்திலே ஈடுபட்டு ஒழுகி வருகின்றனர். தம் மகளின் மேனியிலே தோன்றிய மாற்றங்களைக் கண்ட பெற்றோர். அவளுக்கு வேறொரு வரனைப் பேசி மணம் செய்விக்க முயன்று, அதற்கான ஏற்பாடுகளிலேயும் ஈடுபடுகின்றனர். அதனை அறிந்த தோழி, தலைவனுடன் தலைவியும் உடன் போக்கிலே செல்லுவதற்கான முயற்சியை மேற்கொள்ளத் தூண்டுவாளாக. அவன் இசைவுபெற்று வந்து, தலைவியிடம் இப்படிக் கூறுகின்றாள்.)

**நனைவிளை நறவின் தேறல் மாந்திப்,**
**புனைவினை நல்லில் தருமணல் குவைஇப்,**
**'பொம்மல் ஓதி எம்மகள் மணன்' என,**

**வதுவை அமர்ந்தனர் நமரே அதனால்**
**புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்-**

**மதிஉடம் பட்ட மைஅணற் காளை**
**வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்**
**தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டு, நின்**
**தண்நறு முச்சி புனைய, அவனொடு**
**கழைகவின் போகிய மழைஉயர் நனந்தலை,**

**களிற்றிரை பிழைத்தலின் கயவாய் வேங்கை**
**காய்சினம் சிறந்து, குழுமலின் வெரீஇ,**
**இரும்பிடி இரியும் சோலை**
**அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென், யானே.**

பூவரும்புகளிலே விளையும் தேனினால் ஆகிய கள்ளின் தெளிவினை நிரம்பக் குடித்தனர்; நல்ல மனையினை அலங்கரிக்கும் செயலையும் செய்யத் தொடங்கினர்; புது மணலைக் கொணர்ந்து வீட்டிற் குவித்தும் வைத்துள்ளனர்; 'பொலிவுள்ள கூந்தலை உடையவளான எம்முடைய மகளுக்குத் திருமணம்' என்றும் கூறியவராயினர். இவ்வாறெல்லாம் நம்மவர் நின் மணத்திற்கு வேண்டியன எல்லாம் செய்தனர். அதனால்.

புதிதாக வடித்துக் கொள்ளப்பட்ட செவ்வையான இலைபொருந்திய வெள்ளிய வேலினையும், நின்னோடு உள்ளத்தாலே ஒன்றுபட்ட செவ்வியையும், கரிய தாடியினையும் உடைய காளைப்பருவத்தினன் நம் தலைவன்:

வளைவான கிளைகள் மிகுந்த திரண்ட அரையினையுடைய வெண்கடப்ப மரத்தினது, தேன் சொரியும் மென்மையான பூங்கொத்துக்களைத் தளிர்களுடனே கொணர்ந்து நின்னுடைய தண்மையான மணமுள்ள மயிர்முடியிலே சூடி மகிழுமாறு,

மூங்கில்கள் தம் அழகு அழிந்துபோகுமாறு, மேகங்கள் வானத்து உயரே பெய்யாது போகிய பரந்த பாலையிடத்தே, களிறாகிய தன் இரையானது தப்பிப் போயினதால், பெரிய வாயினையுடைய வேங்கையானது. கொதிக்கும் சினம் மிகுந்ததாக முழங்கும். அதனைக் கேட்டு அஞ்சிய கரிய பெண்யானையானது தானும் நிலைதடுமாறி ஓடிக்கொண்டிருக்கும். அத்தகைய சோலையினையுடைய அரிய சுரநெறியிலே, நீயும் அவனுடன் கூடிச் சென்றுவிடுதலை யானும் விரும்பினேன்.

என்று, தலைமகற்குப் போக்குடன்பட்ட தோழியானவள் தலைமகட்குப் போக்குடன்படச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. நனை - பூவரும்பு. தேறல் - தெளிவு. 3. பொம்மல் - பொலிவு. ஓதி - கூந்தல். 5. புனைந்த - வடிக்கப் பட்ட. 6. மதியுடம்பட்ட - உள்ளம் ஒருமைப்பட்ட. 11. கயவாய் - பெரிய வாய். 12. குழுமல் - முழங்குதல். 13. இரும் பிடி - கரிய பிடி; பெரிய பிடியுமாம்.*

**விளக்கம்:** *'நமர் வேற்று வரைவினை ஏற்று மணமுயற்சி களிலே ஈடுபட்டனர்; அதனால் நீ உடன் போக்கிலே நின் தலைவனுடன் சென்றுவிடுக' என்றனள் தோழி. புலிக்குக் களிறு தப்பியதும் பிடி அஞ்சி ஓடுவதும் ஒருவர் துன்பத்திற்கு ஒருவர் வருந்தும் துணைமையுடன் செல்லல் வேண்டும் என்பதனை உணர்த்தும்.*

**பாடபேதங்கள்:** *5. செயலை வெள்வேல். 7. வாங்குசினைக் கொள்ளும்.*

## 222. செல்வோம் யாமே!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி:* **துறை:** *தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.* **சிறப்பு:** *ஆட்டனத்தி ஆதிமந்தியின் வரலாற்றுக் குறிப்பு.*

*(களவிலே உறவாடிவந்த தலைவன் இடையிற் சில நாட்களாக வராது போய்விட்டானாக, அதனால் தன் உள்ளம் வருந்தியிருந்தாள் தலைவி. ஒருநாள், அவன் வந்து சிறைப்புறத்தானாக இருப்பதறிந்த தோழி, தலைவியிடம் கூறுபவளே போல, 'அவனைத் தேடிச் செல்வோம்' என, அவன் கேட்குமாறு உரைக்கின்றாள். அவனைத் தலைவியை வரைந்து கொள்ளுமாறு தூண்டுதற்குச் சொல்லப்பட்டது இது.)*

**வானுற நிவந்த நீல்நிறப் பெருமலைக்**
**கான நாடன் இறீஇய நோய்க்கு,என்**
**மேனி ஆய்நலம் தொலைதலின்,மொழிவென்:**
**முழவுமுகம் புலராய் கலிகொள் ஆங்கண்,**
**கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்.**

**ஈட்டெழில் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்,**
**ஆட்டன் அத்தி நலன்நயந்து உரைஇத்,**
**தாழிருங் கதுப்பின் காவிரி வவ்வலின்,**
**மரதிரம் துழைஇ, மதிமருண்டு அலந்த**
**ஆதி மந்தி காதலற் காட்டிப்**

**படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்**
**மருதி அன்ன மாண்புகழ் பெறீஇயர்,**
**சென்மோ-வாழி, தோழி-பல்நாள்.**
**உரவுரும் ஏறொடு மயங்கி,**
**இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே.**

*தோழி, வாழ்க! வானுற உயர்ந்த நீல நிறத்தினையுடைய, பெருமலையினைச் சார்ந்த காட்டுநாட்டின் தலைவன் நம் காதலன். அவன் அடைவித்த காமநோய்க்கு ஆற்றாது நின் மேனியின் ஆழ்ந்த அழகனைத்தும் தொலைந்தன. ஆதலின், ஒன்று சொல்லுவேன் கேட்பாயாக:*

*முழவுகளின் முழக்கம் ஓயாத ஆரவாரத்தையுடைய இடமாகிய கழார் என்னுமிடத்தேயுள்ள, பெருந்துறையி னிடத்தே நடந்த புதுநீர் விழாவிலே ஆடும், திரண்ட அழகினாலே பொலிவுற்று நிமிர்ந்த, திரண்ட தோளாற்றலை யுடைய ஆட்டனத்தி என்பானின் அழகினை விரும்பிப், பரவி வந்து, தாழ்ந்த கரிய கூந்தலையுடைய காவிரிப் பெண்ணானவள், அவனைக் கவர்ந்து தன்னுடனேகொண்டு சென்றனள். அதனால்.*

*திக்கெல்லாம் அவனைத் துழாவித் தேடியவளாகத், தன் மதியும் மருட்சியுற்றவளாக வாடினாள் ஆதிமந்தி என்னும் அவன் மனைவி. அவளுடைய காதலனை அவளுக்குக் காட்டி தந்தது, தான் ஒலிக்கும் கடலிலே புகுந்து மறைந்தனள், பார்ப்பதற்கு அமைந்த சிறப்பினையுடைய மருதி என்பவள். அவளைத் போலச் சிறந்த புகழைப் பெறும் பொருட்டாக -*

*பலநாட்களும், முழக்கமிட்டுக்கொண்டிருக்கும் இடியேற் றுடனே கூடியதாக இரவெல்லாம் பெருமழை பொழிந்த ஈரமிக்க சேற்று வழியிலே, அவனை நாமும் தேடிச் செல்வோமாக.*

*என்று, தலைமகன் சிறைப்புத் தானாத் தோழி தலை மகட்குச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. நிவந்த - உயர்ந்த. 2. உறீ இய நோய் - அடைவித்த காமநோய். 3. ஆய்நலம் - ஆய்ந்த பேரழகு. 4. முகம் புலரா - முழக்கம் ஓயாத. 5. கழா அர் - காவிரிக் கரையின் ஓர் ஊர். 6. ஈட்டெழில் - தொகுதியாகத் திரண்ட பேரெழில். 9. மாதிரம் - திசைகள். 12. மருதி - கடல் தெய்வம். 15. ஈர்ந்தண் ஆறு - ஈரமான சேற்று வழி.*

**உள்ளுறை:** *காவிரி கவர்ந்த ஆட்டனத்தியை மாருதியென் பாள் ஆதிமந்திக்குக் காட்டித் தான் கடலுட் புகுந்தது என்றாள்,*

*அதுபோலவே, அவள் காதலனை விரும்பிக் கவர்ந்த பிறிரினின்றும், தன்னை இழந்தாயினும், தான் மீட்டுத் தருவேன் என்றனள் தோழி.*

**பாடபேதம்:** *2. நோய்க்கண்.*

## 223. உறக்கம் ஏது?

**பாடியவர்:** *பாலை பாடிய பெருங்கடுங்கோ.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.*

*(தலைமகன் பிரிந்து வினைமேற் சென்று வராதிருந்த காலத்தே, அதனால் வருந்தித் தன் அழகு குலைந்து வாடி மெலிந்தனள் தலைவி. அவளுக்குத் தலைவன் அவளை மறவான்' என்ற உறுதியைக் கூறி, வற்புறுத்தித் தோழி தேறுதல் உரைக்கின்றான்.)*

**'பிரிதல் வல்லியர்; இது, நத் துறந்தோர்**
**மறந்தும்அமைகுவர் கொல்?" என்று எண்ணி,**
**ஆழல்-வாழி, தோழி-கேழல்**
**வளைமருப்பு உறழும் உளைநெடம் பெருங்காய்**
**நனைமுதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்,**

**காய்சினக் கடுவளி எடுத்தலின் வெங்காட்டு**
**அழல்பொழி யானையின் ஐயெனத் தோன்றும்**
**நிழலில் ஓமை நீரில் நீளிடை,**
**இறந்தனர் ஆயினும், காதலர் நம்வயின்**
**மறந்து கண்படுதல் யாவது-புறம்தாழ்**

**அம்பணை நெடுந்தோள் தாங்கித், தும்பி**
**அரியினம் கடுக்கும் சுரிவணர் ஐம்பால்**
**நுண்கேழ் அடங்க வாரிப் பையுள் கெட,**
**நன்முகை அதிரல் போதொடு குவளைத்**
**தண்நறுங் கமழ்தொடை வேய்ந்த, நின்**

**மண் ஆர் கூந்தல் மரீஇய துயிலே'**

*தோழி வாழ்க! நம்மைப் பிரிந்து செல்வதற்கு உள்ளத் தளத்திலே வன்கண்மை உடையராயினர் நம் காதலர். அவ்வாறே, நம்மைக் கைவிட்டுச் செல்லவும் செய்தனர். அத்தகையவரான அவர், நம்மை மறந்து அவ்விடத்தேயே தங்கியும் விடுவாரோ என்று எண்ணித் துயரத்தில் ஆழ்தல் வேண்டாம்.*

பன்றியின் வளைந்த கொம்பினைப் போன்ற ஆர்க்கினை யுடைய, நெடிய பெருங்காயினை உடையது அரும்பு முதிர்ந்த முருக்கமரம். அதன் கிளையைச் சேர்ந்திருந்த பெரிய பாறையானது, மிகவும் வேகமாக வரும் கடுங்காற்று மூட்டுதலால், வெம்மையான காட்டிடத்தே நெருப்பால் மூடப்பெற்ற யானையைப் போன்று, வியக்கத்தக்கவாறு தோன்றும். நிழலற்றுப் போன ஓமை மரங்களையுடைய நீரற்ற அத்தகைய நீண்ட பாலை வழியினூடே கடந்து சென்றனர் நம் காதலர். ஆயினும்,

முதுகுப் புறத்திலே தொங்குவதாக, அழகிய மூங்கில் போன்று விளங்கும் நீண்ட தோள்களிலே படிந்ததாகத், தும்பி என்னும் வண்டினது கூட்டங்கள் போலத் தோன்றும், சுரிந்து நெளிவுகளுடன் விளங்கும் நுண்மையான இயல்பு பொருந்தியது, நின் கூந்தல். நின் வருத்தமெல்லாம் அழியுமாறு அதனை முழுமையும் வாரி முடித்துக், காட்டு மல்லிகையின் நல்ல அரும்புகள் மலர்ந்த இதழ்களுடனே தண்மையான நறுமணமுள்ள குவளை மலரையுஞ் சேர்த்துத் தொடுத்த மாலையினைச் சூடி, அந்தக் கூந்தலிலே பொருந்திய துயிலினை நின்னிடத்தே பெறுவதனை மறந்து, அவர் கண்ணுறங்குதல் என்பது ஏது?

என்று? பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.

**சொற்பொருள்:** 1. வல்லியர் - வன்மையுடையர். 4. உளை - ஆர்க்கு. 6. கடுவளி - கடுங்காற்று; அது மிக விரைவாக வீசுதல் பற்றிக் காய்சினக் கடுவளி யாயிற்று. 11 - 12 தும்பி அரியினம் - தும்பியாகிய வண்டினம்; அதன் கருமை பற்றிச் சொல்லப் பட்டது.12. சுரிவணர் ஐம்பால் நுண்கேழ் - சுரிதலையும் வளைவு களையும் ஐவகையாக முடித்தலையும் மென்மையினையும் பொருந்திய கூந்தல்.

**பாடபேதங்கள்:** 4. நெடும் பொங்கர். 6. வெங்கட். 13. நுண்துகள் அடங்க.

## 224. இரவுப் பொழுதே செல்க!

**பாடியவர்:** ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்; ஆவூர்கிழார் மகன் பெருஞ்சாத்தன் எனவும் பாடம். **திணை:** முல்லை. **துறை:** வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

*(தான் சென்ற தொழில் முடிந்ததும், தலைமகனின் உள்ளம் தன் காதலியின் நினைவிலேயே ஆழ்ந்தது. விரைந்து சென்று அவளைக் கூடி மகிழ்தல் வேண்டும் எனத் துடிக்கும் அவன், தன் தேர்ப்பாகனிடம், தேரினை விரைவிலே செலுத்துமாறு, இப்படிக் கூறுகின்றான்)*

**செல்க, பாக! எல்லின்று பொழுதே-**
**வல்லோன் அடங்குகயிறு அமைப்பக், கொல்லன்**
**விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிராக்,**
**கொடுநுகத்து யாத்த தலைய, கடுநடைக்,**
**கால்கடுப்பு அன்ன கடுஞ்செலல் இவுளி,**

**பால்கடை நுரையின் பரூஉ மிகப்பு அன்ன,**
**வால்வெண் தெவிட்டல் வழிவார் நுணக்கம்**
**சிலம்பி நூலின் நுணங்குவன பாறிச்,**
**சாந்துபுலர் கலம் மறுப்பக் காண்தகப்**
**புதுநலம் பெற்ற வெய்துநீங்கு புறவில்,**

**தெறிநடை மரைக்கணம் இரிய மனையோள்,**
**ஐதுணங்கு வல்சி பெய்துமுறுக்கு உறுத்த**
**திரிமரக் குரலிசைப் கடுப்ப, வரிமணல்**
**அலங்குகதிர்த்த திகிரி ஆழி போழ,**
**வரும்கொல்-தோழி!-நம் இன்உயிர்த் துணைஎனச்,**

**சில்கோல் எல்வளை ஒடுக்கிப் பல்கால்**
**அருங்கடி வியனகர் நோக்கி,**
**வருந்துமால் அளியள் திருந்திழை தானே.**

*"தோழி! தேரினைச் செலுத்துவதிலே வல்லவனாகிய பாகன், குதிரைகளை அடக்கிச் செலுத்துவதற்குரிய கடிவாளக் கயிற்றினைப் பூட்டுவான். கொல்லன் வலித்து இழுக்கின்ற துருத்தியினைப்போல வெம்மையாகப் பெருமூச் செறிந்தவாறே, வளைந்த நுகத்திலே பூட்டப்பெற்ற தலையினவாகிய. கடிய நடையினையும் காற்றினைப்போன்று செல்லும் இயல்பினையும் கொண்ட குதிரைகள், வேகமாகச் செல்லும். பால் கடையுங் காலத்தே எழும் வெண்மையான நுரையின் பெரிய மிதப்பினைப் போன்ற மிகவும் வெண்மையான வாயின் நுரையானது, வழியிற் பின்னே தொடர்ந்து வீழ்ந்து கொண்டிருக்கும். அது சிலம்பியின் நூலைப்போல மெல்லிதாகச் சிதறிக்கொண்டு மிருக்கும். அது சந்தனம் பூசிக்காய்ந்த மார்பிலே மறுச் செய்யும். காண்பதற்குத் தகுதியாகப் புதிய நலத்தினைப் பெற்று விளங்கும் வெம்மை நீங்கிய காட்டிலே குதித்துச் செல்லும் நடையினவாகிய மரையினங்கள், தேரின் வரவுக்குப் பயந்து, தம்நிலைகெட்டு*

ஓடும். வீட்டுப் பெண்கள் பதமாகக் காய்ந்த அரிசியைப் பெய்து,சுற்றுவதிலே ஈடுபட்டிருக்கும் மரத்திரிகையின் குரல் ஒலிபோல, வரிப்பட்ட மணற்பாங்கிலே, சுழலும் கதிரினையுடைய சக்கரங்கள் பிளந்து ஊடறுத்துக் கொண்டு ஒலியுடன் செல்லும். இவ்வாறாக, நம்முடைய இனிய உயிர்த்துணையான காதலரும் இன்று வருவாரோ?" என்று கேட்டு, எதிர்பார்த்திருப்பவள் என் தலைவி.

சிலவாகிய கோற்றொழில்களையுடைய ஒளிபொருந்திய வளைகளை ஒலியாதே ஒடுக்கிப், பலமுறை அரிய காவலுடைய பெரிய மனையினைப் பார்த்துப் பார்த்து, இரங்கத் தக்கவளாகிய திருந்திய அணிகளையுடைய அவள் வருந்திக் கொண்டேயிருப்பாள். அதனால் பாகனே! இன்று இரவுப் பொழுதிற் குள்ளாகவே சென்று சேருமாறு, நம் தேர் மிகவும் விரைவாகச் செல்லுமாக;

என்று, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 2. அடங்கு கயிறு - கடிவாளக் கயிறு. 3. விசைத்தல் - வலித்தல். 5. கால் கடுப்பு - காற்றின் விரைவு. இவுளி - குதிரை. 7. பால்கடைநுரை - பாலேடு. 6. தெவிட்டல் - வாய் நுரை. நுணக்கம் - மெல்லிய வீழ்ச்சி. 10. புதுநலம் - மழையாற் பெற்ற புதுச்செழிப்பு: கார்ப்பருவ வரவை இது காட்டும்.

## 225. தனித்து இருப்போமோ?

**பாடியவர்:** எயினந்தை மகனார் இளங்கீரனார் **திணை:** பாலை. **துறை:** பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

(உள்ளத்தில், பொருள் தேடிவருதல்வேண்டும் என்னும் ஆர்வம் ஒரு தலைவனுக்கு மிகுதியாயிற்று. அவனால், அவன் காதலியைப் பிரிந்து செல்லவும் இயலவில்லை. இரண்டிற்கும் இடையே உழன்று கொண்டிருந்த தன் நெஞ்சிற்கு, இவ்வாறு கூறித் தன் போக்கை நிறுத்திவிடுகிறான் அவன்.)

**அன்பும், மடனும், சாயலும், இயல்பும்,**
**என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்,**
**ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி,**
**இன்றே இவணம் ஆகி, நாளைப்,**
**புதலிவர் ஆடுஅமைத் தும்பி குயின்ற**

**அகலா அந்துளை கோடை முகத்தலின்**
**நீர்க்கியங்கு இனநிரைப் பின்றை, வார்கோல்**
**ஆய்க்குழல் பாணியின் ஐதுவந்து இசைக்கும்,**
**தேக்கமல் சோலைக் கடறோங்கு அருஞ்சுரத்து,**
**யாத்த தூணித் தலைதிறந் தவைபோல்,**

**பூத்த இருப்பைக் குழைபொதி குவிஇணர்**
**கழல்துளை முத்தின் செந்நிலத்து உதிர,**
**மழைதுளி மறந்த அங்குடிச் சீறூர்ச்**
**சேக்குவம் கொல்லோ-நெஞ்சே!-பூப்புனை**
**புயலென ஒலிவரும் தாழிருங் கூந்தல்,**

**செறிதொடி முன்கை நம் காதலி**
**அறிவஞர் நோக்கமும் புலவியும் நினைந்தே?**

*நம்மீது அன்பு கொண்டவள்; சிறந்த மடமையும் சாயலும் குணங்களும் பொருந்தியவள்; எலும்பையும் நெகிழச் செய்விக்கும் இனிதான பேச்சை உடையவள்; இப்படிப்பட்ட பிற சிறந்த குணங்களும் எல்லாம் ஒன்றுபட்டு இருக்கின்ற ஒரு குறிக்கோளுடையனவாக ஒருங்கே அமைந்திருப்பனபோல விளங்குபவள்; நம் காதலி. அவளுடன், தழுவியவாறே இன்று இவ்விடத்தில் இருப்பவர் ஆயினேம். நாளைப் பொழுதிலே,*

*அசையும் மூங்கில்கள் புதராகப் படர்ந்துவிளங்கும்; வண்டுகள் அவற்றிலே அழகியதாகச் சிறு சிறு துளைகளைப் பண்ணியிருக்கும்; கோடைக்காற்று அத்துளைகளினூடு புகுந்து ஒலி எழுப்பும்; அவ்வொலியானது, நீர் பருகுவதற்காகச் சென்று கொண்டிருக்கும் பசுமந்தைகளுக்குப் பின்னாக நீண்ட கோலினையுடைய ஆயர்கள் குழலினை இசைப்பதுபோல இனிதாக வந்து ஒலித்துக் கொண்டிருக்கும். அத்தகைய தன்மை உடையதாகவும்,தேக்கு மரங்கள் அடர்ந்தசோலைகளை உடையதாகவும் காடு விளங்கும். உயர்ந்திருக்கும், கடத்தற்கு அரியதான வழியாகவும் பாலைவழியானது தோன்றும். அவ்விடத்தே, மறவர்களின் தோளிலே கட்டியிருக்கும், அம்பறாத் தூணியினது மூடியைத் திறந்து வைத்திருப்பதுபோல, இருப்பை மரங்களின் பூக்கள் விளங்கும். தளிரால் பொதியப் பெற்றிருக்கும் குவிந்த அத்தகைய இருப்பைப்பூக் கொத்துக்கள் கோத்த நூலினின்றும் கழன்று வீழும் துளையுடைய முத்துக்களைப் போலச் சிவந்த நிலப்பரப்பிலே உதிர்ந்து கிடக்கும். மழை துளியிடுதலையே மறந்துவிட்ட அவ்விடங்களிலேயுள்ள, அழகிய குடிகளையுடைய சிறிய ஊரினிடத்தே,*

'பூவாற் புனைதலையுடைய மழைமேகம்' என்று சொல்லுமாறு தழைத்துத் தொங்கும் கருமையான கூந்தலையும் செறிவுடைய வளையல்களை அணிந்துள்ள முன்கையினையும் உடையவள் நம் காதலி; அவளுடைய அறிவு கலங்கிய பார்வையினையும் ஊடலினையும் நினைந்து வருந்தியவாறே, நெஞ்சமே, நாம் தனியாகத் தங்கி இருப்போமோ?

என்று,பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கினான் என்க.

**சொற்பொருள்:** 1. அன்பு - உள்ளம் கலந்த ஒருமை நெகிழ்ச்சி. மடன் - எவ்வித ஆய்வும் இன்றித் தான் கொண்டதே உறுதியாகப் போற்றும் தன்மை. சாயல் - மென்மையின் எழில். இயல்பு - ஒழுக்கம். 2. பிறவும் - குடும்பப் பெண்களுக்கு இருக்கவேண்டிய பிற பண்புகளும். 3. ஒன்றுபடுகொள்கை - ஒன்றுபட்டுச் சேர்ந்திருத்த லாகிய ஒரு கோட்பாடு. முயங்கி - தழுவி. 5. புதல் இவர் - புதராகப் படர்ந்திருக்கும். ஆடுஅமை - அசையும் மூங்கில். குயின்ற - துளைத்த. 6. அகலா - அகற்சியில்லாத; நீங்காதிருப்பதும் ஆம். அந்துளை - அழகிய துளை. கோடை - மேல் காற்று. 7. வார்கோல் - ஆயர்கள் கையிலுள்ள நீண்ட கவைக்கோல். 9. தேக்கு அமல் தேக்கு செறிந்துள்ள. கடறு - கற்காடு.10. தூணி - அம்பறாத் தூணி. 14. பூப்புனை புயல் - புயல் பூவினைப் புனைந்துள்ளது போல விளங்கும். புயல் - மழைமேகம்.15. ஒலிவரும் - தழைத்திருக்கும். 16. செறிதொடி - செறிந்துள்ள வளைவுகள்; செறிவு, காதலனுடனிருக்கும் பூரிப்பினால் அமைவது. 17. அஞர்தல் - கலங்குதல். புலவி - ஊடல்.

**விளக்கம்:** கூந்தலையும், செறி தொடி முன் கையினையும், அறிவஞர் நோக்கத்தையும், புலவியையும் நினைந்து இருப்போமோ என்றது, அவளைப் பிரிந்திருக்க முடியாத தன் தன்மையைக் கூறியதாகும்.

## 226. அலர் பெரிதாயிற்றே!

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம். **துறை:** தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது. **சிறப்பு:** கழார் முன்துறைக்கு உரியவனாகிய மத்தி என்பவன்; பாணனொடு வந்த கட்டி என்பான் தித்தன் வெளியனின் அவையிலே வந்து போரிடுதற்கு அஞ்சி ஓடிய செய்திகள்.

(தலைவியோடு கூடி இன்புற்று வாழ்தலைக் கைவிட்டுப் பரத்தையர் உறவிலே ஈடுபட்டிருந்தான் ஒரு தலைவன். அதனால்

*ஊரிலே பழிச்சொற்கள் மிகுதியாக எழுந்தன. ஒரு நாள், அவன் மனைவியிடத்துக்கு வருதலை விரும்பிச் செய்தியைத் தலைவியின் தோழியிடம் கூறினபோது, அவள் மறுத்துச் சொல்லுகின்றாள்.)*

**உணர்குவென் அல்லென்; உரையல்நின் மாயம்;**
**நாணிலை மன்ற-யாணர் ஊர!-**
**அகலுள் ஆங்கண் அம்பகை மடிவைக்,**
**குறுந்தொடி, மகளிர் குரூஉப்புனல் முனையின்,**
**பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்**

**கரந்தைஅம் செறுவின் வெண்குருகு ஓப்பும்,**
**வல்வில் எறுழ்த்தோள் பரதவர் கோமான்,**
**பல்வேல் மத்தி கழாஅர் முன்துறை,**
**நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்,**
**விடியல் வந்த பெருநீர்க் காவிரி,**

**தொடிஅணி முன்கை நீ வெய் யோளொடு**
**முன்நாள் ஆடிய கவ்வை இந்நாள்,**
**வலிமிகும் முன்பின் பாணனொடு மலிதார்த்**
**தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்**
**பாடுஇன் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சி**

**போரடு தானைக் கட்டி**
**பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே.**

*புது வருவாயினை உடைய ஊரனே! நின்னுடைய மாயமான பேச்சுக்களை நீ சொல்லவேண்டாம். அவற்றை உண்மையென யான் ஏற்றுக் கொள்ளவும் மாட்டேன். நினக்கு நாணமும் இல்லாது போயிற்றோ?*

*அழகிய பகுப்பையுடைய தழை உடையினையும் குறுந் தொடியினையும் உடைய இளமகளிர்கள், அகன்ற ஊரினிடத்தே விளங்கும் புதுப்புனல் விளையாட்டிலே ஈடுபடுவார்கள். அதுவும் வெறுத்ததென்றால், பொய்கையி லுள்ள பைஞ்சாய்க் கோரைகளைக் கோதிக், கழனியாகிய கரந்தையையுடைய வயல்களிலேயுள்ள வெண்ணிறமுள்ள நாரைகளை ஓட்டிக் கொண்டிருப்பார்கள். அத்தகைய இடமாகிய,. வலிய வில்லானது விளங்கும் வலிபொருந்திய தோள்களையுடையவனும், பரதவர்களின் கோமானுமாகிய, பலவேற்படையினரையும் உடைய மத்தி என்பவனது, கழாஅர் என்னும் ஊரின் துறையின் முன்னே -*

உயரமான வெண்மருத மரத்தோடு வஞ்சி மரத்தையும் சாய்த்துக்கொண்டு, விடியற்காலை வேளையிலே வந்த காவிரியின் பெருவெள்ளத்திலே, தொடி அணிந்த முன் கைகளை உடையவளான, விரும்பிய பரத்தையுடனே நேற்றுப் புனலாடினாய்.

வலிமிகுந்த ஆற்றலுடைய பாணன் என்பவனோடும் கூடியவனாகப்,போர் செய்தலிலே வல்ல தானைவீரர் பெருக்கத்தினை உடைய கட்டி என்பவன், தார்மலிந்த தித்தன் வெளியன் என்பவனது உறையூரின் நாளவையின் கண்ணே, மற்போரிட வந்தான். வந்தவன், இனிய ஓசையையுடைய தெளிவாக இசைக்கும் கிணையினது ஒலியினைக் கேட்டுத் தித்தன் வெளியனின் பேராற்றலை உணர்ந்தான். அதனால், அச்சங்கொண்டு அவனுடன் போரிடாதேயே ஓடிவிட்டான்.

நேற்று நீ புனலாடியதால் இன்று எழுந்த ஊரலர். அப்படிக் கட்டி ஓடியபோது எழுந்த ஆரவாரத்திலும் பெரிய தாயிற்றே!

என்று கூறித் தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தனள் என்க.

**சொற்பொருள்:** *1. உணர்குவென் - உண்மையாகக் கருதி உணர்வேன். மாயம் - வஞ்சனை. 2. யாணர் - புது வருவாய். 3. மடிவை - மடிப்புடைய உடை. 4. குரூஉப் புனல் - விளக்க முடைய புதுப்புனல், பைஞ்சாய் - ஒருவனாகக் கோரை 7. எறுழ் - வலிமை. 10. விடியல் - அதிகாலை நேரம். 11. நீ வெய்யோளொடு - நின்னால் விரும்பப்பட்டவளோடு. 12. கவ்வை - அலர். 13. முன்பு - ஆற்றல். பாணன் - வடநாட்டு ஒரு வீரன்; மற்போரில் வல்லவன். 14. உறந்தை - உறையூர். நாளவை - திருவோலக்கம், நாள்தோறும் கூடும் அரசவை.*

**விளக்கம்:** போரிடும் செருக்கோடு வந்தவன், நாளோலக்கத்து எழுந்த கிணைப்பறையின் இசைகேட்டே அஞ்சி ஓடியது பெரிதும் பழிப்பிற்கு உரிய செயலாகும். அப்போது எழுந்த ஆரவாரம் அவனை இழித்துப் பேசுவதனால் எழுந்தது. அதுபோலவே, நின் பரத்தமை உறவினையும் ஊரவர் மிகுதியாக இழித்துப் பேசுகின்றனர் என்றனள். அதனால், தலைவி ஊடியிருப்பதனையும், அவன் கருத்துக்கு இசைய மாட்டாள் என்பதையும் உரைத்தனள் ஆயிற்று.

## 227. நோயின்றி வாழ்க!

**பாடியவர்:** *நக்கீரர்.* **திணை :** *பாலை.* **துறை:** *1.தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 2. பிரிவின்கண் வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.* **சிறப்பு:** *தழும்பன் என்பவனது ஊணூர்க்கு அப்பாலுள்ள மருங்கூர்ப் பட்டினத்துக் கடைத் தெருவின் சிறப்பு.*

*(1. தலைமகன் தொழில்மேற் சென்றவன், வருவதாகக் குறித்த நாளிலே வராமை காரணமாகத் தலைவி வருத்தமுற்று உடல்நலமும் குன்றி வேறுபாடு கொண்டனள்; அப்போது, அவளைத் தேற்றுவாளாகத் தோழி சொல்லியது. 2. தலைமகளின் துயரங்கண்ட தோழி தானும் வருந்தினள்; அப்போது அவளைத் தேற்றுவாளாகத் தன் உள்ளம் உறுதியுடையது என்பாள் போலக் காட்டித், தலைவி சொல்லியது.)*

**நுதல்பசந் தன்றே; தோள்சா யினவே;**
**திதலை அல்குல் வரியும் வாடின;**
**என்ஆ குவள்கொல் இவள்?' எனப் பல்மாண்**
**நீர்மலி கண்ணொடு நெடிதுநினைந்து ஒற்றி,**
**இனையல்-வாழி, தோழி!-நனை கவுள்**

**காய்சினம் சிறந்த வாய்புகு கடாத் தொடு**
**முன்நிலை பொறாஅது முரணிப், பொன்னிணர்ப்**
**புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப,**
**முதல்பாய்ந் திட்ட முழுவலி ஒருத்தல்**
**செந்நிலப் படுநீறு ஆடிச், செருமலைந்து,**

**களம்கொள் மள்ளரின் முழங்கும் அத்தம்**
**பலஇறந்து அகன்றனர் ஆயினும், நிலைஇ,**
**நோய்இல ராக, நம் காதலர்! - வாய்வாள்,**
**தமிழ் அகப் படுத்த இமிழிசை முரசின்**
**வருநர் வரையாப் பெருநாள் இருக்கை,**

**தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப்**
**பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்**
**கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்,**
**விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்.**
**இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து,**

**எல்லுமிழ் ஆவணத்து அன்ன,**
**கல்லென்கம்பலை செய்து அகன்றோரே!**

'நெற்றியும் பசலை படர்ந்துள்ளது. தோள்கள் மெலிந்து தளர்ந்து போயின. தேமற் புள்ளிகளையுடைய அல்குல் தடத்தின் வரிகளும், தம் அழகிழந்து வாடிப் போயின. இனி,இவள் என்ன ஆவாளோ?' என்று நெடிதும் நினைந்து, அதனையே ஆராய்ந்து கொண்டிருப்பவளாக நீயும் வருந்தாதே.

பொன்னிறமான பூங்கொத்துக்களுடன் விளங்கும், புலி போன்ற வேங்கை மரத்தைக் கண்டது ஒரு களிறு. அது, தன் முன்னே நிற்றலைப் பொறாது பகைகொண்டது. காயும் சினம் மிகுந்ததனால், நனைந்த கன்னத்தினின்றும் வாயிலே புகும் மிகுதியான மதநீரோடு, அந்த வேங்கையின் பூங்கொம்புகள் வருந்துமாறு, அதன் அடிமரத்திலே பாய்ந்து மோதிற்று. மிக்க வலிமையினையுடைய அந்தக் களிறு, பின்னர் தன் வருத்தம் தீரச், செம்மண் நிலத்திலேயுள்ள புழுதியிலே கிடந்தும் புரண்டது. போர்புரிந்து களத்தினையே தமதாகக் கொண்டு விளங்கிய வீரரைப்போலத் தன் குரலெடுத்தும் முழங்கிற்று. அத்தகைய முழக்கத்தினையுடைய சுரநெறிகள் பலவற்றைக் கடந்து சென்றவர் நம் காதலர். ஆயினும்.

தப்பாத வாளினையும் தமிழகம் முழுவதையும் தனக்குள் அகப்படுத்தி முழங்கும் புகழ்விளங்கும் முரசினையும், தன்பால் வரும் இரவலர்க்கு வரையாது வழங்கும் பெரிய நாளோலக் கத்தையும உடையவன் தழும்பன் ஆவான். தூங்கல் ஓரியார் என்பவரால் பாடப்பெற்ற மிகவுயர்ந்த நல்ல புகழினையும், பிடியானை மிதித்த வழுதுணங்காய் போன்ற போர்த் தழும்புகளையும் உடையவன், பெரும் பெயரினனான அத் தழும்பன் என்பவன். அவனுக்கு உரியதான, காவல் பொருந்திய மதில்களாகிய எல்லையினை உடைய ஊணூருக்கு அப்பாலுள்ள, சிறந்த செல்வங்கள் நிலைபெற்றிருக்கும் பெருமை கொண்ட வளநகராகிய, பெரிய உப்பங் கழிகளாகிய தோட்டக்கால்களையுடைய மருங்கூர்ப்பட்டினம். அவ்விடத்து, ஒளிவீசும் கடைவீதியைப் போன்ற, 'கல்' என்னும் ஆரவாரத்தையுடைய அலர்ச்சொற்களை, இவ்வூரிலே எழச் செய்து, நம்மைப் பிரிந்து சென்றவர் நம் காதலர் அவர், சென்றவிடத்து நோயிலராகி நிலைபெற்று வாழ்வாராக!

என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. சாயின - மெலிந்தன. 2. திதலை - தேமல். வரி - இரேகைகள். . ஒற்றி - ஆராய்ந்து. 5. இனையல் - வருந்தி அழுதல். 8. பூஞ்சினை புலம்ப - பூக்கள் உதிர்தலால் கொம்புகள்

*தனித்து வாடி வருந்த. 9. ஒருத்தல் - தலைமையுடைய களிறும் ஆம். 11. மள்ளர் - வீரர். 14. இமிழ் இசைமுரசு - புகழினை முழக்கும் முரசு; வெற்றி முரசும் கொடை முரசும் கொள்ளப்படும். 10. தூங்கல் - தூங்கல் ஓரியார் என்னும் புலவர்; இவர் பாடிய பாட்டுக் கிடைத்திலது. 17. போர்ப் புண்கள் யானை மிதித்த வழுதுணங்காய்போல உடலெங்கும் விளங்குதலால் தழும்பன் எனப் பெயர்பெற்றனன். 21. எல் உமிழ் - ஒளி வீசுதல்; அது நவமணிக் கடைகள் மலிந்துள்ளதால் இருக்கலாம்.*

**விளக்கம்:** *'பிரியேன்' என்று தலையளி செய்த காலத்துச் செய்த உறுதியும், பிரிந்த காலத்து வருவேன் எனக் குறித்த காலமும் பொய்த்தான். ஆதலின், அதனால் அவன் இடையூறு நேர்தல் கூடாது என வாழ்த்துவாளாக, 'நோயிலராக நிலைஇ' என்றனள். இதனைத் தலைவி சொன்னதாகக் கொள்வதே சிறப்பாகும். பகையற்றபோதும் வேங்கையோடு வறிதாகப் போரிட்டுத் துயருற்ற களிற்றின் மயக்கத்தைப் போன்றதே தலைவனின் பொருளார்வமும் என்றனள்.*

**மேற்கோள்:** *மங்கலமொழி என்றதற்குத், 'தலைவற்குத் தீங்கு வரும்' என்று உட்கொண்டு, தோழியும் தலைவியும் அதற்கு அஞ்சி அவனை வழுத்தலும் என்று பொருள் கூறி, 'நோயிலராக நம் காதல்' என்பதனை, 'மங்கல மொழியும்' என்னும் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்.*

**பாடபேதங்கள்:** *3. பன்னாள் நீர்மலி. 17. பிடிமகிழ் உறுதுணை. 19. விழவுறு திருநகர்.*

## 228. இரவிற் செல்வராயின் நன்று

**பாடியவர்:** *அண்டர் மகன் குறுவழுதியார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலை மகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.*

*(தலைமகனும் தலைமகளும் களவு ஒழுக்கத்திலே ஈடுபட்டிருக்கும் காலத்து, ஒருநாள் அவன் சிறைப்புறமாக இருப்ப, இரவுக் குறியிடத்தே தலைவியைச் சேர்ந்த தோழி, அவனும் கேட்குமாறு, அவளுக்குச் சொல்லுவதுபோலச் சொல்லுகிறாள். பகற்குறி வேட்டது போலக் கூறினும், வரைந்து கொள்ளத் தூண்டுதலே கருத்தாகக் கொள்க.)*

**பிரசப் பல்கிளை ஆர்ப்பக், கல்லென**
**வரைஇழி அருவி ஆரம் தீண்டித்**
**தண்ணென நனைக்கும் நனிர்மலைச் சிலம்பில்,**

**கண்என மலர்ந்த மாஇதழ்க் குவளைக்**
**கல்முகை நெடுஞ்சுனை நம்மொடு ஆடிப்,**

**பகலே இனிதுடன் கழிப்பி, இரவே**
**செல்வர் ஆயினும், நன்றுமன் தில்ல-**
**வான்கண் விரிந்த பகல்மருள் நிலவின்**
**சூரல் மிளைஇய சாரல் ஆர்ஆற்று,**
**ஓங்கல் மிசைய வேங்கை ஒள்வீப்**

**புலிப்பொறி கடுப்பத் தோன்றலின், கயவாய்**
**இரும்பிடி இரியும் சோலைப்**
**பெருங்கல் யாணர்த்தம் சிறுகுடி யானே.**

*தோழி! தேனுண்ணும் வண்டினம் பலவும் மொய்த்து ஆரவாரிக்கக், கல்லென்ற ஒலியுடனே வரையினின்றும் இறங்கும் அருவியானது, சந்தனமரத்தை மோதி அதனைத் தண்ணென்னும் படியாக நனைத்துவிடும். குளிர்ச்சிபொருந்திய மலைப் பக்கங் களிலே, கண்போன்று மலர்ந்துள்ள கரிய இதழ்களையுடைய குவளை மலர்கள் நிறைந்த, மலையிடுக்கிலேயுள்ள நெடிய சுனையிலே, நம்மோடுங்கூடிப் புனலாடிப் பகற்பொழுதை இனிதாக நம்முடன் அவர் கழிப்பாராக. வானிடத்தே கதிர்பரந்து விளங்கும் ஞாயிற்றைப்போலத் தோன்றும் நிலவொளியிலே, பிரப்பங் காட்டினையுடைய சாரல் பொருந்திய வழியிலே, மலைமேலுள்ளவாகிய வேங்கை மரத்தின் ஒளியுள்ள பூக்கள், புலியின் மேலுள்ள புள்ளிகளைப் போலத் தோன்றுதலால், பெரிய பிடியானைகள் அதனைப் புலியெனக் கருதி அஞ்சி ஓடித்திரியும் சோலையினையுடைய பெரிய மலையிலேயுள்ள, புதுவருவாயுடைய தம்முடைய சிறிய ஊருக்கு, இரவினிலே அவர் செல்வார் என்றாலும், அது மிகவும் நன்மையாகும்.*

*என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. பிரசம் - தேன்; பிரசப் பல்கிளை - தேன் வண்டுகளாகிய பல இனங்கள். 4. மா இதழ் - கரிய இதழ். 8. பகல் - ஞாயிறு: பகற்போதும் ஆம். 9. சூரல் - பிரப்பங் கொடி. மிளை - காடு.. 10. ஓங்கல் - உயர்ந்த மலை. 11. கயவாய் - பெரிய வாய். 13. யாணர் - புதுவருவாய்; மலைபடு பொருள்கள் பலவும் என்க.*

**விளக்கம்:** *'வான் கண் விரிந்த பகல் மருள் நிலவில் இரவே செல்வர் ஆயினும் நன்று' என்றமையால், அது ஊரலர் எழக் காரணமாவதுபற்றி, இரவுக்குறியும் மறுத்துப் பகற்குறி வேட்டனள். பகற்குறியும் வாய்ப்பது அரிதாகலான் வரைந்து*

*கொள்ளுதலையே குறித்தனள் என்க. 'வேங்கை ஒள்வீ 'தோன்றலின்' என்றதால், அது மணநிகழ்விற்குரிய காலமாதலையும் புலப்படுத்தினள்,*

## 229. இளவேனிலும் வாரார்!

**பாடியவர்:** *மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளை வற்புறுத்தும் தோழிக்குத், தலைமகள் வன்புறை எதிரழிந்து சொல்லியது.*

*(தலைமகன் திரும்பி வருவதாகக் குறித்த கார்காலம் வந்து கடந்து போயிற்று. பின்னரும், இடைப்பட்ட காலம் பலவும் கடந்துபோக, இளவேனிலும் வந்தது. அதனால், தலைவியின் ஏக்கமும், நலிவும் மிகவும் பெரிதாயிற்று. அது கண்டு வருந்திய தோழி, 'தலைவன் வருவான்' எனக் கூறித் தலைவியைத் தேற்றுவதற்கு முயல, அவள் இப்படிக் கூறுகின்றாள்.)*

**பகல்செய் பல்கதிர்ப் பருதியம் செல்வன்**
**அகல்வாய் வானத்து ஆழ் போழ்ந்தென,**
**நீர்அற வறந்த நிரம்பா நீளிடைக்**
**கயந்தலைக் குழவிக் கவிஉகிர் மடப்பிடி**
**குளகுமறுத்து உயங்கிய மருங்குல் பலவுடன்**

**பாழூர்க் குரம்பையின் தோன்றும் ஆங்கண்,**
**நெடுஞ்சேண் இடைய குனறம் போகி,**
**பொய்வ லாளர் முயன்றுசெய் பெரும்பொருள்**
**நம்இன்று ஆயினும் முடிக, வல்லெனப்,**
**பெருந்துனி மேவல்!-நல்கூர் குறுமகள்!-**

**நோய்மலிந்து உகுத்த நொசிவரல் சில்நீர்**
**பல்லிதழ் மழைக்கண் பாவை மாய்ப்பப்,**
**பொன்னேர் பசலை ஊர்தரப், பொறிவரி**
**நல்மா மேனி தொலைதல் நோக்கி,**
**இனையல் என்றி; தோழி! சினைய**

**பாசரும்பு ஈன்ற செம்முகை முருக்கினப்**
**போதவிழ் அலரி கொழுதித், தாது அருந்து,**
**அம்தளிர் மா அத்து அலங்கல் மீமிசைச்,**
**செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்**
**இன்இள வேனிலும் வாரார்,**

**'இன்னே வரும்' எனத்தெளித் தோரே,**

'பகலைச் செய்விக்கும் பல கதிர்களை உடையவன் ஞாயிறாகிய அழகிய செல்வன். அகன்ற இடத்ததாகிய வானத்து, அவனுடைய தேர்ச்சக்கரம் ஊர்ந்து செல்லும். அது உலகைப் பிளந்து கொண்டு சென்றாற்போல, நீரற்றுப்போய் வறட்சியுற்ற இடங்கள் வெடிப்புண்டு கிடக்கும். தொலையாத அத்தகைய நெடுவழியிடத்தே, மெல்லிய தலையினையுடைய கன்றினையும், கவிந்த நகத்தினையுமுடைய இளைய பிடியானையானது, தன் கன்று உண்பதற்காக வேண்டித் தான் தழையுண்ணாது அதனை உண்பித்தபடியே வாடிநிற்கும். உடம்பின் உறுப்புக்கள் பலவும் தோன்ற நிற்கும் அது, பாழ்பட்ட ஊரிலேயுள்ள கூரைபிய்ந்த குடிசையைப் போலத் தோன்றும். அத்தகைய இடங்களையுடைய நெடிய தொலைவுக்கும் இடையிட்டுக் கிடக்கும் குன்றங்களையும் கடந்து சென்றவர், பொய்ம்மையிலே வல்லாளராகிய நம் தலைவர். அவர், முயற்சியுடன் ஈட்டும் பெரும் பொருளானது, நாம் இல்லாமற் போனாலும் விரைந்து கைகூடுவதாக" "என்று, மகட்கு வறுமையுற்று வாடியவர்க்குப் பிறந்த இளைய மகளான தலைவியே! நீ பெரிதும் துன்பம் கொள்ளாதிருப்பாயாக.

உள்ளத்திலே வருத்தம் மிகுந்து, அதனால் வடித்த நுண்ணிதாக வருகின்ற கண்ணீர், பலவாகிய இதழ்களையுடைய தாமரை மலர்போன்ற குளிர்ந்த கண்ணின் பாவையினையும் மறைத்தது. பொன்னிறம் போன்ற பசலைகள் மேனியிலே படர்ந்தன. புள்ளிகளாகிய தேமல்களையும் வரிகளையும் உடைய நல்ல சிறந்த மேனியின் வனப்பெல்லாம் தொலைந்து போகின்றன. இவற்றை நோக்கி, நீயும் வருந்தாதே என்கின்றாய்.

தோழி! பசுமையான அரும்புகளை ஈன்ற கொம்புகளை யுடைய, சிவந்த முகைகளையுடைய முருக்கமரத்தினது, அழகிய போதுகள் விரிந்த மலர்களைக் கிண்டி, அவற்றிலுள்ள தாதுகளை உண்டு, அழகிய தளிர்களையுடைய மாமரத்தின் அசையும் கிளைகளின் மேலேயிருந்து, சிவந்த கண்களையுடைய கரிய குயில்கள் இனிதாகக் கூவுகின்ற, இனிய இந்த இளவேனிற் காலத்தினும் கூட, 'இப்பொழுதே வருவோம்' என, அன்று தெரிவித்துச் சென்றவர் வந்திலராயின், இனி என்ன செய்வேனோ?

என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளை வற்புறுத்துந் தோழிக்குத், தலைமகள் வன்புறை எதிரழிந்து சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. பருதி அம் செல்வன் - ஞாயிறாகிய அழகிய செல்வன். 2. அகல்வாய் வானம் - அகன்ற இடத்தை யுடைய வானம். 4. கவியுகிர் - குவிந்திருக்கும நகம். மடப்பிடி - இளைய பிடி. 5. குளகு - தழை. மறுத்து - தின்னமறுத்து. மருங்குல் - பக்கம்; உடலின் பகுதிகளைக் குறித்தது. 10. குறுமகள் - இளைய மகள். நல்கூர் குறுமகள் - தவமிருந்து பெற்ற செல்வ மகள்; குறுமை இளமை குறித்தது. 11. நொசிவரல் - கொஞ்சங் கொஞ்சமாக வருகின்ற தன்மையுடைய. 12. பல்லிதழ் - பல இதழ்களையுடைய தாமரை மலரைக் குறித்தது. பாவை - கண்ணின் பாவை. 14. நன்மா மேனி - நல்ல சிறந்த மேனி. 15. இனையல் - வருந்தாதே. 16. பாசரும்பு - பசுமையான அரும்பு. செம்முகை - செந்நிற மொட்டுக்கள். 17. அலரி - அலர்ந்த பூக்கள். அலங்கல் - அசையும் கிளைகள். 19. இருங்குயில் - கருங்குயில். 21. இன்னே - இப்பொழுதே; விரைவில் வருவேம் என்றதைச் சுட்டியது.*

**விளக்கம்:** *'இன்னே வருதும் எனப் புகன்று சென்ற பொய்வலாளர், இளவேனில் வந்தபின்னும் வரவில்லை யென்றால், நின் சொற்கேட்டு யானும் தேறியிருப்பதுதான் எவ்வாறோ?' எனத் தோழியிடம் தலைவி கூறுவதாகக் கொள்க. 'நம்மின்றாயினும்' என்றது, தான் இறந்து படுவதே நிகழுமெனக் கூறியதாம்.*

## 230. தலை கவிழ்ந்தாள்!

**பாடியவர்:** *மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகள், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(கடற்கரை நாட்டுத் தலைவன் ஒருவன், தான் தேர் ஊர்ந்து வரும்வழியே ஒரு நங்கையைக் கண்டு காதலித்தான்: பின்னர் அவன், அந்த நிகழ்ச்சியைத் தன் நெஞ்சிற்கு இப்படிச் சொல்லிக் கொள்ளுகின்றான்.)*

**'உறுகழி மருங்கின் ஓதமொடு மலர்ந்த**
**சிறுகரு நெய்தற் கண்போல் மாமலர்ப்**
**பெருந்தண் மாத்தழை இருந்த அல்குல்,**
**ஐய அரும்பிய சுணங்கின் வைஎயிற்று,**
**மைஈர்ஓதி, வாள் நுதல் குறுமகள்!**

**விளையாட்டு ஆயமொடு வெண்மணல் உதிர்த்த**
**புன்னை நுண்தாது பொன்னின் நொண்டு,**
**மனைபுறந் தருதி ஆயின், எனையதூஉம்,**

**இம்மனைக் கிழமை எம்மொடு புணரின்**
**தீதும் உண்டோ, மாத ராய்?' எனக்**

**கடும்பரி நல்மான், கொடிஞ்சி நெடுந்தேர்**
**கைவல் பாகன் பையென இயக்க,**
**யாம்தற் குறுகினமாக ஏந்தெழில்**
**அரிவேய் உண்கண் பனிவரல் ஒடுக்கிச்**
**சிறிய இறைஞ்சினள், தலையே-**

**பெரிய எவ்வம் யாமிவண் உறவே!**

'பெரிய உப்பங்கழியின் பக்கங்களிலே, நீர்ப்பசையுடன் மலர்ந்துள்ள சிறிய கருநெய்தலின் கண்போன்ற கரிய மலர்கள், பெரிய தண்ணிய சிறந்த தழையுடையிலே பொருந்தியிருக்க, அதனை அணிந்திருக்கும் அல்குல் தடத்தை உடையவளே! மென்மையாக அரும்பிய சுணங்கினையும், கூர்மையான பற்களையும், கருமையான நீண்ட கூந்தலையும், ஒளியுடைய நெற்றியையும் கொண்டவளே! இளம் பெண்ணே!

மாதரசியே! நின்னுடைய விளையாட்டுத் தோழியர் களுடனே, புன்னைமரமானது வெண்மணலிலே உதிர்த்துள்ள நுண்மையான பூந்தாதினைப் பொன்னாகப் பாவித்துக் கொண்டு முகந்து வழங்கி நீ இல்லறம் நடத்துவாயானால், அந்த இல்லறக் கிழமை எம்முடனும் கூடி எவ்வளவும் சேர்ந்து நடப்பதாயின், அதனால் எத்தகைய தீதும் நினக்கு உண்டாகுமோ? என்றேன்.

கடுமையாகச் செல்லும் நல்ல குதிரைகள் பூட்டிய, நீண்ட தேர் மொட்டுக்களையுடைய, நெடுந்தேரினைச் செலுத்துவதிலே வல்லவனான பாகன் மெல்லென நடத்திச்செல்ல, யான் அவ்வாறு சொல்லிக்கொண்டே அவளை நெருங்கினேன்.

அப்போது, யான் இவ்விடத்தே காமநோயினாலே பெரிய வருத்தத்தை அடையுமாறு, அழகு மிகுந்த செவ்வரிகள் படர்ந்த மையுண்ட தன் கண்களிலே துளிர்த்த கண்ணீர் வெளிப்பட்டு வருதலையும் மறைத்துத், தன் தலையினைச் சிறிதே கவிழ்த்துக் கொண்டனள் அவள்;

என்று, தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** *1. உறுகழி - பெரிய உப்பங்கழி. ஓதம் - நீர்ப்பசை மாறாத நிலப்பகுதி. 2. மாமலர் - கரிய மலர். 4. ஐய - மென்மையாக: நுண்ணிதாக. 7. நொண்டு - முகந்து. 8. மனைபுறந்தருதல் - குடும்ப வாழ்வினை நடத்துதல்.*

**விளக்கம்:** அவள் தலையைச் சிறிய அளவிலே கவிழ்ந்தனள்; அது, அவளும் அதற்கு ஆர்வம் உடைமையைத் தெரிவித்த தனால். அவள் நினைவினால் யாம் இவ்விடத்தே பெரிதான துன்பம் அடைந்தோம் என்றனன். 'துன்பம்', அவளை அடைய விரும்பியதனாலே பெருகிய காமநோய்.

**மேற்கோள்:** 'கைப்பட்டுக் கலங்கினும்' என்னும் துறைக்கு, இதனை, 'மறைந்தவற் காண்டல்' என்னும் சூத்திர உரையிலே காட்டு, இது தலைவன் கூறியது என்பர் நச்சினார்க்கினியர்.

## 231. கூந்தன் மரீஇயோர்!

**பாடியவர்:** மதுரை ஈழத்துப் பூதன்றேவனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** பசும்பூண் பாண்டியன் காலத்து மதுரையின் வளம்.

*(தலைவனின் பிரிவாற்றாமை காரணமாக வாடி மெலிந்தனள் தலைவி. அவளுக்குத் தேறுதல் கூறுபவளாகத் தோழி இப்படி உரைத்துத் 'தலைவன் தவறாது வருவான்' என்ற உறுதியையும் கூறுகின்றாள்.)*

**'செறுவோர் செம்மல் வாட்டலும், சேர்ந்தோர்க்கு**
**உறுமிடத்து உவக்கும் உதவி ஆண்மையும்,**
**இல்லிருந்து அமைவோர்க்கு இல்' எனறு எண்ணி,**
**நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்**
**கொடுவிற் கானவர் கணைஇடத் தொலைந்தோர்,**

**படுகளத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கைக்**
**கள்ளியம் பறந்தலைக் களர்தொறும் இழீஇ,**
**உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை**
**வெஞ்சுரம் இறந்தனர் ஆயினும் நெஞ்சுருக**
**வரும்-வாழி; தோழி!- பொருவர்**

**செல்சமம் கடந்த செல்லா நல்லிசை,**
**விசும்பிவர் வெண்குடைப், பசும்பூட் பாண்டியன்**
**பாடுபெறு சிறப்பின் கூடல் அன்னநின்**
**ஆடுவண்டு அரற்றும் முச்சித்**
**தோடுஆர் கூந்தல் மரீஇ யோரே.**

*தோழி! நீ வாழ்வாயாக!*

பகைத்து வந்தோரின் செருக்கினை அழித்தலும், வந்து சேர்ந்தோர்களுக்கு ஒரு துன்பம் வருமிடத்து உதவி செய்யும்

ஆண்மையும், வீட்டிலேயே இருந்துகொண்டு, பொருளீட்டல் முயற்சிகளைக் கைவிட்டிருப்பவர்க்கு இல்லையாகும்; இப்படி எண்ணி, நல்ல புகழ் ஆர்வமானது எழுந்த, நாணம் கொண்ட உள்ளத்தவராயினர் நம் தலைவர்.

வளைந்த வில்லையுடைய காணவர் அம்பினை எய்ய, அதனால் வீழ்ந்துபட்டோர் கிடக்கும் இடத்திலே, உயர்ந்த மயிர்த் தலைகளையுடைய கற்குவியல்கள், கள்ளினையுடைய பாழிடமாகிய களர்நிலந்தோறும் நிறைந்திருக்கும். நினைப் போரையும் நடுங்கச் செய்து, செல்லத் துணிவதற்கும் அருமையுடையதான காட்டிடையிலேயுள்ள, அத்தகைய கொடிய சுரத்தினையும் அவர் கடந்து போயினர். ஆனாலும்,

போரிடுவோரது எதிர்ந்த போரினை, வெற்றியுடன் முடித்த, கெடாத நல்ல புகழினையும், வானிடத்தேயும் அளாவுமாறு உயர்த்த வெண்கொற்றக் குடையினையும் உடையவன் பசும்பூண் பாண்டியன். அவனது, பாடுதல் பெற்ற சிறப்பினையுடைய மதுரையைப் போன்ற நின்னுடைய, அலையும் வண்டினம் ஒலிக்கும் உச்சியினையுடைய, பூவிதழ்கள் பொருந்திய கூந்தலிடத்தே பொருந்தித் துயின்றவரான அவர், அந்த இன்பச் செவ்வியை நினைந்து தம் நெஞ்சம் உருகியவராக, விரைந்து வருவார்; (அதனால் நீயும் இனி வருந்தாதிருப்பாயாக.)

என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லி ஆற்றுவிக்க முயன்றனள் என்க.

**சொற்பொருள்:** 1. செறுவோர் - பகைவர். செம்மல் - செருக்கு; தலைமையுமாம். 4. வலித்த - இழுத்த. 3. உய்க்கும் உதவி - செய்யும் உபகாரம். 4. நல் இசை - நல்ல புகழ். 6. மயிர்த்தலைப் பதுக்கை - மயிரோடு கூடிய தலைகளையுடைய புதைகுழிக் கற்குவியல்கள். 8. பனிக்கும் - நடுங்கச் செய்யும். 10. பொருவர் - பொருதுவார்; பகைவர்.. 14. ஆடு வண்டு - திரியும் வண்டினம். 15. தோடு - மலர் இதழ்.

**விளக்கம்:** இல்வாழ்க்கையிலே புகழ் தரும் பண்பு இரண்டு செயல்களுக்கே உரியதாகும். இதனை, 'அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும், பெரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்; (பாலைக்கலி 11 - 14). 'நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்' என்றது, அதுகாறும் பொருள் முயற்சிகளில் ஈடுபடாது இருந்ததனால்.

## 232. வேலனை அழைக்கும் காலம்!

**பாடியவர்:** *கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தோழி, தலைமகன் சிறைப்புறத் தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.*

*(களவிலே கூடிவருகின்ற காதலர் இருவரும் பலநாட் பகற் குறியிலே சந்தித்து வந்தனர். தினை விளைந்து, தலைவியின் தினைகாவலும் நின்றுவிட, அவர்கள் பகலிற் சந்திப்பதும் மிகவும் அரிதாயிற்று. இரவுக்குறியினை அவர்கள் மேற்கொண்டாலும், அதுவும் பல சமயங்களில் இடையீடுபடுதலால், தலைவியின் வருத்தம் மிகுதியாயிற்று. அவள் உடலின்கண் தோன்றிய மாற்றங்களைக் கண்ட தாய், அது முருகனால் விளைந்ததெனக் கருதி வெறியாடலில் ஈடுபட எண்ணுகின்றனள். இந்த நிலையிலே, இரவுக் குயிடத்தே, தலைவன் சிறைப்புறத்தானாக, அவனை வரைந்து கொள்ளுதற்குத் தூண்டுகின்ற கருத்துடன், தோழி, இப்படித் தலைவிக்குச் சொல்லுவாள் போல அவனுக்குச் சொல்லுகின்றாள்.)*

**காண்இனி-வாழி, தோழி! -பானாள்,**
**மழைமுழங்கு அரவம் கேட்ட, கழைதின்,**
**மாஅல் யானை புலிசெத்து வெரீஇ,**
**இருங்கல் விடரகம் சிலம்பப் பெயரும்**
**பெருங்கல் நாடன் கேண்மை, இனியே,**

**குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண்,**
**மன்ற வேங்கை மணநாட் பூத்த**
**மணிஏர் அரும்பின் பொன்வீ தாஅய்**
**வியலறை வரிக்கும் முன்றில், குறவர்**
**மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்**

**ஆர்கலி விழவுக் களம்கடுப்ப, நாளும்,**
**விரவுப்பூம் பலியொடு விரைஇ! அன்னை**
**கடியுடை வியல்நகர்க் காவல் கண்ணி**
**'முருகு' என வேலன் தரூஉம்**
**பருவ மாகப் பயந்தன்றால், நமக்கே!**

தோழி! நீ வாழ்க! நம்முடைய நிலைமையும் நீ காண்பாயாக!

நள்ளிரவு வேளையிலே, மேகம் இடிமுழங்கும் ஒலியைக் கேட்ட, மூங்கிலைத் தின்று கொண்டிருக்கும் பெரிய யானையானது, அதனைப் புலியின் முழக்கம் என்று எண்ணி அச்சங்கொண்டு, பெரிய மலையின் பிளப்பிடங்கள் எல்லாம் எதிரொலி செய்யுமாறு கதறியதாகப் பெயர்ந்து ஓடிக்

கொண்டிருக்கும். அத்தகைய பெரிய மலைநாடன் அவன். அவனுடன் நாம் கொண்ட நட்பானது.

குன்றங்களை வேலியாகக்கொண்ட சிற்றூரிடத்தேயுள்ள மன்றத்து வேங்கை, மணநாளை அறிவிப்பதுபோலப் பூத்த, மணியையொத்த அரும்பினின்றும் பொன்போன்ற புது மலர்கள் பரந்து, அகன்ற பாறைகளை அழகு செய்து கொண்டிருக்கும் முற்றத்திலே, குறவர்கள்,தம் மனையிலேயுள்ள ஆடுதலில் வல்ல மகளிர்களோடும் கூடிக் குரவைக் கூத்து ஆடி மகிழ்கின்ற, ஆரவாரமிக்க விழவுக்களத்தினைப் போன்றதாக,

நாள்தோறும், விரவிய பலவாகிய பூப்பலியோடு கலந்து, காவல் பொருந்திய பரந்த மனையினைக் காத்தல் கருதி, அன்னையானவள், நம் வேறுபாடு முருகனால் ஏற்பட்டதென்று எண்ணி, வேலனை அழைத்துவரும் காலமாகவே நமக்கு வந்து விளைந்தது.

என்று, தோழி, தலைமகன் சிறைப்புறத்தனாகத் தலைமகட்குச் சொல்லுவாயளாய்ச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. காண் இனி - இபொழுது காண்பாயாக. 2. மழை - மேகம் 4. இருங்கல் - பெரிய மலை. விடரகம் - பிளப்பிடங்கள் 6. குன்ற வேலி - குன்றம் சூழ்ந்த. 10. மனைமுதிர் மகளிர் - வீட்டிலுள்ள அறிவதறிந்த பெண்கள். 11. ஆர்'கலி - பேராரவாரம். விழவு - குரவையடி முருகனைப் போற்றும் விழா. 15. பருவம் - காலம்.

**விளக்கம்:** காவல் கண்ணி - இற்செறித்தல் கருதி எனலும் ஆம். அன்றி, வீட்டின் தகுதி குறையாது காப்பவன் முருகனே ஆதலின், அவனைக் காக்குமாறு வேண்டி வழிபடுதல் என்றும் கொள்ளலாம். வேலன் - வெறியாடுவோன். 'நாடன் கேண்மை மணமாக விளையாது வேலன் தரூஉம் பரவமாக விளைந்ததே?'' என்பதனால், வரைவுவேட்டலே இதன் பொருளாகும்.

## 233. நீடலோ இலர்!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** இறந்த முன்னோர்களுக்கு நல்ல நிலை கிடைத்தல் வேண்டுமெனக் கருதிய உதியஞ்சேரலாதன் பெருஞ்சோறு அளித்து அதனை நிறைவேற்றியது.

(தலைவனின் பிரிவினாலே உடல் நலிந்திருந்த தலைவிக்குத் 'தலைவன், அவள் உறவை மறந்து ஒருபோதும் இருப்பவனல்லன்'

*என்று வற்புறுத்திக் கூறி, அவள் துயரத்தை மாற்றுதற்கு முயல்கின்றனள் தோழி.)*

**அலமரல் மழைக்கண் மல்குபனி வார, நின்**
**அலர்முலை நனைய, அழாஅல்-தோழி!-**
**எரிகவர்பு உண்ட கரிபுறப் பெருநிலப்**
**பீடுகெழு மருங்கின் ஓடுமழை துறந்தென,**
**ஊனில் யானை உயங்கும் வேனில்,**

**மறப்படைக் குதிரை, மாறா மைந்தின்**
**துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை**
**முதியர்ப் பேணிய, உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை, இரும்பல்**
**கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்கு,**

**குறியவும் நெடியவும் குன்றுதலை மணந்த**
**சுரன்இறந்து அகன்றனர் ஆயினும்,மிகநனி**
**மடங்கா உள்ளமொடு மதிமயக் குறாஅ,**
**பொருளவயின் நீடலோ இலர்-நின்**
**இருள்ஐங் கூந்தல் இன்துயில் மறந்தே!**

*தோழி!கலங்கிய நின் குளிர்ந்த கண்களிலே பெருகி நிறைந்த கண்ணீர் வடிதலினாலே, நின்னுடைய பரந்த முலைகள் நனைந்து கொண்டிருக்குமாறு, நீ அழுதல் வேண்டாம்.*

*நெருப்புச் சூழ்ந்துகொண்டு எரித்த, கரிந்த புறத்தையுடைய பெரு நிலமானது, வளம் பொருந்திய வேற்றிடங்களுக்கு ஓடிக் கொண்டிருக்கும் மேகங்கள் கைவிட்டன என்றதனால், 'தசையொழித்த யானையைப் போலக் கிடந்து வருத்த முடையதாக இருக்கும் வேனிற்காலத்திலே,*

*வீரஞ்செறிந்த குதிரைப்படைகளுடன், என்றும் புறமுதுகிடாத வலிமையையும் உடையவன் உதியஞ் சேரலாதன். அவன், துறக்கத்தை உடையவன் உதியஞ் சேரலாதன். அவன், துறக்கத்தை அடைந்த கெடாத நல்ல புகழையுடைய தன் முன்னோர்களுக்குத் தென்புலக்கடன் ஆற்றினான்; அவர்கட்குப் பலியாக அவன் பெருஞ்சோறு அளித்த காலத்தே, கரிய பலவாகிய கூளிர்ச்சுற்றங்கள் அந்தப் பெருஞ்சோற்றை உண்பதற்குக் கூடியிருந்தன; அவற்றைப் போன்ற,*

*குட்டையும் நெடியவுமான குன்றுகள் பலவும் இடந் தோறும் காணப்படுகின்ற சுரத்தினைக் கடந்து, மிகப்பெரிதும் அடங்காத உள்ளம் உடையவராக, அறிவு மயங்குதலும் உடையவராகிச் சென்றவர் நம் காதலர் ஆயினும் நின்கரிய*

ஐம்பகுப்பாகிய கூந்தலிலே பெறும் இனிய துயிலை மறந்து, இனியும் அவர் அவ்விடத்தே காலம் நீட்டித்திருப்ப வரல்லர்; (விரைவிலேயே திரும்பிவிடுவர் என்பது கருத்து.)

என்று, பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. அலமரல் - கலக்கம். மழைக் கண் - குளிர்ச்சியுடைய கண். பனி - கண்ணீர்த் துளி. 2. அலர்முலை - பூரித்த பரந்த முலை. 3. எரி கவர்பு உண்டல் - நெருப்புச் சூழ்ந்து பற்றி எரித்தல். 4. பீடு - பெருமிதம்; வளம். 6. மறப்படைக் குதிரை மாறா மைந்தின் - மறவர் ட'டையும், குதிரைப் படையும் மாறாத ஆற்றலுடையவையாக உடைய 7. துறக்கம் - சுவர்க்கம் போக பூமி. 9. பெருஞ்சோறு கொடுத்தல் - படையலிட்டுப் பெருங் கூட்டத்தார்க்கு அளித்துச் சிறப்புச்செய்தல். 13. மடங்கா உள்ளம் - வளையாத நெஞ்சம்.

**விளக்கம்:** 'மழை கைவிட்டதென்று யானைகள் தசைப் பற்று அற்றவைகளாகக் கிடந்து வருந்தியிருக்கும் வேனில்' எனவும் 5ஆவது அடிக்குப் பொருள் கொள்ளலாம். கூளிச் சுற்றம் - கூளியினம்; கூளி - பேயினத்துள் ஒரு வகை; குள்ளமும் நெட்டையுமானது.

## 234. பின்னுப் பிணி விட!

**பாடியவர்:** 'பேயனார்; கழார்க்கீரன் எயிற்றியார் எனவும் பாடம். **திணை:** முல்லை. **துறை:** தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

(வினை முடிந்தபின்னர், தன்னைக் காணத் துடித்திருக்கும் தன் காதலியின் நினைவு மேலெழத், தலைவன் தன் பாகனிடம், தேரினை விரையச் செலுத்துமாறு, இப்படிக் கூறுகிறான்.)

**கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை,**
**நுண்ணயிர் பரந்த தண்ணய மருங்கின்,**
**நிரைபறை அன்னத்து அன்ன, விரைபரிப்**
**புல்உளைக் கலிமா மெல்லிதின் கொளீஇய,**
**வள்புஒருங்கு அமையப் பற்றி, முள்கிய**

**பல்கதிர் ஆழி மெல்வழி அறுப்பக்,**
**கால்என மருள, எறி, நூல்இயல்**
**கண்நோக்கு ஒழிக்கும் பண்ணமை நெடுந்தேர்**
**வல்விரைந்து ஊர்மதி-நல்வலம் பெறுந!**
**ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை**

**ஏறுபுணர் உவகைய ஊறுஇல உகள,**
**அம்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி**
**முல்லை நறுமலர்த் தாதுநயந்து ஊத,**
**எல்லை போகிய புல்லென் மாலைப்**
**புறவுஅடைந் திருந்த உறைவுஇன் நல்ஊர்,**
**கழிபடர் உழந்த பனிவார் உண்கண்**
**நல்நிறம் பரந்த பசலையள்**
**மின்நேர் ஓதிப் பின்னுப்பிணி விடவே.**

தேரைச் செலுத்தும் தொழிலிலே நல்ல வெற்றித் தன்மையினைக் கொண்ட பாகனே!

மேகம் மழைபொழிய, அதனால் வெள்ளம் தோன்றும் காலத்திலே, நுண்மையான அறல்மணல் பரந்த குளிர்ந்த நீர்நிலைப் பக்கங்களிலே, வரிசையாகப் பறத்தலையுடைய அன்னப் பறவைகள், தோன்றும். அவற்றைப் போன்ற வெண்ணிறமுடைய, விரைந்துசெல்லும் இயல்பினையுமுடைய, புல்லிய பிடரிமயிரினையுமுடைய, செருக்கு வாய்ந்தவை நின் தேரின் குதிரைகள். அவற்றை மெல்லக் கொண்டு பூட்டிய கடிவாளவாரினை, ஒருங்கே பொருத்தமாகப் பற்றிக் கொள்வாயாக. பல ஆரங்களையுடைய சக்கரங்கள் நிலத்திலே பதிந்து, மென்னில வழியை அறுத்துக்கொண்டு போகுமாறு, வேகத்தால் காற்றோ என மயக்கம் ஏற்படுமாறு, நூல் நெறிப்படி இயன்றதும், கண்ணின் நோக்கினை ஒழிக்கும் பண்ணுதல் அமைந்ததுமான, நெடிய தேரினைச் செலுத்துவாயாக.

துள்ளிச் செல்வதான இளைய மானின் பிணையானது, நெருங்கிய தழையினை மிகவும் தின்று வெறுப்புக் கொண்டதாகத், தன் ஆண்மானுடன் கூடும் ஆர்வத்துடன், இடையூறு இல்லாதபடியாகத் துள்ளித் திரியும். அழகிய சிறையினையுடைய வண்டின் மென்மையாகப் பறத்தலையுடைய கூட்டம், முல்லையின் கறிய மலரின் பூந்தாதுக்களை விருப்ப முடன் ஊதிக்கொண்டிருக்கும். பகற்பொழுது போய்விட்ட 'புல்' என்னும் அத்தகைய மாலைக் காலத்திலே, முல்லை நிலத்தை ஒட்டியிருந்த, வாழ்வதற்கு இனிதான நல்ல ஊரிலே,

மிகுந்த துன்பம் உற்று நீர் சொரியும் மையுண்ட கண்களையும், நல்ல நிறமெல்லாம் ஒழிந்து பசலைபடர்ந்த மேனியினையும்உடையவளாகியிருக்கும் நம்தலைவியின், மின்னலைப் போன்ற கூந்தலில் பின்னிக்கிடத்தலாகிய சிக்குகள் விட்டுப் போகுமாறு தேரிலேறி, மிக விரைவாகத் தேரைச் செலுத்துவாயாக!

என்று, தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** *1. பயம் - மழை. 2. அயிர் - வரி. அயம் - நீர்நிலை. 3. நிறைபறை - வரிசையாகப் பறத்தலையுடைய. 5. முள்கிய - பதிந்த. 10. ததர் தழை - செறிந்த தழை. 13. தொழுதி - கூட்டம். 14. எல்லை போகிய - பகற்பொழுது கழிந்த.*

**விளக்கம்:** *தன் பிரிவால் கலங்கிய கண்ணளாகியும், பசலைபடர்ந்த மேனியளாகியும் கூந்தலைப் பேணாதவளாகியும் தனித்திருந்து துயரால் வருத்தியிருப்பவள் என்று கூறி, அவ்வருத்தம் தீரத் தேரை விரைவிற் செலுத்துக என்றனன்.*

**பாடபேதங்கள்:** *1 கார்ப்பயன் 4. கொளீஇ. 5. மூழ்கிய. 8. கண்ணோக்கு ஒளிக்கும். 10. தகர் நனை.*

## 235. காதலர் மறந்தனரோ?

**பாடியவர்:** *கழார்க் கீரன் எயிற்றியார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றவன் கார்காலத்தும் திரும்பி வராதவனாக, அதனால் வாடி நலிந்தனள் தலைவி. தன்பால் வந்து தனக்கு ஆறுதல் கூறுவதற்கு முற்பட்டவளான தோழிக்குத் தன் ஆற்றாமை மிகுதியை இப்படிக் கூறுகின்றாள்.)*

**அம்ம-வாழி, தோழி!- பொருள் புரிந்து**
**உள்ளார் கொல்லோ, காதலர்? உள்ளியும்,**
**சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ?-**
**பயன்நிலம் குழைய வீசிப், பெயர் முனிந்து,**
**விண்டு முன்னிய கொண்டல் மாமழை**

**மங்குல் அற்கமொடு பொங்குபு துளிப்ப,**
**வாடையொடு நிவந்த ஆய்இதழ்த் தோன்றி**
**சுடர்கொள் அகலின் சுருங்குபிணி அவிழச்**
**சுரிமுகிழ் முசுண்டைப் பொதி அவிழ் வான்பூ**
**விசும்புஅணி மீனின் பசும்புல் அணியக்,**

**களவன் மண் அளைச் செறிய, அகல்வயல்**
**கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ**
**மாரிஅம் கரும்பின் ஈரிய குரங்க,**
**நனிகடுஞ் சிவப்பொடு நாமம் தோற்றிப்,**
**பனிகடி கொண்ட பண்பில் வாடை**

**மருளின் மாலையொடு அருள்இன்றி நலிய,**
**'நுதர்இறை கொண்ட அயல்அறி பசலையொடு**

**தொன்னலம் சிதையச் சாஅய்'**
**என்னள்கொல் அளியள்?" என்னா தோரே.**

*தோழி! அம்ம! வாழ்க! இதனைக் கேட்பாயாக:*

*கொண்டலாகிய கார்மேகங்கள், முதலிலே பயன் தரும் நிவங்கள் எல்லாம் நெகிழுமாறு பெய்தன; பின் அவ்விடத்தே பெய்தலை வெறுத்தனவாய் மலைகளைச் சென்று சேர்ந்தன. அங்கே தங்குதலுற்று,இரவெல்லாம் பொங்கித் துளிகளைப் பெய்தன. அதனால் எழுந்த வாடைக்காற்றோடு, உயர்ந்த அழகிய இதழினையுடைய தோன்றியானது, சுடர்கொண்ட அகலினது தன்மை போலச் சுருங்கியிருந்த தன் பிணிப்பு அவிழ்ந்து மலர்ந்தது. சுரிந்த அரும்புகளையுடைய முசுண்டைச் செடியின் பொதியவிர்ந்த பெரிய பூக்கள், வானத்திலே அழகாகத் தோன்றும் மீன்களைப் போலப் பசுமையான புதர்களை அழகு செய்தன. நண்டுகள் தம்முடைய மண் அளைகளினுள்ளே சென்று சேர்ந்தன. அகன்ற வயல்களிலே கிளைத்து விரிந்துள்ள கரும்பின் திரண்ட காம்பினையுடைய பெரிய பூவானது, மழையிலே நனைந்த நாரையைப் போல ஈரங்கொண்டவையாக வளைந்து விளங்கின. மிகுதியான கடுஞ்சினத்தினாலே அச்சத்தை எங்கும் தோற்றுவித்தவாறு தனித்தன்மை மிகுதியாகக் கொண்ட, பண்பு இல்லாத வாடைக் காற்றானது எழுந்து வீசி, மயங்குதலையுடைய மாலைக்காலத்தோடுஞ் சோர்ந்து, இரக்கமில்லாமல் வருத்தத் தொடங்கிற்று.*

*'நுதலிடத்தே தங்குதலைக்கொண்ட அயலவர் அறியும் பசலையோடு, பழைய பிற நலம் எல்லாம் அழியுமாறு மெலிந்து, என்ன நிலையாவாளோ? இவள் இரங்கத்தக்கவள்! என்று கருதாதவரான நம் காதலர், பொருள் தேடுதலையே விரும்பினரோ? நம்மை நினைக்கவும் மாட்டாரோ? அல்லது, நினைந்தும், செய்யும் வினையின் சிறப்பின் காரணமாக மறந்தனரோ?*

*என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. பொருள் புரிந்து - பொருளை விதும்பி. 2. உள்ளார் - நினையார். 3. சிறந்த செய்தியின் - சிறந்த செயலின் காரணமாக. 4. குழைய - நெகிழ. 5. விண்டு - மலைகள். கொண்டல் மாமழை - கொண்டலாகிய கார்மேகம். 11. களவன் - நண்டு. 12. வான் பூ - பெரிய பூ. 14. நாமம் - அச்சம். 17. இறை கொண்டு - தங்குதலை மேற்கொண்டு.*

**விளக்கம்:** 'என்னள் கொல் அளியள் என்னாதோர்... உள்ளார் கொல்லோ? உள்ளியுஞ் சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ?' என்றது, மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற கார்காலத்தினது வரவை. '.அயலறி பசலையொடு தொன்னலஞ் சிதையச் சாஅய்' என்றதனால், ஊரவர் பழித்துரை மிகுதலையும் நினைந்து வருந்துகின்றனள். வாடை நலிய, என்றதனால், கார்காலத்து மீள்வதாகக் குறித்துச் சென்றவன் பின்பனிக் காலம் வந்தும் வரக்காணாது, தலைவி துயரால் மிகவும் மெலிந்து புலம்புகின்றனள்

**பாடபேதங்கள் :** *11. கள்வன். 16. அருளின்று நலிய.*

## 236. பெரிதும் தப்பினேன்!

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம் **துறை:** ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன் நீக்கத்துக்கண், புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** ஆதிமந்தி தன் காதலனைத் தேடிச் சென்றது பற்றிய குறிப்பு.

(ஊடியிருந்த தலைவியிடத்தே நாணி ஓடுங்கிச் சென்று, அவளுடைய ஆற்றாமையைத் துணையாகக்கொண்டு சேர்ந்திருந்த தலைவன், மீண்டும் அவளைப் பிரிந்துசெல்ல, அவள் தோழியிடம் இப்படிக் கூறி வருந்துகின்றாள்.)

**மணிமருள் மலர முள்ளி அமன்ற,**
**துணிநீர்,இலஞ்சிக் கொண்ட பெருமீன்**
**அரிநிறக் கொழுங்குறை வௌவினர் மாந்தி,**
**வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை,**
**இடனில நெரிதரு நடுங்கதிர்ப் பல்சூட்டுப்**

**பனிபடு சாய்ப்புறம் பரிப்பக், கழனிக்**
**கருங்கோட்டு மாஅத்து அலங்குசினைப் புதுப்பூ**
**மயங்குமழைத் துவலையின் தாஅம் ஊரன்**
**காமம் பெருமை அறியேன், நன்றும்**
**உயர்த்தனென்-வாழி, தோழி!-அல்கல்**

**அணிகிளர் சாந்தின் அம்பட்டு இமைப்பக்,**
**கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை**
**அறியா மையின் அழிந்த நெஞ்சின்,**
**'ஏற்றுஇயல் எழில்நடைப் பொழிந்த மொய்ம்பின்,**
**தோட்டுஇருஞ் சுரியன் மணந்த பித்தை,**

**ஆட்டன் அத்தியைக் காணீரோ?' என**
**நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின்,**

**'கடல்கொண்டன்று 'எனப், 'புனல் ஒளித் தன்று' எனக்**
**கலுழ்ந்த கண்ணள், காதலற் கெடுத்த**
**ஆதி மந்தி போல,**

**ஏதம் சொல்லிப், பேதுபெரிது உறலே!**

*தோழி! வாழ்வாயாக!*

*வெள்ளை நெல்லை அறுப்பவர்கள், நீலமணியைப் போன்ற மலர்களையுடைய நீர்முள்ளி நிறைந்த தெளிந்த நீரினைக் கொண்ட மடுவிலே கவர்ந்துகொண்ட பெரியமீனின், வரிகள் விளங்கும் நிறத்தினையுடைய கொழுமையான துண்டினைக் கடித்து உண்பார்கள். உண்டபின், அவர்கள் கொண்டு சென்று போட்ட களத்திலே, வெற்றிடம் இல்லாமல் எங்கும் நிறைந் துள்ள நீண்ட கதிர்களையுடைய பல நெற்கட்டுகளின், பனி பெய்துள்ள சாய்ந்த புறமெல்லாம் மூடியிருக்குமாறு, வயற் புறத்தேயுள்ள கரிய கிளைகளையுடைய மாமரத்தின் அசையும் கொம்புகளிலேயுள்ள புதிய பூக்கள் சொரியும் மழைத் துளிகளைப்போல உதிர்ந்து பரந்து கிடக்கும். அத்தகைய ஊரனாகிய நம் தலைவனது, காமத்தின் செவ்வியையும் பெருமையின் தகுதியையும் யான் அறியேன்.*

*இரவிலே, அழகு கிளர்ந்திருக்கும் சாந்தினுடன், அழகிய பட்டாடையும் ஒளிவீச, வளைந்த குழையினையுடைய மகளிரைப்போல, நம் தலைவன் ஒடுங்கி இருந்த இருக்கையினைக் கண்டேன். மடமையால் கட்டழிந்த நெஞ்சினளும் ஆயினேன்.*

*தன் காதலனை இழந்ததால் கலங்கிய கண்ணினளாகியவள் ஆதிமந்தி. அவளைப்போல, "ஏற்றினைப் போன்று செல்லும் எழிலுள்ள நடையினையும், பொலிவுற்ற ஆற்றலினையும், தொகுதிகொண்ட கரிய சுரியலைச் சூட்டிய குடுமியையும் உடைய ஆட்டன் அத்தியைக் காணவில்லையோ?" என்று, நாடுகள்தோறும் ஊர்கள்தோறும் சென்று சென்று? 'கடல் கொண்டது போலும்' எனவும், 'புனல் ஒளித்துக்கொண்டது போலும்' என்வும் கூறியவளாக, என்னுடைய துன்பத்தைப் பிறரிடம் எல்லாம் சொல்லிப் பெருந்துன்பம் கொண்டு மயங்குதலினின்றும் நான் பெரிதும் தப்பினேன்.*

*என்று, ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன் நீக்கத்துக் கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *முள்ளி - நீர் முள்ளி. அமன்ற - நிறைந்த. 2. இலஞ்சி - மடு. 3. அரிநிறம் - வரிப்பட்ட நிறம். 10. அல்கல் -*

*நாள்தோறும். 14. ஏற்றியல் - ஏறு போன்ற நிமிர்ந்த நடை. 19. கெடுத்த - போக்கிய. 21. ஏதம் துன்பம்.*

**விளக்கம்:** *'ஆதி மந்திபோலப் பேது பெரிதுறல் நன்றும் உய்ந்தனென்' என்றதால், தலைவன் பரத்தையுடன் புதுப் புனலாடி நெடுநாள் பிரிந்திருந்தானாதல் வேண்டும்.*

*மேற்கோள் 'புலவி பொருளாக அச்சம் வருவதற்கு' அணி கிளர் சாந்தின் - ஒடுங்கிய இருக்கை' என்னும் பகுதியை, 'அணங்கே விலங்கே' என்னுஞ் சூத்திர உரையிலே காட்டுவர் பேராசிரியர்.*

**பாடபேதங்கள்:** *3. வெவ்விளர். 5. இடைநிலம். 7. மாஅத்த அஞ்சினை. 10. உயர்ந்தனென்.*

## 237. இனைதலை விடுவாயாக!

**பாடியவர்:** *தாயங் கண்ணனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.* **சிறப்பு:** *உறையூரின் செழுமை.*

*(தலைவனது பிரிவுக்காலத்திலே, தன் உடல் நலமழிந்து வேறுபட்டுத் தோன்றினாள் தலைமகள். அவளை ஆற்றுவிக்கக் கருதிய தோழி, அவளிடத்தே, 'தலைவன் அவளை மறந்து பிரிந்து இருக்க மாட்டான் எனக் கூறுகின்றாள்; ஆனால் ஆற்றியிருக்கவும் வேண்டுகிறாள்.)*

**'புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ**
**நுண்கொடி அதிரலொடு நுணங்கறல் வரிப்ப,**
**அரவுஎயிற்று அன்ன அரும்புமுதிர் குரவின்**
**தேன்இமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்,**
**குயில்குரல் கற்ற வேனிலும் துயில்துறந்து**

**இன்னா கழியும் கங்குல்' என்றுநின்**
**நல்மா மேனி அணிநலம் புலம்ப,**
**இனைதல் ஆன்றிசின்-ஆயிழை! கனைதிறல்**
**செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை**
**மென்தினைப் புன்கம்உதிர்த்த மண்டையொடு,**

**இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின்**
**விளைகழை பிழிந்த அம்தீஞ் சேற்றொடு,**
**பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்**
**புனல்பொரு புதவின்: உறந்தை எய்தினும்,**
**வினைபொரு ளாகத் தவிரலர்-கடைசிவந்து**

**ஐய அமர்த்த உண்கண்நின்**
**வைஎர் வால்எயிறு ஊறிய நீரே!**

*ஆய்ந்தெடுத்த அணிகள் பூண்ட தலைவியே! புல்லிய காம்பினையுடைய பாதிரியின் வரிகள் பொருந்திய நிறமுடைய திரட்சி கொண்ட மலர்கள், மெல்லிய கொடியாகிய அதிரலோடுஞ் சேர்ந்து, நுண்மையான மணலிடத்தே அறலுண்டானது போலக் கோலஞ் செய்து கிடக்கும். அரவின் பல்லினைப்போன்ற அம்புகள் முதிர்ந்த, குராவினது வண்டினம் ஒலிக்கும் நறிய கொம்புகளிலே, தென்றற் காற்று ஊடறுத்துச் செல்லும். குயில் கூவுதலைக் கற்றுப் பயின்று கொண்டிருக்கும் இத்தகைய இளவேனிற் காலத்தும், இரவுப் பொழுதானது 'துயிலின்றி இன்னாதாகக் கழியும்' என்று சொல்லி, நினது நல்ல மாமை நிறத்தையுடைய மேனியின் சிறந்த அழகு கெட்டழிய வருந்தியிருத்தலைக் கைவிடுவாயாக.*

*மூண்டெறியும் வலிய செந்தீயிலே சுட்டெடுத்த வளமையான நிணத்தின் கொழுமையான துண்டுகளை, மெல்லிய தினையரிசிச் சோற்றுடன் சொரிந்த உண்கலத்துடன், பெரிய நெற்கதிர்கள் அசைந்து கொண்டிருக்கும் வயல்களிலே, முற்றிய கரும்பின் தண்டினைப் பிழிந்து எடுத்த அழகிய சாறுகாய்ச்சி எடுத்த பாகினுடனே, பாலும்பெய்து அளாவிய செந்நெல்லின் பசிய அவலையும், வருவார்க்குப் பகுத்துக் கொடுக்கும் சிறப்புடையது, நீர் மோதுகின்ற வாய்த்தலைகளையுடைய உறையூர் நகர். அதனையே பெறுவதானாலும்,*

*கடைசிவந்து, வியக்கும் வகையிலே அமர்த்து விளங்குவன நின்னுடைய மையுண்ட கண்கள்; நினது அழகு பொருந்திய கூரிய வெண்மையான பற்களின் இடையிலே ஊறிய நீரினை உண்ணாது, செய்வினை காரணமாகத் தவிர்ந்து இருப்பவரல்லர், நின் காதலர்.*

*என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீ இயினாள் என்க.*

**சொற்பொருள்:** *1. திரள்வீ - திரட்சியான மலர்கள். 2. அதிரல் - காட்டு மல்லிகை. 5. குரல்கற்ற - குரல் பயின்ற; பிறகாலங்களிற் கூவுதலின்றி இளவேனில் காலத்துமட்டுமே கூவுதலாற் 'கற்ற' என்றனர். 7. மாமேனி - மாமை - நிறமுடைய மேனி. 10. புன்கம் - தினைச்சோறு. 11. இருங் கதிர் பெரிய கதிர். 12. சேறு - பாகு. 13. பாசவல் - பசிய அவல். 14. புதவு - வாய்த்தலை.*

**விளக்கம்:** இளவேனில் கூடியிருப்பார்க்கு மிக்க இன்பந்தந்து, கூடாதார்க்குத் துயரம் விளைப்பது; ஆதலின், அக்காலத்தும் வராத காதலரது பிரிவைக் கருதிய வருத்தம் இது வென்று கருதுக. ‘வாலெயிறு ஊறிய நீர் தவிர்விலர்’ என்றதனால், விரைவிலே வருவார் என்பது குறிப்பாயிற்று.

**பாடபேதங்கள்:** 10. புன்கம் உயர்த்த 15. தவிரலர்.

## 238. மருந்தும் உடையையோ!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** நள்ளியின் சிறப்பான தன்மை.

*(இரவுக்குறியிலே கூடிவரும்தலைவனிடம், அவன் உள்ளத்தை விரைந்துவந்து மணத்தலிலே திருப்புதற்கு முயல்வாளான தோழி, இவ்வாறு கூறுகின்றாள்.)*

**மான்றமை அறியா மரம்பயில் இடும்பின்,**
**ஈன்றுஇளைப் பட்ட வயவுப்பிணப் பசித்தென,**
**மடமான் வல்சி தரீஇய, நடுநாள்,**
**இருள்முகைச் சிலம்பின், இரைவேட்டு எழுந்த**
**பனைமருள் எருத்தின் பலவரி இரும்போத்து,**

**மடக்கண் ஆமான் மாதிரத்து அலறத்,**
**தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு**
**நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி**
**இருங்கல் வியல்அறை சிவப்ப ஈர்க்கும்**
**பெருகல் நாட; பிரிதி ஆயின்,**

**மருந்தும் உடையையோ மற்றே-இரப்போர்க்கு**
**இழை அணி நெடுந்தேர் களிறொடு என்றும்**
**மழைசுரந் தன்ன ஈகை, வண்மகிழ்க்,**
**கழல்தொடித் தடக்கைக், கலிமான், நள்ளி**
**நளிமுகை உடைந்த நறுங்கார் அடுக்கத்து,**

**போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்**
**மென்பிணி முகை அவிழ்ந்து அலர்ந்த**
**தண்கமழ் புதுமலர் நாறும்நறு நுதற்கே?**

*மரங்களடர்ந்து பின்னிக்கிடக்கும் வழியறியவியலாத மரஞ்செறிந்த காட்டினுள்ளே, ஈன்று காவற்பட்ட வேட்கையுடைய பெண்புலியானது பசித்ததென்று,அதற்கு இளைய மானாகிய உணவைக் கொண்டு தருவதற்காக, நள்ளிரவிலே, இருண்டு குகைகளையுடைய பக்கமலையிலே*

*இரைகொள்ளுதலை விரும்பிப் புறப்பட்டது, பணந்தண்டினைப் போன்ற பிடரியினையும் பல கோடுகளையுமுடைய ஆண் புலி. மடப்பம் பொருந்திய கண்ணினையுடைய காட்டுப்பசுவானது தொலைவிலே நின்று அலறுமாறு, பெரிய கொம்பினை உடைய தலைமை பொருந்திய அதன் ஏற்றினை, அகன்ற இடத்தினையுடைய காட்டிலே வலப்பக்கம் வீழுமாறும் அது கொன்றது. பின் பெரிய மலையை அடுத்திருக்கும் அகன்ற பாறைகள் குருதியால் சிவக்குமாறு அதனை இழுத்துக் கொண்டும் போயிற்று. அத்தகைய பெரிய மலைகளையுடைய நாட்டின் தலைவனே! இவளை நீ பிரிந்து செல்வாயானால் -*

*இரவலர்களுக்கு அணிகள் பூட்டிய நெடுந்தேரைக் களிறுகளிடனே எந்நாளும் மழை சுரந்தாற்போலக் கொடுக்கும் கொடையினையும், மிகுதியான வள்ளல் தன்மையினாலே வரும் மகிழ்ச்சியினையும், கழலவிட்ட தொடியணிந்திருக்கும் பெரிய கைகளையும், செருக்குடைய குதிரையினையும் உடையவன் கண்டீரக்கோப் பெருநள்ளி என்பவன். அவனது, செறிந்த அரும்புகள் கட்டவிழ்ந்த நறிய கரிய மலைச்சாரல்களிலே, பனையின் அடிப்பக்கத்தே நிலைபெற்றுள்ள காந்தளது மெல்லிய அரும்புகள் பிணிப்பவிழ்ந்த அலர்ந்த, தண்மையான மணக்கும் புதுமலரின் நாற்றம் போன்ற மணமுடைய நுதலினை உடையவளுக்குப், பிரியின் சாவாது காத்தற்கு உரியதான ஒரு மருந்தினையும் நீ உடையையோ? (உடையை யாயின் பிரிக; இன்றேல் பிரியாதிருப்பாயாக.);*

*என்று, இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. இறும்பு - காடு. 2. பிண - பெண்புலி. 5. போத்து - ஆண்புலி 7. தடக்கோடு - வளைந்த கோடுமாம். 13. வண்மகிழ் - வள்ளன்மையாலே மகிழும். 15. அடுக்கம் - மலைச்சாரல்.*

**விளக்கம்:** *இரவுக்குறி வந்தவனிடம் பிரியாதே என வற்புறுத்திக் கூறுவது வரைந்து கோடலுக்குத் தூண்டுவதன் பொருட்டு. காட்டின் ஏதம் கூறினாள், அதனால் இரவுக்குறிக்கும் தாம் இசையாத தன்மையை விளக்குதற் பொருட்டு புலியின் செயலைக் கூறினாள், அவ்வாறே தலைவனும் இல்லறம் மேற்கொண்டு தலைவியைப் பேணிக் காக்கவேண்டும் என்றற் பொருட்டு.*

**பாடபேதங்கள்:** *5. பணைமருள். 14. கடுமாண் நள்ளி*

## 239. ஒருத்தி பெரு நல்லூரே!

**பாடியவர்:** *எயினந்தை மகன் இளங்கீரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள்வயிற் பிரிந்து போகா நின்ற தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *மகளிர் பிறைதொழூஉம் நிகழ்ச்சி பற்றிய செய்தி.*

*(வினைவயிற் பிரியக்கருதி தலைமகனின் பிரிவுக்கு இணங்காது தலைவி ஊடியும் கலங்கியும் வருந்தினாள். எனினும், பொருள் ஆர்வம் மிகப்பெருக அவன் அவளைப் பிரிந்து சென்றனன். மறுநாள், வழியிடையிலே தலைவியின் நினைவு மேலெழ, அவன் இவ்வாறு தன்னுட் கூறி வருந்துகின்றான்.)*

**அளிதோ தானே; எவன்ஆ வதுகொல்!**
**மன்றும் தோன்றாது; மரனும் மாயும்-**
**'புலிஎன உலம்பும் செங்கண் ஆடவர்,**
**ஞெலியொடு பிடித்த வார்கோல் அம்பினர்**
**எல்ஊர் எறிந்து, பல்ஆத் தழீஇய**

**விளிபடு பூசல் வெஞ்சுரத்து இரட்டும்**
**வேறுபல் தேஎத்து ஆறுபல நீந்திப்**
**புள்ளித் தொய்யில், பொறிபடு சுணங்கின்,**
**ஒள்இழை மகளிர் உயர்பிறை தொழூஉம்**
**புல்லென் மாலை, யாம்இவண் ஒழிய,**

**ஈட்டுஅருங் குரைய பொருள்வயிற் செலினே,**
**நீட்டுவிர் அல்லிரோ, நெடுந்தகையீர்? எனக்,**
**குறுநெடும் புலவி கூறி, நம்மொடு**
**நெருநலும் தீம்பல மொழிந்த**
**சிறுநல் ஒருத்தி பெருநல் ஊரே!**

*சிவந்த கண்களையுடைய மறவர்கள் புலியைப்போல் முழங்குபவர்களாகத், தீக்கொள்ளியுடனே பிடித்துள்ள நீண்ட கூர்மையான அம்பினையும் உடையவர்களாகச் சென்று, இரவிலே மாற்றாரின் ஊரினைக் கொள்ளையிட்டுப் பல ஆனினங்களையுங் கவர்ந்து வருவர். அவ் வேளையிலே எழுந்த ஒலித்தல் மிகுந்த ஆரவாரம் வெம்மையான சுரநெறிகளிலே எதிரொலிக்கும். அப்படிப்பட்ட மொழி வேறுபட்ட பல தேயங்களின் நெறிகள் பலவற்றையும் கடந்து சென்று -*

*"புள்ளி புள்ளிகளாக எழுதப்பட்ட தொய்யிலையும், பொறிகள் பொருந்திய தேமலையும் உடைய, ஒளிமிகுந்த அணிகலன் அணிந்த பெண்கள், உயர்ந்த பிறையினைத்*

தொழுகின்ற பொலிவற்ற மாலைக்காலத்திலே, யாம் இவ்விடத்தே கிடந்தது வாடியிருக்க, ஈட்டுவதற்கு அருமையான பொருளைத் தேடி வருதலான வினைக்கண் சென்றீரானால்,

பெருந்தன்மை உடையவரே! நீர் காலத்தை நீட்டிக் கொண்டே போவீர் அல்லீரோ?" என்று,

குறியினவும் நெடியனவுமான ஊடற்சொற்களை எல்லாம் கூறி, நேற்றைப் பொழுதும் நம்முடனே இனிதாகப் பலவும் பேசியவளான, இளமைப் பருவத்தளான நலனுடைய ஒப்பற்றவள் இருக்கும் பெரிய நல்ல ஊரானது,

மன்றமும் தோன்றப் பெறாமல், மரங்களும் கண்ணுக்கு மறைந்து போகின்றதே! இனி, எத்தன்மையது ஆகுமோ? என் நிலை இனி இரங்கத் தக்கதே!

என்று, பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சினுக்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** *2. மன்று - ஊர் மன்றம். மாயும் - மறையும். 3. உலம்பும் - கூக்குரலிடும். 4. ஞெலி - தீப்பந்தம். வார் கோல் அம்பு - நேரிய கோலின் முனையிலே செருகிய அம்பு. 6. விளிபடு பூசல் - ஒருவரையொருவர் விளித்தலினால் பொருந்திய ஆரவாரம். 9. பிறை தொழூஉம் - மணம் பெறாத மகளிர் வளர்பிறை தொழுதலான மரபினை உடையர் என்பர். 13. குறுநெடும் புலவி கூறி - குறுகிய சொற்களால் தான் கொண்டிருந்த நெடிய புலவியைக் கூறி. 15. சிறுநல் ஒருத்தி - சிறியளாகிய நல்லவளான ஒப்பற்றவள்; சிறுமை சிறப்பின் மேற்று.*

**விளக்கம்:** *முதல் நாள் ஊடிப் பிணங்கி உரை குளறிநின்ற தலைவியின் நிலையை நினைந்து, பிற்றை நாள் மாலையில் வழியிடையுள்ளவனாகிய தலைவன், தன் நெஞ்சோடு கூறிப் புலம்பியது இது என்க. 'மன்றுந் தோன்றாது மரனும் மாயும் என்றது' ஊரும் கண்ணுக்கு மறைந்தது பற்றியது.*

**பாடபேதங்கள்:** *1. அணிதோ தானே எவனாகுவங்கொல். 14. நெருநையும்.*

## 240. புன்னைச் சோலைக்கு வருக!

**பாடியவர்:** எழுஉப்பன்றி நாகன் குமரனார். **திணை:** பாலை. **துறை:** தோழி, இரவுக்குறி வந்த தலைமகற்குப் பகற்குறி நேர்ந்தது.

***(இரவுக்குறியிடத்தே வந்து கூடுபவனாகிய தலைவனிடம், தோழி, இரவுக்குறியின் ஏதங்களை நினைந்து தலைவிபடுகின்ற***

துன்பத்தைக் கூறிப் பகற்குறி வேண்டியது இது. பகற்குறியும் வாய்த்தல் கூடாதாதலின், அவன் வரைந்து கோடலிலே மனஞ்செலுத்துபவனாதலால் வேண்டாம் என்பது கருத்து.)

**செவ்வீ ஞாழற் கருங்கோட்டு இருஞ்சினைத்**
**தனிப்பார்ப்பு உள்ளிய தண்பறை நாரை**
**மணிப்பூ நெய்தல் மாக்கழி நிவப்ப,**
**இனிப்புலம் பின்றே கானலும், நளிகடல்**
**திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்**

**பன்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய**
**எந்தையும் செல்லுமார் இரவே; அந்தில்**
**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி,**
**யாயும் ஆயமோடு அயரும்; நீயும்,**
**தேம்பாய் ஓதி திருநுதல் நீவிக்,**

**கோங்குமுகைத் தன்ன குவிமுலை ஆகத்து,**
**இன்துயில் அமர்ந்தனை ஆயின், வண்டுபட**
**விரிந்த செருந்தி வெண்மணல் முடுக்கர்ப்,**
**பூவேய் புன்னை அம் தண்பொழில்,**
**வாவே தெய்ய, மணந்தனை செலற்கே,**

சிவந்த பூவினையுடைய கொன்றையின் கருமையான கிளையிலேயுள்ள பெரிய கொம்பிலே, தனித்திருக்கும் தன்னுடைய குஞ்சினை நினைத்துக்கொண்ட, தணிவாகப் பறத்தலையுடைய நாரையானது, நீலமணிபோலும் நெய்தல் மலர்களையுடைய பெரிய கழியினின்றும் மேலே எழுந்து பறந்து போகக் கடற்கரைச் சோலையும் இப்போது தனிமை உடையதாயிற்று.

செறிந்த கடலின் அலைகளாகிய சுரத்திலே சிக்கி வருந்திய, திண்ணிய படகின் விளக்கொளியிலே, பிடித்த பலவாகிய மீன் கூட்டங்களை, என் அண்ணன்மார் தமக்குக் காட்டுவதற்காக, என் தந்தையும், இரவிலே கடற்கரைக்குச் செல்வாராயினர்.

என் தாயும், ஆயமகளிருடன், தெய்வத்தையுடைய குளிர்ந்த நீர்த்துறையிலே, அத் தெய்வத்தைக் கைகுவித்து வணங்கிப் போற்றி, அதற்குச் சிறப்பும் செய்தவளாயிருப்பாள்.

நீயும், தேனொழுகும் கூந்தலையுடைய தலைவியினது அழகிய நெற்றியைத் தடவிவிட்டுக், கோங்கு அரும்பினாற் போன்று குவிந்திருக்கும் முலைகளையுடைய மார்பகத்தே, இனிய துயில் கொள்ளுதலை விரும்பினாயானால், அவளை மணந்து கூடிச் செல்லுதற்கு, வண்டு மொய்க்க விரிந்த செருந்திப்

*பூக்களையுடைய வெண்மணலிடத்து முடுக்கரிடத்தே பூக்கள் நிறைந்திருக்கும் புன்னை மரங்களையுடைய அழகிய குளிர்ந்த பொழிலினிடத்தே, இனிய பகற்போதிலேயே வருவாயாக;*

*என்று, இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி பகற்குறி நேர்ந்தனள் என்க.*

**சொற்பொருள்:** *1. செவ்வீ - சிவந்த மலர். 2. தனிப் பார்ப்பு - தனித்திருக்கும் குஞ்சு. தண்பறை நாரை - தணிவாகவே பறக்கின்ற இயல்புடைய நாரை. 3. மணிப்பூ - நீலமணி போன்ற நீலப்பூ. 5. திரைச்சுரம் - அலைகளாகிய சுரம்; சுரம் - பாலைநிரம். 7. அந்தில் - அவ்விடத்தே; அசையுமாகும்.*

**மேற்கோள்:** *'அணங்குடை - அயரும்' என்பது, 'நெய்தன் மகளிர் கிளையுடன்கூடி வருணற்குப் பரவுக்கடன் கொடுப்பது' என, 'மாயோன்மேய' என்னும் சூத்திர உரையினும்; 'பூவேய புன்னையந் தண்பொழில் நீ வா' என்பதனைத் தோழி களஞ் சுட்டியதென்று, 'தோழியின் முடியும் இடனுமாருண்டே' என்னும் சூத்திர உரையினும்; 'இது, தோழி பகற்குறி உரைத்த' எனப், 'பகற் புணர் களனே' எனனும சூத்திர உரையினும்; 'பகல் நீவா வென்றல்' வழுவமைதி என்று பொழுதும் ஆறும்' என்னும் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் காட்டினர்.*

**பாடபேதம் :** *1. கருங்கோட் டஞ்சினை.*

## 241. பிரிந்து சென்றாரே!

**பாடியவர்:** *காவன் முல்லைப் பூதனார்.* **திணை:** *பாலை* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள், வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.*

*(தன்னைப் பிரிந்துசென்ற தலைமகன், வருவதற்கெனக் குறித்த காலத்தினும் வராதுபோக, அதனால் தலைவியானவள் பெரிதும் வருத்தம் அடைந்தாள். அவளுடைய உடலழகும் கெட்டு மாறுபட்டது. அதுகண்டு, தலைவியின் தோழி மனங்கலங்கி, அவளுக்கு ஆறுதல்கூற முற்பட, அதனைக் கேட்ட தலைவி, இவ்வாறு கூறுகின்றாள்.)*

**'துனிஇன்று இயைந்த துவரா நட்பின்**
**இனியர் அம்ம, அவர்' என முனியாது**
**நல்குவர் நல்ல கூறினும், அல்கலும்,**
**பிரியாக் காதலொடு உழையர் ஆகிய**
**நமர்மன்-வாழி, தோழி!-உயர்மிசை**

**மூங்கில் இளமுளை திரங்கக், காம்பின்**
**கழைநரல் வியலகம் வெம்ப, மழைமறந்து**
**அருவி ஆன்ற வெருவரு நனந்தலைப்**
**பேஎய் வெண்தேர்ப் பெயல்செத்து ஓடி,**
**தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை**

**புலம்பெயர்ந்த உறைதல் செல்லாது அலங்குதலை**
**விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்**
**அத்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்**
**வட்டக் கழங்கின் தாஅய்த். துய்த்தலைச்**
**செம்முக மந்தி ஆடும்**

**நல்மர மருங்கின் மலைஇறந் தோரே!**

*வாழ்க, தோழி!*

*"என்றும் என்னை வெறாது எனக்கு அருள்பவர்; எவ்வகையான வெறுப்பும் இல்லாமல் ஒன்றுபட்ட பிளவுபடாத நட்பினையுடைய இனியவர்; அவர்" என்றெல்லாம் அவரைப் பற்றிய நல்ல செயல்களைக் கூறினாலும், எந்நாளும் நம்மை விட்டுப் பிரியாத காதலோடு அருகேயே இருந்தவராகிய நம்முடையவரான காதலர்,*

*உயர்ந்த மலையுச்சிகளிலேயுள்ள மூங்கிலின் இளைய முனைகள் வாடவும், மூங்கிற் கழைகள் ஒலிசெய்யும் பாறையிடங்கள் வெம்பவும், மழை பெய்தலை மறந்து அருவிகளும் இல்லையாகிப் போன, அச்சம்வரும் அகன்ற இடத்தே தோன்றிய வெண்மையான பேய்த்தேரை மழையென்று எண்ணி ஓடித் தாகம்பட்ட தனித்த முதிர்ந்த பெரிய கலைமானானது, அவ்விடத்தினின்றும் பெயர்ந்து வேற்றிடஞ் சென்று வாழ்தலையும் செய்யாது, அப்பேய்த்தேர் அசையும் புதிய தன்மையினையுடைய காட்டிடத்தேயே வருந்தித் தங்கியிருக்கும் காட்டிலுள்ள, நெல்லி மரத்தின் இனிய சுவையுள்ள திரண்ட காயங்களாகிய வட்டமான கழங்குகளைக் கைக்கொண்டு, பஞ்சிபோன்ற தலை மயிரினையும் சிவந்த முகத்தினையுமுடைய மந்திகள் தாவித்தாவி விளையாடும் நல்ல மரங்கள் பொருந்திய பக்கத்தையுடைய மலைப்பகுதியைக் கடந்தும் சென்றவராயினர். (இனி, வருந்தாது என் செய்வேன்?)*

*என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்துந் தோழிக்குச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. துனி - வெறுப்பு. துவரா நட்பு - பிரியாத நட்பு. 2. முனியாது - வெறுத்து ஒதுக்காது. 3. அல்கலும் -*

*எப்போதும். 4. உழையர் - அருகிருப்போர். 6. திரங்க - வாடி வதங்க. 10. தாஅம் - தாவும். 11. அலங்குதலை - அசைதலையுடைய. 13. அத்தம் - காடு.*

**விளக்கம்:** *"நம்மீது மிகுதியும் அன்புடையவராகக் கூடியிருந்தவர்தாம் அவரென்றாலும், இப்படி நம்மை வாடி வருந்துமாறு செய்து பிரிந்தனரே; இனி, எவ்வாறு யான் வருந்தா திருப்பேன்?" என்கின்றாள்.*

**உள்ளுறை:** பேய் வெண்தேர்ப் பெயல் செத்தோடித் தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை, புலம் பெயர்ந்துறைதல் செல்லாது, அலங்குதலை விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்' என்றாள், தலைவன் பொருளை நச்சி வேற்று நாட்டுக்குத் தன்னைப் பிரிந்துபோயின கொடுமையை எண்ணி என்க.

**பாடபேதங்கள்:** *11. அலங்கு நிலை. 16. நீண் மரம்.*

## 242. பண்பு தர வந்தது

**பாடியவர்:** பேரி சாத்தனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

*(களவிலே தன் காதலனுடன் கூடிவரும் தலைவி, இடையிலே அவன் உறவினைச் சில நாட்கள் பெறாதுபோக, அதனால் வாடி மெலிந்தனள். தாய் அதுகண்டு, முருகால் வந்த குற்றமென ஐயுற்று, முருகனை வேண்டுதற்குரிய ஏற்பாடுகளிலே ஈடுபட்டனள். அதனைத், தலைவன் அறிய உரைத்து, விரைவிலே மணம்சேர்க்க விரும்பிய தோழி, இப்படிக் கூறுகின்றாள்.)*

**அரும்புமுதிர் வேங்கை அலங்கல் மென்சினைச்**
**சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்தாது**
**மணிமருள் கலவத்து உறைப்ப, அணிமிக்கு**
**அவிர்பொறி மஞ்ஞை ஆடும் சோலைப்,**
**பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்,**

**செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்**
**பண்புதர வந்தமை அறியாள், 'நுண்கேழ்**
**முறியுரை எழில்நலத்து என்மகள் துயர்மருங்கு**
**அறிதல் வேண்டும்' எனப், பல்பிரப்பு இரீஇ**
**அரியா வேலற் றரீஇ, அன்னை**

**வெறிஅயர் வியன்களம் பொலிய ஏத்தி**
**மறிஉயிர் வழங்கா அள்வை, சென்றுயாம்**

செலவரத் துணிந்த, சேண்விளங்கு, எல்வளை
நெகிழ்ந்த முன்கை, நேர்இறைப் பணைத்தோள்,
நல்எழில் அழிவின் தொல்கவின் பெறீஇய,

முகிழ்த்துவரல் இளமுலை மூழ்கப், பல்லூழ்
முயங்கல் இயைவன் மன்னோ-தோழி!-
நரைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பில்
பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்
சாந்த மென்சினை தீண்டி, மேலது

பிரசம் தூங்கும் சேண்சிமை,
வரையக வெற்பன் மணந்த மார்பே!

தோழி! அரும்புகள் முதிர்ந்த வேங்கையின் அசைகின்ற மெல்லிய கொம்புகளிலே, சுரும்புகள் பூக்களின் வாயைத் திறந்து ஊதுதலால் சிதறிய பொற்றூளைப் போன்ற நுண்மையான மகரந்தப்பொடிகள், நீலமணி போன்ற தன் தோகையிலே உதிர்ந்து வீழ, அதனால் அழகு மிகுந்து விளங்கும் பொறிகளை யுடைய மயிலானது, களிப்புடன் ஆடிக் கொண்டிருக்கும் தன்மையை உடையது சோலை. அதனருகே பசுமையான தாளினையுடைய செந்தினையின் வளைந்த ஆரத்தையுடைய கிளிகளை, நம்முடனே இருந்து ஓட்டியவர் நம் காதலர். அவரது பண்புகள் தர, அதனால் இவ் வருத்தமும் நமக்கு வந்ததனை நம் தாயும் அறியாதவளாயினாள்.

“நுண்மையான நிறம் பொருந்திய தளிரைப்போன்ற அழகுவாய்ந்த என் மகளது துயரத்தின் காரணத்தை அறிதல் வேண்டும்” என்று கருதினவளாகப், பல பிரப்பரிசிகளைப் பலியாக வைத்தும், உண்மையறியாத வேலனைக் கொண்டு வந்து வெறியயரும் பெரிய களத்தினைப் பொலிவுறுமாறு போற்றித் துதித்தும், ஆட்டுக்குட்டியின் உயிரைப் பலியிட்டும், வெறியாட்டுச் செய்வதற்கும் முனைந்தாள். அதற்கு முன்பாகவே,

ஏறி இறங்கும் வகையிலே நெகிழ்வாக அணிந்துள்ள நெடுந்தூரத்திற்கும் ஒளிவிளங்கும் வளைகள் கழன்று வீழ்கின்ற முன் கைகளும், நேரிய சந்தினையுடைய பணைத்த தோள்களின் எழிலும் தம் அழகு கெடுவதனின்றும் நீங்கித், தம் பழைய அழகுகளைப் பெறுமாறு, நாமே சென்று,

தேன்கூடுகள் நிரம்பியிருக்கும் குளிர்ச்சியான குகைகளைக் கொண்ட மலைச்சாரலிலே, பெருமலைகளின் பிளப்பிடங் களிலே நீண்டு வளர்ந்துள்ள சிறிய இலைகளையுடைய சந்தனத்தின் மென்மையான கொம்புகளைத் தொட,

மேலிருப்பதாகிய தேன் கூடுகள் அசையும் நெடிய உச்சியினை யுடைய மூங்கில்களைத் தன்னிடத்தே கொண்டிருக்கும் மலைக்குரிய நாடனது,

முன்பு நாம் தழுவிய மார்பினை, முகிழ்த்து வருதலை யுடைய நம்முடைய இளைய முலைகள் அமுங்குமாறு, பன்முறையும் தழுவுதலே, நமக்கு மிகவும் பொருத்தமுடை யதாகும்.

என்று; தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலை மகட்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. அலங்கல் மென்சினை - அசைகின்ற தன்மையுடைய மென் கொம்புகள். 2. பொன்புரை நுண்தாது - பொன்போன்ற நிறமுடைய நுண்ணிய பூந்தாது. 3. கலவம் - தோகை. உறைப்ப - வந்து வீழ. 4. அவிர்பொறி - ஒளியுடைய புள்ளிகள், 5. கொடுங்குரல் - வளைந்த தினைக்கதிர். 6. செந்தார் - சிவந்த ஆரம்; கடிந்தோன் - வெருட்டியவன். 7. பண்பு - இயல்புகள்; கூடிப் பிரியாதிருக்கும் நிலையின்றி இடையிலே கூடுதல் மறந்த தான பண்பு. 8. முறிபுரை எழில் - தளிர்போன்ற ஒளியும் மென்மையும் கொண்ட மேனியின் எழில். பிரப்பு - பிரப்பரிசி. 10. அறியா வேலன் - உண்மை அறியாத வேலன். 13. மறி - ஆட்டுக் குட்டி. 16. மூழ்க. - அமுங்க; முலைகள் அவன் மார்பைத் தழுவுதலால் அழுந்த. முகிழ்த்து வரல் - அரும்பிப் புடைத்து எழல். 18. நறை - தேன்கூடுகள். கால் யாத்தல் - நிலைபெற்றிருத்தல். 21. பிரசம் - தேன்.

**உள்ளுறை:** வேங்கையின் நுண்தாது தன் கலவத்து உதிர்ந்து வீழ, அதனால் அழகுபெற்ற மயில் களிப்புற்று ஆடுவது போலத், தானும் அவன் மார்பினைத் தழுவி, அவன் மார்பிடத்துச் சாந்தம் படியப் பெற்றால் களிப்படைபவள் என்றனள். சந்தனக் கொம்பினைத் தீண்டத் தேனிறால்கள் அசைவதுபோல, அவனைத் தழுவத் தன் மேனி வருத்தம் எல்லாம் நீங்கித், தன்னுடைய பழைய எழில் வந்து நிறையும் என்றனள். நிறையவே, அன்னையின் ஐயமும் நீங்கும் என்பது குறிப்பாயிற்று.

**விளக்கம்:** அன்னை, மகளின் குடிமைப் பண்பிலே உறுதி உடையவளாதலின், தன் மகள் பிறன் ஒருவனுடன் களவு உறவு கொண்டதனாலேயே மேனி நலம் கெட்டுத் தோன்றுகின்றனள் என்று எண்ணாதவளாயினாள். முருகு அணங்கியதனால் விளைந்தது போலும் என வேலனை வேண்டவும் முற் பட்டனள். அந்த அன்னையின் நம்பிக்கை சிதையாமலிருக்கும்

*பொருட்டாகவேனும், அவரை யாம் சென்று தழுவுவோம் என்கின்றனள். அவன் வராதவன் என்பதனை உணர்த்துவது போல, யாமே சென்று தழுவுவோம் என்று சொல்லுவதன் நயமும் உணர்க. தலைவன் , தன் காதலியின் வேதனையையும், குடும்ப கௌரவத்தையும் உளங்கொண்டு மணந்து கொள்வதற்கு விரைதல் வேண்டும் என்பது தோழியின் குறிப்பாகும்.*

**பாடபேதங்கள்:** *18. நளி முகை. 22. மலர்ந்த மார்பு.*

## 243. தொல்வினைப் பயனே!

**பாடியவர்:** *கொடியூர்க் கிழார் மகனார் நெய்தற்றத்தனார்; குடிக்கிழார் மகனார் நெய்தற்றதன்னார் எனவும் வழங்கும்.* **திணை:** *பாலை* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் 'ஆற்றேன்' என்பதுபடச் சொல்லியது.*

*(கார்காலம் முடிந்து அடுத்த வாடைக் காலமும் வந்துவிட்டபின்பும், காதலனின் வரவைக் காணாது கண்கலங்கிப் புலம்பியிருக்கும் தலைவி, தன்னைத் தேற்றிய தோழிக்கு, வாடையின் செயலைப் பழிப்பதுபோல, இப்படிக் கூறித் தன்னுடைய ஆற்றாமையைப் புலப்படுத்துகிறாள்.)*

**அவரை ஆய்மலர் உதிரத்,துவரின்
வாங்குதுளைத் துகிரின் ஈங்கை பூப்ப
இறங்குபோது அவிழ்ந்த ஈர்ம்புதல் பகன்றைக்
கறங்குநுண் துவலையின் ஊரழை அணியப்,
பெயர்நீர் புதுவரல் தவிரச், சினைநேர்பு**

**பீள் விரிந்து இறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி
நெல்ஒலி பாசவல் துழைஇக், கல்லெனக்
கடிதுவந்து இறுத்த கண்இல், வாடை!
'நெடிதுவந் தனை' என நில்லாது ஏங்கிப்
பலபுலந்து உறையும் துணைஇல் வாழ்க்கை**

**நம்வலத்து அன்மை கூறி, அவர்நிலை
அறியுநம் ஆயின், நன்றுமன் தில்ல;
பனிவார் கண்ணேம் ஆகி, இனிஅது
நமக்கே எவ்வம் ஆகின்று;
அனைத்தால் தோழி! நம் தொல்வினைப் பயனே!**

*தோழி! அவரையின் அழகிய பூக்கள் உதிர்ந்தன. வளைந்த துளையினையுடைய சிவந்த பவளத்தைப்போல ஈங்கையும் பூத்துள்ளது. ஞாயிறு மேற்றிசையிலே இறங்கும் மாலைக் காலத்திலே, இதழ்விரிந்து மலந்த குளிர்ந்த புதரிலேயுள்ள பகன்றைப் பூக்களின் மணமானது, ஒலிக்கும் வாடையுடனே*

வரும் மென்மையான மழைத்துளியோடு கலந்து, ஊர்ப்பக்க மெல்லாம் அழகு படுத்துகின்றது. மழை நீரால் வரும் புது வரத்தும் நின்றுவிட்டது. கிளைத்தல் பொருந்திக் கருவிரிந்து விளைந்து முற்றி வளைந்துள்ள கதிர்களையுடைய வயலின் நெற்கதிர்களும் ஒலிசெய்து கொண்டிருக்கின்றன. அத்தகைய பசுமையான பள்ளக்கால்களைத் துழாவிக், கல் என்ற ஒலியுடன் கடுமையாக வந்து, இரக்கமற்ற வாடையும் நிலை பெற்றது. அது, இங்கே நில்லாது பெயர்ந்து, தம் தலைவரிடத்திலே சென்று, 'நீ நெடுங்காலம் பிரிந்து வந்திருக்கின்றனை என்று சொல்லாதோ? பலவற்றையும் வெறுத்தவளாக வாழும் துணையற்ற இந்தத் தனித்த வாழ்க்கைக்கு, நம்முடைய சக்தியற்ற தன்மையை அவரிடம் எடுத்துச் சொல்லி, அவருடைய உள்ளத்து நிலையினையும் சென்று அறியுமானால், மிகவும் நன்மையாக யிருக்குமே!

ஆனால், இப்பொழுது அவ்வாடையானது, நீர் வடியும் கண்களை உடையேம் ஆகிய நமக்கே மீண்டும் துன்பம் விளைப்பதாயிருக்கின்றது. நம்முடைய பழைய தீவினையின் பயன் அவ்வளவே போலும்!

என்று, தலைமகன் பிரிவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றேன் என்பதுபடச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. ஆய்மலர் - ஆய்ந்து போற்றும் அழகிய மலர். துவரின் - துவர் நிறம் உடையவான. 2. வாங்குதுளை - வளைந்ததுளை; செய்த துளையும் ஆம். துகிர் - பவளம். ஈங்கை - ஈங்கைச் செடி; இசங்கு எனத் தென்னாட்டார் வழங்குவர். 4. ஊருழை அணிய - ஊர்ப்பக்கத்தே - அழகு செய்ய. 5. புதுவரல் - புதுவெள்ளத்தின் வரத்து. 6. பீள் - கரு. பிறங்கு கதிர் - விளங்கும் கதிர். 7. பாசவல் - பசுமையான பள்ளக்கால்கள்; வயல்கள். 8. கண்ணில் - கண்ணோட்டம் இல்லாத; இரக்கமற்ற. 10. துணை யில் வாழ்க்கை - தனித்திருக்கும் வாழ்க்கை. 11. வலத்தன்மை - வலியின் தன்மை; அது இல்லாத தன்மை என்க. 13. பனி - கண்ணீர்; பனித்துளி போல்வதால் பனியாறிற்று. 15. தொல்வினை - ஊழ்வினை; பழவினை.

**விளக்கம்:** 'தன்னை வருத்தும் வாடை, தலைவரிடம் தனக்காகத் தூது சென்று தன் நிலையை எடுத்துரைத்து வந்தால், அவரது நிலையையும் அறிந்துவந்து சொன்னால் நல்லதாகுமே?' என நினைத்து நோகின்றாள் தலைவி.

**பாடபேதங்கள்:** 9. நில்லாது ஏங்கி. 11. வலித்தன்மை, 12. அறியுமாயின், 15. தொழில் வினைப் பயனே,

## 244. பாணன் வந்தனன்!

**பாடியவர்:** *மதுரை... மள்ளனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.*

*(தலைமகன், வேந்தனின் வினைமுடித்தற் பொருட்டாக வேற்றூர் சென்று பாசறைக்கண் இருக்கின்றான். அவனுடைய பிரிவினுக்கு ஆற்றாது நலிந்த தலைவியானவள், அவன் வருவதாக உறுதிகூறிச் சென்ற காலத்தின் எல்லையும் கடந்ததாகத், தான்மிகவும் உள்ளம் நைந்தவளானாள். மேலும், தன் துயரினைத் தாங்க முடியாத அவள், பாணனைத் தூது அனுப்புகின்றாள். வினை முடிந்திருக்கும் தலைமகன் அந்தப் பாணனின் சொற்களைக் கேட்டு இப்படித் தேர்ப்பாகனிடம் சொல்லுகிறான்.)*

**'பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன**
**சேயுயர் சினைய மாச்சிறைப் பறவை**
**பகலுறை முதுமரம் புலம்பப் போகி,**
**முகைவாய் திரந்த நகைவாய் முல்லை**
**கடிமகள் கதுப்பின் நாறிக் கொடிமிசை**

**வண்டினம் தவிர்க்கும் தண்பதக் காலை**
**வரினும், வாரார் ஆயினும் ஆண்டு அவர்க்கு**
**இனிதுகொல், வாழி தோழி?" எனத்தன்**
**பல்லிதழ் மழைக்கண் நல்லகஞ் சிவப்ப,**
**'அருந்துயர் உடையள் அவள்' என விரும்பிப்**

**பாணன் வந்தனன், தூதே; நீயும்**
**புல்லார் புரவி, வல்விரைந்து, பூட்டி,**
**நெடுந்தேர் ஊர்மதி, வலவ!-**
**முடிந்தன்று அம்ம, நாம் முன்னிய வினையே!**

*பாகனே! "குளிர்ந்த செவ்வியை உடையது கார்காலம். அதன்கண். பசைபொருந்திய தோலினை நெய்யிலே தோய்த் தாற்போன்ற கருமையான சிறகுகளையுடைய வெளவாலானது, தான் பகலிலே தங்கியிருந்த மிகவும் உயர்ந்த கிளைகளையுடைய முதிர்ந்த மரம் தனித்திட, மாலையிலே புறத்தே பறந்து செல்லும், கொடியின்கண் இதழ் விரித்த அரும்புகளையுடைய முல்லை யானது சிரித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றி, மணமகளுடைய கூந்தலைப்போல நறுமணம் பரப்பிக்கொண்டு, வண்டினத்தைத் தன்னை விட்டு அகலாதவாறு தடுத்துக் கொண்டிருக்கும்.*

*தோழி! நம் தலைவர் இவ்விடத்தே வந்தாலும் வராமலிருந்தாலும், அவ்விடத்தே அவர்க்கு எல்லாம் இனியதே*

போலும்! அவர் வாழ்க! என்று சொல்லித், தனது பலவிதழ் களையுடைய தாமரை மலர்போன்ற குளிர்ச்சியான கண்களின் நல்ல உட்புறமெல்லாம் சிவக்குமாறு,அரிய துயரத்தை உடையவளாயினாள், நம் காதலியாகிய அவள்" இவ்வாறு சொல்லிப் பாணனும் நாம் வீடு திரும்புவதை விரும்பியவனாகத் தூது வந்துள்ளான். நாம் எண்ணி வந்த செயலும் முடிந்து விட்டது. அதனால், நீயும் புல்லைத் தின்னுகின்ற குதிரைகளைப் பூட்டி, நெடிய தேரினை, மிகவும் விரைவாகச் செலுத்துவாயாக, என்று, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. பசை - ஈரம். பச்சை - தோல். நெய் - எண்ணெய். 2. மாச்சிறைப் பறவை - கரிய சிறகுகளையுடைய வெளவால். 3. முதுமரம் - பழைய மரம்; அதன்கண் உள்ள பொந்துகளில். 4. நகைவாய் - சிரிக்கும் வாய்; புன் சிரிப்புப் போன்ற. கடிமகள் - மணமகள். 6. தண்பதம் - குளிர்பதம். 9. கண் நல்லகம் - கண்களின் நல்ல உட்புறம்.

**விளக்கம்:** பகலிற்றங்கிய மரத்தை வாடவிட்டு மாலையிலே போய்விடும் வெளவால் போன்று, அவனும் தான் கூடியிருந்த இல்லைவிட்டுப் பிரிந்து அதனை வறுமையுறச் செய்தனன். முல்லையும் வண்டினத்தைத் தன்னைவிட்டு அகன்று செல்லாது தடுத்துக் கொண்டிருக்குங் காலத்து, அவள் தன் காதலனைத் பிரிந்துள்ளனள் எனக்கொள்க.

**மேற்கோள்:** 'முடிந்தன்று அம்ம, நாம் முன்னிய வினையே' என்றலின், தானே குறுநில மன்னன் சென்றதாம்', என "வேந்து வினையியற்கை"என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினார்.

**பாடபேதங்கள்:** 1. பகைபடு பச்சை. 10. வருந்துவள் அவளென. 13. நெடுந்தேர் ஏவுமதி.

## 245. வாரலென் யானே!

**பாடியவர்:** மதுரை மருதனிள நாகனார். **திணை:** பாலை. **துறை:** பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறித் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது. **சிறப்பு:** ஒட்டகம் பாலையைக் கடக்கப் பயன்பட்டமை.

(பொருள் தேடிவருதல் வேண்டுமெனத் தன் நெஞ்சத்து ஆர்வம் மிகுதியாக, அதனால் ஏற்படும் பிரிவுத் துயரினைத் தான்பொறாத தலைவியினை எண்ணிய தலைவன், நெஞ்சுக்கு இப்படிக்கூறித், தன் போக்கை நிறுத்திக் கொள்ளுகின்றான்.)

'உயிரினும் சிறந்த ஒண்பொருள் தருமார்
நன்றுபுரி காட்சியர் சென்றனர், அவர்' என
மனைவலித்து ஒழியும் மதுகையள் ஆதல்
நீ நற்கு அறிந்தனை ஆயின், நீங்கி
மழைபெயன் மறந்த கழைதிரங்கு இயவில்
செல்சாத்து எறியும் பண்பில் வாழ்க்கை
வல்வில் இளையர் தலைவர், எல்லுற,
வரிகிளர் பணைத்தோள், வயிறணி திதலை,
அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்,
மகிழ்நொடை பெறாஅ ராகி, நனைகவுள்
கான யானை வெண்கோடு சுட்டி,
மன்றுஓடு புதல்வன் புன்தலை நீவும்,
அருமுனைப் பாக்கத்து அல்கி, வைகுற,
நிழல்படக் கவின்ற நீள்அரை இலவத்து
அழல் அகைந் தன்ன அலங்குசினை ஒண்பூக்
குழல்இசைத் தும்பி ஆர்க்கும் ஆய்கண்,
குறும்பொறை உணங்கும் ததர்வெள் என்பு
கடுங்கால் ஒட்டகத்து அல்குபசி தீர்க்கும்
கல்நெடுங் கவலைய கானம் நீந்தி,
அம்மா அரிவை ஒழிய,
சென்மோ-நெஞ்சம்! வாரலென் யானே.

நெஞ்சமே! 'நற்செயல்களையே செய்யும் தெளிந்த அறிவினரான நம் தலைவர், உயிரினும் சிறப்புடையதான ஒள்ளிய பொருளை ஈட்டித் தருவதன் பொருட்டாகச் சென்றுள்ளனர் என்று, தன் உள்ளத்தை வலுப்படுத்திக் கொண்டு, வீட்டிலே தனித்திருக்கும் வலிமையுடையவள் நம் காதலியான அவள் ஆதலை, நீ நன்றாக அறிந்தனையானால், அவளை விட்டு நீங்கிச் செல்வாயாக.

மழையானது பெய்தலையே மறந்துபோன, மூங்கில்களும் பட்டுப்போய்த் தோன்றும் சுரநெறியிலே, செல்லும் வாணிகச் சாத்தினைக் கொல்லும் வலிய வில்லினை உடையவர் ஆறலைப் போராகிய மறவர்கள். அவர்களுடைய தலைவர், இருள் வந்த பொழுதிலே, வரிகள் விளங்கும் பணைத்த தோள்களையும், அழகிய தேமல்கள் விளங்கும் வயிற்றினையும் உடைய கள்விலை மகளிர்கள் இருக்கும் வீட்டிடத்தே சென்றும், கள்ளிற்கு உரிய விலைப்பொருளினைப் பெற்றிராதவர்களாக, மதம் வழிந்து நனைந்த கன்னங்களையுடைய காட்டு யானையின் வெண்மை

யான கொம்புகளைச் சுட்டிக் காட்டி, மன்றிலே ஓடி யாடும் தம் புதல்வனின் புல்லிய தலையினைத் தடவி, அவற்றை வேட்டையாடிக் கொண்டு வருவதற்கு எழுவார்கள்.

அரிய போர்முனைகளையுடைய அத்தகைய பாக்கத்திலே இரவிலே தங்கி இருந்து, பொழுது விடியவும், நிழல்படுமாறு அழகுடன் விளங்கும் நீண்ட அரையினையுடைய இலவமரத்தின் அசையுங் கிளைகளிலேயுள்ள, நெருப்புச் சுடர்விட்டு எரிவதுபோன்ற ஒளியுடைய பூக்களிலே, குழலிசை போன்று வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கும் அவ்விடத்தே, உயரமற்ற பாறையிலே அவை உதிர்ந்து, காய்ந்து கொண்டிருக்கும் சுள்ளிபட்ட வெள்ளெலும்புகள் போல விளங்க, வேகம் அமைந்த கால்களையுடைய ஒட்டகத்தின் மிகுந்த பசியினை அவை போக்கும். கற்கள் பொருந்திய கவர்த்த நெடுவழிகளையுடைய இத்தகைய காட்டைக் கடந்து, அழகிய மாமை நிறத்தையுடைய நம் தலைவி தனித்திருக்குமாறு கைவிட்டுச் செல்வாயாக! யான் அவளைக் கை விட்டுப் பிரிந்து நின்னுடன் வருதலில்லேன்;

என்று, பொருள் கடைக் கூட்டிய நெஞ்சினைக் கழறித் தலைமகன் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 2. நன்று - நற்செயல். காட்சி - தெளிவு. 3. மதுகை - மயக்கம்.5. திரங்கு - வாடும். 6. பண்பில - பண்பற்ற. 9. அரியலாட்டியார் - கள்ளினை விற்கும் பெண்டிர். 10. நொடை - விலைப்பணம். 17. ததர் - கள்ளி.

**விளக்கம்:** கள்ளுக்கு விலையாகக் களிற்றியானைக் கொம்புகளை வேட்டையாடி வருவதற்கு மறவர் தலைவர்கள் எழுகின்ற அரிய போர்முனைகளையுடைய காடு என்க. பாறையிலே உதிர்ந்து காய்ந்து கிடக்கும் இளமலர்கள், சுள்ளிபட்ட வெள்ளெலும்பு போலத் தோன்றி ஒட்டகத்திற்கு உணவாகும் காடு எனவும் கொள்க.

**பாடபேதங்கள்:** 6. செல் சமத்து எறியும் அன்பில் வாழ்க்கை. 18. கடுங்கால் வேட்டத்து அல்குல் பசி.

## 246. ஆர்ப்பினும் அலர் பெரிதே!

**பாடியவர்:** பரணர்; **திணை:** மருதம். **துறை:** தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது. **சிறப்பு:** கரிகால் வளவனின் வெண்ணிப் பறந்தலைப் பெரும்போர்; அழுந்தூரிலே எழுந்த ஆரவாரம் முதலிய செய்திகள்.

(தலைவன், 'புது நீர் விழாவிலே பரத்தையுடன் நீர் விளையாடலிலே திளைத்தான்' என்று ஊடல் கொண்டிருந்த

*தலைவி, அவன் வீட்டுக்கு வரவும், அவனுடைய உறவை மறுத்து இப்படிக் கூறுகின்றாள்.)*

**பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை**
**கதிர்மூக்கு ஆரல் களவன் ஆக,**
**நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்**
**மலிநீர் அகல்வாய் யாணர் ஊர!**
**போது ஆர் கூந்தல் நீவெய் யோளொடு**

**தாதுஆர் காஞ்சித் தண்பொழில் அகல்யாறு**
**ஆடினை என்ப நெருநை; அலரே**
**காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்**
**ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்,**
**சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்**
**இமிழிசை முரசம் பொருகளத்து ஒழியப்,**
**பதினொரு வேளிரோடு வேந்தர் சாய,**
**மொய்வலி அறுத்த ஞான்றை,**
**தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே.**

*சருச்சரையினையுடைய வயிற்றினையும் பிளந்த வாயினையும் கொண்ட ஆண் சங்கானது, ஒளியுடைய மூக்கினதாக ஆரல்மீன் சான்றாக, ஆழமான நீர்ப்பெருக்கத்தை யுடைய பொய்கையிலே, தன் துணையான பெண் சங்கினோடும் மணம் கூடும், நிர்வளம் நிறைந்த அகன்ற வயல்களின், புதுவருவாயினை உடைய ஊரனே!*

*"பூக்கள் நிறைந்த கூந்தலினளான நின்னால் விருப்பப் பட்ட பரத்தையுடனே, பூந்தாதுகள் மலிந்த குளிர்ந்த காஞ்சிமரச் சோலை சூழ்ந்த அகன்ற ஆற்றினிடத்தே, நேற்று நீயும் புனல் விளையாடினை" என்று பலரும் சொல்வார்கள். அதனால் எழுந்த பழிச்சொற்களின் ஆரவாரம் -*

*மிக்க சினமும் ஆற்றலுமுடைய பெரும்புகழினனான கரிகால் வளவன் ஆரவாரம் மிகுந்த கள்வளத்தையுடைய வெண்ணிவாயில் என்னுமிடத்திலே, சீர்மை நிறைந்த பகை மன்னவர்கள் மாறுபட்டு எழுந்த போரினுள்ளே, அவர்களது முழங்கும் ஒலியுடைய முரசங்கள் அனைத்தும் போர்க் களத்தேயே ஒழிந்துபோகுமாறு, அப் பதினொரு வேளிர் களுடன் இருபெரு வேந்தரும் ஆகிய அனைவரும் தம் நிலை யழிந்து தோற்று ஓடுமாறு, அவர்களுடைய மிகுதியான அற்றலை எல்லாம் ஒழித்த அந்நாளிலே, அழுந்தூர்க்கண்ணே எழுந்த குறையாத ஆரவாரத்தினுங் காட்டில் பெரிதா யிருக்கின்றதே!*

என்று, தோழி தலைமகனுக்குக் கூறி வாயின் மறுத்தனள் என்க.

**சொற்பொருள்:** 1. மோட்டு - வயிறு. 2. கதிர்மூக்கு - கூர்மையான மூக்குமாம். களவன் - களத்திலேயுள்ள சான் - றினன். 4. யாணர் - புதுவருவாய். 6. காஞ்சித் தண்பொழில். காஞ்சி மரங்கள் சூழ்ந்த குளிர்ந்த பொழில். வெண்ணிவாயில் - வெண்ணிப் பறந்தலை என்னும்இடம். 14. அழுந்தூர் - தஞ்சை ம்மாவட்டத்து ஓர் ஊர்; அழுந்தூர் வேளுக்கு உரியது.

**உள்ளுறை:** ஆண்சங்கு ஆரல்மீன் சான்றோடு பெண் சங்கை மணம் புணர்வதுபோலத், தலைவனும் பாணனின் துணைகொண்டு பரத்தையைக் கூடினன் என்றனள்.

**மேற்கோள்:** "ஏற்றை' என வருவதற்குப், பிணர் மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை' என்பதனை, 'ஆற்றலொடு புணர்ந்த' என்னுஞ் சூத்திரத்துப் பேராசிரியர் காட்டுவர்.

**பாடபேதங்கள்:** 2. கள்வனாக. 5. கூந்தல் நல்லவளோடு. 8. காய்சின முன்பின்.

## 247. அருளில்லாதவர் அவர்!

**பாடியவர்:** மதுரை மருதங்கிழார் மகனார் பெருங் கண்ணனார்; மதுரை மருதங்கிழார் மகனார் வெண்ணாகனார் எனவும் பாடம். **திணை:** பாலை **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு, வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(தலைமகன் தன்னைப் பிரிந்து வேற்றூர்க்குத் தொழில் முயற்சியிலே சென்றிருந்தனனாக. அவனுடைய பிரிவுக்கு ஆற்றாது கலங்கித் தன் நலம் அழிந்தவளாயினாள் தலைவி. அவள் பால் அன்புடைய தோழி அதனைக் கண்டு, தானும் பெரிதும் மனம் கலங்கி வருந்தினாள். அப்பொழுது தலைவி தன் தோழிக்கு இப்படிச் சொல்லுகிறாள்.)

**மண்ணா முத்தம் ஒழுக்கிய வனமுலை**
**நம்மாண் ஆகம் புலம்பத் துறந்தோர்**
**அருளிலர்-வாழி, தோழி!-பொருள்புரிந்து,**
**இருங்கிளை எண்கின் அழல்வாய் ஏற்றை**
**கருங்கோட்டு இருப்பை வெண்பூ முனையின்,**

**பெருஞ்செம் புற்றின் இருந்தலை இடக்கும்**
**அரிய கானம் என்னார், பகைபட**

**முனைபாழ் பட்ட ஆங்கண், ஆள்பார்த்துக்**
**கொலைவல் யானை சுரம்கடி கொள்ளும்**
**ஊறுபடு கவலைய ஆறுபல நீந்திப்**

**படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்தின்,**
**பாறுகிளை சேக்கும் சேண்சிமைக்**
**கோடுயர் பிறங்கல் மலைஇறந் தோரே.**

*தோழி! வாழ்க! பொருளினை விரும்பியவராயினார் நம் தலைவர்.*

*அழல்போலத் தோன்றும் வாயினையும், பெரிய சுற்றத்தினையும் உடைய ஆண் கரடியானது, கரிய கிளைகளையுடைய இருப்பை மரத்தின் வெண்மையான பூக்களைத் தின்னும். அது வெறுத்துவிட்டதென்றால், பெரிய செம்மண் புற்றினது உயரமான உச்சியைப் புற்றாஞ் சோற்றிற்காகப் பெயர்த்துக் கொண்டிருக்கும். அப்படிப்பட்ட வழியினையும், 'செல்வதற்கு அரியதாயிற்றே' என அவர் நினையாதாராயினார்.*

*பகைவரின் தாக்குதலுக்கு உட்பட, அதனால் பாழாகிக் கிடக்கும் காட்டோரத்துச் சிற்றூராகிய இடத்திலே, கொல்லுதலிலே வல்ல யானையானது, வழியோடு வரும் ஆட்களை எதிர்பார்த்துக் கொண்டே காட்டுவழியைக் கவனமாகக் காத்துக் கொண்டிருக்கும். அப்படிப்பட்ட இடையூறுகளை உடையனவும், கவர்த்த பல நெறிகளை உடையனவுமான பலவற்றையும் கடந்தும் அவர் செல்பவராயினார்.*

*நீண்ட கழுத்தினையுடைய பருந்தானது, மிக்க புலால் நாற்றத்தினை விரும்பியதாகப் பறந்துவந்த மரக்கிளைகளிலே தங்கியிருக்கும். நீண்ட உச்சியினையும் உயர்ந்த பல சிகரங் களையும் கொண்ட பக்கமலைகளை உடைய அத்தகைய வழிகளையும் அவர் கடந்து சென்றுள்ளார்.*

*கழுவாத முத்துக்களாகிய கண்ணீர் ஒழுகியிருக்கும் அழகிய முலைகளையுடைய, நம் நல்ல மாட்சிமையுடைய மார்பகம், அவர் தழுவுதலின்றித் தனிமையுற்று வருந்துமாறு அங்ஙனம் பிரிந்துசென்றவரான அவர், சற்றும் நம்மிடத்தே அருள் இல்லாதவரே என்பதனை நீயும் அறிவாயாக;*

*என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. மண்ணா முத்தம் - கழுவாத முத்துக்கள்; கண்ணீர்த் துளிகள். வன முலை - அழகிய முலை. 2. புலம்ப - தனிமையுற்று வருந்த. 4. அழல்வாய் - நெருப்பின் தன்மை போலச் சிவந்து தோன்றும் வாய். 6. இடக்கும் - பெயர்க்கும். 8. பகைபட - பகைவரால்அழிக்கப்பட 9. கடிகொள்ளும் - காவல் காத்திருக்கும். 10. ஊறு - துன்பம், 11. படுமுடை - மிக்க முடை நாற்றம் வீசும் தசை. 12. பாறு - பருந்து. 13. பிறங்கல் - பக்க மலைகள்.*

**உள்ளுறை:** *ஆண் கரடி, இருப்பைப் பூக்களைத் தின்று, அதனை வெறுத்துச்சென்று புற்றுக்களைப் பெயர்த்துக் கொண்டிருப்பது போல, அவரும் நம் இன்பத்தைத் துய்த்து வெறுத்துப், பொருளின்மீது பற்றுக் கொண்டவராயினர் என்க. அந்தப் பற்று நம் காதற்பாசத்தினும் மிகுதியாக, அவர் நம்மையும் மறந்தனர் எனச் சொன்னதாகவும் கொள்க.*

## 248. பன்றியின் தறுகண்மை!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக் குறிச் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் கேட்கத் தோழி சொல்லியது.*

*(இரவுக்குறியிலே தலைமகனின் வரவை எதிர்பார்த்துத் தலைவியும் தோழியும் காத்திருக்கின்றனர். அவனும் வந்து, தோழியை அகன்று போகச் செய்யும் குறிப்பாக, அவண் ஒரு சார் மறைந்திருந்து, தன் வரவை உணர்த்துகின்றான். அப்போது தோழி, தலைவிக்குச் சொல்லுவதுபோல, அவன் கேட்குமாறு இப்படிக் கூறுகின்றாள்.)*

**நகைநீ கேளாய்-தோழி!-அல்கல்**
**வயநாய் எறிந்து, வன்பறழ் தழீஇ,**
**இளையர் எய்துதல் மடக்கிக், கிளையொடு**
**நான்முலைப் பிணவல் சொலியக், கான் ஒழிந்து.**
**அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற**

**தறுகட் பன்றி நோக்கிக், கானவன்**
**குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி**
**மடைசெலல் முன்பின்தன் படைசெலச் செல்லாது,**
**அருவழி விலக்கும்எம் பெருவிறல் போலும்' என,**
**எய்யாது பெயரும் குன்ற நாடன்**

**செறுஅரில் துடக்கலின், பரீஇப் புரிஅவிழ்ந்து,**
**ஏந்துகுவவு மொய்ம்பிற் பூச்சோர் மாலை,**
**ஏற்றுஇமில் கயிற்றின், எழில்வந்து துயல்வர,**

**இல்வந்து நின்றோற் கண்டனள் அன்னை,**
**வல்லே என்முகம் நோக்கி,**

**'நல்லை மன்!' என நகூஉப் பெயர்ந்த தோளே!**

தோழி! நேற்றைக்கு நடந்த, சிரிப்பதற்கு இடனாகிய செய்தி ஒன்றினைச் சொல்லுவேன் கேட்பாயாக:

வேட்டுவர்கள் பன்றி வேட்டைக்குச் சென்றனர். நாய்கள் பன்றிகளை வெருட்டின. அப்போது ஓர் ஆண் பன்றியானது வலியுடைய அவ் வேட்டை நாய்களை எதிர்த்து ஓட்டியது. வேட்டுவர் தன் இனத்தை நெருங்குதலையும் தடுத்தது. வலியமைந்த தன் குட்டிகளைத் தழுவிக்கொண்டே, தொங்கும் முலையினையுடைய தன் பெண் பன்றி செல்லுமாறும் பேணி நின்றது. அதன்பின் காட்டினின்றும் வெளிவந்து, அரிய பொந்தாகிய ஒரு முடுக்கிலே வேட்டையாடும் ஆட்களை எதிர்ப்பதற்காகவும் வந்து நின்றது. அத்தகைய ஆற்றலையுடைய அந்தப் பன்றியினை, வேட்டுவனும் நெருங்கினான். அதன் நிலையினையும் நோக்கினான்.

"மடுத்தல் பொருந்திய ஆற்றைலையுடைய தனது படையானது புறங்காட்டி ஓடவும், தானும் அவற்றைப் போல ஓடிச் செல்லாது நின்று, பகைவர் வருகின்ற அரிய வழியிலே அவரைத் தடுத்து நிறுத்திப் போரிடும் ஆற்றல் வாய்ந்த,எம் முடைய பெரிய வல்லமையாளனைப் போன்றது இதுவும்' என வியந்து நின்றான்.

தன் வில்லிலே தொடுத்த கூரிய முனையையுடைய அம்பினை அதன்மேல் எய்யாது பெயர்ந்தும் சென்றான். அத்தகைய மலைநாட்டைச் சேர்ந்தவன் நம் தலைவன். அவன்.

செறிந்துள்ள புதர்கள் பற்றிக்கொள்ள, அதனால் அறுபட்டுப் புரிகள் அவிழப் பூக்கள் உதிர்கின்ற மாலையானது, திரண்டு நிமிர்ந்த தோள்களிலே ஏற்றின் திமிலின்கண் கிடக்கும் கயிற்றின் அழகுடனே கிடந்து அசைந்து கொண்டிருக்க, நம்முடைய வீட்டிலேயும் வந்து நின்றான்.

நின்ற அவனை, நம் அன்னையும் கண்டனள். விரைய என் முகத்தினையும் பார்த்தனள். "நீ மிகவும் நல்லவள்' என்றும் நகை தோன்றச் சொல்லிச் சென்றனள். (இனி என்ன செய்வோமோ?);

என்று, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்குமாறு தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. நகை - நகைப்பதற்கு உரிய செய்தி. அல்கல் - நேற்று. 2. வயநாய் வலிமையுள்ள நாய். எறிந்து - எதிர்த்து வெருட்டி. பறழ் - குட்டிகள். 3. இளையர் - வேடர் 4. நான்முலை - தொங்கும் முலை. பிணவல் - பெண் பன்றி. சொலிய - தப்பிச் செல்ல. 5. அரும் புழை முடுக்கர் - அரிய புழையிடமாகிய முடுக்கர். ஆட்குறித்து - ஆளைத் தாக்குதல் குறித்து. 6. தறுகண் - பேராண்மை; அஞ்சாமை 8. பெருவிறல் - பெரிய வல்லாளன்; பெருவிரற் கிள்ளி எனவும் கருதலாம். 12. ஏந்து குவவு மொய்ம்பு - நிமிர்ந்த பணைத்த வலிமையுடைய தோள்கள்.

**உள்ளுறை:** பன்றியானது தன்னுடைய பெண் பன்றிக்கு ஊறுபாடு நேராமல் காத்து நிற்கும் தறுகண்மையுடைய நாடனாதலின், நமக்கு ஊரலராலும் இற்செறித்தலாலும் வரும் பழியையும் துன்பத்தையும் தானே முன் நின்று போக்குவன் என்றனள்; அவன் விரைவிலே வந்து மணப்பான் என்பது குறிப்பு.

**மேற்கோள்:** 'வந்தோன் செவிலியை எதிர்த்துழிக் கூறியது' எனத் தலைவி கூற்றிற்கு இச்செய்யுளை எடுத்துக் காட்டி, 'வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்' என்னும் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்.

'நகை நீ கேளாய் தோழி' என்பது, 'தன் பேதைமை பொருளாக நகை பிறந்தது எனவும், 'நல்லை மன்னென நகூஉப் பெயர்ந்தோளே' என்பது, "பிறர் எண்ணியது பொருளாகத் தன்கண் நகை பிறந்தது" எனவும், 'எள்ளல் இளமை' என்னுஞ் சூத்திர உரையிலே, பேராசிரியர் கூறுவர்.

**பாடபேதம் :** 2. வலநாய். 3. மடக்கிளையோடு. 16. நல்லோள் மன்றம் கூய்ப் பெயர்ந்தோளே.

## 249. அருளும் அலரும்!

**பாடியவர்:** நக்கீரனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** கொடை வள்ளலான வேம்பிக்கு உரிய முசுண்டை என்பவனைப் பற்றிய செய்திகள்.

*(பிரிந்து சென்றவனான தலைவன் வாராது காலந்தாழ்க்க, அதனால் தலைவியின் உடல் நலமும் அழிய, அதனால் ஊரிலே அலரும் பெரிதாக எழ, அதுகண்டு வருந்திய தோழிக்குத் தலைமகள் தன்னுடைய ஆற்றாமையினை இவ்வாறு சொல்லுகின்றாள்.)*

**அம்ம-வாழி, தோழி!-பல்நாள்**
**இவ்வூர் அம்பல் எவனோ? வள்வார்**
**விசிபிணித்து யாத்த அரிகோல் தெண்கிணை**

**இன்குரல் அகவுநர் இரப்பின் நாடொறும்**
**பொன்கோட்டுச் செறித்துப், பொலந்தார் பூட்டிச்**
**சாந்தம் புதைத்த ஏந்துதுவங்கு எழிலிமில்**
**ஏறுமுந் துறத்துச், சால்பதம் குவைஇ,**
**நெடுந்தேர் களிற்றொடு சுரக்கும் கொடும்பூண்**
**பல்வேல் முசுண்டை வேம்பி அன்னஎன்**
**நல்லெழில் இளநலம் தொலையினம், நல்கார்-**
**பல்பூங் கானத்து அல்குநிழல் அசைஇத்,**
**தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்**
**நாகுஆ வீழ்த்துத், திற்றி தின்ற**
**புலவுக்களம் துழைஇய துகள்வாய்க் கோடை**
**நீள்வரைச் சிலம்பின் இரைவேட்டு எழுந்த**
**வாள்வரி வயப்புலி தீண்டிய விளிசெத்து,**
**வேறுவேறு கவலைய் ஆறுபரிந்து, அலறி,**
**உழைமான் இனநிரை ஓடும்**
**கழைமாய் பிறங்கல் மலைஇறந் தோரே**

*தோழி! நீ வாழ்வாயாக! நான் சொல்லும் இதனையும் கேட்பாயாக:*

*மயிலின் தோகையிலுள்ள இறகுகளை மாலையாகத் தொடுத்து அணிபவர் மழவர்கள். பல்வகையான பூக்களை உடையதான காட்டின் சுருங்கிய நிழல்களிலே, அவர்கள் தங்கிக், கன்றினையுடைய பசுவைக் கொன்று, அதன் ஊனைச் சுட்டுத் தின்பார்கள். புலால் வீசும் அந்த இடத்தைத் துழாவியவாறு, ஊன்துணுக்குகள் கலந்த புழுதியைத் தன்பால் கொண்டதாக, மேல்காற்றும் எழுந்து வீசும்.*

*ஆண்மானுடன் கூடியவாயிருக்கும் மான் கூட்டங்கள்' அந்தக் காற்றின் ஒலியைக் கேட்டன. நீண்ட மூங்கில்களைக் கொண்ட மலையிலே, இரையினை விரும்பியதாக எழுந்த, ஒளி பொருந்திய கோடுகளைக் கொண்ட வலிய புலியானது ஏதோவொரு மானைக் கொன்றதால் எழுந்த ஒலியாக அதனைக் கருதின. அதனால் அஞ்சி அலறியவையாக, வேறு வேறு கவர்த்த வழிகளிலே எல்லாம் அவை அலறி ஓடிக் கொண்டிருந்தன. மூங்கில்கள் மூடியிருக்கும் அத்தகைய உயர்ந்த மலையிடத்தைக் கடந்துசென்றவர் நம் தலைவர்.*

*வளமான நரம்புகளை இறுக்கமாகப் பிணித்துக் கட்டிய, இசைக்கும் கோலினையுடைய, தெளிவான ஒலிமுழங்கும் கிணைப்பறையினோடு, தம் இனிய குரலினாலும் இனிதாகப்*

பாடுபவர் பாணர்கள். அவர்கள் வந்து தன்பால் இரந்து நின்றால், அது நாள்தோறுமானாலும் மனங்கோணாதவனாகப் பொற்பூணினைக் கொம்பிலே செறித்துப் பொன்னரி மாலை யினையும் கழுத்திலே பூட்டிச், சந்தனத்தை முழுவதும் மறையுமாறு பூசியுள்ள விளக்கமான அழகிய திமிலையுடைய ஏறுகளை அவர்கள் முன்னால் நிறுத்தி முதலிலே வழங்குவான்; மிகுந்த பக்குவமான உணவினையும் குவிப்பான்; நெடிய தேரினைத் தருவான்; களிறுகளையும் அளிப்பான்; வளைந்த பூணினையும் பலரான வேல் வீரர்களையும் உடையவனான முசுண்டை என்பவன். அவனுக்கு உரியதான 'வேம்பி' என்னும் ஊரினைப் போன்ற, என்னுடைய நல்ல அழகுடைய இளமை நலமெல்லாம் தொலைந்து போயினாலும்கூட, அவர் வந்து எனக்கு அருள் செய்யாதவர்ாயினர் அவரே அங்ஙனமிருக்கும், பல நாளாக் இந்த ஊரவர் உரைக்கும் பழிச்சொற்கள் தாம் எனக்கு எத்தகைய துன்பத்தைத் தந்துவிடுமோ?

என்று? தலைமகனின் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத், தலைமகள், தான் ஆற்றுவல் என்பதுபடச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. வள்வார் - வளமையான நரம்புகள். அரிகோல் - கிணையை இசைக்கும் கோல். 4. அகவுநர் - பாடுவார்; பாணர். 5. பொலந்தார் - பொன்னரி மலை. 6. துளங்கு எழில் - விளக்கமான அழகு. 7. முந்துறுத்து - முற்பட நிறுத்தி. 7. சால்பதம் - மிகவும் பக்குவமான உணவு. 8. சுரக்கும் - அளிக்கும். 10. இள நலம் - இளமை நலம். 13. நாகு ஆ - கன்றையுடைய பசு; இளமையான பசுவும் ஆம். 14. துகள்வாய் - துகள்களையுடைய. 16. வாள்வரி - ஒளியுடைய கோடுகள். 16. கவலைய - கவர்த்த வழிகளிற் செல்வன.

**உள்ளுறை:** மேல்காற்றுப் புலாலில் துழாவுதலுடன் துகள் வாய்க்கோடையாகவும் திகழும்; அதுபோலவே, அலர் கூறும் பெண்டிரும் இழிந்தவைகளையே மேற்கொண்டு கூறும் இயல்பினர் ஆவர். அதன் ஒலியைத் தனக்குப் பகையான புலிமானைத் தீண்டிய ஒலியாக மானினம் எண்ணியது போலவே, அந்த அலர்உரைகளைக் கேட்ட தாயும் ஐயுற்று நடுங்கினள் என்று கொள்க.

**பாடபேதம்:** ஏந்துளங்கு இமில் எழில்.

## 250. உறங்காத கடல் துறை

**பாடியவர்:** *செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.*

*(தலைவன் ஒருவனுக்காகத் தலைவியிடம் வந்து அவனுடைய காதலுக்கு இணங்குமாறு கேட்கிறாள் அவளுடைய தோழி. தலைவனின்மீது தன் தலைவிக்கு ஆராத காதல் உளதென்பதையும், அவர்களுடைய முன் உறவையும் அறிந்தவள் அவள். தன் கருத்தை வெளிப்படையாகக் கூறாமல், நயமாகவே உரைக்கின்றாள்.)*

**எவன்கொல்?-வாழி,தோழி!-மயங்குபிசிர்**
**மல்குதிரை உழந்த ஒல்குநிலைப் புன்னை**
**வண்டிமிர் இணர நுண்தாது வரிப்ப**
**மணம்கமழ் இளமணல் எக்கர்க் காண்வரக்,**
**கணம்கொள் ஆயமொடு புணர்ந்து விளையாடக்,**

**கொடுஞ்சி நெடுந்தேர் இளையரொடு நீக்கித்,**
**தாரன், கண்ணியன், சேரவந்து, ஒருவன்,**
**வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவதும்**
**மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன்; அதற்கொண்டு**
**அரும்படர் எவ்வமொடு பெருந்தோள் சாஅய்,**
**அவ்வலைப் பரதவர் கானலஞ் சிறுகுடி**
**செவ்வாய்ப் பெண்டிர் கவ்வையின் கலங்கி,**
**இறைவளை நெகிழ்ந்த நம்மொடு**
**துறையும் துஞ்சாது, கங்கு லானே!**

*தோழி! நீ வாழ்க! மிகுந்த அலைகளினின்றும் தெறிக்கும் நெருங்கிய நீர்த்துளிகளால் வருந்திய உயர்ந்த நிலையினை யுடைய புன்னையின், வண்டினம் மொய்க்கின்ற பூங்கொத்துக் களிலிருந்து நுண்மையான பொடிகள் உதிர்ந்து அழகு செய்ய, அதன் மணம் கமழ்ந்து கொண்டிருக்கின்ற மென்மையான மணல்மேட்டிலே, கூட்டமான ஆயத்தாரோடும் கலந்து, யாம் அழகுபொருந்த ஒருநாள் விளையாடியிருந்தோம். அவ்வேளையிலே,*

*மொட்டினையுடைய நீண்ட தேரினை, ஏவலிளையரோடு நீக்கி நிறுத்திவிட்டு, மார்பிலே தாரும் தலையிலே கண்ணியும் உடையவனாக, ஒருவன் எம் அருகே வண்டல் மனையைப் புகழ்ந்தும் பேசினான். எவ்விதமான மறுமொழியும் எம்மிடமிருந்து பெறாதவனாகப் போயும் விட்டான்.*

அது முதற்கொண்டு, அரிதாகப் படர்கின்ற துன்பத்தோடு பெரிதான தோள்களும் மெலிய, அழகிய வலைகளை உடையவரான பரதவர்களது கானற்சோலையிலேயுள்ள அழகிய சிற்றூரிலேயிருக்கும் கொடிய வாயினரான பெண்களின் பழிச்சொற்களாலும் கலங்கி, முன்கை வளைகளும் கழன்றனம் ஆயினோம் யாம். நம்முடனே, இரவுப்பொழுதிலே, இக்கடற்றுறையும் உறங்காதிருக்கின்றதே! அதுதான் என்ன காரணமோ?

என்று, தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி, தலைமகட்குக் குறைநயப்பக் கூறினாள் என்க.

**சொற்பொருள்:** மயங்குபிசிர் - நெருங்கிய துளிகள். 2. மல்குதிரை - மிகுதியான அலைகள். 3. வரிப்ப - அழகுசெய்ய, 4. இளமணல் - பூமணல் என்னும் நுண் மணல். காண்வர - காட்சிக்கு இனிதாக. 8. வரிமனை - இழைத்த வண்டல் மனை. 10. சாஅய் - மெலிந்துபோக. 14. கங்குலானே - கங்குற்பொழுதிலே.

**விளக்கம்:** இரவெல்லாம் உறங்காது இருத்தலான், கடலின் அலைமுழக்கமும் கேட்டுக் கொண்டிருப்பதால், இரவு நேரத்தில் துறையும் துஞ்சாது என்றனள். அல்லாமல், அவன் இரவுக்குறி வேட்டுவந்து துறையருகே சுற்றுவதனால்; துறை துஞ்சாது என்றனள் எனலும் பொருந்தும். துயரைத் தன் மேலேற்றிக் கூறினாள், தலைவியின் உறவையும் மனநிலையினையும் தான் அறிந்ததைப் புலப்படுத்துவதற்காக.

## 251. நந்தனின் செல்வம்

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது. **சிறப்பு:** மோரியரின் தமிழகப் படையெடுப்பும், மகாபத்ம நந்தனின் செல்வவளமும் பற்றிய செய்திகள்.

(தலைமகன் பிரிந்து வினைமேற் சென்றிருந்த காலத்திலே, அவன் பிரிவால் ஏற்பட்ட துயரத்தால் வாடி நலிந்தனள் தலைவி. தோழியும் அவள் நிலைகண்டு கவலையுற்றாள். தலைவியின் நிலைமையை அறிவித்து வருமாறு தலைவனுக்குத் தூதரை அனுப்பியபின், தலைவியிடம் வந்து, இப்படி ஆறுதல் கூறுகின்றாள்.)

**தூதும் சென்றன; தோளும் செற்றும்;**
**ஓதி ஒண்ணுதல் பசலையும் மாயும்;**
**வீங்கிழை நெகிழச் சாஅய்ச்; செல்லலொடு**

**நாம்படர் கூரும்அருந்துயர் கேட்பின்,**
**நந்தன் வெறுக்கை எய்தினும் மற்றவண்**

**தங்கலர்-வாழி, தோழி!-வெல்கொடித்**
**துனைகால் அன்ன புனைதேர்க் கோசர்**
**தோல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்,**
**இன்இசை முரசம் கடிப்பிகுத்து இரங்கத்,**
**தெம்முனை சிதைத்த ஞான்றை, மோகூர்**

**பணியா மையின, பகைதலை வந்த**
**மாகெழு தானை வம்ப மோரியர்**
**புனைதேர் நேமி உருளிய குறைத்த**
**இலங்குவெள் அருவிய அறைவாய் உம்பர்,**
**மாசில் வெண்கோட்டு அண்ணல் யானை**

**வாயுள் தப்பிய அருங்கேழ், வயப்புலி**
**மாநிலம் நெளியக் குத்திப், புகலொடு**
**காப்புஇல வைகும் தேக்கமல் சோலை**
**நிரம்பா நீளிடைப் போகி-**
**அரம்போழ் அவ்வளை நிலைநெகிழ்த் தோரே.**

*தோழி! வாழ்வாயாக! நம் தலைவரிடத்தே தூதர்களும் சென்றுள்ளனர். முன்னர்ச் செறிவுடன் விளங்கிய நின் அணிகள் எல்லாம் இப்போது நெகிழ்ந்து கழல, வருத்தத்துடன் நாம் கலங்கியிருக்கின்ற மிகுந்த பொறுத்தற்கரிய துயரினை, அவர்கள் அவரித்தே எடுத்துச் சொல்வார்கள். அதனைக் கேட்பின் -*

*வெற்றிச் சிறப்பு மிகுந்த கொடியினையும், விரைவு மிக்க காற்றைப்போன்று செல்லும்ஒப்பனை செய்யப்பெற்ற தேரினையும் உடையவர் கோசர்கள். அவர்கள் பகைத்து எழுந்தனர். அதனால் மிகப்பெரிய பழைமையை உடைய ஆலமரத்தின், அரிய கிளைகள் நிறைந்துள்ள ஊர் மன்றங்களிலே, போர் முரசங்கள் குறுந்தடியினால் அடிக்கப்பெற்றனவாக, அவற்றின் முழக்கமும் எங்கணும் எழுந்தன.*

*அப்படி அந்தக் கோசர்கள் எதிர்த்த போர் முனைகளையெல்லாம் அழித்து வெற்றி சூடிவந்த காலத்திலே, மோகூர்ப் பழையன் என்பவன், அவருக்குப் பணியாது, வன்மையுடன் அவர்களை எதிர்த்து நின்றான்.*

*அப்போது, அவன்மீது பகைமை மேற்கொண்டு, மிகப்பெரிய சேனையுடன் வந்தவரான புதிய மோரியர்கள், புனையப் பெற்ற தம் தேரின் சக்கரங்கள் உருண்டு செல்லுமாறு, மலையிடங்களை உடைத்துப் பாதையினை அமைத்தனர்.*

விளங்கும் வெண்மையான அருவிகளையுடைய அத்தகைய மலைவழிகளுக்கும் அப்பாலுள்ள,

மாசற்ற வெண்மையான கொம்புகளையும், தலைமைச் செருக்கையும் உடைய யானையானது, தன்னைக் கடித்துக் கொல்லுதலின்றும் தப்பிய அரிய நிறத்தையுடைய வலிமையான புலியினைப் பெரிய நிலம் பள்ளமாகுமாறு தன்கொம்புகளால் வீழ்த்திக் குத்திக்கொன்றது; அந்த வெற்றிச் செருக்குடன், காவலேதும் இல்லாது அது தங்கியிருக்கும் தேக்கு மரச் சோலைகளையுடைய தொலையாத நெடுவழியினையும், கடந்து சென்றுள்ளனர் நம் தலைவர்.

அப்படிச் சென்று, அரத்தல் போழ்ந்து செய்யப்பெற்ற நம் அழகிய வளைகளைத் தம் பழைய நிலையினின்று நெகிழுமாறு செய்தவர் அவர். மகா பத்மநந்தன் என்னும் பாடலிபுரத்து மன்னனுடைய செல்வத்தையே அவர் பெற்றாரென்றாலும், அதற்கு மகிழ்ந்து, அவ்விடத்தேயே தங்கி விடுபவர் அல்லர். விரைவிலேயே திரும்பி வந்துவிடுவர். நின் தோள் வளைகளும் மீண்டு செறிவுறும். கூந்தல் சூழ்ந்த ஒளியுடைய நின்நெற்றியின் பசலையும் இனி மறைந்து நீங்கும்! (அதனால் வருந்தாது இருப்பாயாக.);

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. தூது - தூதர்கள் செற்றும் - செறிவுறும். 3. வீங்கிழை - செறிவுடன் விளங்கிய அணிகள். செல்லல் - வருத்தம். 5. வெறுக்கை - செல்வம். துனைகால் அன்ன - விரைந்த காற்றைப்போன்ற. துனைவு - விரைவு. 8. தொன்மூதலாத்து - மிக்க முதுமை வாய்ந்த ஆலமரத்து. 9. கடிப்பு. இகுத்து இரங்கா - குறுந்தடியினால் அடிப்புண்டு முழங்க. 10. தெம்முனை - கொடிய போர்முனை. 12. மோரியர் - மௌரியர்கள். 17. புகலொடு - செருக்கொடு.

**விளக்கம்:** 'நந்தன் வெறுக்கை எய்தினும்' என்றதனால், தலைவன் மன்னன் எனவும், வடநாட்டிலே போர் வெற்றி கருதிச் சென்றவன் எனவும் கொள்ளலாம். பழையன் கோசர்க்குப் பணியாததனால். அவருக்கு உதவியாக வந்த வம்பர்களாகிய மோரியர் எனக் கொள்க.

**பாடபேதங்கள்:** 5. நந்தர் வெறுக்கை. 14. வரைவாயும்பர். 17, குத்திய புகழொடு.

## 252. அஞ்சான்! ஆற்றான்!

**பாடியவர்:** *நக்கண்ணையார்; திண்பொற் கோழிக் காவிதிமகன் கண்ணனார் எனவும், நக்கண்ணன் எனவும் பாடங்கள்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தலைமகன் சிறைப்புறத் தானாகத், தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.*

*(இரவுக்குறியிடத்தே, தலைமகளைத் தலைமகன் சந்தித்துக் கூடிவருகின்ற காலம். வழியின் ஏதமும் பிறவும் தலைவியின் உள்ளத்தைப் பெரிதும் வாட்டி வருத்துகின்றன. தன் தோழியிடம், தங்கள் களவு உறவின் நிலைமையை அவள் இவ்வாறு கூறி வருந்துகிறாள்.)*

**இடம்படுபு அறியா வலம்படு வேட்டத்து**
**வாள்வரி நடுங்கப் புகல்வந்து, ஆளி**
**உயர்நுதல் யானைப் புகர்முகத்து ஒற்றி,**
**வெண்கோடு புய்க்கும் தண்கமழ் சோலைப்**
**பெருவரை அடுக்கத்து ஒருவேல் ஏந்தித்**

**தனியன் வருதல் அவனும்அஞ்சான்,**
**பனிவார் கண்ணேன் ஆகிய, நோய்அட,**
**எமியேன் இருத்தலை யானும் ஆற்றேன்;**
**மாங்குச் செய்வாம்கொல்-தோழி! ஈங்கைத்**
**துய்அவிழ் பனிமலர் உதிர வீசித்**

**தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்**
**எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்**
**பெருங்குளம் காவலன் போல,**
**அருங்கடி அன்னையும் துயில்மறந் தனளே!**

*தோழி! தான் வீழ்த்தும் விலங்கினம் தனக்கு இடப் புறத்தே வீழ்ந்ததென்று ஒருபோதும் நிகழ்ந்ததை அறியாத, வெற்றி பொருந்திய வேட்டைத் திறனையுடையது, ஒளியுடைய கோடுகளையுடையதுமான புலியும் கண்டு நடுங்குமாறு, அது குறித்த யானையின்மீது ஆளியானது விருப்பங்கொண்டு பாய்ந்துவரும்; உயர்ந்த நெற்றியையுடைய யானையின் புள்ளிகளையுடைய முகத்திலே அறைந்து அதனைக்கொன்று, அதன் வெண்கோடுகளையும் புய்த்துத் தள்ளும். அத்தகைய இடமாகிய, தண்ணென்ற மணம் கமழ்ந்து கொண்டிருக்கின்ற பெரிய மலைகளின் சாரலினிடத்தே, ஒப்பற்றவேல் ஒன்றினை மட்டுமே ஏந்தியவனாகத் தனியாக வருதலை அவனும் அஞ்சுகின்றான் இலன். நீர் ஒழுகும் கண்ணினளாகிக், காம*

நோயானது வருத்தத், தனியாக அவனைப் பிரிந்திருத்தலை என்னாலும் பொறுக்க இயலவில்லை.

அரிய காவலை மேற்கொண்ட நம் அன்னையும், ஈங்கையின் ஆர்க்குக் கழன்ற குளிர்ந்த மலர்கள் உதிருமாறு பெய்த, பெய்யுந் தொழிலினைக் கொண்ட மேகம் பொழிந்து கொண்டிருக்கும் இரவின் நடுச் சாமத்திலே, மோதும் அலைகளின் துளிகள் பரக்கும் சிறிய கரையினையுடைய பெரிய குளத்தைக் காத்திருக்கும் காவற்காரனைப் போலத், தன் துயிலையும் மறந்து என்னைக் காவல் காத்துவருகின்றனள். இனி யாம் எவ்விடத்தே எங்ஙனம் அவருடன் கூடி மகிழ்வோம்?

என்று, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *2. ஆளி - யாளி என்னும் விலங்கு. 3. ஒற்றி - அறைந்து கொன்று. 5. ஒரு வேல் - ஒப்பற்ற வேல் 10. துய் - ஆர்க்கு. 11. தொழின் மழை - பெய்தற்றொழிலின் சிறப்பினையுடைய மழை. 12. கோடு - கரை.*

**விளக்கம்:** தவறாது வேட்டையாடும் ஆற்றலுடைய புலியும் நடுங்குமாறு வந்து, அது குறித்த யானையைத் தான் கொன்று வீழ்த்தும் யாளியை உடைய காடு என்பது, அக்காட்டின்கண் அவன் தனியனாக வருவதற்குத் தான் அஞ்சியதை உணர்த்தியதாகும். அவன் வரும் வழியில் துயருறுவானோ எனவும் அஞ்சுகின்றோம்; அன்னையின் காவலோ கடுமையாகிவிட்டது; அவனைப் பிரிந்து நம்மால் இருக்கவும் முடியவில்லை என்றெல்லாம் தலைவி சொல்வதனால், அவள் உள்ளம் விரைவிலே திருமணம் நிகழவேண்டும் என்ற நினைவு உடையதாயிற்று என்க. சிறு கோடு - சிறிய கரை. பெரிய குளத்துநீரின் அலைகள் கரைகளிலே மோதிக் கொண்டிருக்கும் மழைக்காலத்திலே, கரை உடைந்து போய்விடாது விழிப்பாகக் காத்திருக்கும் காவலன்போலத் தாயும் காத்திருப்பாள் என்க. இது குடும்பச் செல்வி. தலைமகளின் களவு உறவால் ஊரலர்க்கு இடமாகிக் கட்டு அழிந்து போய்விடக் கூடாதே என்ற கவலையால், தாய் காத்திருந்தனள் என்பதையும் உணர்த்தும்.

**பாடபேதங்கள்:** *11. தெழி மழை.*

## 253. பொட்டிட்ட திங்கள்!

**பாடியவர்:** நக்கீரர். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

**சிறப்பு:** *கொங்கர்களை வெருட்டி, அவர்களின் பல நாடுகளையும் கைப்பற்றிய பசும்பூண் பாண்டியன்; வடுகர் பெருமகன் எருமை பற்றிய செய்திகள்.*

*(தலைமகனின் பிரிவினிடத்தே, வாடி மெலிந்து துயருற்றனள் தலைவி. அதுகண்டு தானும் வருந்திய தோழி, அவளைத் தேற்றுவாளாக, "அவன் நின்னை மறந்துவிடுவான் அல்லன்; விரைவிலே வந்துவிடுவான்" என்று உரைக்கின்றாள்.)*

**'வைகல் தோறும் பசலை பாய, என்**
**மெய்யும் பெரும்பிறிது ஆகின்ற; ஓய்யென,**
**அன்னையும் அமரா முகத்தினள்; அலரே,**
**வாடாப் பூவிற் கொங்கர் ஓட்டி,**
**நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்**

**பொன்மலி நெடுநகர்க் கூடல் ஆடிய**
**இன்இசை ஆர்ப்பினும் பெரிதே; ஈங்குயான்**
**சிலநாள் உய்யலென் போன்ம்' எனப் பலநினைந்து**
**ஆழல்-வாழி, தோழி!-வடாஅது,**
**ஆர்இருள் நடுநாள் ஏர்ஆ ஒய்யப்**

**பகைமுனை அறுத்துப் பல்இனம் சாஅய்**
**கணம்சால் கோவலர் நெடு விளிப் பயிர்அறிந்து,**
**இனம்தலைத் தரூஉம் துளங்குஇமில் நல்ஏற்றுத்**
**தழூஉப்பிணர் எருத்தம் தாழப் பூட்டிய**
**அம்தூம்பு அகல்அமைக் கமஞ்செலப் பெய்த**

**துறுகாழ் வல்சியர் தொழுஅறை வௌவி,**
**கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉம்**
**நேரா வன்தோள் வடுகர் பெருமகன்,**
**பேர்இசை எருமை நல்நாட்டு உள்ளதை**
**அயிரியாறு இறந்தனர் ஆயினும்,மயர்இறந்து**

**உள்ளுப தில்ல தாமே-பணைத்தோள்,**
**குரும்பை மென்முலை, அரும்பிய சுணங்கின்,**
**நுசுப்பு அழித்து ஒலிவரும் தாழ்இருங் கூந்தல்,**
**மாக விசும்பின் திலகமொடு பதித்த**
**திங்கள் அன்னநின் திருமுகத்து,**

**ஒண்சூட்டு அவிர்குழை மலைந்த நோக்கே.**

*தோழி! நீ வாழ்க! நாள்தோறும் பசலையானது மென்மேலும் படர்ந்துகொண்டிருக்க, என் உடலும் மெலிந்து விரைவிலே இறக்கும் நிலையினைப் பெற்று வருகின்றது;*

அன்னையும் நம்மேல் விருப்பமுற்ற முகத்தினள் ஆயினள்; ஊர்க்கண் எழுந்த அலரோ, பொற்பூவினை அணிந்த கொங்கர்களை ஓட்டி, அவர் தம் நாடுகள் பலவற்றையும் அகப்படுத்திய பசும்பூண் பாண்டியனின் பொன்வளம் மிகுந்த பெருநகரமாகிய கூடலிலே, அவ்வெற்றி காரணமாகக் கொண்டாடிய இனிய இசையோடு கூடிய கொண்டாட்டங் களின் ஆரவாரத்தினுங் காட்டில் பெரிதாயிருக்கின்றது; இவ்விடத்தே, யான் இனிச் சில நாட்கள்கூட உயிரோடு இரேன் போலும்?" எனவெல்லாம், பலவும் நினைந்து துயரத்தில் ஆழாதே.

செல்வதற்கு அரியதான நள்ளிரவு வேளையிலே, வடநாட்டின் கண்ணதாகிய அழகிய பசுக்களைக் கவர்ந்து வருவதற்கு எண்ணிச் சென்று, பகைவரின் போர்முனைகளை எல்லாம் அழித்து, பல மந்தைகளையும் தன் நாட்டிற்கு ஓட்டி வந்தவன் எருமை என்பவன்.

தம்முடைய நெடிய கூப்பீட்டொலியினை அறிந்து, பசுவினம் எல்லாம் ஒன்றாகத் தம்மிடத்தே கூடிவருமாறு செய்யும் சிறப்புடையவர் கோவலர். அசையும் திமிலினையுடைய நல்ல ஏறுகளின் சருச்சரை கொண்ட கழுத்திலே, தொங்கலாகப் பூட்டியுள்ள அழகிய துளையினையுடைய மூங்கிற்குழாயிலே, நிறைந்திருக்குமாறு செய்த செறிவுமிக்க உணவினைக் கொள்பவர் அவர்கள். கூட்டம் மிக்கவரான அக்கோலவர்களின் தொழுவாகிய அறையினைக் கவர்ந்தும், கன்றுகளையுடைய பெரிய ஆனிரைகளை மன்றுகள் நிறையுமாறு ஓட்டிக் கைப்பற்றிக் கொண்டும் வருபவன் அவன். ஒப்பற்ற வன்மையுடைய தோளினனான, வடுகரின் பெருமானாகிய, பெரும் புகழினையுடைய அந்த எருமை என்பவனின் நல்ல நாட்டினிடத்தே உள்ளதாகிய, அயிரியாற்றினைக் கடந்தும் சென்றவர் நம் தலைவர். என்றாலும்,

மூங்கில் போன்ற தோளினையும், குரும்பை போன்ற மென்மையான முலைகளையும், அரும்பியிருக்கும் தேமல் களையும், இடையின் அழகையும் மறைத்ததாகத் தாழ்ந்து தொங்கும் தழைத்த கரிய கூந்தலினையும் உடையவள் நீ. நின்னுடைய, மாகமாகிய விசும்பிலே பொட்டிட்ட திங்களைப் போல விளங்கும் அழகிய முகத்திலே தோன்றிய, ஒள்ளிய மத்தகமணி அமைந்த, விளங்குகின்ற குழையோடு பொருதுகின்ற கலங்கிய நோக்கினை, அவர் மறந்துவிடாது என்றும் நினைவிற் கொண்டிருப்பவரே யாவர்; (ஆகவே, விரைந்து வருவர்; நீயும் கலங்காதே என்றனள்.)

என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 2. பெரும் பிறிதாகின்று - பெரிதும் வேறுபாடு உடையதாயிற்று. 3. அமரா முகம் - விருப்பமற்ற முகம்; வெறுப்புக் காட்டும் முகம். 4. வாடாப் பூ - பொற் பூ 8. உய்யல் - வாழ்ந்திருத்தல். 10. ஆர் இருள் - மிக்க இருள். ஒய்ய - ஓட்டி வர. 12. கணஞ்சால் கோவலர் - பெருங் கூட்டமாகிய கோவலர். நெடுவிளி - நெடிதான கூப்பீடு. 15. தூம்பு - உட்டுளை; நீர் வடிதற்கு இட்டுள்ள புழைகளைத் தூம்பு என்று இன்றும் தென்னாட்டார் வழங்குகின்றனர். 16. வல்சி - உணவு. 18. நேரா - ஒப்பில்லாத. 20. அயிரியாறு - ஓர் ஆறு. 23. ஒலிவரு - தழைத்து வருகின்ற. 26. மலைந்த - பொருதிய.

**விளக்கம்:** கூந்தலை இருண்ட வானமாகவும், அதனிடையே விளங்கும் முகத்தை, அவ்வானிலே பொட்டிட்ட திங்கள் எனவும் உவமித்த நயம் காண்க.

**பாடபேதங்கள்:** 6. நெடுமதிற் கூடல். 10 ஏரா உய்ய.

## 254. ஊரருகே வந்தாய்!

**பாடியவர்:** மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்; கபிலர் பாடியதெனவும் பாடம். **திணை:** முல்லை. **துறை:** வினைமுற்றி வந்து எய்திய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

(வேந்தனின் காரியமாகத் தலைவியைப் பிரிந்து சென்றிருந் தனன் தலைவன். அந்த வினை முடிவுற்றதும், "தேரினை விரைவிற் செலுத்துக" எனத், தன் பாகனை ஏவினன். அவ்வாறே அவனும் செலுத்திவரத், தேர் ஊரின் அருகே அணுகியதும், தலைவன், தன் பாகனை இவ்வாறு வாழ்த்துகின்றான்.)

**'நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்**
**செம்முது செவிலியர் பலபா ராட்டப்**
**பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி**
**மணன்மலி முற்றத்து, நிலம்வடுக் கொளாஅ.**
**மனைஉறை புறவின் செங்காற் சேவல்**

**துணையொடு குறும்பறை பயிற்றி மேல்செல,**
**விளையாடு ஆயத்து இளையோர்க் காண்தொறும்**
**நம்வயின் நினையும் நல்நுதல் அரிவை**
**புலம்பொடு வதியும் கலங்குஅஞர் அகல,**
**வேந்துஉறு தொழிலொடு வேறுபுலத்து அல்கி,**

**வந்துவினை முடித்தனம் ஆயின், நீயும்,**
**பணைநிலை முனைஇய, வினைநவில் புரவி**
**இழைஅணி நெடுந்தேர் ஆழி உறுப்ப,**
**நுண்கொடி மின்னின்; பைம்பயிர் துமியத்,**
**தளவ முல்லையொடு தலைஇத், தன்ணென**

**வெறிகமழ் கொண்ட வீததை புறவின்**
**நெடிஇடை பின்படக் 'கடவுமதி' என்று யான்**
**சொல்லிய அளவை, நீடாது, வல்லெனத்,**
**தார்மணி மாஅறி வுறாஅ,**
**ஊர்நணித் தந்தனை, உவகையாம் பெறவே!**

*இடையிடையே நரைமயிர் விராவித் தோன்றும் நறிய மெல்லிய கூந்தலையுடையவர்; செவ்விய முதுமை எய்தப் பெற்றவர்; செவிலித் தாயர்கள். அவர்கள், பலப்பல வகையாகப் பேணிப் புனைந்து நின்னைப் பாராட்டியும் வருபவர். பொன்னாற் செய்யப்பெற்ற கிண்கிணிச் சதங்கையின் நலத்தைப் பெற்றுள்ள சிவந்த பாதங்கள், வீட்டின் முற்றத்திலே மணல் மலிந்த நிலத்திலே, தடம் பதியுமாறு ஓடியாடி விளையாடுபவர் ஆய மகளிர்கள். வீட்டிலே தங்கி வாழும் புறாவினது சிவந்த கால்களையுடைய சேவலானது, தன்னுடைய பெடையோடும் குறுகக் குறுகப் பறந்துபறந்து மேலே செல்லுமாறு அவற்றைப் பறக்கவிட்டு, அவர்கள் விளையாடிக் கொண்டிருப்பார்கள். அப்படி விளையாடும் தன் தோழியராகிய அவர்களைக் காணும்போதெல்லாம், நம்மீது நினைவு கொள்ளுகின்றவள் அழகிய நெற்றியினை உடையவளான நம் தலைவி. அவள், தனித்திருக்கும் துயரோடுள்ள மிகுந்த துன்பம் அனைத்தும் நீங்குமாறு -*

*வேந்தற்கு உறுவதாகிய தொழிலோடு வேற்றுநாட்டிலே வந்து தங்கி, அந்தச் செயலையும் நாம் செய்து முடித்தனம்; ஆதலினாலே,*

*நீயும் பந்தியிலே கட்டுண்டு நிற்றலை வெறுத்த, செல்லும் செலவிலே பயின்ற, குதிரைகள் பூட்டிய, அணிகள் அணியப் பெற்ற நெடுந்தேரின் சக்கரங்கள் நுண்மையான மின்னுக் கொடிபோல நிலத்திலே ஊடறுத்துச் செல்ல, அதனால் வழியிடையேயுள்ள பசுமையான பயிர்கள் அறுபட்டுப் போகவும், செம்முல்லை வெண் முல்லையோடு கூடிக்கொண்டு 'தண்' என்ற வெறி மணத்தை வீசிக் கொண்டிருக்கும் மலர்கள் செறிந்து காட்டினது நெடுவழியும் பிற்பட்டுப் போகவுமாக விரையச் செலுத்துவாயாக' என்று, யான் சொல்லிய அளவிலேயே,*

*சற்றும் காலம் தாழ்க்காது, யாம் மகிழ்ச்சி அடையுமாறு, மாலையாகிய மணிகள் அணிந்த குதிரைகளின் உள்ளத்தை அறிந்தவனாக, விரைவாகத் தேரினைச் செலுத்தி, ஊருக்கு அருகாமையிலும் வந்துவிட்டனை (பாகனே! நீ வாழ்க!)*

*என்று, வினைமுற்றி, வந்து எய்திய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *1. நரை - நரை மயிர். 2. செம் - செவ்விய. பாராட்ட - பேணிக் காக்க. 3. கிண்கிணி - ஒலிக்கும் சதங்கை. சேவடி - சிவந்த பாதங்கள். குறும்பறை பயிற்றி - குறுகப் பறக்குமாறு செய்து விளையாடி. 9. புலம்பு - தனிமையால் வரும் வருத்தம். 10. வேறு புலம் - வேற்று நாடு. 11. பணை - பந்தி. முனை இய - வெறுத்த. வினை - ஓடலாகிய வினை.15. தளவம் - செம்முல்லை. 16. வீததை புறவு - பூக்கள் மலிந்த காடு. 19. மா - குதிரை. அறிவுறா அ - உள்ளப் பாங்கினை அறிந்த தன்மையுடன்.*

**விளக்கம்:** *புறாக்களை இணைஇணையாகப் பறக்கவிட்டு ஆடும் மகளிர்களின் விளையாட்டினைக் கண்டு மகிழ்வதற்கு மாறாகத், தானும் என்னுடன் அங்ஙனம்கூடிக் களித்திருக்க முடியாமற் போய்த் தனித்திருப்பதனை நினைந்து வருந்துவாள் என்றனன், 'காண்டொறும் நம் வயின் நினையும்' என்றனன். அதனால், இவனும் அவளுடைய நினைவு மிகுதியுடைய்வனாக இருந்த தன்மையும் அறியப்படும். 'முல்லை மணம் நிறைந்த காடென்றது' கார்ப்பருவ வரவினைக் குறித்தது.*

**பாடபேதங்கள்:** *2. பலர் பாராட்ட 15. முல்லையொடு தோன்றி தோன்ற. 18. அளவையின் நீடாது.*

## 255. தூது சொல்லும் அன்பர்!

**பாடியவர்:** *மதுரை மருதனிள நாகனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள், ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *கடலிடைப் பிரிவுப் பற்றிய செய்திகள்.*

*(தலைவன் பிரிந்திருந்த காலத்து, அதனால் உடல்நலம் வேறுபட்ட தலைமகள், தன்னுடைய ஆற்றாமை மிகுதியாகத் தன்னுடையதோழிக்கு, அதன் தன்மையை இப்படிச் சொல்லுகின்றாள்.)*

**உலககுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**
**புல்வுத்திரைப் பெருங்கடல் நீர்இடைப் போழ,**
**இரவும் எல்லையும் அசைவின்று ஆகி,**

**விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்,**
**கோடுஉயர் திணிமணல் அகன்துறை, நீகான்**

**மாட ஒள்ளெரி மருங்கு அறிந்து ஒய்ய,**
**ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல**
**கழியா மையே, அழிபடர் அகல,**
**உருவர் மனனால்-தோழி!-தண்பணைப்**
**பொருபுனல் வைப்பின் நம்ஊர் ஆங்கண்,**

**கருவிளை முரணிய தண்புதல் பகன்றைப்**
**பெருவளம் மலர அல்லி தீண்டிப்,**
**பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்**
**கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க,**
**அறன்இன்று அலைக்கும் ஆனா வாடை**

**கடிமனை மாடத்துக் கங்குல வீசத்,**
**'திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாய,**
**நிரைவளை ஊருந் தோள்' என,**
**உரையொடு செல்லும் அன்பினர்ப் பெறினே.**

*தோழி! உலகம் புடைபெயர்ந்தது போன்று அச்சம் விளைவிக்கும் நாவாய்கள், புலால் மணமுடைய அலைகள் கொண்ட பெரிய கடலின் நீரிடையிலே, நீரைப் பிளந்து கொண்டு செல்லும். இரவும் பகலும் தங்கியிருத்தல் ஏதும் இல்லாதபடியாக விரைந்துசெல்லும் இயற்கையினதாகிய காற்றானது, அவற்றை அசைத்துச் செல்லுமாறு செய்ய, நாவாய் ஓட்டுவான், கரை உயர்ந்த மணல் செறிந்த துறையினிடத்தே இருக்கும், மாடத்து மீதுள்ள ஒளிவிளக்கால் திசையறிந்து அவற்றைச் செலுத்தப், பொருளீட்டும் முயற்சி காரணமாக நம்மைப் பிரிந்து, கடல்மேற் சென்றவர் நம் தலைவர்.*

*நீர்வளமிக்க மருதநிலமாகிய நீர்மோதும் நாட்டிலேயுள்ள நம்முடைய ஊரினிடத்தே வாடையும் எழுந்தது. அது, கருவிளையின் பூவோடு மாறுபட்ட குளிர்ந்த பகன்றைச் செடியின், மிக்க செழுமையுடைய பூக்களின்மீது மோதி, அவற்றின் அகவிதழ்களை அசைத்து, மகரந்தங்களை உதிர்க்கும்; பலாக்காய் போலும் புறத்தினையுடைய பசுமையான பழங்களைக் கொண்ட பாகற்கொடிகள், கூதாளியின் முதிய இலைகளையுடைய கொடிகளின் கூட்டத்திலே கிடந்து அசைந்தாடுமாறு செய்யும்; அறமற்ற வகையிலே இப்படி அனைத்தையும் வருத்தும் வாடையானது, கவலையுடைய நம் மனையின் மாடத்திலேயும் இரவெல்லாம் புகுந்து வீசும். திருந்திய அணிகள் நெகிழ்ந்து வீழவும்,பெரிய அழகெல்லாம்*

அழியவும், தோள்களின் நிறையான வளைகள் சோர்ந்து கழியவுமாக, யானும் அதற்கு ஆற்றாது அதனால் வருந்துவேன். இதனை, இப்படி என்று சொல்வதான தன்மையோடு, அவரிடம் தூதாகச் செல்லும் அன்புடையாரை நாம் பெற்றோமானால்.

நம்மை அழிக்கும் இந்தத் துன்பம் நீங்குமாறு இனனமும் நாட்கள் பலவற்றையும் அவ்விடத்திலேயே கழியாமல், நம் காதலரும் விரைந்து வந்துவிடுவார்; (அங்ஙனம் சென்று உரைப்பாரும் இலரே?)

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகள், ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. கிளர்தல் - புடைபெயர்தல். உருகெழு - அச்சம் நிறைந்த. வங்கம் - மரக்கலம்; அதனுடைய அசைவுஉலகே புடைபெயர்வது போன்ற அச்சத்தைத் தருவதாகும் எனக் கொள்க. 4. வங்கூழ் - காற்று. 6. நீகான் - செலுத்துவோன். 6. மாடவொள் எரி - கலங்கரை விளக்கம். மருங்கு - பக்கம்: செலுத்தும் பக்கமாகிய திசைகள். 7. ஆள்வினை - தொழில் முயற்சி. பகன்றை - சிவதைக் கொடி என்பர். 12. அல்லி அகவிதழ் - அல்லியரிசி எனவும் கூறுவர். 15. அறனின்றலைக்கும் வாடை - வருந்துவோரை மேலும் அலைக்கழித்தல் அறமன்று; அதனையே செய்தலால், வாடையை இப்படிக் கூறினார். 19. உரையொடு செல்லும் - தூதோடு செல்லும்.

**மேற்கோள்:** காலத்திற் பிரிவு தலைமகள் ஒழியப் பிரிந்தமைக்கு உதாரணமாக, 'முந்நீர் வழக்கம் மகடூவோடு இல்லை' என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் இதனைக் காட்டினர்.

"தூது விடுவது காரணமாக உரைத்தது' எனவும், பின் பனி வந்தவாறும், நண்பகல் கூறாமையும் அவர் குறித்த காலம். இதுவென்பது தோன்றியவாறும் காண்க எனவும்,இச் செய்யுளைக் காடி, 'இருவகைப் பிரிவும்' என்னும் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் உரைப்பர்.

"இப்பாட்டுள் வணிகன் தலைவனாகவும் கொள்ளக் கிடத்தலின், தலைவியும் அவ்வருணத் தலைவியாம் என்று உணர்க," என இதனை, 'ஏவன் மரபின்' என்னும் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் காட்டுவர்.

**விளக்கம்:** இதனால், அந்நாளில் பொருளீட்டும் முயற்சியுடையோர் தரை வாணிகத்துடன் மட்டுமல்லாது, கடல் வாணிகத்தும் ஈடுபட்டிருந்தனர் என்ற உண்மையும்,

*கலங்களுக்குத் திசை காட்டுவதற்குக் கலங்கரை விளக்கங்கள் அங்கங்கே இருந்த தன்மையும் பெறப்படும்.*

## 256. கனவு பொய்த்தவனின் கதி!

**பாடியவர்:** *மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார்.* **திணை:** *மருதம்.* **துறை:** *தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.* **சிறப்பு:** *கள்ளூரின் வளம் பற்றிய செய்தி.*

*(தலைமகன் பரத்தையின் உறவுகொண்டு வீட்டை மறந்து அலைய, அதனால் தலைவி அவன்மீது ஊடல் கொண்டவளாயிருந்தனள். ஊரிலோ அவனுடைய ஒழுக்கத்தைக் குறித்து எழுந்த பழிச்சொல்லும் மிகுதியாயிற்று. அதற்கு அஞ்சிய அவன், மீளவும் தன்வீட்டுக்கு வரத், தலைவியின் தோழி இவ்வாறு கூறி, அவனுறவை மறுத்து உரைக்கின்றாள்.)*

**பிணங்குஅரில் வள்ளை நீடுஇலைப் பொதும்பின்**
**மடிதுயில் முனைஇய வள்உகிர் யாமை**
**கொடிவிடு கல்லிற் போகி, அகன்துறைப்**
**பகுவாய் நிறைய, நுங்கின் கள்ளின்**
**நுகர்வார் அருந்து மகிழ்புஇயங்கு நடையொடு**

**தீம்பெரும் பழனம் உழக்கி, அயலது**
**ஆம்பல் மெல்அடை ஒடுங்கும் ஊர!**
**பொய்யால்; அறிவேன்; நின் மாயம் அதுவே**
**கையகப் பட்டவும் அறியாய்; நெருநை**
**மைஎழி உன்கண் மடந்தையொடு வையை**

**ஏர்தரு புதுப்புனல் உரிதினின் நுகர்ந்து,**
**பரத்தை ஆயம் கரப்பவும், ஒல்லாது**
**கவ்வை ஆகின்றால், பெரிதே; காண்தகத்**
**தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக்,**
**கரும்பமல் படப்பைப், பெரும்பெயர்க் கள்ளூர்**

**திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனி லாளன், 'அறியேன்' என்ற**
**திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்,**
**முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி**
**நீறுதலைப் பெய்த ஞான்றை;**

**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே.**

*வலிய நகத்தினையுடைய யாமையானது, வள்ளிக் கொடிகள் பின்னிக் கிடக்கும் தூரிலே, நீண்ட இலைச் செறிவுள்ள இடத்திலே, அயர்ந்து கிடந்து உறங்குவதற்கு*

வெறுத்தது. ஒலிசெய்யும் பரற்கற்களின் வழியாகச் சென்றது. அகன்ற நீர்துறைக் கண்ணே திறந்த வாய் நிறையுமாறு பனங்கள்ளினை உண்பவர் சிந்திய ஒழுக்கினை உண்டது. அந்தமயக்கத்துடன் செல்லும் தள்ளாடிய நடையினையும் உடைய தாயிற்று. இனிய பெரிய வயல்களை உழப்பிக்கொண்டு, அதன் அயலதாகிய ஆம்பலின் மெல்லிய இலைகளுக்குள்ளே சென்று, முடிவிலே ஒடுங்கிக் கிடந்தது. அத்தகைய தன்மையுடைய ஊருக்கு உரியவனே!

ஏதும் பொய்யாகக் கூறாதே! நின்னுடைய மாயம் எல்லாம் யான் அறிவேன். அது, தெளிவாக வெளிப்பட்ட செய்தியினை நீதான் அறியமாட்டாய்.

நேற்று, மையுண்ட எழில்விளங்கும் கண்களையுடைய பரத்தையுடன், வையையின் அழகுபொருந்திய புதுப் புனலிலே, உரிமையுடன் நீ கூடி நீர்விளையாடி இன்புற்றனை. அதனைப் பரத்தையின் தோழிமார் மறைக்கவும் முயன்றனர். எனினும், அது அவரால் மறைக்கவும் முடியாமற்போய், ஊரிலே மிகவும் பழியாகவும் ஆகிவிட்டது.

தொன்மையான புகழ் நிறைந்த, அழகு விளங்கும் பலவகைப் பூக்கள் நிரம்பிய வயல்களையும், கரும்பு நிறைந்த தோட்டங் களையும் உடையது, சிறப்பு வாய்ந்த கள்ளூர். அதன் கண்,

அழகிய நெற்றியினையுடைய இளையவள் ஒருத்தியின் அழகிய நலத்தினைக் களவிலே உண்டனன் ஒருவன். பின், அவளைக் கைவிட்டனன். அத்துடன், அந்த அறனில்லாத தன்மையின், "இவளை யான் பார்த்தும் அறியேன்" என்று, நீதியில்லாத கொடிய சூளினையும் சான்றோர்பால் உரைத்தனன். அவையத்தார், அதன் உண்மையை அறிந்த சான்றினர்களை வினவி, அவனுடைய பொய்த்தன்மையை நன்கு உணர்ந்தனர்.

தளிர்கள் அடர்ந்த பெரிய மரத்தின் முக்கவரான கிளையிலே அவனை இறுக்கக் கட்டிவைத்து, நீற்றினையும் அவன் தலையிலே பெய்து, அவனை ஒறுத்தனர், அப்போது, சிறப்பு மிகுந்த அந்த அவையின் கண்ணே, அவனைக் குறித்து எழுந்த இகழ்ச்சி ஆரவாரத்தினும், நின்னைப்பற்றி எழுந்த அலரின் ஆரவாரம் பெரிதாயிற்றே!

என்று, தோழி தலைமகற்கு வாயின் மறுத்துக் கூறினாள் என்க.

**சொற்பொருள்:** *1. பிணங்கர் - பின்னிக் கிடத்தல். அரில் - தூறு. பொதும்பு - செறிவுள்ள இடம். 2. மடிதுயில் - அயர்ந்த உறக்கம். 3. நொடிவிடு - நொடித்து விடுதல்; ஒலி செய்தல். 4. நுங்கிற்கள் - புளித்துப் பொங்கிய பனங்கள். 5. உகுவார் - ஒழுக விடுவார். மகிழ்வு இயங்கும் நடை - களிவெறியாலே நடக்கும் தள்ளாடிய நடை. 8. பொய்யால் - பொய்யாதே. மாயம் - வஞ்சனை.15. அமல் - செறிந்துள்ள. படப்பை - தோட்டக்கால்கள். 18. அறிகரி - அறிந்த சான்றினர். கடர் அய் - வினவி அறிந்த. 20. நீறு - சாம்பர்.*

**விளக்கம்:** *ஒரு பெண்ணைக் கெடுத்துவிட்டவன். அவளைக் கைவிட்டால், முக்கவரான கிளைகளின் நடுவே கட்டிவைத்து, நீற்றினைத் தலையிலே பெய்து தண்டனை விதிக்கும் வழக்கம் இப்பாட்டிலே சொல்லப்பட்டது. அதனால், அவன் குற்றம் ஊரறிந்த பழியுடையதாக, வேறு எவரும் அவனோடு உறவு கொள்ளாதவராகிப் போக, அவனும் மானம்கெட்டுப் பழியுடையவனாவான். பலருக்கும் அது எச்சரிக்கையாகவும் இருக்கும். இதனைக் கூறினாள், தலைவனின் செயலையும பழியுடைத்தென்று எச்சரிக்கும் கருத்தால் என்க.*

**உள்ளுறை:** *'யாமை வள்ளை நீடிலைப் பொதும்பில் துயில் தலை வெறுத்து, நெடிவிடு கல்லிற் போகி, கள்ளின் ஒழுக்கை உண்டு, மயங்கிய நடையதாகி, வயலையும் உழக்கிச் சென்று, அதன் அயலேயுள்ள ஆமபல் மெல்லடை ஒடுங்கும் ஊர' என்றனள். இது, தலைவன் தன் காதலியிடத்து உறவை வெறுத்து, ஆரவாரத்துடன் பரத்தையர் சேரியிலே சென்று அவர் இன்பத்தை நுகர்ந்து, அந்த மயக்கத்தோடும், இற்பரத்தைபாற் சென்று தங்குபவனாயினான் என்று பழித்ததாகும்.*

**பாடபேதங்கள்:** *6. நுகர்வார் உந்து. 8. பொய்யான் அறிவன்.*

## 257. நடக்கும் வல்லமை

**பாடியவர்:** *உறையூர் மருத்துவன் தாமோதரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *உடன் போகாநின்ற தலைமகட்குத் தலைமகன் சொல்லியது.*

*(தலைமகள், தலைமகனின்மீது கொண்டிருந்த காதல் மிகுதியாயிருந்தது. ஆனால், அதனை அவளுடைய வீட்டினர் எவரும் ஆதரிக்கவில்லை. எனவே, அவள் அவர்களுடைய காவலையும் கட்டுப்பாடுகளையும் கடந்து, தன் தலைவனுடன் உடன்போக்கிலே சென்றுவிடுகின்றாள். இடைவழியிலே, அவளுடைய மென்மையையும், தன்பாற் கொண்ட காதலன் பின்*

*காரணமாக அவள் பாலைவழி நடத்தலாகிய துயரைப் பொறுத்து வழிநடத்தலையும் எண்ணி வியந்த காதலன், இவ்வாறு அவளைப் புகழ்கின்றான்.)*

**வேனிற் பாதிரிக் கூனி மாமலர்**
**நறைவாய் வாடல் நாறும் நாள், சுரம்,**
**அரிஆர் சிலம்பின் சீறடி விசப்ப,**
**எம்மொடு ஓர்ஆறு படீஇயர், யாழநின்**
**பொம்மல் ஓதி பொதுள வாரி,**

**அரும்புஅற மலர்ந்த ஆய்பூ மராஅத்துச்**
**கரும்புசூழ் அலரி தைஇ, வேய்ந்த நின்**
**தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும்**
**வண்டுகடிந்து ஓம்பல் தேற்றாய்; அணிகொள**
**நுண்கோல் எல்வளை தெளிர்க்கும் முன்கை**

**மெல்இறைப் பணைத்தோள் விளங்க வீசி,**
**வல்லுவை மன்னால் நடையே-கள்வர்**
**பகைமிகு கவலைச் செல்நெறி காண்மார்,**
**மிசைமரம் சேர்த்திய கவைமுறி யாஅத்து**
**நார் அரை மருங்கின் நீர்வரப் பொளித்துக்,**

**களிறுசுவைத் திட்ட கோதுடைத் ததரல்**
**கல்லா உமணர்க்குத் தீமூட்டு ஆகும்,**
**துன்புறு தகுவன ஆங்கண், புன்கோட்டு**
**அரிலிவர் புற்றத்து அல்குஇரை நசைஇ**
**வெள்அரா மிளிர வாங்கும்**

**பிள்ளை எண்கின் மலைவயி னானே.**

கள்வர்களின் பகைமிகுந்த கவர்த்த வழிகள் பலவற்றுள்ளும், செல்வதற்கு ஓரளவு பாதுகாப்பான வழியைப் பின்வருபவர் கண்டு உணரும் பொருட்டாக, முன் செல்வோர் மரங்களின் மேலாகக் கவர்த்த சிறு கொம்புகளைச் சேர்த்து வைத்துச் செல்வர். அப்படிச் சேர்த்துள்ள ஒரு யா மரத்தினது, நாரினையுடைய அடிமரப் பக்கங்களிலே, நீர் வருமாறு உரித்துக் களிறு சுவைத்துக் கழித்துப் போட்ட சக்கையாகிய சுள்ளிகள், கல்லாமையினையுடைய உப்பு வாணிகர்கட்குத் தீமூட்டும் சுள்ளிகளாகப் பயன்படும்.

துன்பம் உறத் தகுவனவாகிய அவ்விடங்களில், சிறுசிறு புழைகளையுடைய சிறு தூறுகள் படர்ந்திருக்கும். புற்றினிடத்தே, இராப்பொழுதிலே உண்ணும் புற்றாஞ்சோறாகிய இரையினை விரும்பிய கரடிக்குட்டிகள், அவ்விடத்தே இருக்கும்

வெண்மையான பாம்புகள் பிறழும்படியாகப் புற்றினைப் பெயர்த்துக் கொண்டிருக்கும். அத்தகைய மலைப் பக்கங்களிலே,

பாதிரியின், தேன்பொருந்திய கூனலான பெரிய பூக்களின் வாடல்கள் நாறிக்கொண்டிருக்கும் வேனிற்காலத்தின் பகற்பொழுதிலே, சுரநெறியின் கண்ணே, அரிகளைப் பொருந்திய சிலம்புகளையுடைய நின் சிறிய அடிகள் சிவக்குமாறு, எம்முடன் ஒருவழியே பொருந்தி வருபவளாயினை.

பொலிவுற்ற கூந்தலை நெருங்க வாரி, அரும்பு இல்லையாக மலர்ந்த அழகான பூக்களையுடைய வெண்கடம்பினது, வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கின்ற மலர்களைத் தொடுத்துச் சூடியுள்ள, நின்னுடைய தேன் ஒழுகும் கூந்தலிலே, குறியனவாகப் பலவாக வந்து மொய்க்கும் வண்டுகளைக் கடிந்து ஓட்டி, நின்னைப் பாதுகாத்தலைக் கூட அறியாதவள் நீ.

இப்பொழுதோ, அழகு கொள்ளுமாறு, நுண்ணிய கோற்றொழிலினையுடைய ஒளிபொருந்திய வளையல்கள் ஒலி முழங்கும் முன் கையினையுடைய, மெல்லிய சந்தினையுடைய பணைத்த நின்தோள்கள் விளக்கமுற, வீசி வீசி வழி நடப்பதற்கும் நீ வல்லமை உடையவளாயினையே!

என்று, உடன் போகா நின்ற தலைமகட்குத் தலைமகன் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. வேனிற் பாதிரி - வேனிலுக்கு உரிய பாதிரியும் ஆம். கூனி மாமலர் - கூனலான பெரிய மலர். 2. நறைவாய் - தேன் பொருந்திய. வாடல் - உதிர்ந்து வாடிய இதழ்கள். 3. அரியார் சிலம்பு - அரிகள் பொருந்திய சிலம்பு; அரிகள் இடப்பட்ட ஒலிக்கும் சிலம்பும் ஆம். 4. ஓராறு - ஒர தன்மைத்தான நிலை; ஒன்றுபட்ட நிலை; அது கலந்த கேண்மையைக் குறித்தது. 5. பொம்மல் - பொலிவு. பொதுள - நெருங்க. 7. அலரி - மலர்ந்த பூக்கள். 8. குறும்பல - குறியதான பல வண்டினம். மொசிக்கும் - மொய்க்கும் 9. ஓம்பல் - கூந்தலின் அழகுப் புனைவினை ஓம்புதலும், தன்னுடைய நலனை ஓம்புதலும். 10. எல் வளை - ஒளியுடைய வளைகள். தெளிர்க்கும் - ஒலிக்கும்.11. இறை - சந்து. பணைத் தோள் - மூங்கில் போன்ற தோளும் ஆம். விளங்க - விளக்கமுற; வெளிப்பட்டுத் தோன்ற. 14. கவை - கவட்டைக் கொம்பு. 15. தீமூட்டு - தீ மூட்டுவதற்கான எரி துரும்பு. 19. அல்கிரை - இரவு வேளைக்கான இரை. 20. வெள் அரா - வெண்மையான பாம்பு; மிளிர - பிறழ்ந்து கிடந்து ஒளிரவும் ஆம். 21. பிள்ளை எண்கு - கரடியின் குட்டிகள். மலைவயின் - மலையிடத்து.

**உள்ளுறை:** செல்வதற்குத் தக்க வழியெனக் காட்டிய நெறியும் களிறுகளை உடையதான அச்சமுடைய வழியானலும், கல்லா உமணர் களிறு சுவைத்த சக்கைகளை எரி துரும்பாகப் பயன்படுத்திச் சோறட்டு உண்பர். அதுபோலவே, உடன் போக்கின் நெறி அறத்தோடு பட்டதென்றாலும், அது இடையிடையே இன்னல்கள் பலவும் உடையது; அதனைப் பாராட்டாது செல்லல் வேண்டும் என்றான்.

கரடியின் குட்டியே யானாலும், அதற்கும் பாம்பைப் புரட்டித் தான் விரும்பிய இரையை எடுத்துத் தின்னும் துணிவும் வல்லமையும் இயல்பாகவே உண்டாயிற்று. அது போலவே, வழியின் ஏதங்களைக் கடக்கும் ஆற்றலும் துணிவும், மெல்லியளாகிய அவளுக்கும், பெண்மையின் இயல்பான காதற்கிழமையால் வந்தது என்று கொள்க.

**விளக்கம்:** காட்டிலே செல்பவர், இன்றும், வழியறிய அடையாளம் இட்டுச் செல்வர். அது, பிறகு வருவார்க்கும் பயனுடையதாயிருக்கும். இந்த மரபு முன்னரும் இருந்தது என்பதைச், சென்னெறி காண்மார் மிசைமரஞ் சேர்த்திய கவை' என்பது காட்டுவதாகும்.

**மேற்கோள்:** இச் செய்யுள், கொண்டு தலைக்கழிதற்கண் தலைவன் தலைமகளின் நடையை வியந்தது எனக் கொண்டு தலைக் கழியினும் என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டுவர்.

## 258. ஒலியற்ற மணி!

**பாடியவர்:** பரணர். **திணை:** குறிஞ்சி. **துறை:** அல்ல குறிப்பிட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** நன்னன் உதியனின் அருங்கடிப்பாழியிலே வேளிர் காவலாக வைத்த பொன் முதலியன பற்றிய செய்திகள்.

(தன் காதலியைப் பெற்று நுகரலாம் என்ற ஆர்வத்துடனே, இரவுக்குறியிடத்தே பெரிதும் முயன்று சென்று காத்திருந்தும், பல நாட்களும் சென்று, அவளைக் காணாதவனாகிய தலைவன், தன் நெஞ்சிற்குச் சொல்லி இப்படி வருந்துகின்றான்.)

**நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்,**
**தொன்முதிர் வேளிர் ஓம்பினர் அறிந்தும், அன்னோள்**
**பொன்னினும் அருமைநற்கு அறிந்தும், அன்னோள்**
**துன்னலம் மாதோ எனினும், அஃதுஒல்லாய்-**
**தண்மழை தவழும் தாழ்நீர் நனந்தலைக்** 5

**கடுங்காற்று எடுக்கும் நெடும்பெருங் குன்றத்து**
**மாய இருள் அளை மாய்கல்போல,**
**மாய்கதில்-வாழிய, நெஞ்சே!-நாளும்,**
**மெல்இயர் குறுமகள் நல்அகம் நசைஇ**
**அரவுஇயல் தேரும் அஞ்சுவரு சிறுநெறி**

**இரவின் எய்தியும் பெறாஅய், அருள்வரப்**
**புல்லென் கண்ணை புலம்புகொண்டு, உலகத்து**
**உள்ளோர்க்கு எல்லாம் பெருநகை யாக;**
**காமம் கைம்மிக உறுதர,**
**ஆனா அரும்படர் தலைத்தந் தோயே!**

*நெஞ்சமே! நீ வாழ்க!*

*அரிய காவற் சிறப்பை உடையது, நன்னன் உதியன் என்பானுக்கு உரிய பாழிச்சிலம்பு. தொன்மைமிக்க வேளிர்கள் தம்முடைய பொன்னை எல்லாம் அவ்விடத்தே பாதுகாவலுடன் வைத்தனர். அதனைச் சென்று முயன்று அடைவதைக் காட்டினும் அடைவற்கு அருமையானவள் அவள் என்பதை நன்றாக நீ அறிவாய். அறிந்தும், அவளை யாம் நெருங்கவே மாட்டோம் என நான் கூறிய பின்னும், நீ அவற்றிற்கு இணங்காதாய் ஆயினை.*

*மென்மையான தன்மையுடைய இளைய தலைவியின் நல்ல மார்பகத்தைத் தழுவுதலையே பெரிதும் விரும்பினாய். பாம்புகள் இரைதேடிக்கொண்டிருக்கின்ற அச்சந் தோன்றும் ஒடுங்கிய வழியினை, நாள்தோறும் இராப்பொழுதிலே கடந்தும் சென்றாய். சென்றும் அவளைப் பெறாதாய் ஆகிக் காண்பார்க்கு அருள் தோன்றுமாறு புல் என்ற கண்களையும் உடையையாய்த் தனிமை கொண்டும் வருந்துகிறாய். உலகத்திலே உள்ளவர்களுக்கு எல்லாம் பெரிதும் நகையாடுவதற்கு உரியையும் ஆயினை. காமம் அளவு கடந்து வருத்துதலால், அமையாத அரிய துன்பத்தினையும் எனக்குத் தந்து விட்டனை.*

*குளிர்ச்சியான மேகங்கள் தவழ்ந்து கொண்டிருக்கும், வீழும் அருவி நீரினையுடைய அகன்ற இடத்திலேயுள்ள, கடுமையான காற்றுச் சுழன்று வீசும், நெடிய பெரிய குன்றத்திலே, மயக்கத்தை விளைவிக்கும் குகையிலே, ஒளியற்றுக் கிடக்கும் மணியைப் போல, நீயும் ஒளிகெட்டு அழிந்து ஒழிவாயாக.*

*என்று, அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *அருங்கடி - அரிய காவலையுடைய. பாழி - பாழிமலை; வடாற்காட்டுச் சவ்வாது மலைத்தொடர்களுள் ஒன்று. 4. துன்னலம் - அடையோம். 5. நனந்தலை - அகன்ற இடம். 7. அளை - குகை. கல் - மணி; மாணிக்கக் கல்; அது மாய்தலாவது இருளின் காரணமாக எவ்வகை ஒளியுமின்றிக் கிடத்தல். 8. தில் - அசை. 9. குறுமகள் - இளமைப் பருவத்தாள். நல்லகம் - நல்ல மார்பகம். 14. கைம்மிக - அளவு கடந்து வெளிப்பட்டுப் பெருக.*

**விளக்கம்:** *தலைவியைத் தான் அடையவியலாத நிலைக்கு, அருங்கடி பாழியிலே ஓம்பினர் வைத்த பொன்னை அடைய வியலாத நிலையைக் கூறியது, தலைவியும் இற்செயிக்கப்பட்டுப் பெரிதும் காவல் உடையவளாயினள் என்பதை உணர்த்துதற்கு.*

**மேற்கோள்:** *இப்பாட்டு, நெஞ்சினை இரவு விலக்கியது என, 'மெய்தொட்டுப் பயிறல்' என்னும் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்,*

**பாடபேதங்கள்: துறை:** *அல்லகுறிப்பட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறியது. 8. வாழிய என் நெஞ்சே.*

## 259. தோய்க நின் முலையே!

**பாடியவர்:** கயமனார் **திணை:** பாலை. **துறை:** உடன் போக்கிற்கு நேர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

*(தலைவி இற்செறிக்கப்பட்டாள். அவள் காதலனை அவளால் சந்திக்க முடியவில்லை. காவலும் மிகுதியாயிற்று. அவள் வாடி நலிந்தாள். அவன் நிலையும் அஃதாயிற்று. இருவர் உறவுக்கும் உதவி நின்ற தோழிக்கு நெஞ்சம் உருகிற்று. காதலனுடன் உடன்போக்கிலே சென்றுவிடத் தலைவியைத் துணிவு கொள்ளச் சொல்லுகின்றாள்.)*

**வேலும் விளங்கின: இளையரும் இயன்றனர்;**
**தாரும் ததையின; தழையும் தொடுத்தன;**
**நிலம்நீர் அற்ற வெம்மை நீங்கப்**
**பெயல்நீர் தலைஇ உலவைஇலை நீத்துக்**
**குறுமுறி ஈன்றன, மரனே; நறுமலர்**

**வேய்ந்தன போலத் தோன்றிப், பலஉடன்**
**தேம்படப் பொதுளின பொழிலே; கானமும்,**
**நனிநன்று ஆகிய பனிநீங்கு வழிநாள்,**
**பால்எனப் பரத்தரும் நிலவின் மாலைப்**
**போதுவந் தன்று, தூதே; நீயும்**

**கலங்கா மனத்தை ஆகி, என்சொல்**
**நயந்தனை கொண்மோ-நெஞ்சுஅமர் தகுவி!**
**தெற்றி உலறினும் வயலை வாடினும்,**
**நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்,**
**நின்னினும் மடவள் நனிநின் நயந்த**

**அன்னை அல்லல் தாங்கி, நின் ஐயர்**
**புலிமருள் செம்மல் நோக்கி,**
**வலியாய் இன்னும் தோய்க, நின் முலையே!**

*என்னுடைய நெஞ்சம் விரும்புகின்ற,சிறந்த தகுதியினை உடையவளே!*

*வேல்களும், நெய்பூசப் பெற்றும் புதுக்கியும் விளக்கம் பெற்றன. ஏவலாளர் பலரும் புறப்பட்டனர் மாலைகளும் கட்டப்படுகின்றன. தழையுடைகளும் தொடுக்கப் பெறுகின்றன.*

*நிலமும் நீரற்ற தன் வெம்மை நீங்கியதாயிற்று. மழைநீர் தலைப்படுதலினால், மரங்கள் தம் வாடிய இலைகளை உதிர்த்துக் குறுகிய தளிர்களை ஈன்றுள்ளன. பொழிலின்கண், நறு மலர்கள் வேய்ந்திருப்பன போலத் தோன்றுவனவாக, பலவும் ஒரு சமயத்தே தேன்பொருந்த மலர்ந்து செறிந்துள்ளன. காடும், மிகவும் நல்லதாக ஆகிய பனிக்காலம் நீங்கி, அடுத்துவரும் இளவேனிற் காலத்தினை உடையதாயிற்று. பால்போல் ஒளிபரவிய நிலவினைக் கொண்ட மாலைப் பொழுதும் தூதாக வந்துள்ளது.*

*மேடையிலுள்ள பூஞ்செடிகள் வாடிப்போனாலும், வயலைக் கொடிகள் வாடினாலும், நொச்சியின் மென்மையான கிளைகள் வளைந்த கதிர்க் கொத்துக்கள்மீது வாடிச் சாய்ந்தாலும், நின்னைக்காட்டினும் மடமை உடையவளான நின்னை மிகவும் விரும்புகின்ற அன்னையானவள், துன்பமுற்று வருந்துபவளாவாள். நின்னுடைய தமையன்மார், புலியும் மயங்கும் தலைமையுடன் காவல் காத்திருப்பர். அதனையும் கருதுவாயாக.*

*இதனால், நீயும் கலங்காத மனத்தை உடையவளாகி, என் சொற்களை விருப்பமுடன் கேட்டு, அதன்படியே நடந்து கொள்வாயாக. உடன் போக்கினையே துணிவாயாக. இன்னும் நின் முலைகள் அவன் மார்பிடத்தேயே பொருந்துவதாக. (தலைவியைத் தழுவித் தோழி விடைபெறுகிறாள்)*

*என்று, உடன்போக்கிற்கு நேர்ந்த தோழி தலைமட்குச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. விளங்கின - விளக்கம் பெற்றன; அது தீட்டியும் நெய்பூசியும் போருக்குத் தகுதிப்படுத்துவதனால் அமையும், வினைஞர் - போர் வினைஞர்; ஏவலாளர்களும் ஆம். 4. உலவை இலை - வாடிய இலைகள் 5. குறுமுறி - சிறிய துளிர்கள். 7. பொதுளின - செறிந்தன. 8. பனிநீங்கு வழிநாள். பனிக்காலம் கழிந்த இளவேனிற் காலம். 10. போது வந்தன்று தூதே - போது தூதாக வந்தது; அல்லது போதிலே நின் காதலனிடமிருந்து தூதுச் செய்தியும் வந்தது எனவும் கொள்க. 12. தகுவி - தன்மை உடையவளே - 13. தெற்றி - மேடையிலுள்ள பூச்செடிகள். 15. மடவள்! மடமையுடையவள். 18. தோய்க - பொருந்துக.*

**விளக்கம்:** *'காலம் கூடியிருக்கத் தூதுரைத்து வருகின்றது. நீ அன்னையின் அல்லலையும், தமையன்மாரின் சீற்றத்தையும் எண்ணி, இங்கே கிடந்து நலியாதே; விரைந்து உடன் போக்கிலே சென்றுவிடுக' என்கிறாள் தோழி.*

**மேற்கோள்:** *'இவ்வகப்பாட்டுப் போக்குதற்கண் முயங்கிக் கூறியது எனத், 'தலைவரும் விழும நிலையெடுத்து உரைப்பினும்' என்னுஞ் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர், காட்டுவர்.*

## 260. அன்பிலாளன் அறிவு!

**பாடியவர்:** *மோசிக் கரையனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியது.*

*(இரவிலே காதலர் கூடுவதற்காகக் குறிப்பிட்டிருக்கும் இடம்; தலைமகளும் தோழியும் பேசிக்கொண்டிருக்கின்றனர். தலைமகன் ஒருபுறமாக மறைந்திருக்கிறான்; தோழியினால் சொல்லெடுக்கப் பட்ட தலைமகள் அப்போது அவளுக்கு இப்படிச் சொல்லுகின்றாள்.)*

**மண்டிலம் மழுக, மலைநிறம் கிளர,**
**வண்டினம் மலர்பாய்ந்து ஊத, மீமிசைக்**
**கண்டற் கானல் குருகினம் ஒலிப்பக்,**
**கரைஆடு அலவன் அளைவயின் செறியத்,**
**திரைபாடு அவியத், திமில் தொழில் மறப்பச்,**

**செக்கர் தோன்றத், துணைபுணர் அன்றில்,**
**எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக்,**
**கழிமலர் கமழ்முகம் கரப்பப், பொழில்மனைப்**

**புன்னை நறுவீ பொன்நிறம் கொளாஅ,**
**எல்லை பைப்பயக் கழிப்பி எல்உற,**

**யாங்குஆ குவள்கொல்? யானே நீங்காது,**
**முதுரத்து உறையும், முரவுவாய் முதுபுள்**
**கதுமெனக் குழறும், கழுதுவழங்கு, அரைநாள்,**
**நெஞ்சுநெகிழ் பருவரல் செய்த**
**அன்பி லாளன் அறிவுநயந் தேனே.**

*மலைகள் நிறம் பெற்றன. வண்டினம் மலர்களிலே பாய்ந்து ஊதிக் கொண்டிருக்கின்றன. சோலையிலுள்ள தாழைகளின் மேலேயிருந்து நாரையினங்கள் ஒலிக்கின்றன. கரையோரத்தில் விளையாடும் நண்டு வளையினுள்ளே செல்கின்றது. கடல் அலைகள் தம்முடைய முழக்கத்தைக் கைவிட்டன. மீன்பிடி படகுகள் தம் தொழிலை மறந்து கரையிலேயே கிடந்தன. துணையைப் பிரியாது சேர்ந்திருக்கின்ற அன்றிற் பறவையானது, மணல் மேட்டிலேயுள்ள பனையினது உள்மடலிலே சென்று அடைந்தது. கழியிலேயுள்ள பூக்கள் மணங்கமழும் இதழ்கள் குவியப் பெற்றனவாக விளங்கின. பொழிலிலேயுள்ள வீட்டுப் புன்னையின் நறுமலர்கள், பொன்னிறத்தைக் கொண்டனவாகத் தம் இதழ்கள் விரிந்தன. பகல் நேரத்தைப் பையப்பையக் கழியச்செய்து, ஞாயிற்று மண்டிலமும், தன் ஒளி மழுங்கி, மேற்றிசையிலே சென்று சேர்ந்தது. இனி, இரவும் வந்தவிடத்து, இவள் எந்த நிலையினை அடைவாளோ? (இவ்வாறு தோழி தலைவியிடத்திலே சொல்லுகிறாள்; அதற்கு அவள் பின்வருமாறு மறுமொழி சொல்லுகிறாள்.);*

*முதுமரப் பொந்தினை விட்டு நீங்காது இருந்துவருகின்ற, முழங்கும் வாயினையுடைய முதுமையுற்ற பேராந்தையானது கதுமெனத் தன் குரலெடுத்துக் குழறும். பேய்கள் நடமாடும் அத்தகைய நள்ளிரவு வேளையிலே, நெஞ்சத்தை நெகிழ்விக்கின்ற துன்பத்தை நமக்குச் செய்த அந்த அன்பில்லாதவனுடைய அறிவுடைமையை உண்மையென எண்ணி, யானும் அன்று விதும்பினேனே! (அதுதான் இன்று துயருற்றேன்; தவறு என்மீதுதான் என்கிறாள் தலைவி.)*

*என்று, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப் பட்டுத் தலைமகள் சொன்னாள் என்க,*

**சொற்பொருள்:** *1. மண்டிலம் - ஞாயிற்று மண்டிலம். 2. மலர் பாய்ந்து - மலர்களில் விரைந்து சென்று, 3. கண்டல் - தாழை. 5. பாடு - ஒலித்தல். திமில் - மீன்பிடி. படகு.6. செக்கர் -*

செவ்வானம். 7. எக்கர் - மணல் மேடு. 8. முகம் கரப்ப - இதழ் குவிய. 12. முரவுவாய் - முழங்கும் வாய். 13. கதுமென - விரைய. 15. அறிவு - அறிவமைந்த உறுதி மொழிகள்.

**விளக்கம்:** தலைவன், இரவுக்குறியிடத்தே நெடுநேர மாகியும் வராமை காரணமாகத், தலைவி மனம்நொந்து வாடுதலைக் கண்டு, தோழி, தன் உள்ளம் வருந்திக் கூறுகின்றனள். இதற்கு, அன்பிலாளன் அறிவு நயந்தேன்' எனத் தன் அறியாமையால் அவன் மீது தானும் காதல் கொண்டதைத் தலைவி சொல்லுகின்றாள். இனி, அவனை வருந்தியும் பழித்தும் பயனில்லை; அவனுறவே எனக்கு இப்போது வேண்டுவது என்பது குறிப்பு.

**மேற்கோள்:** 'எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடியக் காட்டுதல்' என்பதற்கு உதாரணமாக, 'மண்டிலம் மழுக...குருனிம் ஒலிப்ப' என்ற பகுதியை, 'எழுத்து முதலா ஈண்டிய' என்னும் சூத்திர உரையிலே பேராசிரியர் காட்டுவர்.

'கண்டல்...ஒலிப்ப, கரையாடலவன்... செறிய' என்பது, "அடிதோறும் முதலெழுத்து ஒன்றி, மோனைத் தொடை வந்தவாறு" என, 'அடிதோறும தலையெழுத்து ஒப்பது என்னுஞ் சூத்திர உரையிலே பேராசிரியர் காட்டுவர்.

இவ்வடிகளை, அச் சூத்திர உரையிலேயே காட்டி, 'இது சீர்வகை அடி தொடுத்தது' என்பார் நச்சினார்க்கினியர்.

**பாடபேதங்கள்:** நான்கு ஐந்தாவது அடிகள் இடம் மாறிக் கொள்வதும் காணப்படும். 2. மலர் பரந்து ஊதமிசைய. 11. யாங்காகுவல் கொல் யானே.

## 261. தலை தாழ்ந்தனள்!

**பாடியவர்:** பாலைபாடிய பெருங்கடுகோ. **திணை:** பாலை. **துறை:** புணர்ந்து உடன்போயின காலை, இடைச்சுரத்துப் பட்டதனை, மீண்டுவந்த காலத்துத் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(உடன்போக்கிலே தலைவியுடன்சென்று, தன் ஊரிலே அவளை மணந்தும் கொண்டான் ஒரு தலைவன், பின்னர்த் தலைவியின் வீட்டாரும் மனமாற்றம் பெற்றுவிட, அந்த மண மக்கள் அங்கு மீண்டும் வருகின்றனர்; அவ்வேளையிலே, தனக்கு உதவிய தோழியிடம், தலைவன் தானும் தலைவியுங் காட்டுவழிச் சென்றதனைக் குறித்து இப்படிக் கூறுகின்றான்.)

**கானப் பாதிரிக் கருந்தகட்டு ஒள்வீ**
**வேனில் அதிரலொடு விரைஇக், காண்வர,**
**சில்ஐங் கூந்தல் அழுத்தி, மெல்லிணர்த்**
**தேம்பாய் மராஅம் அடைச்சி, வான்கோல்**
**இலங்குவளை தெளிர்ப்ப வீசிச், சிலம்புநகச்**
**சிலமெல் ஒதுக்கமொடு மென்மெல இயலி, 'நின்**
**அணிமாண் சிறுபுறம் காண்கம்; சிறுநனி**
**ஏகு'என, ஏகல் நாணி, ஒய்யென**
**மாகொல் நோக்கமொடு மடம்கொளச் சாஅய்,**
**நின்றுதலை இறைஞ்சி யோளே; அதுகண்டு,**
**யாமுந் துறுதல் செல்லேம், ஆயிடை**
**அருஞ்சுரத்து அல்கியேமே-இரும்புலி**
**களிறுஅட்டுக் குழுமும் ஓசையும், களிபட்டு**
**வில்லோர் குறும்பில் ததும்பும்,**
**வல்வாய்க் கடுந்துடிப் பாணியும் கேட்டே.**

*காட்டிடத்தேயுள்ள பாதிரியின் கரிய இதழ்களையுடைய ஒளியமைந்த பூக்களை, வேனிற்காலத்து அதிரற்பூவோடும் சேரக் கலந்து, காட்சிக்கு இனிதாக அமையும்படி, சிலவாகிய ஐவகையாக முடித்தலையுடைய தன் கூந்தலிலே செருகிக் கொண்டனள்; தேன்பிலிற்றும் மெல்லிய பூங்கொத்துக்களான வெண்கடம்பின் பூக்களையும் சூடிக் கொண்டனள்; பெரிய கோற்றொழிலையுடைய விளக்கமான கைவளைகள் ஒலிமுழங்குமாறு கைகளை வீசிக்கொண்டும், காற்சிலம்புகள் ஒலி முழங்கவும், சிலவாகிய மெல்லிய ஒதுக்கத்துடனே மெல்லமெல்ல அடிவைத்து நடந்து வந்தனள். அவ்வேளையிலே,*

*பெரிய புலியானது ஒரு களிற்றைக் கொன்று முழக்கமிடும் ஒலியும், வில்லவர்களாகிய கானவரது சிற்றூரிலே அவர்கள் களியாடி மகிழ்தலால் எழுந்த வலிய முகத்தினையுடைய துடியின் பண்ணொலியும் கேட்டனம். அவற்றைக் கேட்டு, அவள் அஞ்சுவாளோ என எண்ணினேமாக, "நின்னுடைய அழகால் மாட்சிபெற்ற சிறிதான முதுகின் அழகினையும் யாம் கண்டு களிப்போம்; சிறிது எமக்கு முன்னாக நடக்க" என்றோம்.*

*அங்ஙனம் யாம் சொல்லவும், அவள் மேலும் நடத்தற்கே வெ்கம் கொண்டவளாயினள். ஒய்யென, மான் போன்ற நோக்கத்தோடு, மடமை கொண்டவளாக ஒதுங்கிநின்று, தன் தலையினையும் கவிழ்த்தனள்,*

தோழி! அதனைக் கண்டு யாமும் மேற்செல்லுதலைக் கைவிட்டோமாக, அருஞ்சுரமாகிய அவ்விடத்தேயே தங்கியிருப்பேமும் ஆயினேம்.

என்று, புணர்ந்துடன் போயின், காலை, இடைச்சுரத்துப் பட்டதனை, மீண்டுவந்த காலத்துத் தோழிக்குத் தலைமகன் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. தகடு - இதழ். 9. அதிரல் - காட்டு மல்லிகை; புனலி எனவும் சொல்வர். 3. அமுத்தி - செருகி வைத்து. 4. மராஅம் - வெண்கடப்ப மரம். வான் - பெரிதான. கோல் - கோற்றொழிலினையுடைய. 5. இலங்கு வளை - விளங்கும் வளைகள். தெளிர்ப்ப - ஒலிசெய்ய. 6. இயலி - நடந்து. 7. சிறு புறம் - முதுகுப்புறம். 8. ஒய்யென - விரைவாக. 9. மாகொல் நோக்கம் - மானின் பார்வையும் வெல்லும் மடம்பட்ட நோக்கம். 10. இறைஞ்சியோள் - வணங்கியோள். 12. அல்கியேம் - தங்கினேம். இரும்புலி - பெரிய புலி. 13. களிபட்டு. களிவெறிக்கு உட்பட்டு. 14. வில்லோர் - வில்லால் வாழ்வு நடத்துபவராகிய கானவர். 15. வல்வாய் - வலிய முகப்பு.

**விளக்கம்:** ‘புலி முழக்கமும், கானவர் களியாட்டயர்தலும் கேட்டு’ என்பதனால், பொழுது இரவுவேளை என்பதை உணர்த்தினான். அவ்வொலிகட்கு அவள் அஞ்சுவாள் என, அவன், நின் முதுகின் அழகைக் காண்பேம்’ என, அவள் நினைவெல்லாம் அவன்மீதே நிலை பெற்றிருந்தமையால், நாணித் தலைகவிழ்ந்தாள் என்க.

**மேற்கோள்:** ‘மீண்டு வந்தோன் தோழிக்கு உரைத்தது’ என இச் செய்யுளை, ‘மரபுநிலை திரியா மாட்சியவாகி’ என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினர்க்கினியர் காட்டுவர்.

## 262. ஆனா உவகையேம்!

**பாடியவர்:** பரணர்: **திணை:** குறிஞ்சி, **துறை:** இரவுக் குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்கும் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** அன்னி மிஞிலிக்காகத் திதியன் கோசரை அழித்தமை; அவள் வெற்றிக் களிப்பு; பேகனின் மலைவளத்து மாண்பு முதலிய செய்திகள்.

(இரவிலே குறித்த இடத்திலே தன் தலைவியுடனே கூடி இன்புற்று வருகின்ற தலைவனின் நெஞ்சம், அந்த மகிழ்வினாலே பூரித்துக் களி துள்ளுகிறது. தன்னுடைய மகிழ்வின் சிறப்பை, அவன், தன் நெஞ்சிற்கு இப்படிச் சொல்லுகிறான்.)

**முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கிப்,
பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்,
இடுமுறை நிரம்பி, ஆகுவினைக் கலித்துப்,
பாசிலை அமன்ற பயறுஆ புக்கென,
வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது,**

**ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்,
கலத்தும உண்ணாள், வாலிதும் உடாஅள்,
சினத்தின் கொண்ட படிவம் மாறாள்,
மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்,
செருஇயல் நல்மான் திதியற்கு உரைத்து, அவர்**

**இன்உயிர் செகுப்பக் கண்டு, சினம்மாறிய
அன்னி மிஞிலி போல, மெய்ம்மலிந்து,
ஆனா உவகையேம் ஆயினெம்-பூ மலிந்து
அருவி ஆர்க்கும் அயம்திகழ் சிலம்பின்
நுண்பல் துவலை புதல்மிசை நனைக்கும்**

**வண்டுபடு நறவின் பவண்மகிழ்ப் பேகன்
கொண்டல் மாமலை நாறி,
அம்தீம் கிளவி வந்த மாறே.**

*பழைமை மேவியிருந்த பசுமையான காட்டிலேயுள்ள, பின்னிப் படர்ந்துகிடக்கும் கொடிகளை எல்லாம் அழித்துப் பகடுகள் பலவற்றைப் பூட்டிய ஏர்களால் உழுதலைப்பெற்ற செந்நிலங்கள், வித்துக்கள் விதைப்பதற்குரிய பக்குவங்கள் முறையே நிரம்ப இடம்பெற்ற வாயின, பொருந்திய வினையின் தகுதியினால் வித்துக்களும் முளைத்துப், பசுமையான இலைகளோடும் அடர்ந்து பயற்றம் பயிராகவும் விளங்கின. அதன்பால் பசு புகுந்து மேய்ந்ததென்று, தன் ஊரிலுள்ள முதிய கோசர்களாகிய ஊர்மன்றத்தார், தன்னுடைய சொற்பிறழாத பண்புடைய தந்தையின் கண்களைக் களைந்து, இரக்கங் காட்டாது கொடுமைசெய்த சிறுமையுடைய செயலினாலே, அன்னி மிஞிலி என்பாள் ஆராத் துயருற்றாள்.*

*உண்கலத்திலே உண்பதையும் வெறுத்தாள். தூயனவாக உடுப்பதனையும் கைவிட்டாள். தன் சினத்தாலே கொண்ட நோன்பினின்றும் சிறிதளவும் மாறுபட்டிலள். மறம் கெழுமிய படைவீரரையும் வெற்றிச் சிறப்பையுமுடைய, குறும்பிற்கு உரியவனாகிய, போர் செய்தலிலே நல்ல ஆற்றலுடைய குதிரைப்படைகளையும் கொண்ட திதியன் என்பவனுக்குத், தன்னுடைய நோன்பை அவள் சென்று கூறினாள். அவனும்*

படையுடன் சென்று வென்று, அந்த ஊர்முது கோசரின் இனிய உயிரைப் போக்கினான். அது கண்டு, தன் சினம் தணிந்தவளாயினாள் அந்த அன்னி மிஞிலி. அப்பொழுது, அவள் அடைந்த உடற்பூரிப்பைப் போலப்,

பூக்கள் மலிந்து, அருவிகள் முழங்கிக் கொண்டிருக்கவும், சுனைகள் விளங்கவுமாகத் தோன்றும் மலைச்சாரலிலே, நுண்ணிய தேன்துளிகள் புதர்களின் மேலிடத்தை எல்லாம் நனைத்துக் கொண்டிருக்கும்; வண்டினம் மொய்க்கின்ற தேன் வளத்தையும், வண்மையினாலே மகிழ்கின்ற தன்மையினையும் உடைய பேகன் என்பவனின், கார்மேகஞ் சூழ்ந்த அத்தகைய பெருமலை மணம் கமழுமாறு போலத் தன் கூந்தலும் நறுமணம் கமழ, அழகிய இனிய சொல்லையுடையவளாகிய நம் தலைவியும் வந்தனள்; நம்மைக் கூடி இன்பம் தந்தனள். அதனால், நாமும் மெய்பூரித்து அடங்காத உவகை உடையேமும்ஆயினேம்;

என்று, இரவுக்குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்கும் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** முதைபடு பசுங்காடு - பழைமைப் பட்ட பசுமையுடைய காடு. அரில்பவர் - பின்னிக்கிடக்கும் கொடிகள். 2. உழவுறு - உழுதலைப் பெற்ற. 3. ஆகு வினை - பயறு வித்துதற்குச் செய்தற்குரிய பக்குவங்கள். 4. அமன்ற - செறிந்த. 5. வாய்மொழி - சொற்பிறழாத தன்மை. 6. ஊர்முது கோசர் - ஊர் மன்றத்தாராகிய முதுமையாளரான கோசர். 6. நவைத்த - கொடுமை செய்த. சிறுமை - சிறுமையொடு பட்ட செயல். 7. வாலிது - தூயதான உடை. 8. படிவம் - உடல் தன்மை. 9. குறும்பியன் - காட்டு நாட்டுத் தலைவன். 10. செருவியல் நன்மான் - போர்த்திறனையுடைய நல்ல குதிரைகள். 12. மெய்ம்மலிதல் - உடல் புளகித்தல்; பூரித்தல். 13. ஆனா - அமையாத. 14. அயம் - சுனைகள். 17. கொண்டன் மாமலை - கார்மேகம் தவழும் பெரிய மலை.

**விளக்கம்:** 'இடுமுறை' - பயறு விதைப்பதற்கான முறைகள். ஆகுவினை - வித்தியபின் செய்ய வேண்டிய களைகொட்டுதல், வேலியிடுதல், நீர்பாய்ச்சுதல் போன்றவை. இவ்வாறு அன்னி மிஞிலி செய்த செயல், அறத்தை நிலைநிறுத்திய சிறந்ததொரு செயலாகும். பெண்மையின் உள்ள உறுதியும் பிறந்த குடியின் பழி துடைக்கச் செயலாற்றிய பெருமிதமும் இதனாற் புலப்படும்.

**பாடபேதங்கள்:** 3. யாடு விளைக் கலித்து. 4. பயரூழ் புக்கென. 18. வந்த வாறே.

## 263. யானே சேர்ப்பேனே!

**பாடியவர்:** *கருவூர்க் கண்ணப்பாளனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *மகட்போக்கிய தாய் சொல்லியது.* **சிறப்பு:** *கோதை என்பான் வஞ்சியைக் காத்து வந்த சீர்மை பற்றிய செய்திகள்.*

*(ஒரு தலைமகள், தன் உளங்கொண்ட காதலனுடன், அன்னையின் காவலையும் இற்செறிப்பையும் கடந்து உடன் போக்கிலே சென்றுவிட, அதனால் வருந்தியவளாயினாள் அவள் தாய். 'இப்படி அவள் அவன்மீது அளவற்ற அன்புடையவள் என்பது முன்பே தெரிந்திருந்தால், என் வீட்டிலேயே அவர்களுக்கு மணவினையாற்றி, அவர்களை ஒன்றுபடுத்தி இருப்பேனே' என்றும் அவள் புலம்புகின்றாள்.)*

**தயங்குதிரைப் பெருங்கடல், உலகுதொழத் தோன்றி,**
**வயங்குகதிர் விரிந்த, உருகெழு மண்டிலம்**
**கயம்கண் வறப்பப் பாஅய், நல்நிலம்**
**பயம்கெடத் திருகிய பைதுஅறு காலை,**
**வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்டு,**

**ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார்,**
**வில்வர் ஆடவர் மேலான் ஒற்றி,**
**நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்**
**கொண்டனன் கழிந்த வன்கண் காளைக்கு,**
**அவள் துணிவு அறிந்தனென் ஆயின், அன்னோ!**

**ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும்**
**வஞ்சி அன்னஎன் வளநகர் விளங்க,**
**இனிதினிற் புணர்க்குவென் மன்னோ-துனிஇன்று**
**திருநுதல் பொலிந்தவென் பேதை**
**வருமுலை முற்றத்து ஏமுறு துயிலே!**

*அசையும் அலைகளையுடைய பெருங் கடலினிடையே, உலக மெல்லாம் தொழுது போற்றுமாறு தோன்றி வந்து விளங்குவது, கதிர்கள் விரிந்துள்ள உட்குப் பொருந்திய ஞாயிற்று மண்டிலம். குளங்கள் எல்லாம் வறுமையுற்றுப் போகுமாறு அதுவும் காய்ந்தது; நல்ல விளைநிலங்கள் எல்லாம் தம் வளம் கெடுமாறு அது பகை கொண்டது; பசுமை அற்றுப்போயுள்ள அத்தகைய வேனிற்காலத்திலே,*

*வேறுபட்டவனவாக விளங்கும் பல்வேறு கவர்த்த நெறிகளையுடைய, அச்சம் வருகின்ற பெரிய காட்டினிடத்தே, வழியோடே செல்லும் புதியவர்கள் வருகின்ற தன்மையினைக் காணும் பொருட்டாக, வில்லாற்றலிலே வல்லமையுடைய*

ஆறலை கள்வர்கள் மேலிடத்திலே அவர்களுக்குத் தோன்றாது மறைபவர்களாக, நீண்ட நிலையினையுடைய யாமரத்தின் கோட்டினைத் தாமிருக்கும் இடமாகக் கொள்வார்கள். அத்தகைய அரிய சுரத்திலே,

என் மகளைத் தன்னுடன் கொண்டவனாகச் சென்ற வன்கண்மை உடையவனாகிய இளைஞனுக்கு, அவள் கொண்டிருந்த காதல் உறுதியினை, யான் முன்னமே அறிந்திருந்தேனாயின்,

ஒளிவீசும் வேலினைக் கொண்டவன் கோதை என்பவன். அவன் பேணிக் காத்து நிற்கும் வஞ்சி நகரைப் போன்ற காவலும் வளமும் உடையது என்னுடைய வளமனை. அது விளக்கமுறுமாறு, எவ்வித வெறுப்புமின்றி, அழகிய நெற்றி பொலிவுற்ற பேதைமையினையுடைய என்னுடைய மகளினது வளரும் முலைப்பரப்பிலே இனிதாகத் துயிலும் வண்ணம், அவனையே இனிமையுற அவளுக்கு மணஞ்செய்தும் வைத்திருப்பேனே! ஐயகோ! இப்போது அதுவும் முடியாமற் கழிந்ததே! (அவள் என்ன ஆவாளோ?)

என்று, மகட்போக்கிய தாய் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. தயங்குதல் - எழுந்தும் மடிந்தும் அசைதல். 2. வயங்குதல் - விளங்குதல்; உருகெழு - உட்குதல் பொருந்திய. 3. கயம் கண் வறப்ப - குளங்கள் நீர்வளம் அற்று இடமெல்லாம் வறண்டு போக. 4. திருகிய - முரணிய; பகைத்து வருத்திய. பைதறு - பசுமை அற்ற. 55. கவலைய - கவறுபட்ட நெறிகளையுடைய. 6. வம்பலர் - புதிதாக வழி வருவார். 7. மேலான் ஒற்றி - மேலிடத்தே மறைந்திருப்பாராக. 9. வன்கண் - வன்கண்மை; கொடுமை; கலங்காத தன்மை. 14. கோதை - சேரமானின் பெயர்களுள் ஒன்று; அன்றிப் படைத்தலைவனான வில்லவன் கோதை என்றும் கொள்ளலாம். 3. துனி - வருத்தம். 15. வருமுலை - வளரும் இளமுலை. முலை முற்றம் - மார்பகம்.

**விளக்கம்:** தன் மகள், தன் களவு உறவினைத் தன்னையும் மறைத்துக், கோடையிலே அச்சம் தரும் கொடிய பாலையூடே சென்ற கொடிய தன்மையை நினைந்து, தாய் வருந்துகிறாள். அவனுக்கே அவளை மணமுடித்து வைத்திருப்பேனே' எனவும் கூறுகின்றாள்.

**பாடபேதங்கள்:** 7. மேலாள் ஒற்றி. 8. நீடுநிலை மரா அத்து. 15. தெளிதுறு துயிலே.

## 264. தம் நிலை அறிந்தாரோ?

**பாடியவர்:** *உம்பற்காட்டு இளங்கண்ணனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *பருவம் கண்டு வன்புறை எதிரழிந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தோழி தலைமகட்குச் சொல்லியதுமாம்.*

*(தலைவன் வேந்துவினை முடித்தற்பொருட்டுச் சென்றவன் திரும்புவதாகக் குறித்துச் சென்ற கார்காலத்தும் வராதவனாயினான். தலைவியின் வாட்டமும் கூதிர்க்காலத்திலே மிகவும் அதிகமாயிற்று. தலைவியின் வருத்தத்தைத் தீர்க்க முயன்ற தோழி, 'அவன் வருவான்; நீ ஆற்றியிரு'வென வற்புறுத்த, அவளுக்குத் தோழி இவ்வாறு தன் நிலையை விளக்கி எதிருரை கூறுகின்றாள்.)*

**மழையில் வானம் மின்அணிந் தன்ன,**
**குழையமல் முசுண்டை வாலிய மலர.**
**வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்**
**பெரிய துடிய கவர்கோற் கோவலர்,**
**எல்லுப்பெயல் உழந்த பல்லான் நிரையொடு,**

**நீர்திகழ் கண்ணியர், ஊர்வயின் பெயர்தர;**
**நனிசேண் பட்ட மாரி தளிசிறந்து,**
**ஏர்தரு கடுநீர் தெருவுதொறு ஒழுகப்**
**பேரிசை முழக்கமொடு சிறந்துதனி மயங்கிக்,**
**கூதிர்நின் றன்றால், பொழுதே! காதலா**

**நம்நிலை அறியார் ஆயினும், தம்நிலை**
**அறிந்தனர் கொல்லோ தாமே-ஓங்குநடைக்**
**காய்சின யானை கங்குல் சூழ,**
**அஞ்சுவர இறுத்த தானை**
**வெஞ்சின வேந்தன் பாசறை யோரே?**

*மழையற்ற வானமானது, விண்மீன்களை அணிபெறத் தன்னிடத்தே கொண்டு விளங்கினாற்போலக், குழைநிறைந்த முசுண்டைச் செடியானது, வெண்பூக்கள் தன் மேற்புறமெல்லாம் மலர்ந்தனவாகத் தோன்றுகின்றது. வரிகளையுடைய வெண் காந்தளின் வளைந்த குலையிலேயுள்ள பெரிய பூக்களைக் கோவலர்கள் மிகுதியாகச் சூடிக்கொண்டுள்ளனர். கவர்த்த கோலினைக் கொண்டிருக்கும் அவர்கள், பகற்பொழுதிலே மழையிலே நனைந்து வருந்திய பலவாகிய ஆன்நிரைகளோடும், நீர் விளங்கும் கண்ணிகளை உடையவர்களாக, ஊரை நோக்கி வந்து கொண்டிருக்கின்றனர். மிக்க தொலைவிடத்திற்குச் சென்ற மேகங்கள், பெரிதான இடி முழக்கத்துடனே சிறப்புற்றுப்*

பெரிதும் கலங்கியவையாக, மிக்க துளிகளையும் பெய்தன. அதனால், அழகுதருகின்ற மழை வெள்ளம், தெரு வெல்லாம் வேகமாக எழுந்து ஓடிக்கொண்டுமிருக்கின்றது. இப்படியாகக் கூதிர்ப்பொழுதும் வந்து நம் ஊரிடத்தே நிலை பெற்றது.

உயர்ந்த நடையினையும், காயும் சினத்தினையுமுடையன போர் யானைகள், இரவிலே, அவை சூழ்ந்து நிற்கப், பகைவர்க்கு அச்சம் பிறக்குமாறு தங்கச் செய்துள்ள தானைப் பெருக்கத்தை உடைய, வெஞ்சினம் உடையவனுமாகிய வேந்தனின் பாசறையிலே உள்ளவர் நம் தலைவர். அவர், நம் நிலைமையை அறிந்து அருளுதற்கு எண்ணாதார் ஆயினும், (இப்படிக் காலந் தாழ்த்தலால் யாம் இறந்துபட, அதனால்) தமக்குப் பின்னர் ஏற்படும் துயரத்தின் நிலைமையினையாவது அறிந்துள்ள னரோ? (அதனையும் அறிந்திலரே? என்பது குறிப்பு.)

என்று, பருவம் கண்டு வன்புறை எதிரழிந்து தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. மழை - மேகமும் ஆம். மழையில் வானம் நிர்மலமான தெளிந்த வானம். மீன் - விண் மீன். அணிந்தன்ன அணிந்தாற்போல. 3. கோட்ல் - காந்தள். வாங்கு குலை - வளைந்த கொத்து. வான்பூ - பெரிய பூ. 5. எல்லுப் பெயல் - பகலிலே பெய்த மழை. 6. ஊர் வயின் - ஊரினிடத்தே. 12. ஓங்கு நடை நிமிர்ந்த தடை. 14. இறுத்த - பாசறையிடத்தே தங்குமாறு செய்துள்ள.

**விளக்கம்:** 'தம் 'நிலை' என்பது தமது தகுதியெனவும் பொருள்படும். அப்போது, தாம் கூறிய சூளும் பொய்த்திருக்கும் பொய்ம்மையான தன்மை எனக் கொள்க. என் வருத்தம் அறியாமலிருக்கலாம்; தம் சொல் தவறலாகாது வருதல் வேண்டாம் என்பது கூடவோ அறியாதிருக்கின்றனா?' எனப் பொருள் உரைக்க.

**மேற்கோள்:** 'இச் செய்யுள் தோழிக்குத் தலைவி கூறியது; இதன்கண் முல்லையுள் கூதிர்வந்தது' எனத், 'திணை மயக்குறுதலும்' என்னுஞ் சூத்திரத்தும்; 'இது தலைவன் பாசறைப் புலம்பினமை கூறக்கேட்ட தலைவி, நந்நிலை அறியாராயினும் எனக் கூறினாள்' என, 'நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே' என்னும் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் காட்டுவர்.

**பாடபேதங்கள்:** 3. விரிவெண் கோடல், 6. கண்ணியர் காவயிற்.

## 265. எவ்வளவு பெரிதோ?

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *பாடலிபுரத்து நந்தர்களின் பெருஞ்செல்வ மெல்லாம் கங்கையின் நீரடியிலே சென்று மறைந்த செய்தி.*

*(தலைவன் பிரிந்து சென்றனனாக, அதனால் தன் உள்ளம் பெரிதும் கவலையுற, உடலும்வாடித் தன் வனப்பெல்லாம் அழியத், தனிமையுற்று நலிந்தனள் தலைவி. தன் தோழியினிடம் தன்னுடைய ஆற்றாமையின் மிகுதியை அவள் இவ்வாறு எடுத்துக் கூறுகின்றாள்.)*

**புகையின் பொங்கி, வியல்விசும்பு உகந்து,**
**பனிஊர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்**
**இமயச் செவ்வரை மானும் கொல்லோ?**
**பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர்மிகு பாடலிக் குழீஇக், கங்கை**

**நீர்முதற் கரந்த நிதியம் கொல்லோ?**
**எவன்கொல்? வாழி, தோழி! வயங்கொளி**
**நிழற்பால் அறலின் நெறித்த கூந்தல்,**
**குழற்குரல், பாவை இரங்க, நத்துறந்து,**
**ஒண்தொடி நெகிழச் சாஅய்ச், செல்லலொடு**

**கண்பனி கலுழ்ந்துயாம் ஒழியப், பொறை அடைந்து,**
**இன்சிலை எழிலேறு கெண்டிப், புரைய**
**நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்துஎடுத்து,**
**அணங்கரு மரபின் பேஎண் போல**
**விளரூன் தின்ற வேட்கை நீங்கத்,**

**துகளற விளைந்த தோப்பி பருகிக்,**
**குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்**
**புலாஅல் கையர், பூசா வாயர்,**
**ஒராஅ உருட்டுங் குடுமிக் குரலொடு**
**மாரஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்**

**செந்நுதல் யானை வேங்கடம் தழீஇ,**
**வெம்முனை அருஞ்சுரம் இறந்தோர்**
**நம்மினும்வலிதாத் தூக்கிய பொருளே!**

*தோழி, நீ வாழ்வாயாக! நிழலினிடத்தே விளங்கும் அறல்பட்ட தன்மைபோலக் குழன்ற கூந்தலினையும், குழலினைப் போன்ற இனிதான குரலினையும் உடைய, பாவையினைப்*

போன்ற வனப்புடையவளான நீயும் வருந்துகின்றாய். நின் ஒள்ளிய தொடிகளும் நெகிழ்ந்து சரிகின்றன. நின் உடலும் மெலிவுற்ற துயரத்துடனே, ஓயாத கண்ணீரியும் சொரிந்து கொண்டிருக்கின்றது. இவ்வாறு நர்ம் தனித்து வருந்த, நம்மைக் கைவிட்டுச் சென்றவர் நம் காதலர். அவர், -

தோளிலே இட்ட வலிமையான வில்லையும், கொடிதான நோக்கத்தினையும் உடையவர்கள், ஆறலை கள்வர்கள், குன்றத்தினை அடைந்து, இனிய முழக்கஞ்செய்யும் எழுச்சி பெற்றுள்ள எருதினைக்கொன்று, உயர்வான நிணம் பொதிந்துள்ள வளமான அதன் தசையினை நெருப்பிலே வைத்துச் சுட்டு எடுத்துக், கண்டவரை வருத்தும் இயல்புடைய பேய்களைப்போல, அவர்கள் வெளுத்த அவ்வூனைத் தின்பார்கள். பின்னர்த் தம்முடைய நீர்வேட்கை தீருமாறு, குற்றமற முதிர்ந்த தோப்பிக்கள்ளையும் குடிப்பார்கள். புலால் நீங்காத கையினராகவும், கழுவாத வாயினராகவும், இடைவிடாது விட்டுவிட்டு ஒலிக்கும் குடுமியினையுடைய கோட்டானின் குரலோடுங்கூடி, வெண்கடப்ப மரங்களை யுடைய சிற்றூர்ப் பக்கத்தே, அவர்கள் களிப்புடன் கூத்தாடுவர். சிவந்த நெற்றிகளைக்கொண்ட யானைகளையுடைய, அத்தகைய வேங்கட நெற்றிகளைக் கொண்ட யானைகளையுடைய, அத்தகைய வேங்கட மலையைச் சார்ந்துள்ள, செவ்விய முனை இருப்புக்களை உடைய, கடத்தற்கரிய சுரத்தினையும் கடந்து சென்றுள்ளவர் அவர்.

நம்மைக் காட்டினும் உறுதியுடையதாக, அவர் சென்று ஆராய்ந்து தேடுவதற்கு மேற்கொண்ட பொருள்தான்,

அகன்ற வானிடத்தே உயர்ந்து விளங்குவதாய், புகை போலப் பொலிவுற்றுப் பனி தவழ்வதாய், தீச்சுடரை ஒப்பதாகத் தோன்றும் இமயமாகிய செவ்விய மலையின் உயரிய அளவினைத்தான் ஒப்பாவதோ? அன்றிப்,

பல்வகையான புகழும் நிறைந்தவரும், வெல்லும் போராற்றலை யுடையவருமான நந்தர்களின், சிறப்புமிகுந்த பாடலிபுரத்திலே திரண்டிருந்து, ஒரு காலத்தே கங்கை நீரின் அடியிலே போடப்பட்டு மறைந்துபோன பெருஞ் செல்வத் திற்குத்தான் ஒப்பாகுமோ?

அன்றி, வேறு என்னையோ? (அதனைச் சொல்லுவாயாக.)

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *பொங்கி - பொலிவுற்று. 2. ஊர்தல் - தவழுதல். அழற்கொடி - நெருப்புச்சுடர். 3. செவ்வரை - செவ்விய மலை. 5. குழீஇ - குழுவி இருந்து. 6. நீர் முதல் - நீரின் அடியில். நிதியம் - செல்வம். 7. வயங்குதல் - விளங்குதல். 8. நெறித்த - தழைத்த; குழைந்த. 9. குழல்குரல் - குழலினது இசைபோன்று இனிதாக எழும் குரல். பாவை - பொற்பாவை. 10. செல்லல் - வருத்தம். 11. கண்பனி - கண்ணீர். பொறை - பொற்றை எனவும் வழங்கும். 12. இன் சிலை - இனிதாகச் சிலைத்தலையுடைய; சிலைத்தல் - ஒலித்தல். கெண்டி - கொன்று. புரைய - உயர்ந்த. 13. நிணம் - கொழுப்பு. விழு - கொழுமையான. 15. விளர் ஊன் - வெள்ளையான ஊன். தின்ற வேட்கை - தின்றதனாலாயின நீர் வேட்கையுமாம். 16. தோப்பி - தோப்பிக்கள். துகள் - குற்றம். 17. குலாஅ - தழுவிய; வளைந்த எனலும் ஆம். கொடு நோக்கு - கொடிய பார்வை. 18. பூசா - கழுவாத. 19. ஓராஅ - இடைவிடாமல்; ஒருவாது உருட்டும் - விட்டுவிட்டு ஒலிமுழங்கும். குராலொடு - கோட்டானொடு. 20. தூங்கும் - ஆடி இன்புறும். 23. தூக்கிய - துணிந்த.*

**விளக்கம்:** *'அன்புறு காதலியை அழியவிட்டுச் சென்று தேடிவரும் பொருள்தான் ஒரு பொருளாகுமோ?' என்று பழிப்பவள், "அது இமையத்தளவோ? அன்றிக் கங்கையிற் புதையுண்ட நந்தரின் பெருஞ்செல்வத்து அளவோ?" என் கின்றாள்.*

**பாடபேதங்கள்:** *1. விசும்புகுந்து. 5. பாடலிற்குழீஇ. 12. கெண்டிப் பரைய. 16. துகளற விரைந்த. 18. புலராக்கையர். 20. பராஅஞ் சிறார்.*

## 266. செய்த சூளுறவு!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *பரத்தையிற் பிரிந்துவந்து கூடிய தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.* **சிறப்பு:** *நீடூர்த் தலைவனாகிய எவ்வி என்பவனின் போர்மறம்; உறத்தூரிலே எழுந்த வெற்றிவிழா பற்றிய செய்திகள்.*

*(தன் காதல் மனைவியைப் பிரிந்து, பரத்தை ஒருத்தியுடன் கூடியின்புற்று வந்த ஒரு தலைவன், மறுநாள் தன் தலைவியையும் வந்து அணுக, அவள் அவனுக்கு இணங்காது மறுத்து, இப்படிக் கூறுகின்றாள்)*

**கோடுற நிவந்த நீடுஇரும் பரப்பின்**
**அந்திப் பராஅய புதுப்புனல், நெருநை,**
**மைந்துமலி களிற்றின் தலைப்புணை தழீஇ,**

**நரந்தம் நாறும் குவைஇருங் கூந்தல்**
**இளந்துணை மகளிரொடு ஈர்அணிக் கலைஇ,**

**நீர்பெயர்ந்து ஆடிய ஏந்துஎழில் மழைக்கண்**
**நோக்குதொறும் நோக்குதொறும் தவிர்விலை யாகிக்,**
**காமம் கைம்மிகச் சிறத்தலின், நாண்இழந்து,**
**ஆடினை என்ப மகிழ்ந! அதுவே**
**யாழ்இசை மறுகின் நீடூர் கிழவோன்**

**வாய்வாள் எவ்வி ஏவன் மேவார்**
**நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்**
**அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்,**
**கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்இமிழ் அன்ன,**
**கவ்வை ஆகின்றால் பெரிதே; இனிஅஃது**

**அவலம் அன்றுமன், எமக்கே; அயல**
**கழனி உழவர் கலிசிறந்து எடுத்த**
**கறங்குஇசை வெரீஇப் பறந்த தோகை**
**அணங்குடை வரைப்பகம் பொலியவந்து இறுக்கும்**
**திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகு சேஎயொடு உற்ற சூளே!**

*"மகிழ்நனே! புதுப்புனல், கரையின் உச்சியைப் பொருந்து மாறு உயர்ந்ததாகவும், நீண்ட பெரும்பரப்பினை உடைய தாகவும், அழகியதாகவும், காண்பார்க்கு விருப்பந்தருவதாகவும் விளங்குகின்றது. அதன்கண், நேற்று, ஆற்றல் மிகுந்த களிற்றினைப்போலப், புணையின் தலைப்புறத்தினைத் தழுவியவனாக நீயும் புனலாடினாய்.*

*நரந்தத்தின் மணம்கமழும் அடர்த்தியான கருங் கூந்தலையுடைய இளம்பெண்கள் துணையோடு, நீராடலுக் குரிய அணிகளை உடுத்துக்கொண்டு, நீரின்கண் பெயர்ந்து நீர் விளையாடினாய்! மிகுதியான அழகினையுடைய குளிர்ச்சியான அவர்களுடைய கண்கள் நின்னைப் பார்க்குந் தோறும் நீயும் விருப்பத்தைக் கைவிடுதல் இல்லையாயினாய்! காமம் அளவு கடந்த நின்பாலும் பெருகுதலினாலே, வெட்கமும் இழந்த வனாக, அவர்களோடு நீயும் கலந்து ஆடினாய்!" இங்ஙனம் பலரும் நின்செயலைக் குறிப்பிட்டுக் கூறுவார்கள்.*

*வாள் வாய்த்தலை உடையவன் எவ்வி என்பவன். அவன், யாழ் இசை முழங்கும் தெருக்களையுடைய நீடூருக்குத் தலைவன். அவன், தன்னுடைய ஏவலை ஏற்றுக்கொள்ளாதாராகிய, பசுமையான பூண்களை உடையவரான தனக்கு மாறு*

பட்டவர்களை எல்லாம், அவர்களுடைய பெரிய வலிமையைத் கெடுத்து முற்றவும் அழித்தான். அரிமணவாயில், உறத்தூர் ஆகிய அவ்விடங்களிலே, அந்த வெற்றிக் கொண்டாட்டத்திலே, அவன் அளித்த கள்ளோடு கூடிய பெருஞ்சோற்று விழாவிலே, பகற்பொழுதிலே எழுந்த ஆரவாரத்தைப் போல, நின் செயலால் ஊர் முழுவதும் எழுந்த அலரும், பெரிதும் ஆரவாரத்தை உடையதாக இருக்கின்றது.

இனி, அதுவும் எமக்குத் துன்பம் தருவது அன்று, அயலேயுள்ள வயல்களிலே, உழுபவர் செருக்குமிகுந்தவராக எழுப்பிய, ஒலிக்கும்இசையினுக்கு அஞ்சிப் பறந்து போயின மயிலானது, தெய்வத்தையுடைய மலையகத்திடத்தே, அவ்விடம் அதனால் அழகுபெறுமாறு வந்து தங்கும்.

அத்தகைய, அழகிய மணிவிளக்குகளை உடையதான அலைவாய் என்னும் இடத்தே வீற்றிருந்தருளும், போர் வலிமை மிகுந்த முருகனோடும் பொருத்தி, என்னை மணந்த போது செய்த நின்னுடைய சூளுறவே எனக்குத் துன்பம் தருவதாகும்;

என்று, பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலைமகற்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. கோடு - கரை. நிவந்த - உயர்ந்த. 2. பா அய - விருப்பத்தையுடைய. 3. மைந்து - வலிமை; ஆற்றல். 4. நரந்தம் - நரந்தம் புல். 7. தவிர்விலை - தவிர்தல் இல்லாதவனாயினை. 12. பொருந்தலர் - பகைவர். 14. எல்இமிழ் - பகலில் எழுந்த. இசை - முழக்கம். 17. கலி - செருக்கு. 29. செருமிகு சேய் - முருகன்.

**விளக்கம்:** தலைவியின் உள்ளத்திலே, தலைவன் பரத்தைய ரோடு புதுப்புனல் ஆடினான் என்ற வருத்தமே மிகுதியாக இருப்பினும், அதனை அவள் கூறவில்லை. 'நின் செயலால் இருப்பினும், அதனை அவள் கூறவில்லை. 'நின் செயலால் எழுந்த ஊரலர் பெரிது எனப் பழிச்சொற்களுக்கு வருந்தியும், 'நின்னைப் பிரியேன் என முருகன் முன் செய்த சூளுறவு 'பொய்த்தாய்' என, அதனால் அவனுக்கு வரும் ஏதங்களுக்கு வருந்தியும் சொல்லும் கற்புத்திறம் காண்க.

**உள்ளுறை:** உழவர்களின் இசைக்கு அஞ்சிப் பறந்த மயிலானது, அணங்கினையுடைய மலையகத்தே அழகிதாகச் சென்று தங்கும் என்பது, தலைவனும் ஊரிலே எழுந்த பழிச் சொற்களுக்கு அஞ்சியவனாகக், கட்டுப்பாடுடைய மனைக்குத் தங்குவதற்காக வந்தனன் என்பதை உணர்த்தும்.

**மேற்கோள்:** 'சூள்நயத் திறத்தாற் சோர்வு கண்டு அழியினும்' என்னும் பகுதிக்கு இப்பாட்டினை உதாரணமாகக் கொண்டு இதனைக் தோழி கூற்றாகக் காட்டுவாரும் உளர் என நச்சினார்கினியர் காட்டுவர்; (தொல். பொருள். 150)

**குறிப்பு:** நீராடலில் ஈடுபடுவார், அந்நாளிலே ஈரணி என்ற ஒருவகையான உடை உடுத்த செய்தியை, 'ஈரணி கலைஇ, என்ற சொற்களால் உணர்கின்றோம். இது, அந்நாளைய நாகரிகச் செவ்விக்குச் சிறந்தவொரு சான்றாகும்.

**பாடபேதங்கள்:** 1. பரப்பின் நந்தி. 2. பராஅய புதுப் புனல். 3. மைந்துமலை களிற்றின். 13. பெரும்பூட் பொருந்திலர்; பசும்பூட் பொருந்திலர். 16 வயலர். 19. வந்திருக்கும்.

## 267. தோள்தாம் தவறின!

**பாடியவர்:** பாலைபாடிய பெருங்கடுங்கோ. **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளது ஆற்றாமை கண்டு ஆற்றாளாய தோழிக்குத், தலைமகள் சொல்லியது.

(தலைவன் பிரிந்ததனால் நொந்து மெலிந்திருக்கும் தலைவியின் நிலைமையைக் கண்டு, தோழி வருத்தினள். 'அன்று அவன் பேசிய பேச்சும், செய்த சூளுறவும் மறந்தானே?' என்ன நொந்து கொள்ளவும் தொடங்கினள். அதற்குத் தலைவி சொல்லும் விடை இது.)

**'நெஞ்சு நெகிழ்தகுந கூறி, அன்புகலந்து,**
**அறாஅ வஞ்சினம் செய்தோர், வினைபுரிந்து**
**திறம்வேறு ஆகல் எற்று?' என்று ஒற்றி,**
**இனைதல் ஆன்றிசின், நீயே; சினைபாய்ந்து,**
**உதிர்த்த கோடை, உட்குவரு கடத்திடை,**

**வெருக்குஅடி அன்ன குவிமுகிழ் இருப்பை,**
**மருப்புக் கடைந்தன்ன, கொள்ளை வான்பூ**
**மயிர்க்கால் எண்கின் ஈர்இனம் கவர,**
**மைபட் டன்ன மாமுக முசுவினம்**
**பைதுஅறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென**

**வெதிர்படு வெண்ணெல் வெவ்அறைத் தாஅய்**
**உகிர்நெறி ஓசையிற் பொங்குவன பொரியும்**
**ஓங்கல் வெற்பின் சுரம்பல இறந்தோர்**
**தாம்பழி உடையர் அல்லர்: நாளும்**
**நயந்தோர்ப் பிணித்தல் தேற்றா, வயங்குவினை**

**வால்஑ர் எல்வளை நெகிழ்த்த,**
**தோளே!-தோழி-தவறுஉடை யவ்வே?**

தோழி! நீயும் "நெஞ்சம் நெகிழ்ச்சியுறத் தகுந்தனவற்றைச் சொல்லி, அன்பினாலே நம் உள்ளத்திலே கலந்து, என்றும் பிரியாமையாகிய சூளுறவினையும் செய்தவராகிய நம் காதலர், பொருளீட்டி வருதலாகிய தொழிலினை மேற்கொண்டு, தம்முடைய தன்மையிலே இந்நாளில் வேறுபட்டவராக ஆகுதல் என்னையோ?" என்று, அதனையே ஆராய்ந்து வருந்துதலை விட்டுவிடுவாயாக.

அச்சம்வருகின்ற காட்டிடத்திலே, மேல்காற்றானது கிளையினை உதிர்த்த, பூனைப்பாதத்தைப் போன்ற குவிந்த அரும்புகளையுடைய இருப்பையினது, தந்தத்தைக் கடைந்தது போல விளங்கும் மிகுதியான பூக்களை, மயிரடர்ந்த கால்களையுடைய கரடியின் பெருங்கூட்டம் கவர்ந்து உண்டு கொண்டிருக்கும். மைபட்டிருப்பதுபோல விளங்கும் கருமையான முகத்தையுடைய முசுக்கலையானது, பசுமையற்ற நீண்ட மூங்கிலிலே பாய்தலால், ஒய்யென, மூங்கிலிலே விளைந்துள்ள வெண்மையான நெற்கள், வெப்பம் மிகுந்துள்ள பாறைகளிலே உதிர்ந்து, விரல் நெரிப்பதுபோன்ற ஒலியுடனே பொங்கிப் பொரிந்து கொண்டிருக்கும். அத்தகைய, உயர்ந்த மலைகளையடுத்த சுரநெறிகள் பலவற்றையும் கடந்து சென்ற வரான அவர், ஏதும் பழியுடையவரே அல்லர்.

எந்நாளும், தம்மை விரும்பியவர் யாவர் என்பதை ஆராய்ந்து தெளியமாட்டாதுபோன, விளங்கும் தொழில் திறம் உடைய, வாள்போன்ற அழகிய ஒளிமிகுந்த வளைகளை நெகிழவிட்ட, எம் தோள்களே தாம் தவறு உடையன;

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளது ஆற்றாமை கண்டு, ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. நெகிழ் தகுந - நெகிழ்தற்குத் தக்கதான. அன்பு கலந்து - அன்புடைமை காட்டிக் கலந்து. 3. திறம் - தன்மை. எற்று - என்னவோ? 4. இனைதல் - வருத்துதல். 5. கோடை - கோடைக் காற்று; மேல்காற்று. 6. வெருக்கு அடி - வெருக்கின் பாதம். 7. மருப்பு - தந்தம். கொள்ளை - மிகுதி. 8. ஈரினம் - மிகுதியான கூட்டம் 9. முசுக் கலை - முசுவினத்து ஆண்குரங்கு. 10. பைது - பசுமை. 11. வெதிர் - மூங்கில். 11. பொங்குவன பொரியும் - பொங்குவனவாகப் பொரியும். 12. உகிர் - நகம்;இங்கு விரலைக் குறித்தது. 15. நயந்தோர் - விரும்பினவர்.

**விளக்கம்:** 'தோளே தவறுடையன' என்றதனால், தானும் அவன்பாற் காமுற்று நெஞ்சம் நெகிழ்ந்ததான தன்னுடைய நிலையையும் கூறினாள். அவன் சொன்னாலும், அதனைத் தெளியாது யானும் இசைந்து கூடினேனே அதுதான் தவறு என்கிறாள். அன்றி, நம்மீது அன்புடைய அவரை விடாது பிணித்துக்கொள்ள அறியாத தோள்களே தவறுடையன எனலும் ஆம்.

**பாடபேதம்:** 1. நெஞ்சு நெகிழ்க்குந. 4. உளைதல் ஆன்றி சின். 7. கொள்ளை வறட்பூ. முசுவினம். 12. உதிர்வன ஓசை. 16. நெகிழ்ந்த.

## 268. பழி எய்தினேனே!

**பாடியவர்:** வடம வண்ணக்கன் பேரி சாத்தனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** குறைவேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

(தலைவன், தான்விரும்பிய தலைவியை அடைந்து கூடும் முயற்சியிலே தோல்வி கண்டான். ஆனால், அவன் உள்ளத்திலே எழுந்த காதல் மிகுதியாதலால், அது கட்டுக் கடங்காது கைம்மிகவே, அவளுடைய தோழியின் உதவியை நாடினான். அவளும் அவன்மீது இரக்கங் கொண்டாள். தலைவியை அணுகித் தலைவனுக்கு அருள் செய்யுமாறு இப்படிக் கூறுகின்றாள்.)

**அறியாய்-வாழி, தோழி! - பொறியரிப்**
**பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த**
**குருதிச் செங்களம் புலவுஅற, வேங்கை**
**உறுகெழு நாற்றம் குளவியொடு விலங்கும்**
**மாமலை நாடனொடு மறுஇன்று ஆகிய**

**காமம் கலந்த காதல் உண்டெனின்,**
**நன்றுமன்; அதுநீ நாடாய், கூறுதி;**
**நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்,**
**யான் அலது இல்லை, இவ் உலகத் தானே-**
**இன்னுயிர் அன்ன நின்னொடுஞ் சூழாது.**

**முளை அணி மூங்கிலின் கிளையொடு பொலிந்த**
**பெரும்பெயர் எந்தை அருங்கடி நீவிச்,**
**செய்துபின் இரங்கா வினையொடு**
**மெய்அல பெரும்பழி எய்தினென் யானே!**

தோழி, நீ வாழ்வாயாக! யான் சொல்வதனையும் கேட்டு அறிந்து தெளிவு கொள்வாயாக. புள்ளிகளையும் கோடு களையும் கொண்ட, அழகிய நெற்றியை உடையது யானை.

அதனுடன் புலியொன்று போரிட்டது. அதனால், குழைவுற்ற புழுதிபட்டுக் கிடந்த இடமும், தன் புலால் நாற்றத்தினின்றும் நீங்குமாறு, நிறம்பொருந்திய வேங்கை மலர்களின் மிகுதியான மாறு, நிறம்பொருந்திய வேங்கை மலர்களின் மிகுதியான நறுமணமானது, மல்லிகைமலரின் நாற்றத்தோடு கலந்து கமழ்ந்து கொண்டிருக்கும். அத்தகைய, சிறந்த மலைக்கு உரியவனான தலைவனோடு, குற்றம் ஏதும் இல்லாததாகிய காமம் கலந்த காதல் நினைவு நினக்கும் உளதென்றால், அது மிகவும் நன்மை தருவதேயாகும். அதனை, நீ நாடிச் செல்லா திருக்கின்றனையே அது ஏனெனக் கூறுவாயாக.

இனிய உயிர் போன்றவளான நின்னோடும் கலந்து ஆராயாது, முளைகள் அழகுசெய்யும் மூங்கிலைப்போலப் பெரிதான சுற்றத்தாருடன், பொலிவுற்ற பெரும்புகழ் மேவிய நம் தந்தையின் அரிய காவலைக்கடந்து சென்று, செய்து பின் அதற்காக வருத்தப்படாத நல்ல செயலைச் செய்தமையால், உண்மையல்லாத பொய்ம்மை குழ்ந்த ஊரவர் கூறும் பெரும் பழிச்சொற்களையும் யானே பெற்றுள்ளேன்.

இந்த உலகத்திலே, நாணமும் நட்பும் இல்லாத ஒருவரை ஆராய்ந்து காணத் தொடங்கினால், அதற்குப் பொருந்துபவர் என்னையன்றி வேறு யாருமே இலர்;

என்று, குறைவேண்டிப் பின்னிற் தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி, தலைமகட்குக் குறைநயப்பக் கூறினாள் என்க.

**சொற்பொருள்:** *1. அறியாய் - அறிந்து பாராயோ? 2. பூநுதல் - அழகிய நுதல். குழைந்த - புழுதிபட்ட. 3. செங்களம் சிவப்பான இடம். புலவி - புலால் நாற்றம். 4. குளவி - மல்லிகை. விலங்கும் - அகற்றும். 6. காமல் கலந்த காதல் - உள்ளம் ஒன்று கலந்து. உடல் ஒன்று சேரத் துடிக்கும் வேட்கை. 7. நாடாய் - நாடினாயல்லை. 12. இரங்கா - வருந்தாத.*

**விளக்கம்:** நாணமும்விட்டுச், சுற்றத்தாரின் காவலையும் கடந்து சென்று, தலைவனைச் சந்தித்து, அவனுக்குத் தலைவியை இயைவிப்பதாகக் கொடுத்த உறுதியை நினைந்தே, நாணும் நட்பும் இழந்தவளாகவும், பெரும்பழி எய்தினவளாகவும் தோழி கூறுகிறாள். எனினும், தான் செய்தது முறையான செயல் என்பதனால் வருந்தாதிருப்பதையும் புலப்படுத்தச், 'செய்துபின் இரங்கா வினையொடு' என்கின்றாள் - தலைவியும், தோழியுடைய இந்தப் பேச்சைக் கேட்டுத் தலைவனுடன் தானும்

*இயல்பாகவே உள்ளத்தைச் செலுத்தியவளாதலால், தானும் இரவுக்குறிக்கு இசைவாள் என்பது கருத்தாகும்.*

**உள்ளுறை:** *குருதிபடிந்த செங்களத்தினின்றும் எழுந்த புலால் நாற்றம் நீங்க. வேங்கை மல்லிகையொடு கலந்து நறு மணம் கமழும் என்றனள், அது தலைவனும் களவினால் வரும் ஊரலர் முதலியவற்றை விரைவிலே மணம்பூண்டு இல்லறம் தொடங்குவதன் மூலம் போக்குவான் எனக் கூறினாளாம்.*

**மேற்கோள்:** *செய்யாய் என்னும் முன்னிலை·வினைச்சொல் முன்னிலை ஏவல் உடன்பாடாய் நின்றதற்கு, இப்பாடற் பகுதியைச், 'செய்யென் கிளவி யாகிடன் உடைத்தே' என்னும் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டுவர் (தொல். சொல். 450)*

**பாடபேதங்கள்:** *2. பகைநுதல் யானை. 3. பொலிவற. 14. எய்தினேனே.*

## 269. விரைந்து வந்தனர்!

**பாடியவர்:** *மதுரை மருதனிளநாகனார்.* **திணை:** *பாலை,* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.* **சிறப்பு:** *வாணனின் சிறுகுடியினது வளம்; நடுகல் வழிபாடு முதலிய செய்திகள்.*

*(தலைவன் பிரிந்து சென்றனனாக, அதனால் தலைவி பெரிதும் வாடித் தன் நலன் அழிய, அது கண்டு மனம் வருந்திய தோழி அவளிடம் சென்று, 'அவன் விரைந்து வந்து கொண்டிருக் கின்றான்' என்று உறுதி கூறி, அவளைத் தேற்றுகின்றாள்.)*

**தொடிதோள் இவர்க! எவ்வமுந் தீர்க!**
**நெறிஇருங் கதுப்பின் கோதையும் புனைக!**
**ஏறுடை இனநிரை பெயரப்; பெயராது,**
**செறிசுரை வெள்வேல் மழவர்த் தாங்கிய**
**தறுக ணாளர் நல்லிசை நிறுமார்,**

**பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்,**
**நட்ட போலும் நடாஅ நெடுங்கல்**
**அகலிடம் குயின்ற பல்பெயர் மண்ணி,**
**நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய**
**அம்புகொண்டு அறுத்த ஆர்நார் உரிவையின்**

**செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி**
**வரிவண்டு ஆர்ப்பச் சூட்டிக் கழற்கால்**

**இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம் இறந்தோர்,**
**தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்,**
**பொலங்காசு நிறைந்த கோடுஏந்து அல்குல்**

**நலம்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்**
**பாடுஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து**
**வயிர்இடைப் பட்ட தெள்விளி இயம்ப**
**வண்டற் பாவை உண்துறைத் தழீஇத்,**
**திருநுதல் மகளிர் குரவை அயரும்**

**பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை,**
**வாணன் சிறுகுடி, வணங்குகதிர் நெல்லின்**
**யாணர்த் தண்பணைப் போதுவாய் அவிழ்ந்த**
**ஒண்செங் கழுநீர் அன்ன நின்**
**கண்பனி துடைமார் வந்தனர் விரைந்தனர்.**

*தோழி! ஏறுகளை உடைய ஆனினத்து, செறிவான சுரைகளையுடைய வெள்ளிய வேலினரான மழவர்களை அஞ்சாமையையுடைய வீரர்கள் சிலர் தடுத்து நின்றனர். அவர்களது நல்ல புகழினை நிலைநிறுத்துமாறு, பெண் யானைகள் கிடந்தாற்போல விளங்கும் குறியவான பொற்றை களின் பக்கத்தே, நட்டுவைத்தவைபோலப் பல கற்கள் இயல்பாகவே விளங்கின. நீண்ட அக்கற்களிலே, அவற்றின் அகன்ற இடத்திலே செதுக்கப் பெற்றிருந்த பல பெயர்களையும் கழுவிச் சுத்தம் செய்தனர். கழுவிய ஈரமான புறத்திலே, நறுமணமுள்ள மஞ்சளைப் பொலிவுடன் பூசினர். அம்பினைக் கொண்டு அறுத்தெடுத்த ஆத்திப்பட்டையாகிய நாரிலே, சிவந்த கரந்தைப் பூவைத் தொடுத்து இயற்றிய கண்ணியை, வரிகளையுடைய வண்டினம் மொய்க்குமாறு அதன்மேற் சூட்டினர். இப்படிப் புனைந்து வழிபட்டு விட்டுக், கழல் விளங்கும் காலினரான வீரர்கள், தம் ஊருக்குத் திரும்பினர். அத்தகைய கடத்தற்கரிய சுரநெறியினையும் கடந்து சென்றோர் நம் தலைவர்.*

*தைத் திங்களிலே எஞ்சி நிற்கும் குளிர்ந்த பெயலின் கடைப்பட்ட நாட்களிலே -*

*பொற்காசுகளைத் தொடுத்து அணிந்த பக்கம் உயர்ந்த அல்குலினிடத்தே, நலம் வாய்ந்த பெரிய பூங்கொத்துக்கள் குழையோடுஞ் சேர்ந்து அசைந்து கொண்டிருக்கும்; ஒலி பரந்து எழுகின்றதான பெரிய வாயினையுடைய மண்டிலத்து ஊதுகொம்பினிடத்திலிருந்து, தெளிந்த இசையானது எழுந்து பரவும்; வண்டல் விளையாட்டிற்கு உரிய பாவையை நீர்*

உண்ணும் துறையிலே 'கொண்டுவந்து வைப்பர்; அழகிய நெற்றியினை உடையவரான மகளிர்கள், அதனைப் புனைந்து போற்றிக் குரவையாடிக் கொண்டும் இருப்பார்கள்.

அத்தகைய சிறப்புடைய கடற்கரையிலே, கானற் சோலை சூழ்ந்த ஊராகிய வாணனது சிறுகுடி விளங்கும். அவ்விடத் துள்ள, வளைந்த கதிர்களையுடைய நெற்பயிராகிய புது வருவாயினைக் கொண்ட தண்மையான வயலிலே விளங்கும், அரும்பு வாயவிழ்ந்து மலர்ந்திருக்கும் ஒளியுடைய செங்கழுநீர்ப் பூப்போன்ற நின் கண்களினின்றும் சோரும் கண்ணீரைத் துடைப்பதற்காக, நின் காதலரும், அதோ விரைந்து வந்துள்ளனர். ஆதலால்.

நெகிழ்ந்து கழன்ற தொடிகள் நின் தோள்களிலே ஏறுவதாக! நின் துயரமும் தீர்வதாக! நெளிந்த கருமையான நின் கூந்தலிலே மாலையினையும் இப்போதே புனைவாயாக!

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தினாள் என்க.

**சொற்பொருள்:** 1. இவர்க - ஏறுக; தோள் பூரிப்பதாக என்பது கருத்து. 2. நெறி - நெளிவு. கோதை - தலைமாலை. 4. சுரை - என்பது வேலின் முனையினைக் கம்புடன் செருகும் உலோகப் பகுதியினைக் குறிக்கும்; செறிசுரை - செறிவான சுரையினைக் கொண்ட. 'மழவர்' - ஓர் இனத்தார்; பெரும்பாலும் ஆறலை கள்வராக இருந்தவர். 5. தறுகணாளர் - அஞ்சாமையுடையோர் கரந்தையார் என்க. 6. குறும்பொறை - குட்டையான பொற்றை. 7,8. நட்டபோலும்... மண்ணி - இது இயல்பாக விளங்கிய நீண்ட கற்களிலேயே வீரர்களின் பீடும் பெயரும் செதுக்கி வைத்தான செயலைக் குறிக்கும்; பாறைகளைச் செதுக்கியும் குடைந்தும் செய்யும் கற்றளிவேலைகள் இவை என்க. 9. ஈர்ம்புறம் - ஈரமான பக்கம். 10. ஆர்நார் உரிவை - ஆத்திப் பட்டையிலே கிழித்த நார்; ஆர் - ஆத்தி. 11. கரந்தை - கரந்தை மலர். 13. இளையர் - வீரர். 15. கோடேந்து - பக்கம் உயர்ந்த. 16. மாக்குரல் குழை - பெரிய கொத்தான தழை. தழையுடைய இப்படி அமைக்கப்படுவதை இன்றும் பழம்பொருட் சாலைகளிற் சென்று காண்க. 19. வண்டற் பாவை - இளமகளிர் வண்டல் வழிபாட்டிற்குக் குறித்த பாவை. 24, 25. கழுநீர் அன்ன கண் - அழுது கலங்கியதால் செங்கழுநீர்போலச் சிவந்து நிறம் மாறுபட்டுப்போன கண்கள்.

**விளக்கம்:** தைத் திங்களில், கன்னியர் நீர்த்துறையிலே பாவையைப் புனைந்து வைத்து நீர்த்தெய்வத்தை வழிபடும் மரபுடையவர்; இதுவே பின்னாளில் 'பாவை நோன்பாயிற்று'

*எனலாம். இப்பாட்டு எதிர்காலம் நோக்கிற்று எனக்கொண்டு, 'வந்தனர்' என்பது, 'வருவார் விரைந்து' என்ற பொருளினையே தருவது எனவும் உரைப்பர்.*

**பாடபேதங்கள்:** *9. மஞ்சள் நீர்ப்புறம் பொடிய. 22. பெருநிழற் கானந் தழீஇய.*

## 270. நும் ஊர் நினைப்பீர்!

**பாடியவர்:** *சாகலாசனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *பகற் குறிக்கண் வந்து நீங்கும் தலைமகனைத் தோழி வரைவுகடாயது.* **சிறப்பு:** *குட்டுவனுக்கு உரிய கழுமலம் என்னும் ஊரைப் பற்றிய செய்தி.*

*(பகற் குறியிடத்தே தன்னுடைய உளங்கலந்த காதலியைத் தழுவி இன்புற்றுச் செல்லுகின்றான் ஒரு தலைவன். அவனிடம், இரவிலே நின் துணை பெறாததனால் தலைவிதுயிலாது துன்புறுகின்றாள் எனச் சொல்லுகின்றாள் தோழி. இதனால் எஞ்ஞான்றும் கூறியிருப்பதற்குத் தகுதியான வரைந்து கொள்ளலிலே மனஞ்செலுத்துக என்றனளாகும்.)*

**இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்,**
**புலாஅல் மறுகின் சிறுகுடிப் பாக்கத்து**
**இனமீன் வேட்டுவர், ஞாழலொடு மிலையும்**
**மெல்லம் புலம்ப! நெகிழ்ந்தன, தோளே,**
**சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை**

**பராஅரைப் புன்னை வாங்குசினைத் தோயும்**
**கானல் பெருந்துறை நோக்கி, இவளே,**
**கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்**
**நல்தேர்க் குட்டுவன் கழுமலத்து அன்ன,**
**அம்மா மேனி தொல்நலம் தொலைய,**

**துஞ்சாக் கண்ணள் அலமரும், நீயே,**
**கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்**
**சேவலொடு புணராச் சிறுகரும் பேடை**
**இன்னாது உயங்கும் கங்குலும்,**
**நும்ஊர் உள்ளுவை; நோகோ, யானே.**

*சிறிய குடியிருப்புக்களை உடையது பாக்கம். அங்குப் புலால் நாற்றமும் நிறைந்திருக்கும். அங்குள்ள மீனினத்தை வேட்டையாடுவோரான பரதவர்கள், பெரிய உப்பங்கழியிலே மலர்ந்திருக்கும் வளம்வாய்ந்த இதழ்களையுடைய நீலப் பூக்களைப், புலிநகக் கொன்றையின் பூக்களுடனே கலந்து சூட்டிக்*

கொண்டிருப்பார்கள். அத்தகைய மென்னிலத்திற்கு உரியவனான தலைவனே!

இவளுடைய தோள்களோ மெலிந்தன! சிவந்த இறாமீன் கலக்கிய பிதிர்பட்டு மோதும் அலைகளின் நுரைகள், பெரிய அடிமரத்தினையுடைய புன்னையின் வளைந்த கிளைகளிலே தங்கியிருக்கும், கானற்சோலையை அடுத்துள்ள அழகிய பெரிய துறையினையே இவள் நோக்குவாளாயினள். கொய்யப் பெற்ற பிடரிமயிரினையுடைய குதிரைகளை உடையவனும், கைவண்மை உடையவனும், பெரிய தலைவனுமாகிய, நல்ல தேனினையுடைய குட்டுவனது கழுமலத்தைப் போன்ற, தன் மேனியின் சிறந்த நலம் எல்லாம் அழிந்து போகுமாறு, உறக்கமற்ற கண்ணிளாகவும் கலங்கியிருப்பா ளாயினள்.

நீயோ வென்றால், கடவுள் மரத்தினையுடைய முள்ளால் மிடையப் பெற்றிருக்கின்ற கூட்டிலே, தன் சேவலோடுங் கூடற் வாயாத சிறிய கரிய அன்றிற் பேடையானது, துன்பமுற்றுக் கிடந்து வருந்துகின்ற இரவுவேளையும், நின்னுடைய ஊருக்குப் போய்விடவே எண்ணுகின்றனை. யான்தான் இங்கே நோக்கின்றேன்!

என்று, பகற்குறிக்கண் வந்து நிற்கும் தலைமகனைத் தோழி வரைவு கடாயினாள் என்க.

**சொற்பொருள்:** 1. வள்ளிதழ் நீலம் - வளவிய இதழ்களை யுடையவான நீலமலர். 2. பாக்கம் - கடற்கரையூர். 3. ஞாழல் - புலிநகக் கொன்றை. 5. சேயிறா - சிவப்பான இறாமீன்கள். துழந்த - கலக்கிய. 9. குட்டுவன் - சேரன். கழுமலர் - நென்மலி என வழங்கும் கொங்கு நாட்டு இடத்தாகிய பழைய பேரூர். சோழன் செங்கணானுக்கும் சேரமான் கணைக்காலிரும் பொறைக்கும் நடந்த கழுமலப் போரினை நினைக்க; கரிகாலன் இவ்வூரிலிருந்தான் எனவும், களிறு இங்கு வந்து இவனைத் தூக்கிச் சென்றது எனவும் உரைப்பர். 12. கடவுள் மரத்த - கடவுள் வீற்றிருப்பதாகத் தொழப்படும் மரத்தையுடைய; கடவுள் மரங்களில் வீற்றிருந்து அருள் புரிவதாகத் தொழுவது தமிழரின் பழங்கொள்கை. இதன் விளக்கமாக, இன்றும் தென்னாட்டுக் கோயில்களில் தல விருட்சங்களைக் காணலாம்.

**உள்ளுறை:** பாக்கத்துப் பரதவர் புலால் நாற்றம் போக, நீலமும் கொன்றையும் சேர்த்துக் கட்டிச் சூடுவது போல, நீயும் ஊரலர் ஒழிய மணம் சேர்தல் வேண்டும் என்றனள். கடற்றுரையிலே மோதுகின்ற அலைகளின் நுரைப் பிதிர்கள் புன்னைக் கிளைகளில் தங்கித் தோன்றுவது போல,

*உங்கள்களவு உறவும் இவள் மேனியின் புதுப்பொலிவால் ஊர் அறிந்ததாயிற்று என்றாள். சேவலோடு கூடப்பெறாத பேடை அன்றில் இரவெல்லாங் கூட்டிலே கிடந்து வருந்துமாறு போல, இவளும் நின்னுடன் கூடுதலற்று, இரவெல்லாம் இல்லிற்கிடந்து உறக்கமின்றிப் புலம்பிக் கிடப்பாள் என்றாள். இவற்றால் எல்லாம், பிரியாத உறவான மணம் பெறுதலையே வற்புறுத்தினாள் எனலாம்.*

**பாடபேதங்கள்:** *5. சேயிறா முகந்த. 6. சினைத்தொடுத்த 10. தொன்னலம் சிதைய. 14. இன்னாது உயவும். 15. நும்மூர் உள்ளுவை.*

## 271. மருந்தும் உண்டோ?

**பாடியவர்:** *காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *செலவுணர்த்திய தோழி தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது.* **சிறப்பு:** *களிமலி கள்ளில் நற்றேர் அவியனை பற்றிய செய்திகள்.*

*(தலைமகனது பிரிவைப்பற்றிய செய்தியைத் தலைமகளிடம் வந்து சொல்லிய தோழி அதனைக் கேட்டு அவனின்றி அவள் வாழாள்' எனத் தெளிந்தாள். தலைமகனிடம் வந்து, தான் கண்ட நிலையைக் கூறி, அவன் போவதைத் தடுத்து நிறுத்த இப்படிச் சொல்லுகின்றாள்.)*

**பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்**
**சிறுபுன் பெடையோடு சேண்புலம் போகி,**
**அரிமணல் இயவில் பரல்தேர்ந்து உண்டு,**
**வரிமரல் வாடிய வறன்நீங்கு நனந்தலைக்**
**குறும்பொறை மருங்கின் கோட்சுரம் நீந்தி,**

**நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்**
**செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்**
**பல்காய் அஞ்சினை அகவும் அத்தம்**
**சென்று, நீர் அவணிர் ஆகி, நின்றுதரும்**
**நிலைஅரும் பொருட்பிணி நினைந்தனிர் எனினே,**

**வல்வதாக, நும் செய்வினை! இவட்கே,**
**களிமலி கள்ளின் நல்தேர் அவியன்**
**ஆடியல் இளமழை சூடித் தோன்றும்**
**பழம்தூங்கு விடரகத்து எழுந்த காம்பின்**
**கண்ணிடை புரையும் நெடுமென் பணைத்தோள்,**

**திருந்துகோல் ஆய்தொடி ஞெகிழின்,**
**மருந்தும் உண்டோ, பிரிந்துறை நாட்டே?**

*தலைவனே! புள்ளிகளையும் வரைகளையும் கொண்ட சிவந்த கால்களையுடைய புறவுச்சேவலானது, தன்னுடைய சிறிய புல்லிய பேடையுடன் கூடியதாகத், தொலை தூரத்திலுள்ள இடத்திற்கும் பறந்து செல்லும். அவ்விடத்து விளங்கும் மணற் பாங்கான இடத்திலே, தனக்கேற்ற சிறுசிறு பரற்கற்களையும் ஆராய்ந்து பொறுக்கி உண்ணும். பின்னர், வரிகளையுடைய மரற்செடியும் வாடிப் போயிருக்கின்ற, மழையற்றுக் கிடக்கும் அகன்று இடத்ததான குன்றுகளின் பக்கங்களையுடைய, ஊறு பொருந்திய பாலைநிலத்தினைக் கடந்து, நெடுந்தூரம் நடந்துவந்த நீர்வேட்கை யுடையவராகிய புதியவர்களின், போகின்ற உயிர்களைப் போகாது நிறுத்திய சுவையுடைய காய்களைக்கொண்ட நெல்லி மரத்தினது, பல காய்களைக் கொண்ட் அழகிய கிளையிலே வந்திருந்து அகவிக் கொண்டுமிருக்கும். அத்தகைய காட்டுவழியிலே, நீரும் சென்று, அவ்விடத்தவர் ஆகியும் நின்று? கொணர்ந்து தருகின்ற நிலைத்தற்கு அரியதான பொருளாகிய பிணியினை, இப்போது நினைந்துள்ளீர். அங்ஙனமாயின், நும் செயல் வன்மை உறுவதாகுக!*

*களிப்புமிகுந்த கள்ளில் என்ற ஊரினையும், நல்ல தேரினையும் உடையவன் 'அவியன்' என்பவன். அவனுக்கு உரியதான, அசைதல் பொருந்திய இளமேகங்களைத் தன்பால் சூடித் தோன்றுகின்ற, பழங்கள் தொங்கிக் கொண்டிருக்கின்ற, மலைப்பிளப்பு இடங்களிலே வளர்ந்திருக்கும் மூங்கில்களின் கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதியைப் போல்வன, இவளுடைய நீண்ட மென்மையான பணைத்த தோள்கள். அவற்றிலுள்ள, திருத்தமான கோற்றொழிலையுடைய அழகிய தொடிகள் நெகிழ்ந்து வீழுமானால் நீ பிரிந்து சென்று தங்குகின்ற நாட்டிலே, அதனை வீழாது அவ்விடத்திருந்தே மாற்றுதற்குரிய மருந்தும் யாதானும் நின்னிடத்தே உளதோ? (உளதன்றாதலின் செல்லுதலும் வேண்டாவென்பது முடிபு.);*

*என்று, செலவுணர்த்திய தோழி, தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *3. மணல் இயவு - மணற்பாங்கான நெறியும் ஆம். 5. கோட்சுரம் - துன்பம் மிகுந்த சுரம்; உயிரைக் கொள்ளுதலான தன்மையுடைய சுரமும் ஆம். 9. அவணிராகி - அவ்விடத்து உறைபவராகி. 10. பொருட் பிணி - பொருளின்*

*மேற்கொண்ட பற்று. 11. வல்வது - வன்மையுடையது; வன்கண்மையொடு பட்டதாக எனப் பொருள்படுதலும்; 12. களிமவி கள்ளில் - கள்வளம் நிறைந்த கள்ளிலும் ஆகும். 14. காம்பு - மூங்கில்.*

**விளக்கம்:** *நெல்லி, வறண்ட நிலப்பாங்கிலும் வளர்கின்ற தன்மையுடையது: அதன் காயோ நீர் வேட்கை தீர்ப்பது. ஆதலின், பாலைவழியிலே நெல்லிமரங்களை வைத்து வளர்ப்பது அந்நாளில் அறச்செயல் கருதுவோர் மரபுகளிலே ஒன்றாயிற்று. 'இவ்விடத்து, இவளின்பால் நேர்கின்ற தோள் மெலிவை, அவ்விடத்தே இருந்துகொண்டே போக்கும் சக்தி படைத்தவோர் மருந்தும் உண்டோ?' என்றனள். அது என்றும் இலதாதல் பற்றியும், மருந்து அவன் அவளுடன் கூடியிருத்தலான ஒன்றேயாவது பற்றியும் என்க.*

**பாடபேதங்கள்: துறை:** *பிரிவு உணர்த்திய தோழி 9. நீர் வணிகராகி. 11. வாய்வதாக. 12. அவையன்.*

## 272. நெடுவேள் பரவும்!

**பாடியவர்:** *மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.*

*(இரவுக்குறியிடத்தே தன் காதலியைக் கூடி மகிழும் எண்ணமுடையவனாக வந்துள்ள தலைமகன் ஒரு பக்கமாயிருப்ப, அவன் கேட்குமாறு, தலைமகளுக்குத் தம் உறவினால் அன்னை கொண்ட ஐயத்தையும், அதன் பயனாகச் செய்யும் செயல்களையும் சொல்லுபவள் போலத், தோழி சொல்லுகிறாள்.*

**இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்**
**புலவுநாறு புகர்நுதல் கழுவக், கங்குல்**
**அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு**
**அஞ்சுவரு விடர்முகை ஆர்இருள் அகற்றிய,**
**மின்ஒளிர் எஃகம் செல்நெறி விளக்கத்,**

**தனியன் வந்து, பனிஅலை முனியான்,**
**நீர்இழி மருங்கின் ஆர்இடத்து அமன்ற**
**குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி**
**அசையா நாற்றம் அசைவளி பகரத்**
**துறுகல் நண்ணிய கறிஇவர் படப்பைக்**

**குறிஇறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும்,**
**மெய்ம்மலி உவகையன் அந்நிலை கண்டு,**

**'முருகு' என உணர்ந்து, முகமன் கூறி,**
**உருவச் செந்தினை நீரொடு தூஉய்,**
**நெடுவேள் பரவும், அன்னை; அன்னோ!**

**என்ஆ வதுகொல் தானே-பொன்னென**
**மலர்ந்த வேங்கை அலங்குசினை பொலிய**
**மணிநிற மஞ்ஞை அகவும்**
**அணிமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே?**

*பெரிய கையினையுடைய வேழம் ஒன்று, பெரிய புலியுடனே போரிட்டு அதனை வென்றது; புண்பட்ட, புள்ளிகளைக் கொண்ட அதன் நெற்றியினின்றும், புலால் நாற்றம் எழுந்தது. அந்தப் புண்களைக் கழுவுவதற்கு அருவியைத் தந்து உதவுவது தெய்வத்தையுடைய உயரமான மலை.*

*அத்தகைய மலையினது, அச்சம் வருகின்ற பிளப்புக்களாகிய குகைகளிலே செறிந்திருக்கும் இருளினை, மின்னலின் ஒளிபுகுந்து போக்கிக் கொண்டிருக்கும்.அவ்வாறு இருள்போக்கும் மின்னலைப்போல ஒளியுடன் விளங்கும் வேலானது தான் செல்லும் நெறியினை விளக்கமுறச் செய்யத், தன்னந் தனியனாக வந்தவன், நம் தலைவன்.*

*அவன், பெய்யும் பனியையும் வெறுக்கமாட்டான். நீர் ஒழுகும் பக்கத்திலேயுள்ள அரிய இடத்திலே அடர்ந்திருக்கும் காட்டு மல்லிகையின் மலர்களுடனே, கூதாளத்தின் மலர்களையும் ஒருங்கு தொடுத்த கண்ணியைச் சூடியிருப்பான். அந்தக் கண்ணியினின்று எழும் நீங்காத மணத்தினை அசைந்துவரும் காற்று எங்கும் எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கும். வட்டக்கல் பொருந்திய மிளகுக் கொடிகள் படர்ந்துள்ள தோட்டத்திலேயிருக்கும், குறுகிய இறைப்பினை யுடைய நம்முடைய வீட்டினிடத்தே, உள்ளத்தே பெருகிய உவகை உடையவனாக அவன் வந்து புகுவான். அந்த நிலையிலே, நம் அன்னையும் கண்டாள் எனில், முருகனே எனக் கருதி முகமன்கூறி வரவேற்பாள். நல்ல நிறம்வாய்ந்த செந்தினையை நீரோடும் தூவி, அவனை நெடுவேளெனவே நினைந்து பரவவும் தொடங்கிவிடுவாள்.*

*பொன் என்று சொல்லுமாறு மலர்ந்துள்ள வேங்கையின் அசையும் கிளைகள் பொலிவுறுமாறு, நீலமணியின் நிறத்தினைக். கொண்ட மயிலானது இருந்து. அகவிக் கொண்டிருக்கும் அழகிய மலை நாடனோடு நமக்கு அமைந்த தொடர்பானது, ஐயோ! அப்போது என்னதான் ஆகிவிடுமோ!*

என்று, இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. இரும்புலி - பெரியபுலி. 4. விடர்முகை - மலைப்பிளப்பாகிய குகை. ஆர் இருள் - மிகுதியான இருள். 5. விளக்க - விளக்கஞ் செய்ய ; மின்னொளி குகையின் இருளை அகற்றுவதுபோல வேலின் ஒளி வழியின் இருளினை அகற்றி ஒளிதர என்க. 6. பனியலை - பனி அலைத்தலை; அலைத்தல் - துன்புறுத்தல். 7. அமன்ற - செறிந்துள்ள. 10. துறுகல் - வட்டக்கல். கறி - மிளகுக்கொடி. 11. குறி இறை - குறுகிய இறைப்பு. 13. முருகு - முருகன். 15. நெடுவேள் - முருகன்.*

**விளக்கம்:** *'முருகென நினைந்து அன்னை பரவும்' என்றதனால், தமக்குத் தீமை வருவதும் கூடுமெனக் குறிப்பால் உணர்த்தி, இரவுக்குறியின் இசையாமையினைச் சொல்லினாள். 'பொன்னென வேங்கை மலர்ந்து' என்றது. மணம் புணர்க்கும் காலத்தின வரவையும் உரைத்து, அவனை வரைந்துகொள்ளுஞ் செயலிலே ஈடுபடத் தூண்டியதாகும்.*

**மேற்கோள்:** *'தலைவனைச் செவிலி கண்டு முருகெனப் பரவிய செயலினைத் தோழிகொண்டு கூறினாள்' என, இதனைக் 'களவலராயினும், என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டினர்.*

## 273. பெண்கள் உலகம்!

**பாடியவர்:** *ஔவையார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவின்கண் தலைமகள் அறிவு மயங்கிச் சொல்லியது.*

*(தலைவன் பிரிந்து வேற்றூர் சென்றுள்ளான். தலைவியின் உள்ளத்தே தனிமைத் துயரம் மிகுதியாயிற்று. அதனால், அவளுடைய அறிவும் மயக்கமுற்றது. அவள், தன் தோழியினிடம் இப்படித் தன் நிலைமையை எடுத்துச் சொல்லுகிறாள்.)*

**விசும்பு விசைத்துஎறிந்த கூதளங் கோதையிற்.<br>
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ,<br>
ஆர்கலி வளவயின் போதொடு பரப்பப்,<br>
புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்,<br>
நலம்கவர் பசலை நலியவும், நந்துயர்**

**அறியார் கொல்லோ தாமே? அறியினும்,<br>
நம்மனத்து அன்ன மென்மை இன்மையின்,<br>
நம்முடைய உலகம் உள்ளார் கொல்லோ?<br>
யாங்கென உணர்கோ; யானே? - வீங்குபு<br>
தலைவரம்பு அறியாத் தகைவரல் வாடையொடு**

**முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை**
**அசைவுடை நெஞ்சத்து உயவுத்திரள் நீடி,**
**ஊரோர் எடுத்த அம்பல் அம்சினை,**
**ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பிப்**
**புலவர் புகழ்ந்த நாணில் பெருமரம்**

**நிலவரை எல்லாம் நிழற்றி,**
**அலர்அரும்பு ஊழ்ப்பவும், வாரா தோரே.**

*மிகவும் மிகுதியாகி, முடிவின் எல்லை இதுதான் என்று அறியவும் இயலாத தன்மையுடனேயே வாடைக் காற்றும் வந்தது. அந்தக் காற்றுடனே கூடி, முலையிடைத் தோன்றிய நோயும் இளமுளை வளர்வதுபோல நாளுக்குநாள் வளரலாயிற்று. தளர்வுள்ள நெஞ்சத்திடத்தே தோன்றிய வருத்தத்தின் காரணமாக, அந்த முளை, திரண்ட அடிமரத்தையுடைய மரமாகவும் வளர்ந்தது. ஊரோர் எடுத்த அம்பல் அதன் அழகிய கிளைகளாகப் பரந்து விளங்கிற்று. அமையாத காதல் என்னும் ஒளியினையுடைய தளிர்களைப் பரப்பிக் கொண்டதாகப், புலவர்கள் புகழ்ந்துரைத்த நாணமும் இல்லாது போன ஒரு பெருமரமாகவும் அது ஆகிவிட்டது. நிலத்தின் எல்லை எங்கணுமே கவிழ்ந்து நிழல்செய்து, அலராகிய அரும்புகளைத் தோன்றச் செய்தும் விட்டது. இந்நிலையினும்கூட, அவர் நம்மிடத்தே வாராதவராயினர்.*

*ஆகாயத்தை நோக்கி வேகமாக எறிந்த கூதாளி மாலையினைப்போல, பசிய காலினையுடைய குருகுகள் வரிசையிட்டு வளைவுடனே பறந்து வருகின்றன. அவை வளமிகுந்த நீர்நிலைக்கண்ணே மிகுதியான ஆரவாரத்துடனே வந்து, அங்குள்ள மலர்களுடன் கலந்து பரவி அமர்ந்தன. விளைநிலங்கள், கதிர்களை ஈன்ற தம்முடைய புனிற்றுவேளை கழிந்தவையாகத் தோன்றும, புதிதாக வருதலையுடைய பனிக்காலமும் வந்தது. அதனாலே. நம் நலத்தினைக் கவர்ந்து கொள்ளும் பசலைநோயும் படர்ந்து நம்மை வருத்துகின்றது. இருந்தும், நம் துயரத்தை அவர் அறியமாட்டாரோ?*

*அவர் அறிந்திருந்தாலும், நம்முடைய உள்ளத்தைப் போன்ற மென்மையான தன்மை அவரிடத்தேயும் இல்லாததனால், நம்முடைய இந்த உலகத்தையே நினையாதிருக்கின்றனரோ? யான் என்னவென்று உணர்ந்து ஆற்றியிருப்பேன்?*

*என்று? பிரிவின்கண் தலைமகள் அறிவு மயங்கிச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. விசைத்து - விரைவுடன். 2. வாப்பறை வளைஇ - தாவிப் பறந்து வளையமிட்டு. 4. புனிறு - ஈன்றதன் அணிமை; இங்கே வயல்கள் அறுவடை முடிந்தபின் சிறிது காலத்திற்குள் என்பதைக் குறித்தது. 9. வீங்குபு - மிகுதிப் பட்டதாக. 10. தகைவரல் - தன்மையுடன் வருதலையுடைய. 12. திரள்நீடி - திரட்சியுற்று வளர்ந்து.*

**விளக்கம்:** *வாடையினால் வருத்தம் அளவுகடந்து போக, 'தலைவரப்பறியா வாடை' என அதனைப் பழித்தனள். அவனைத் தழுவப் பெறாததனால் எழுந்த காமநோய் நாளுக்கு நாள் வளர்ந்து, தன் தனிமைத்துயர் ஊரும்அறிந்த அலருடையதான நிலையை, முளைத்துப் பெருமரமான தன்மையுடன் உருவகித்தனள்.*

**பாடபேதங்கள்:** *1. விசைத்தெழுந்த. 7. தன்மை அன்மையின். 10. நிலை வரம்பு. 11. தோய்வரல் இளமுலை. 12. உயவுத்திறன் நீடி. 15. நாரில் பெருமரம்.*

## 274. ஊர் புறவினதுவே!

**பாடியவர்:** *இடைக்காடனார் ; கல்லாடனார் எனவும் பாடம்* **திணை:** *முல்லை.* **துறை:** *தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.*

*(தன்னுடைய வினைமுடித்த தலைவன், தான் வீடு திரும்புதற்கான காலமும் வந்ததாகத், தன்னுடைய தேர்ப்பாகனுக்குத் தன் வீட்டின் இருப்பிடத்தைத் தெரிவித்துத் தேரினை விரையச் செலுத்தத் தூண்டுகின்றான்.)*

**இருவிசும்பு அதிர முழங்கி, அரநலிந்து,**
**இருபெயல் அழிதுளி தலைஇ, வானம்**
**பருவஞ் செய்த பானாட் கங்குல்,**
**ஆடுதலைத் துருவின் தோடு ஏமார்ப்ப,**
**கடைகோல் சிறுதீ அடைய மாட்டித்,**

**திண்கால் உறியன், பானையன், அதளன்,**
**நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்பத்,**
**தண்டுகால் ஊன்றிய தனிநிலை இடையன்,**
**மடிவிடு வீளை, கடிதுசென்று இசைப்பத்,**
**தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ**

**முள்ளுடைக் குறுந்தூறு இரியப் போகும்**
**தண்ணறும் புறவி னதுவே-நறுமலர்**
**முல்லை சான்ற கற்பின்**
**மெல்லியற் குறுமகள் உறைவின் ஊரே.**

பெரிய வானமும் அதிருமாறு முழக்கமிட்டு, அரவுகளின் தலைகள் துணிபட்டுப் போகுமாறு அவற்றை வருத்தி, சொரியும் பெயலாகி மிகுந்த மழைத்துளியினையும் பெய்யத் தலைப் பட்டதாக, மேகங்கள் வந்து, காராகிய பருவத்தையும் செய்தன. அத்தகைய பருவத்தின் பாதிநாளாகிய இரவிலே,

அசைகின்ற தலைகளையுடைய ஆட்டுக்குட்டிகளின் தொகுதிகளைப் பாதுகாவலினைப் பெறுமாறு, கடைகோலி னால் கடைந்த சிறுதீயை மிக்கு எரியுமாறு விறகுகளை மாட்டி வைத்து, திண்மையான தாம்பினைக் கொண்ட உறியினையும், பானையினையும், தோற்படுக்கையினையும் உடையவனாக விளங்குபவன், நுண்ணிய பலவான மழைத்துளிகள் தன்னுடைய ஒருபக்கத்தை நனைக்கவும், தண்டாகிய காலினை ஊன்றித் தனித்து நிற்றலையே மேற்கொண்டவனாகியிருக்கும் இடையன். அவன், வாய்மடித்து எழுப்பும் சீழ்க்கை யொலியானது விரைந்துசென்று ஒலித்தலினால், துள்ளும் ஆட்டுக் குட்டியினைக் கவர்வதற்கு நோட்டம் பார்க்கும் குள்ள நரியானது அச்சங்கொண்டு, முட்களையுடைய குறுந்தூறுகள் கெடுமாறு அவற்றிடையே புகுந்து ஓடிப்போகும். அத்தகைய தண்மையான நறிய காட்டினிடத்தே இருப்பது.

'நறுமலராகிய முல்லையை அணிந்த கற்பினையுடைய; மெல்லியலான இளமையையும் உடைய, நம் தலைவியின் உறைவிடமாகிய நமக்கு இனிதான ஊர். (அவ்விடம் நோக்கி. நின் தேரினை விரையச் செலுத்துவாயாக என்றனன்)

என்று, தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான். என்க.

**சொற்பொருள்:** 1. அரநலிந்து - அரவினை வருந்தி. அழி துனி - மிக்க துளி; பெருமழை அழிவையும் தருதலினால் அழி துளியாயிற்று. 4. ஆடுதலைத் துரு - ஆடும் தலையையுடைய ஆட்டுக்குட்டி. 5. கடைகோல் - தீக்கடைகோல். 9. வீளை - சீழ்க்கையொலி. 10. தெறி மறி - துள்ளும் ஆட்டுக்குட்டி. குறு நரி - குள்ளநரி. 11. தூறு - புதர். 12. புறவு - காடு. 13. முல்லை சான்ற கற்பு - காத்திருத்தலாகிய பண்பமைந்த கற்பும் ஆம்.

**உள்ளுறை:** குட்டியைக் கவரப் பார்த்திருக்கும் குறுநரியானது, இடையனின் சீழ்க்கையொலி கேட்டதும். அஞ்சி ஓடுவதுபோலத், தலைவியின் மிகுதியான வருத்தமும், தன் தேரோசை கேட்டதுமே நீங்கும் என்றனன்.

**பாடபேதங்கள்:** 1. வானவின்று. 3. பெருவளஞ்செய்த. 8. தண்கோலூன்றிய. 11. இரியப் பெரும்.

## 275. கண்ணுள்ளவரே பாருங்கள்!

**பாடியவர்:** *கயமனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *மகட்போக்கிய தாய் சொல்லியது: மகட்போக்கிய செவிலி சொல்லியது எனவும் பாடம்.*

*(தன் மகள், தன்னுடைய உளம் நிறைந்தானாகிய காதலனுடனே உடன்போக்கிலே சென்றுவிட, அதனால் உள்ளம் வருந்தியவளான தாய், தன் மகள் விளையாடிய இடத்தையும் பிறவற்றையும் காட்டி நொந்து புலம்புகின்றாள்.)*

**ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்திக்,**
**குடைஅடை நீரின் மடையினள் எடுத்த**
**பந்தர் வயலைப், பந்து எறிந்து ஆடி,**
**இளமைத் தகைமையை வளமனைக் கிழத்தி!**
**'பிதிர்வை நீரை வெண்நீறு ஆக; 'என,**

**யாம்தற் கழறுங் காலைத், தான்தன்**
**மழலை இன்சொல, கழறல் இன்றி,**
**இன்உயிர் கலப்பக் கூறி, நன்னுதல்**
**பெருஞ்சோற்று இல்லத்து ஒருங்குஇவன் இராஅள்,**
**ஏதி லாளன் காதல் நம்பித்**

**திரளரை இருப்பதைத் தொள்ளை வான்பூக்**
**குருளை எண்கின் இருங்கிளை கவரும்**
**வெம்மலை அருஞ்சுரம், நம்இவண் ஒழிய,**
**இருநிலன் உயிர்க்கும் இன்னாக் கானம்,**
**நெருநைப் போகிய பெருமடத் தகுவி**

**ஐதுஅகல் அல்குல் தழையணிக் கூட்டும்**
**கூழை நொச்சிக் கீழது, என்மகள்**
**செம்புடைச் சிறுவிரல் வரித்த**
**வண்டலும் காண்டீரோ, கண்உடை யீரே?**

*"வளமுடைய இல்லத்திற்கு உரியவளே! உயர்ந்த நிலையின தாகிய தாழியிலே நிறையக் கொண்ர்ந்து நிரப்பிப், பின் பனங்குடையால் முகந்த நீரினைச் சொரிந்தவளாக, நீயே பேணி வளர்த்த, பந்தரிட்டுப் படர்ந்துள்ள வயலைக்கொடிப் பந்தரினை உடைய இடத்திலே, பந்து எறிந்து விளையாடுவாய். 'இளமைத் தகைமை உடையவளே! இப்படித் திரியும் தன்மையான இருக்கின்றாயே? நின் பெண்மை நலன் அழிந்து போக!" என்று, யாம் அவளைக் கடிந்துகொண்டோம். அப்போது,*

நல்ல நெற்றியினளான அவள், தான் ஏதும் அதற்குக் கடுமையாக மறுமொழி சொல்லுதலின்றித், தன்னுடைய மழலைத் தன்மைகொண்ட இனிய சொல்லினாலே, எம் இனிய உயிரினுடன் கலப்பதுபோல விடை கூறினள்.

பெருஞ்சோற்று வளமுடைய எம் வீட்டிலே, எம்முடனே கூடி அவள் இப்போது இவ்விடத்தே இராதவளாயினள். எவனோ அயலவனது காதலையே சிறப்புடையது என நம்பினள். நாம் இவ்விடத்தே ஒழிந்துபோக, அவனுடன் சென்றும் விட்டனள்.

திரண்ட அறையினையுடையது இருப்பை. அதன் தொளையுடைய வெண்பூக்களைக் குட்டிக் கரடிகளின் பெருங்கூட்டம் கவர்ந்து உண்டு கொண்டிருக்கும். அத்தகைய வெம்மையான மலைப்பகுதியான, அரிய சுரத்தினையுடைய, பெரிய உலக மெல்லாம் அஞ்சி உயிர்க்கின்ற கொடுமையினை யுடைய, காட்டினூடே நேற்றுப் போயும் விட்டனள்.

பெரிதான மடப்பத்தை உடையவள் என் மகள்; அழகிதாக அகன்ற அவளுடைய அல்குல் தடத்தினிடத்திலே உடுத்தும் தழையுடைக்காகக், கொய்து சேர்க்கும் குறுகிய நொச்சி மரத்தின் கீழதாகச், சிவந்த பக்கத்தையுடைய அவளது சிறு விரல்களால் வரித்துள்ள வண்டலையும், கண்பெற்றவர்களே! இதோ நீங்களேதான் காணீர்களோ?

என்று, மகட்போக்கிய தாய் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. தாழி - உயரமும் பெரிதுமான வாயகன்ற மண்பாத்திரம். மல்க - நிறைய. 2. குடை - பனங்குடை. 3. வயலை - வயலைக்கொடி. 5. பிதிர்வை நீரை - சுற்றிச் சுழலும் தன்மை உடையை. 9. பெருஞ்சோறு - விருந்துமாம்; நாளும் விருந்து போலவே பெருஞ்சோறு வட்டிக்கின்ற வளமனை என்க 14. நிலம் உயிர்த்தல் - வெண்மையான அனல் எழுதல் 18. செம்புடை - சிவந்த பக்கம்.

**விளக்கம்:** "மணந்து குடும்பப் பொறுப்பு வகிக்கவேண்டிய நீ, இப்படிப் பந்தெறிந்தாடிச் சுற்றித் திரிகின்றனையே! நின் பெண்மை நீறாக!" எனத் தாய் கடிந்தனள் என்க. அப்படிப் பொறுப்பின்றிச் சிறுபெண்போலக் கவலையற்று ஆடித் திரிந்தவள், நேற்றுக் கொடிய வெங்காட்டினூடே, அயலவனின் காதலை நம்பிப் போய்விட்டனளே! என வருந்துகின்றனள். அதுபற்றியே, 'பெருமடத் தகுவி' என்றனள்.

**மேற்கோள்:** "வண்டலைக் காணார் தேளத்து நின்று, காணல் ஆற்றீர்' எனக் கூறினதனால், ஆயத்திற்கு அன்றிப் புறஞ்சென்று சேரியோர்க்கு உரைத்ததாயிற்று" என, 'ஏமப் பேரூர்' என்னுஞ் சூத்திர உரையிலே, இச்செய்யுளின், 'வெம் மலை... கண்ணுடையீரே' என்ற பகுதியை நச்சினார்க்கினியர் காட்டுவர்.

**பாடபேதங்கள்:** *4. வளமனை கழிப்பி. 7. கழறலையின்றி. 12. எண்கின் இருங்கிளை. 12. வெம்மனை அருஞ்சுரம்.*

## 276. ஈயாதான் பொருள்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது.* **சிறப்பு:** *ஆரியர், பழக்கிய பிடியானைகளைக் கொண்டு காட்டின் புதிய களிறுகளை அகப்படுத்தல் முதலிய செய்திகள்.*

*(தலைமகனிடம் தான் உறவு கொண்டிருப்பதாகத் தலைமகள் பழித்தாள் எனக் கேட்டதும், பரத்தையின் உள்ளம் துடிக்கிறது. இனி, நமக்கு நாணமும் உண்டோ எனக் குமுறுகிறாள். தலைமகளின் தோழியர் கேட்குமாறு இப்படித் தன் தோழியரிடம் சொல்பவள்போலச் சொல்லுகின்றாள்.)*

**நீளிரும் பொய்கை இரைவேட்டு எழுந்த**
**வாளை வெண்போத்து உணீஇய, நாரைதன்**
**அடிஅறி வுறுதல் அஞ்சிப், பைப்பயக்**
**கடிஇலம் புகூஉம் கள்வன் போலச்,**
**சாஅய் ஒதுங்குந் துறைகேழ் ஊரனொடு**

**ஆவதுஆக! இனிநாண் உண்டோ?**
**வருகதில் அம்ம, எம் சேரி சேர!**
**அரிவேய் உண்கண் அவன்பெண்டிர் காணத்,**
**தாரும் தானையும் பற்றி, ஆரியர்**
**பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்**

**தோள்கந் தாகக் கூந்தலின் பிணித்து, அவன்**
**மார்புகடி கொள்ளேன் ஆயின், ஆர்வுற்று**
**இரந்தோர்க்கு ஈயாத ஈட்டியோன் பொருள்போல்,**
**பரந்து வெளிப்படாது ஆகி,**
**வருந்துக தில்ல, யாய் ஓம்பிய நலனே!**

நெடிதான பெரிய பொய்கையிலே இரையை விரும்பியதாக எழுந்த வாளைமீனின் வெண்மையான ஆணினை உண்ணும் பொருட்டு, நாரையானது, தன் அடியின் நடக்கும் ஒலியை அது

அறிந்து கொள்ளுதலுக்கு அஞ்சிக், காவலுடைய வீட்டினுள்ளே எவரும் அறியாமற் புகுகின்ற கள்வனைப் போல மெல்ல மெல்லப் பதித்ததாக நடந்து ஒதுங்கும். அத்தகைய நீர்த்துறை உரியவனாகிய ஊரனோடு நமக்கு இனித் தொடர்பும் ஆவது ஆகுக! இனி, நாணம் என்பதும் ஒன்று நமக்கு உளதோ?

அவ்வூரன் எம்முடைய சேரியிடத்தேயே தங்குதற்கு வருவானாக. செவ்வரி பொருந்திய மையுண்ட கண்களையுடைய அவன் மனைவியே பார்த்துக் கொண்டிருக்க, அவனுடைய மாலையினையும் ஆடையையும் பற்றிக் கொள்வேனாக. ஆரியர்களின் பிடியானது தான் பழக்கம் செய்துகொண்டு தருகின்ற பெரிய களிற்றியானையைப் போல, என் தோளே கட்டுத்தறியாகக் கொண்டு, என் கூந்தலாகிய கயிற்றினாலே கட்டி, அவனுடைய மார்பினைச் சிறைப்படுத்துவேனாக! அங்ஙனம் யான் செய்யாது போனால்,

என் தாய் பேணி வளர்த்த என் அழகெல்லாம், பொருளார்வம் கொண்டு இரந்தவர்களுக்கு ஈயாமல் சேர்த்து வைத்த கருமியின் பொருளைப் போல, வெளிப்பட்டுப் புகழுடன் எங்கும் பரவாததாகி, வருந்திக் கிடந்தே அழிவதாக!

என்று, தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. நீள் இரும் பொய்கை - நெடிதான பெரிய பொய்கை. 4. கடியிலம் - காவல் உடைய இல்லம். 5. சாஅய் ஒதுங்கும் - அக்கம் பக்கம் பார்த்துத் தளர்ந்து நடக்கும். 9. தார் - விசேடமாக அணிவது; போகத்திற்கு உரிய மாலை என்பர். தானை - ஆடை; மேலாடையுமாம் 10. பயின்று - பழகி. தரூஉம் - கொண்டு தரும். 15. கடி கொள்ளல் - சிறைப்படுத்துதல்.

**விளக்கம்:** 'நலன் கருமியின் பொருள் போலப் பரந்து வெளிப்படாதாகி வருந்துக' என்றது, அவன் கொடுத்தலில னாதலால் எவரும் மதித்துப் போற்றாதவாறு போலத், தன் நலனும் போற்றுவாரற்றுப் பயனின்றி அழிக என்றனளாகும்.

**உள்ளுறை:** நாரை, வாளைப் போத்தினைத், தான் வருவதை அது அறியாதவாறு மெல்ல அடியிட்டு நடந்து கவர்ந்து உண்ணும் ஊரன் என்றது, தானும் அவனுணராதேயே அவனைத் திடுமெனத் தோன்றி மயக்கி அடிமைகொள்ளும் வல்லமை உடையவள் எனச் செருக்குடன் கூறியதாகும்.

**மேற்கோள்:** "பரந்து வெளிப்படாதாகி வருந்துக என்னலம்" என்றதனால், சேரிப் பரத்தையைப் புலந்து கூறுதல் முதலியனவும் கொள்க" எனச் இச்செய்யுளைப், 'புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்' என்னும் சூத்திர உரையினும்,

'தில்' ஒழியிசைப் பொருளிலே வந்ததற்கு, 'வருகதில் அம்ம' என்ற பகுதியைக் காட்டி, 'வந்தக்கால் இன்னது செய்வேன் என்பது பொருள்' என, 'விழைவே காலம்' என்னுஞ் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

**பாடபேதங்கள்:** *3. பையெனக். 4. கடியில் புகூஉம்; கடியிலன் புகூஉம்.*

## 277. செவ்வி வேனல்!

**பாடியவர்:** *கருவூர் நம் மார்பகனார்.* **திணை:** *பாலை.* **துறை.** *தலைமகன் பிரிவின்கண், தலைமகள் தோழிக்குப் பருவங்கண்டு அழிந்து சொல்லியது.*

*('கார்காலத்து வருவேன்' என்று உறுதிகூறிப் பிரிந்து சென்றவனான தலைவன், சொன்னபடி வராமற் போயினான். இளவேனில் வந்தும், அவன் வராமற்போகவே, அந்தப் பருவத்தைக் கண்டு, தன் நெஞ்சம் நிலையழிந்த தலைவி, தன் தோழியிடம் இப்படிக் கூறுகின்றாள்.)*

**தண்கதிர் மண்டிலம் அவிர்அறச் சாஅய்ப்**
**பகலழி தோற்றம் போலப், பையென**
**நுதல்ஒளி கரப்பவும், ஆள்வினை தருமார்,**
**தவலில் உள்ளமொடு எஃகுதுணை ஆகக்,**
**கடையல குரலம்,வாள்வரி உழுவை**

**பேழ்வாய்ப் பிணவின் விழுப்பசி நோனாது,**
**இரும்பனஞ் செறும்பின் அன்ன பரூஉமயிர்ச்,**
**சிறுகண், பன்றி வருதிறம் பார்க்கும்**
**அத்தம்ஆர் அழுவத்து ஆங்கண் நனந்தலை,**
**பொத்துடை மரத்த புகர்படு நீழல்,**

**ஆறுசெல் வம்பலர் அசையுநர் இருக்கும்,**
**ஈரம்இல், வெஞ்சுரம் இறந்தோர் நம்வயின்**
**வாரா அளவை-ஆயிழை!-கூர்வாய்**
**அழல்அகைந் தன்னகாமர் துதைமயிர்**
**மனைஉறை கோழி மறனுடைச் சேவல்**

**போர்எரி எருத்தம் போலக் கஞலிய**
**பொங்கழல் முருக்கின் எண்குரல் மாந்தி,**

**சிதர்சிதர்ந்து உகுத்த செவ்வி வேனில்**
**வந்தன்று அம்ம, தானே;**
**வாரார் தோழி! நம் காத லோரே.**

குளிர்ந்த கதிர்களையுடைய திங்கள் மண்டிலமானது, தன்னுடைய ஒளி முழுவதும் விளக்கம் அறுமாறு கெட்டுப் பகல் வேளையிலே அழிந்து தோன்றுவதுபோல, மெல்ல மெல்ல நம் நெற்றியின் ஒளியும் போய் ஒளிந்துகொண்டது. முயற்சியால் பொருள் ஈட்டித் தருவதற்கான நீக்கமற்ற நெஞ்சத்துடனே, தமது வேல் ஒன்றே துணையாகக் கொண்டு அவரும் நம்மைப் பிரிந்து சென்றனர்.

தயிர் கடைவதுபோன்ற குரலினையுடையதான, ஒளியுள்ள கோடுகளைக் கொண்ட வேங்கையானது, பிளந்த வாயினதாகக் கிடக்கும் தன்னுடைய பெண்புலியின் மிகுதியான பசித் தன்மையைக் காணப் பொறாததாகிக், கடுமையான பனஞ்சிறாய்களைப் போன்ற பருத்த மயிர்களையும் சிறுத்த கண்களையுமுடைய காட்டுப் பன்றியானது வருகின்ற தன்மையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் இயல்புடையது காடு.

அதன் பரப்பாகிய அகன்ற இடத்திலே, பொந்துள்ள மரத்தின் புள்ளிபட்ட நீழலிலே, வழிச் செல்வாராகிய புதியவர்கள், வழிநடந்து தளர்ந்தவர்களாகக் களைப்பாறி இருப்பார்கள். அத்தகைய ஈரமற்ற வெம்மையான சுரத்தினையும் கடந்து சென்றவர் நம் காதலர். அவர், நம்மிடத்தே வராது போன காலத்திலே,

தோழி! கூர்மையான வாயினையும், நெருப்புக் கொழுந்து விட்டு எரிந்தாற்போல விளங்கும் அழகான மயிர்ச்சிறகினையும் உடையது, மனையிலே வாழும்கோழியினது, ஆற்றலுடைய சேவல், போரிடும் காலத்திலே கிளர்ந்து எழுகின்ற அதன் கழுத்தினைப்போல அடர்த்தியாகப் பூத்துள்ள, பொங்கும் அழலைப் போன்ற முருக்கமரத்தினது ஒள்ளிய கொத்திலே யுள்ள மதுவினை வயிறார உண்ட வண்டினம், அத் தேன் நிலத்திலும் சிதறுமாறு உகுத்த, செவ்வியையுடைய இளவேனிற் காலமும் வந்துவிட்டது. ஆயினும், நம் காதலுடைய்யவரோ இன்னும் வாராதிருக்கின்றனரே? (என் செய்வோம்?)

என்று? தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குப் பருவங்கண்டு அழிந்து சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. அவிர் அற - ஒளியற. 2. பகலழிதோற்றம் - பகற் காலத்திலே மழுங்கித் தோன்றுகின்ற தோற்றம், தவலில் உள்ளம் - நீங்காத நெஞ்சம். 6. நோனாது - பொறுக்காது. 8. வருதிறம் - வரும்வழி; வரும் தன்மையுமாம். 10. பொத்து - பொந்து. 14. காமர் - அழகிய. 16. எருத்தம் - கழுத்து.*

**விளக்கம்:** *பிரிவினால் முகம் ஒளியிழந்து தோன்றுவதனைப் பகற்காலத்தே தோன்றும் நிலைக்கு ஒப்பிட்டனர் கொடிய குணம் உடையதான வேங்கையும் தன் பிணவின்' மீது அன்புடையதாக விளங்கும்போது, நம் காதலர் நம்மீது அருளின்றி இருப்பது ஏனோ எனவும் கவலையுற்றாள். சேவற்கழுத்துப் போலச் சிவந்த முருக்கம்பூவினை வண்டு ஊதித் தேனுண்ணும் இளவேனிலிலே, அவர்மட்டும் என்பால் விரும்பி வரக் காணேனே எனவும் கலங்கினாள்.*

**பாடபேதங்கள்:** *7. செறும்பின் அனைய. 11. அசைவினர் இருக்கும், 17. புன்காய் முருக்கின்.*

## 278. யாம் குளிப்போமோ!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.*

*(வானத்திலே மேகம் இருண்டு இடித்து மின்னலிட்டு விளங்கும் நள்ளிரவு வேளை; தலைவனின் வருகையை இரவுக் குறியிடத்திலிருந்து எதிர்பார்த்திருக்கின்றாள் தலைவி. அவளுடனிருக்கும் தோழி, தலைமகன் கேட்குமாறு, தன்னுடைய துயரத்தினை இப்படிக் கூறுகின்றாள்.)*

**குணகடல் முகந்த கொள்ளை வானம்**
**பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்**
**தோல்நிரைத் தனைய ஆகி, வலன்ஏர்பு**
**கோல்நிமிர் கொடியின் வசிபட மின்னி,**
**உரும்உரறு அதிர்குரல் தலைஇப், பானாள்,**

**பெருமலை மீமிசை முற்றின ஆயின்,**
**வாள்இலங்கு அருவி தாஅய், நாளை,**
**இருவெதிர் அம்கழை ஒசியத் தீண்டி**
**வருவது மாதோ, வண்பரி உந்தி,**
**நனிபெரும் பரப்பின் நம்ஊர் முன்துறைப்,**

**பனிபொரு மழைக்கண் சிவந்த, பானாள்**
**முனிபடர் அகல மூழ்குவம் கொல்லோ!**

**மணிமருள் மேனி ஆய்நலம் தொலைய,**
**தணிவுஅருந் துயரம் செய்தோன்**
**அணிகிளர் நெடுவரை ஆடிய நீரே?**

*கீழ்க்கடலிலே நீரினை முகந்து, அந்தக் கொள்ளையை உடையனவாக வானிலே எழுந்த மேகங்கள், முரசுகெழுமிய வேந்தர்களின் பல்வேறு படைகளையுடைய படைஞர்களும் கேடகங்களை வரிசையாகக் கொண்டிருப்பது போல் விளங்கும்; வலமாக மேலெழுந்து, கோலினிடத்தே தழுவிப் படரும் கொடியனைப் போல வானம் பிளக்கும்படியாக மின்னலிடும்; அச்சந்தரும் இடியினது அதிர்கின்ற முழக்கத்தையும் பொருந்தியிருக்கும்; இந்த நள்ளிரவிலே, அவை பெரிய மலையின் முகட்டிலே சூழ்ந்து கொண்டனவாகவும் விளங்குகின்றன. ஆதலின்,*

*நாளைப் பொழுதிலே, ஒளிவிளங்கும் அருவியானது பரந்து, பெரிய மூங்கிலின் அழகிய தண்டுகள் ஒடியும்படியாக அவற்றைத் தாக்கி, அழகிய குதிரை மரங்களை எல்லாம் சாய்த்துத் தள்ளிக்கொண்டு, மிக்க பரப்பினையுடைய நம் ஊரின் நீர்த்துறையிலேயே வருவதும் நிகழும். வந்தால்.*

*செம்மணியைப் போன்ற நம் மேனியின் அழகிய நலமெல்லாம் கெட்டழியும் படியாகத், தணித்தற்கு அரிய துயரத்தை நமக்குச் செய்தவனுடைய, அழகு கிளர்ந்திருக்கும் நெடிய வரையிலே தோய்ந்துவரும்அந்த நீரிலே, பனி பொருந்திக் குளிர்ந்துள்ள நம் கண்கள் சிவக்குமாறு, நள்ளிரவிலே நாம் வெறுத்து அநுபவித்திருக்கும் இத்துன்பமும் நீங்க, நாம் மூழ்கிக் குளிக்கவும் செய்வோமோ?*

*என்று, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *1. குணகடல் - கீழ்கடல். கொள்ளைவானம் - கொள்ளையினைத் தன்பாற் கொண்டிருக்கின்ற மேகம். 4. வசிபட - பிளக்கும்படியாக. 6. மீமிசை - உயரமான முகடுகளிலே. 9. ஒசிய - ஒடியுமாறு. 13. மணி - செம்மணி.*

**விளக்கம்:** *அவன் வராத ஏக்கத்தினாலே துன்புற்றிருக்கும் தன் நிலைமை தோன்ற, அவன் வந்து அதனைத் தீராதவனாயினான்; இனி நாளைக் காலையிலே வரும் புது நீர்ப்பெருக்கிலே மூழ்கி இத்துயரை நாம் தீர்ப்போமோ என்றனள் தோழி. 'தோல் நிரைத்தன' என்பதனை யானைகளை வரிசையாக நிறுத்தி வைத்தாற்போல எனவும் உரைப்பர்.*

யானைகளே முன் காலத்துப் போரிலே முன்னணியிலே நிறுத்தப் பெற்றிருப்பன என்பதனையும் நினைக்கவும் 'பரி' என்பது ஆற்றிலே அணை கட்டுவார் நிறுத்துகின்ற மரங்கள்; அவை, நீர்ப் போக்கைத் தடுக்க உதவுவன; வெள்ளம் அவற்றையும் இழுத்துக்கொண்டு செல்லும்; பரி என்பது சிறு படகுகள் எனச் சில பகுதிகளில் இந்நாளும் வழங்குவது கொண்டு அவ்வாறும் கொள்ளலாம். இப்படிச் சொல்வதன் கருத்து, விரைவிலே வரைந்துவந்து மணந்து கோடலைக் குறித்தது என்க.

**பாடபேதங்கள்:** *6. பெருவரை. 11. சிவப்பப் பன்னாள்.*

## 279. நம்முடைய மதுகையன்!

**பாடியவர்:** *இருங்கோயன் ஒல்லையாயன் செங்கண்ணனார்: இருங்கோக் கண்ணனார் எனவும் பாடம்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(பொருள் தேடிவரும் பொருட்டாகத் தன்னுடைய தலைமகளைப் பிரிந்து சென்றான் ஒரு தலைமகன். இடை வழியிலே, அவளுடைய நினைவே பெரிதும் சூழ்ந்து தன்னை வருத்தத் தன் நெஞ்சிற்கு இவ்வாறு உரைக்கின்றான்.)*

**'நட்டோர் இன்மையும், கேளிர் துன்பமும்,**
**ஒட்டாது உறையுநர் பெருக்கமும், காணூஉ**
**ஒருபதி வாழ்தல் ஆற்றுப தில்ல**
**பொன்னவிர் சுணங்கொடு செறிய வீங்கிய**
**மென்முலை முற்றம் கடவா தோர்' என,**

**நள்ளென் கங்குலும் பகலும் இயைந்து இயைந்து**
**உள்ளம் பொத்திய உரம்சுடு கூர்எரி**
**ஆள்வினை மாரியின் அவியா, நாளும்**
**கடறுஉழந்து இவணம் ஆகப், படர்உழந்து**
**யாங்குஆ குவள்கொல் தானே-தீம்தொடை**

**விளரி நரம்பின் நயவரு சீறியாழ்**
**மலிபூம் பொங்கர் மகிழ்குரற் குயிலொடு**
**புணர்துயில் எடுப்பும் புனல்தெளி காலையும்,**
**நம்முடை மதுகையள் ஆகி, அணிநடை**
**அன்னமாண் பெடையின் மென்மெல இயலிக்,**

**கையறு நெஞ்சினள், அடைதரும்**
**மைஈர் ஓதி மாஅ யோளே?**

நெஞ்சமே! 'பொன்னைப் போன்ற, நிறமும் ஒளியும் கொண்ட சுணங்கினோடு, செறியுமாறு பணைத்து விளங்கும் மென்முலைகளையுடைய பரப்பாகிய நம் மார்பினை, விட்டு நீங்காதவர் நம் காதலர்' என்று கூறியவளாக, நள்ளென்னும் ஒலியினையுடைய இரவுப்பொழுதிலும், அதனையடுத்த பகற் பொழுதிலும், நம்மையே நினைந்து நினைந்து, நெஞ்சினைச் சுடுகின்ற காமமாகிய உள்ளத்திலே கவிந்த பெருந்தீயினை, முயற்சியுடைய மாரிபோல வீழ்கின்ற கண்ணீரினாலே அவிக்க முயன்றவளாக, யாம் காட்டிலே வருந்தங்கொண்டு அவள் நினைவினாலே இவ்வண்ணமாக நலிய, அவள் அவ்விடத்தே யிருந்த துன்பமுற்றவளாகி, என்ன நிலையினள் ஆவாளோ?

தன்னை நட்டாராகிய நாம் இல்லாததனால் ஏற்பட்ட துன்பமும், அதனால் உறவினர்கள் கொண்ட துன்பமும், மனம் பொருந்தி மீட்டும் வந்து சேர்ந்திராத நம் செயலிலே எழும் நினைவின் பெருவருத்தமும் நாளும் கண்டவளாக, அவள் ஓர் ஊரினிடத்தே நம்மைப் பிரிந்து தனித்து வாழ்ந்திருத்தலையும் பொறுத்திருப்பவள் ஆவாளோ!

இனிதாகத் தொடுத்தலையுடைய விளரி என்னும் நரம்பினது இனிமை பொருந்திய சிறிய யாழிசையானது, பூக்கள் மலிந்த கொம்புகளிலே இருந்து மகிழ்வுடன் கூவும் குயிலின் குரலோடுங் கூடிப் பொருந்திய துயிலினை எழுப்பிக் கொண்டிருக்கின்ற, முற்றத்திலே பெண்கள் நீர் தெளிக்கின்ற காலை வேளையிலும், நம்மையே தன் வலிமையாகக் கொண்டவளாகி, அழகிய நடையினையுடைய அன்னப் பேட்டின் மாண்போடு மெல்ல மெல்ல நடந்து வந்து, செயலற்ற நெஞ்சினளாகி, நம்மை அணைத்துக் கொள்வாளே! அத்தகைய, கரிய தழைத்த கூந்தலையுடைய மாமை திறத்தினையுடையவள், இனித் துன்பத்தினாலே வருந்தி வருந்தி, எத்தன்மையினள் ஆவாளோ!

(என்று, பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. நட்டார் - நட்புச் செய்தோர்: காதலர் இன்மை - வறுமை; இல்லாத தன்மை. கேளிர் - உறவினர். 2. ஒட்டாது - பொருந்தியிராது. பெருக்கம் - நினைவினால் எழுந்த துயரின் பெருக்கம். 4. செறிய வீங்கிய - புடைபரந்து பணைத்த; ஈர்க்கிடை போகா இளமுலை என்க. 5. முலைமுற்றம் - மார்பகம். இயைந்த இயைந்து - பொருந்திப் பொருந்தி 7. பொத்திய - கவிந்து மூடிய. உரம் - நெஞ்சு. ஆள்வினை - முயற்சி. 9. கடறு - காடு.

*10. தொடை - தொடுத்தலையுடைய 11. விளரி - இசைப்பகுப்புள் ஒன்று. நயவரு - விருப்பந்தரும். 13. எடுப்பும் எழுப்பும். 14. மதுகை - வலிமை. 16. கையறு நெஞ்சம் - செயலற்ற நெஞ்சம். அடைதரும் அணைத்துக் கொள்ளும்.*

**விளக்கம்:** *'நண்புடையாளர்கள் இல்லாத ஒரு நிலைமையையும், உறவினர்கள் துன்புறுத்தலையும், தன்னுடன் ஒட்டாது வாழ்பவரே பெருமளவினராயிருக்கும் நிலைமையை யும் கண்ட பின்னரும், ஒரு பகுதியிலே, அவருடன் தங்கி வாழ்ந்திருத்தல் பொறுககக்கூடிய தாகுமோ?' எனவும், முதல் மூன்றடிகளின் பொருள் கொள்ளப்படுவதும் பொருந்தும்.*

*'பிற பெண்கள் எழுந்து முற்றத்தே புனல் தெளிக்கும் பொழுதிலும், இளவேனிலின் தன்மையாற் செயலற்று, என்னை வந்து தழுவிக் கொள்பவள்!' என, அவள் தன்பாற் கொண்ட ஆராத பெருங்காதலை உரைத்தனன். புனல் தெளிகாலை - இள வேனிற் காலம் எனவே கொள்வாரும் கொள்க.*

**பாடபேதம்:** *12. நறைமலி பொங்கர்.*

## 280. தந்தை வருவானோ!

**பாடியவர்:** *அம் மூவனார்.* **திணை:** *நெய்தல்* **துறை:** *1. தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது. 2. அல்லகுறிப்பட்டுப் போகா நின்றவன் சொல்லியதூஉமாம்.*

*(1. தலைமகளை இரவுக்குறியிலே கூடி மகிழ்ந்து, தன் ஊர் நோக்கிச் செல்லுகின்றான் ஒரு காதலன். அவளுடைய சிறந்த நலன்கள் ஒவ்வொன்றும் அவனுடைய உள்ளத்திலே நீங்காது நிலைபெற்று இருக்கின்றன. அவன், அந்தக் களிப்பினாலே தன் நெஞ்சிற்கு இப்படிச் சொல்லுகின்றான். 2. சந்திக்கச் சென்றவன், அவளைச் சந்திக்க முடியாமற்போனதால், அவள் நலனை நினைந்து இப்படிச் சொல்லுகின்றான். )*

**பொன் அடர்ந் தன்ன ஒள்ளிணர்ச் செருந்திப்**
**பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்.**
**திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி**
**அசையினள் இருந்த ஆய்தொடிக் குறுமகள்,**
**நலம்சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்,**

**பெறல்அருங் குரையள்ஆயின், அறம்தெரிந்து,**
**நாம்உறை தேஎம் மரூஉப்பெயர்ந்து, அவனொடு**
**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழுதும்,**

**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்,**
**படுத்தனம், பணிந்தனம் அடுத்தனம், இருப்பின்,**

**தருகுவன் கொல்லோ தானே - விரிதிரைக்**
**கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்**
**தேனிமிர் அகன்கரைப் பகுக்கும்**
**கானலம் பெருந்துறைப் பரதவன் எமக்கே?**

*நெஞ்சமே! பொன் அடர்ந்திருப்பது போன்ற ஒளியுடைய கொத்துக்களாக விளங்கும் செருந்தியின் பலவான பூக்களைச் சூடியுள்ள, அழகு பொருந்திய கூந்தலை உடையவள்; மணல் செறிந்துள்ள கடற்கரையிலேயுள்ள நண்டினை ஓட்டி விளையாடி அதனால் களைத்தவளாக இளைப்பாறி இருப்பவள்; ஆய்ந்த தொடியினை அணிந்துள்ள இளையவள். நலம் மிகுந்த சிறந்த பொருள்களை எல்லாம் மரக்கலம் நிறையக் கொணர்ந்து முலைவிலையாக நாம் கொடுத்தாலுங்கூட, நம் மால் அடையப் பெறுவதற்கு அவள் அரியவளே!*

*விரிந்த கடலின் கண்ணே இருந்து, திரண்ட முத்துக்களை எடுத்துக்கொண்டு வந்து, தேனுண்ணும் வண்டினம் ஒலித்துக் கொண்டிருக்கும் அகன்ற கரையினிடத்தே அவற்றைப் பகுத்துக் கொண்டிருக்கும், அழகிய கானற்சோலைகளையுடைய பெருந்துறைக்கு உரியவனாகிய தலைவன் அவளுடைய தந்தை.*

*நாம் வாழ்ந்திருக்கும் நாட்டினைவிட்டு நீங்கி இவ்விடத்தே வந்து, அவனோடும் கூடி, பெரிய கடற்கரையின் இடத்தேயுள்ள உப்புபாத்திகளிலே அவனுக்காகப் பணிசெய்து வருந்தியும் பெருங்கடலினிடத்தே ஆழத்தில் புணையோடு புகுந்தும், அவன் வயமாகியும், அவனைப் பணிந்தனமாகியும், அவனைச் சார்ந்தன மாகியும் இருப்போமானால், ஒருவேளை, அவன் அறத்தின் கூறு பாடுகளைத் தெரிந்தவனாக, அவனாகவே அவளை எமக்கு மணஞ்செய்து தருவானோ? (நெஞ்சமே! என் செய்வோம்?)*

*என்று, தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *1. அடர்ந்தன்ன செறிந்திருந்தாற் போன்ற 2. மலர் வேய்ந்த கூந்தல் மறையுமாறு மலர் சூடிய, 3. திணி மணல் செறிந்த மணல். அடைகரை - கடற்கரை. 4. அசையினள் தளர்ந்தவளாக. 7. மதுஉப் பெயர்ந்து - தங்குதலினின்றும் நீங்கிவந்து. 9. பெருநீர்க் குட்டம் - கடலின் கண்ணுள்ள ஆழமிகுந்த இடம். 12. கண்திரள் முத்தம் - கண்கள் திரட்சியுள்ள முத்துக்கள்; நன்குவிளைந்த நீரோட்டம் உடைய முத்துக்கள். 14. பரதவன் - நெய்தல் நிலத்தின் தலைவன்.*

**விளக்கம்:** *கடற்கரைப் பகுதியிலேயுள்ள பரதவர் மகளிர்கள், நண்டினை வெருட்டி அவைகள் அளையினுள் பதுங்கவும் வெளிவரவுமாயிருக்கக் கண்டு விளையாடுதலை வழக்கமாக உடையவர். இந்நாளினும், இப்படி விளையாடு வோரை நாம் கடற்கரைப் பகுதிகளிலே காணலாம். தலைவியும் அத்தகைய விளையாட்டுத் தன்மை மாறாத இளமைப் பருவத்தினள் என்றனன்.*

**மேற்கோள்:** *பொருள் எத்துணை அளவுக்குக் கொடுத்தாலும் பெறல் அரியளாயின், தன்னை வழிபட்டால் தந்தை தருவானோ? அது நமக்கு அரிதாகலின், இன்னும் மிகப் பொருள் தேடி வந்து வரைவோம்' எனத், தலைவன் பொருள் வயிற்கருகியவாறு காண்க என. இச்செய்யுளை, 'வெளிப் படைதானே' என்னுஞ் சூத்திர உரையிலே நச்சினார்க்கினியர் காட்டிக் கூறுவர்.*

**பாடபேதங்கள்:** *6. ஆயின் அந்தில். 8. உப்புடன் உழுதும். 10. மடுத்தனம் விரும்பில். 14. பரதவன் மகளே.*

## 281. இனிச் செய்வது என்ன?

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைவன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.* **சிறப்பு:** *வடுகரின் துணையோடு தமிழகத்தில் மோரியர் படையெடுத்து வந்த செய்தி.*

*(தலைமகன் பிரிந்து போயிருந்த காலத்திலே, பிரிவுத் துயரத்தினைப் பொறுக்கலாற்றாது தன்னுடலின் எழிலும் வேறுபட்டவளாயினள் தலைவி. அவளுடைய அத்தகைய வேறு பாட்டினைக் கண்டு மனம் பொறாதவளாயினாள் தோழி. அது கண்ட தலைவி, அந்தத் தோழிக்கு இப்படிச் சொல்லுகின்றாள்.)*

**செய்வது தெரிந்திசின்-தோழி!-அல்கலும்,**
**அகலுள் ஆண்மை அச்சறக் கூறிய**
**சொல்பழுது ஆகும் என்றும் அஞ்சாது.**
**ஒல்குஇயல் மடமயில் ஒழித்த பீலி**
**வான்போழ் வல்வில் சுற்றி, நோன்சிலை**

**அவ்வார் விளிம்பிற்கு அமைந்த நொவ்வியல்**
**கனைகுரல் இசைக்கும் விரைசெல் கடுங்கணை**
**முரண்மிகு வடுகர் முன்னுற, மோரியர்**
**தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு**
**விண்ணுற ஓங்கிய பனிஇருங் குன்றத்து,**

**எண்கதிர்த் திகிரி உருளிய குறைத்த**
**அறைஇறந்து, அவரோ சென்றனர்**
**பறையறைந் தன்ன அலர்நமக்கு ஒழித்தே.**

தோழி! நம்மைத் தலையளி செய்த நம் தலைவர் கூடிய அந்தக் களவுக் காலத்திலே, அக் குறியிடங்களிலே, நம்முடைய அச்சம் நீங்குமாறு, நாள்தோறும் அவர் கூறிய சூளுறவுச் சொற்களை எல்லாம், அவை பழுதுபட்டுப் போகுமே எனக் கருதியும் அவர் அஞ்சாதவராயினர்.

அசைத்தசைந்து செல்லுகின்ற தன்மையுடைய இளமயில்கள் கழித்த தோகையினை, மூங்கிலிலே பிளந்து செய்து கொண்டுள்ள வலிமையான தம் வில்லிலே சுற்றிக் கொள்பவர்கள்; வலியுள்ள அந்தச் சிலையின் அழகிய நாணிற்கும் விளிம்பிற்கும் பொருந்த மிகுந்த ஒலி எழுப்பி விரைந்து செல்லும் விரைவுத் தன்மையுடைய கடுமையான அம்பினைப் பூட்டிக் கொண்டிருப்பவர்கள்; மாறுபாடு மிகுந்தவரான வடுகர். அவர்கள் முன்னே செல்ல, மோரியர் தென்திசை நாடுகளை எல்லாம் வெற்றிகொள்ள எண்ணிப் படையுடன் வந்தனர். அவர்கள், தம் தேர்கள் செல்லுவதற்கு வசதியாக, வானளாவ உயர்ந்த பனியுடைய பெரிய குன்றங்களிலேயும், தமது தேர்களின் ஒள்ளிய கதிர்களையுடைய சக்கரங்கள் தடையில்லாமல் உருண்டு செல்லுமாறு, கற்களை உடைத்து வழி அமைத்தனர். அத்தகைய வழியுடைய பாறைகளையும் எழுந்துள்ள அலரினையும் நமக்காகவென்றே ஒதுக்கிவைத்து விட்டு, அவரோ நம்மைப் பிரிந்து வேற்றூர் சென்று விட்டனர். எனவே, இனி, மேற்கொண்டு நாம் செய்வதனை மட்டுமே ஆராய்ந்து தெரிவாயாக.

என்று, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** தெரிந்திசின் ஆராய்ந்து தெரிவாயாக 2. அகலுள் அகன்ற இடத்தினுள்; அவை களவுக்குறி நேர்ந்த இடங்கள். அச்சற - அச்சம் நீங்கும் படியாக. 3. ஒல்கியல் தளர்ந்து அசையும் நடை மடமயில் இளமயில். 5. வான் மூங்கில் 6. அவ்வார் அழகிய நாணாகிய வார். 7. கடுங்கணை - கொடிய அம்பு; கடிதாகச் செல்லுகின்ற அம்பும் ஆம் 8. முரண் மாறுபாடு. முன்னுற முற்பட்டுச் செல்ல. 9. தென் திசை மாதிரம் தென்திசை நாடுகள். 10 பனி இருங் குன்றம் - பனி மூடிய பெரிய குன்றம் 12. அறை பாறை. 13. பறை - நெய்தற் பறை.

**விளக்கம்:** *முன், அச்சம் நீங்குமாறு நம்மைத் தெளிவித்தவர் அவர். ஆனால், இன்றோ, நாம் நம் உயிர் நீங்கும் நிலையினராக வாடி நலிந்தும், நம் உயிர் நீங்கிய காலத்து எழும் நெய்தற் பறையொலியைப் போல ஊரலர் பெரிதாக எழுந்தும், நம்மேல் அருள் கொண்டவராக வந்தாரில்லையே?" என வருந்துகின்றாள்.*

**பாடபேதங்கள்:** *1. செல்வது. 2. அகலுள் ஆண்மை அகலும் நாண்கை. 5. வல்வில் கட்டி. 6. அவ் வரா விளிம்பில்.*

## 282. பலிக்கடன் செலுத்துவோம்!

**பாடியவர்:** *தொல் கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *1. இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத், தோழி தலை மகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 2. தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம். சிறப்பு; குறிஞ்சியின் வளத்தைப் பற்றிய செய்தி.*

*(தலைவன் விரைந்து வந்து தலைவியை மணந்து கொள்ள வேண்டும் என விரும்பிய தோழி, தலைமகட்குச் சொல்லுவது போலத் தலைமகன் கேட்குமாறு கூறுகிறாள் அல்லது, தலைமகன் வரைவிடைப் பிரிந்த காலத்தே, தம்மவர் அவனுக்குத் தலைவியைத் தர இசைந்த செய்தியைக் கூறித் தலைமகளின் பிரிவுத் துயரைத் தோழி நீக்குகிறாள்.)*

**பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய,**
**செறிமடை அம்பின், வல்வில், கானவன்**
**பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு,**
**நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்,**
**கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப,**

**வைந்நுதி வால்மருப்பு ஒடிய உக்க**
**தெண்நீர் ஆலி கடுக்கும் முததமொடு**
**மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு**
**சாந்தம் பொறைமரம் ஆக, நறைநார்**
**வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு**

**இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து**
**எந்தையும் எதிர்ந்தனன், கொடையே; அலர்வாய்**
**அம்பல் ஊரும் அவனொடு மொழியும்**
**சாயிரைத் திரண்ட தோள்பா ராட்டி,**
**யாயும், 'அவனே என்னும்; யாமும்,**

**'வல்லே வருக, வரைந்த நாள்; 'என,**
**நல்இறை மெல்விரல் கூப்பி,**
**இல்லுறை கடவுட்கு ஒக்குதும், பலியே!**

தோழி! பெரிய மலைச்சாரல்களிலே வேட்டையாடுவதற்கு மூட்டுவாய் செறிந்த அம்பினைத் தொடுத்த வலிய வில்லினை ஏந்தியவனாக, ஒரு வேட்டுவன் ஒரு நாட் சென்றான். அந்த அம்பினாலே பொருது கொன்ற யானையின் வெண்மையான கொம்புகளை எடுத்துக்கொண்டு சென்று, நீர் விளங்கும் அந்த மலைச்சாரலிலே கிடைக்கும் சிறந்த பொன்னை அகழ்ந்து எடுப்பவனானான். அப்பொழுது, கண்களைப் பொருதுவது போல ஒளிவீசுந் திரண்ட மணிகள் கிளைக்கப்பட்ட பொன்னுடனே சேர்ந்து மேலே வந்து தோன்றின. அதே சமயத்திலே கூரிய முனையையுடைய அவ்வெண்மையான யானைக் கொம்பும் ஒடியவே, தெளிந்த நீர்மையையுடைய ஆலங்கட்டி போன்ற முத்துக்கள் அதனின்றும் உதிர்ந்தன, வெவ்வேறாகிய, பொன், முத்து, மணி ஆகிய அந்தப் பொருள்களை ஒருங்கே சேரக்கட்டிச் சந்தன மரக்கொம்பினைக் காவு மரமாகக் கொண்டவனாகத் தோளிலே தூக்கிச் சுமந்து வருபவன், நறைக் கொடியாகிய நாரினாலே, வேங்கையின் மலரைத் தொடுத்து அணிந்து கொண்ட கண்ணியினை உடையவனாகவும் இறங்கி வருவான். அத்தகைய வளமுடைய மலைநாட்டை உடையவன் நம் காதலன்.

இனிய சுவையுள்ள பலாவினது, அழகுமிக்க செல்வச் செழுமையினை உடைய, நம் தந்தையும் அவனுக்கு நின்னைக் கொடுப்பதற்கு இசைந்தனன். அலர் கூறும் வாயினரான, பழி கூறும் ஊர்ப்பெண்டிரும், நின்னை அவனோடு சேர்த்தே இணைத்துச் சொல்வாராயினர். நம் தாயும், வளைந்த சந்தினையுடைய நின் தோள்களைப் பாராட்டி, அவனே நினக்கு உரிய மணவாளன் என்றனள். நாமும், "அவர்கள் மணத்திற்கு வரைந்த நாள் விரைவாக வருவதாக" என்று, நல்ல இறையினையுடைய நம் மெல்லிய விரல்களைக் குவித்து, நம் மனையுறையும் தெய்வத்திற்குப் பலிக்கடன் செலுத்துவோமாக.

என்று, இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. வேட்டம் - வேட்டை 2. செறிமடை அம்பு மூட்டுவாய் செறிவுடையதான அம்பு. 3. தொலை - கொன்ற 4. நீர் - நீர்வளம். 5. திண் மணி - திரண்ட மணிகள். 8. தாரம் - பொருள். 9. பொறை மரம் - காவு மரம்; சுமை பொறுத்தலால் பொறை மரமாயிற்று. நறை நறைக்கொடி. 11. ஏர் செழு - அழகு செழுமிய; செல்வம் அழகு செழுமிய தாவது, செல்வப்பயனான அறச்செயல்களைச் செய்து புகழ் பெறுதலால். 13. ஊர் - ஊர்ப்

பெண்டிர்; அலர் கூறுவோர். 14. சாய் இறை வளைந்த சந்து; அக்குள்.

**உள்ளுறை:** வேட்டைக்குப் போன கானவன் வேட்டைப் பொருளான தந்தத்துடன், முத்தும் பொன்னும் மணியும் பெற்று, சந்தனக் காவுமரத்திலே கட்டித் தூக்கிவரும் எதிர்பாராத நிகழ்ச்சிபோலக், கண்டு காதலித்த தலைவனும், தலைவியைக் களவிலே கூடப்பெற்றதுடன், பெற்றோர் ஒப்புதலும், ஊரவர் வாழ்த்தும், வரைந்துவந்து மணம் நேர்ந்ததனால் வரும் இல்லற வாழ்வும் ஒருங்கே பெற்றனன் என்க.

**விளக்கம்:** இல்லுறை தெய்வத்துக்குப் பலியிட்டு வழிபடுவது என்பது பண்டை நாள் மரபு இந் நாளினும் கிராமத்து மக்கள், திருமண நாளுக்கு முன்பாகத் தம் வீட்டிலேயுள்ள தெய்வங்களுக்குப் படைப்புப் படைத்து வழிபாடு செய்து வருகின்றனர். மணப் பெண்ணுக்கு தம் குடும்பத்து முன்னோரின் வாழ்த்தும் கிடைக்க வேண்டும் என்பது இம்மரபின் பொருளாயிருக்கலாம். தமிழகத்து மலைகளுள் பொன்னும் மணியும் உளவென்பதும், முற்றிய யானைத் தந்தம் முத்துடைத்து என்பதும் அறிக.

**மேற்கோள்:** 'தெய்வம் வாழ்த்தலும்' என்ற பகுதியில், 'களவலராயினும்' என்னுஞ் சூத்திர உரையினுள் இச் செய்யுளைக் காட்டி, 'யாய் தெய்வம் பராயினாள்' என்பதுபடக் கூறியது' என்று கூறுவர் நச்சினார்க்கினியர். அவர் கருத்துப் படி, 'யாய் தெய்வத்தை வணங்கிப் பலிக்கடன் செலுத்துவா ளாயினாள்' என்க.

## 283. காடும் இனியது ஆகுக!

**பாடியவர்:** மதுரை மருதனிள நாகனார். **திணை:** பாலை. **துறை:** உடன்போக்கு வலித்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

(தலைமகள், தலைமகனுடன் இல்லத்துக் காவலையும் கடந்து உடன்போக்கிலே சென்றுவிட முடிவு செய்தனள். அதனைத் தலைவனிடம் சென்று தோழி உரைக்கிறாள். 'வெம்மையான காடும் இனிதாக விளங்குக!' என்றும் வாழ்த்துகிறாள்.)

**நன்னெடுங் கதுப்பொடு பெருந்தோள் நீவிய!**
**நின்னிவண் ஒழிதல் அஞ்சிய என்னினும்,**
**செலுவுதலைக் கொண்ட பெருவிதுப்பு உறுவி**
**பல்கவர் மருப்பின் முதுமான் போக்கிச்,**
**சில்உணாத் தந்த சீறூர்ப் பெண்டிர்**

**திரிவயின், தெவிட்டும் சேண்புலக் குடிஞைப்**
**பைதன் மென்குரல் ஐதுவந்து இசைத்தொறும்,**
**போகுநர் புலம்புமா ஆறே ஏகுதற்கு**
**அரிய ஆகும்என் னாமைக், கரிமரம்**
**கண்அகை இளங்குழை கால்முதற் கவினி,**

**விசும்புடன் இருண்டு, வெம்மை நீங்கப்,**
**பசுங்கண் வானம் பாய்தளி பொழிந்தெனப்,**
**புல்நுகும்பு எடுத்த நல்நெடுங் கானத்து,**
**ஊட்டுறு பஞ்சிப் பிசிர்பரந் தன்ன,**
**வண்ண மூதாய் தண்நிலம் வரிப்ப,**

**இனிய ஆகுக தணிந்தே**
**இன்னா நீப்பின் நின்னொடு செலற்கே.**

தலைவனே! தலைவியின் நலம் பொருந்திய நீண்ட கூந்தலுடனே, பெருந் தோளினையும் தழுவிய நின்னைவிட்டுத் தனியாக இவ்விடத்தே தலைவி இருத்தலுக்கு யான் அஞ்சினேன். அவளோ, அத்தகையவளான என்னினும், உடன்போக்கினை மேற்கொண்ட பெரிதானவோர் விரைவினை உற்றிருப்பவள் ஆயினாள். துன்பத்தைத் தருவதான பிரிவினைக் காட்டினும், நின்னோடு செல்வதற்கே உள்ளங் கருதினாள். அதனால்.

பல கவறுகள் பொருந்திய கொம்பினையுடைய முதிய மான்களைத் துரத்திவிட்டு, அங்குக் கிடைக்கும் சிறிய உணவுப் பொருள்களைக் கொணர்பவர், காட்டகத்துச் சிற்றூர்ப் பெண்டிர்கள். அவர்கள் திரியும் இடத்திலே, சேய்மையான இடத்திலேயுள்ள பேராந்தையின் வருத்தம் தருகின்ற குரலானது மெல்லென வந்து ஒலிக்குந்தோறும், வழிச்செல்வார்அதனைக் கேட்டு அச்சமுற்றவராக வருந்துவர். அத்தகைய சுரநெறிகள், அவளாற் செல்வதற்கு அரியனவாகும் என்பதனைக் கருதாதவளும் ஆயினள். அதனால்,

கோடையிலே கரிந்துபோன மரங்களின் கணுக்களிலேயிருந்தும், இளைய துளிர்கள் அடிமுதல் நுனிவரை கிளைத்தனவாக அழகுடன் தோன்றுமாக! காட்டின் வெம்மை முற்றும் நீங்கிப் போகுமாக! வானமெல்லாம் ஒருங்கே இருள் கொண்டு தோன்றுமாக! பசுமையைத் தன்னிடத்தே கொண்ட மேகமானது பரந்த துளியினைக் சொரியத் தொடங்குமாக! அதனால், புற்கள் குருத்துவிட்டு எழுக! அத்தகைய தண்மை விளங்கும் நெடிய காட்டினிடத்தே, செந்நிறம் ஊட்டிய பஞ்சின் பிசிரானது எங்கும் பரவலாகக் கிடப்பதுபோலச், செந்நிறமுள்ள

*தம்பலப் பூச்சிகள், மழையாற் குளிர்ந்த நிலத்திலே பரவி அழகுபடுத்திக் கொண்டிருக்குமாக! இப்படியாக, நீங்கள் செல்லும் காடும் தன் வெப்பந்தணிந்து செல்வதற்கு இனிமையுடையதாக ஆகுமாக!*

*என்று, உடன்போக்கு வலித்த தோழி தலைமகற்குச் சொன்னாள் என்க.*

**சொற்பொருள்:** *1. நீவிய - தடவிய; தழுவிய எனக் கொள்க. 3. பெருவிதுப்பு பெரிதான விரைவுகுறித்த விருப்பம். 5. சில்லுணா - சிறிதான உணவுப் பொருள்கள்; புல்லரிசி முதலியன. சீறூர் - காட்டகத்துச் சீறூர். 6. தெவிட்டும் - ஒலிக்கும். குடிஞை - பேராந்தை. 7. ஐதுவந்து மெல்லென வந்து. 10. கண் அகை - கணுக்களிலே கிளைத்த. 12. பாய் தளி - பரவும் துளிகள். 4. ஊட்டு பஞ்சி - வண்ணம் ஊட்டும் பஞ்சு.*

**விளக்கம்:** *'தனித்திருத்தலுக்கு அஞ்சிய யானே உடன் போக்கிற்கு அவளைத் தூண்டுதற்கு நினைக்க, அவளே எனக்கும் முற்பட்டுப் போதலாகிய விரைந்த நினைவு உடையவளாயினாள் என்க. தோழி, அவர்கள் உடன்போக்கிற் செல்வதை விரும்பினாலுங்கூட, காடும் வெம்மை மாறி இனியதாகுக எனவும் வாழ்த்துகின்றாள். இது, காட்டின் வெம்மையை மனம் நினைந்து கூறியதாகும்.*

**பாடபேதங்கள்:** *1. பெருந்தோள் நீவி. 9. ஏகுநர்க்கு 25. தண்ணிலம் பரிப்ப.*

## 284. அவள் இருக்கும் ஊர்!

**பாடியவர்:** *இடைக்காடனார்* **திணை:** *முல்லை.* **துறை:** *வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது; தன் நெஞ்சிற்குச் சொல்லியதுமாம்.*

*(தன் தலைவியைப் பிரிந்து வேந்துவினை முடிக்கச் சென்றிருந்த தலைவன், அவ் வினையும் முடிந்து தன் காதலியின் நினைவும் மேலெழ இப்படித் தன் நெஞ்சிற்குச் சொல்லிக்கொள்ளுகிறான். அல்லது, வினைமுடித்தபின், தன் தேர்ப்பாகனுக்குத் தேரினை விரைவில் செலுத்துமாறு கூறியது மாகும்.)*

**சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன**
**குறுவிழிக் கண்ண கூரல்அம் குறுமுயல்**
**முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு,**

**குடந்தைஅம் செயி கோட்பவர் ஒடுங்கி,**
**இன்துயில் எழுந்து, துணையொடு போகி,**

**முன்றில் சிறுநிறை நீர்கண்டு உண்ணும்**
**புன்புலம் தழீஇய பொறைமுதற் சிறுகுடித்,**
**தினைக்கள் உண்ட தெறிகோல் மறவர்,**
**விதைத்த வில்லர், வேட்டம் போகி,**
**முல்லைப் படப்பையும் புல்வாய் கெண்டும்**

**காமர் புறவி னதுவே-காமம்**
**நம்மினும் தான்தலை மயங்கிய**
**அம்மா அரிவை உறைவின் ஊரே.**

*காமத்தினாலே நம்மினும் பெரிதும் மயக்கமுற்றிருக்கும், அழகிய மாமைநிறமுடைய நம் தலைவியானவள் வாழ்ந்திருக்கின்ற இனிய ஊரானது,*

*சிறிய இலைகளையுடைய நெல்லியின் காயைக் கண்டாற் போலக் குறுகிய விழிபொருந்திய கண்களையும், கூரிய மயிரினையும் உடைய குறுமுயல்கள், வளைந்து கிடக்கும் வரகினது பருத்த பொதிகதிரினைத் தின்று, அழகிய குவிந்த செவியினவாகிய காய்களைக் கொண்ட கொடிகளுள்ளே புகுந்துகிடந்து உறங்கிப், பின்னர், தம் இனிய துயிலினின்றும் எழுந்து, தம் துணியினோடும் கூடீச்சென்று, முல்லை நிலங்கள் சூழ்ந்த குன்றின் அடிவாரத்திலேயுள்ள சிறிய குடியிருப்புக் களிலேயுள்ள, வீட்டு முற்றங்களின் சிறய சால்களிலேயுள்ள நீரைக் கண்டு பருகும், அத்தகைய தன்மையினையுடையதும்,*

*தினையிலேயிருந்து வடித்த கள்ளினையுண்ட, நாண் தெறித்து அம்பு எய்யும் மறவர்கள், வேகமாக இழுத்துக் கட்டிய வில்லினராகச் சென்று வேட்டையாடி வந்து, முல்லை நிலத்துத், தோட்டத்திலே தாம் கொணர்ந்த மானினை அறுத்துத் தின்றுகொண்டிருப்பதுமான, அழகிய காட்டினிடத்தது ஆகும். (அவ்விடத்தினை நோக்கி நின் தேரினை விரையச் செலுத்துக என்பது கருத்து.).*

*என்று, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *2. கூரலம் குறுமுயல் - கூர்மையான மயிரினையுடைய குறுமுயல்கள். 3. முடந்தை - வளைந்த. வீங்குபீள் - பருத்த பொதி கதிர். வீங்குதல் - பருத்தல். 4. குடந்தையம் - செவி குவிந்த அழகிய காதுகள். 6. சிறு நிறை சிறிய சால். 9. விசைத்த வில் - நாண் பூட்டிய வில். 10. படப்பை -*

*தோட்டம். புல்வாய் - மான் 11. காமர் - அழகிய. 12. தலை மயங்கிய - பெரிதும் மயக்கமுற்ற.*

**உள்ளுறை:** *வீட்டவர் வளர்க்கும் குறுமுயலானது, முல்லை நிலத்துள்ளே புகுந்து வரகுக் கதிர்களை மேய்ந்து, புதரிலே கிடந்து உறங்கிவிட்டு, வீட்டு முற்றத்தே இருக்கும் சிறியநீர்ச் சாலிலே சென்று, தன்துணையோடும் நீருண்ணும் என்றனன். அதுபோலவே, தானும் வினை முடிவுற்றதாகலின் வீடு செல்லும் பெருவிருப்பம் உடையவனாயினன் என்று சொல்வது கருதி என்க.*

## 285. பன்முறை தழுவுவோம்!

**பாடியவர்:** *காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *உடன் போக்கு உடன்படுவித்த தோழி, தலைமகட்குச் சொல்லியது.*

*(தலைமகனுடன் உடன்போக்கிலே தலைவியும் சென்று விடுவதற்கான ஏற்பாடுகள் பலவற்றையும் செய்துவந்த தோழி, தலைவியிடம் இவ்வாறு கூறி, அவளைத் தழுவிக் கொண்டு, வழியனுப்பி வைக்கின்றனள்.)*

**"ஒழியச் சென்மார், செல்ப' என்று, நாம்**
**அழிபடர் உழக்கும் அவல நெஞ்சத்து**
**எவ்வம் இகந்துசேண் அகல, வைஎயிற்று**
**ஊன்நகைப் பிணவின் உறுபசி களைஇயர்,**
**காடுதேர் மடப்பிணை அலறக் கலையின்**

**ஓடுகுறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை**
**வெயில்புலந்து இளைக்கும் வெம்மைய, பயில்வரி**
**இரும்புலி வேங்கைக் கருந்தோல் அன்ன**
**கல்எடுத்து எறிந்த பல்கிழி உடுக்கை**
**உலறுகுடை வம்பலர் உயர்மரம் ஏறி,**

**ஏறுவேட்டு எழுந்த இனம்தீர் எருவை**
**ஆடுசெவி நோக்கும் அத்தம், பணைத்தோள்**
**குவளை உண்கண் இவளும் நம்மொடு**
**வரூஉம் என்றனரே, காதலர்**
**வாராய், தோழி! முயங்குகம் பலவே.**

*"நாம் இவ்விடத்தே தனித்திருக்கவும், வரைந்து கொள்ளுதற்கான பொருளினை ஈட்டி வருவதற்கு நம் காதலர் செல்வார்" என்று, நாம் மிகுதியான துன்பத்தினாலே இதுவரையும் வருந்தினோம். தோழி! ஆற்றாமை கொண்ட நம்*

நெஞ்சத்தின் துன்பமெல்லாம் முற்றவும் நீங்கத், தொலைவிற்கு நாமும் அவருடன் செல்லுமாறும், இப்போது சமயம் வந்து வாய்த்தது.

கூர்மையான பற்களையுடையதான, ஊனை விரும்புகின்ற தன்னுடைய பெண் நாய் கொண்டிருந்த பசியினைப் போக்குமாறு, தன் கலையினைக் காடெல்லாம் தேடிக் கொண்டிருக்கின்ற இளைய பெண்மான் அலறும்படியாக, அக்கலைமானின் ஓடிச் செல்லுவதற்குரிய தொடையினைக் கடித்து அதனை வீழ்த்தியது அச் செந்நாயின் ஆண். அப்படி வீழ்த்திய பின், வெயிலினாற் களைப்புற்று, பெரிதும் இளைத்துக் கொண்டே அது நின்றிருக்கும்.

வரிகள் பொருந்திய உடலுடைய பெரிய புலியினது கருமையான தோலினைப்போல விளங்கும் கல் உறாய்ந்து கிழித்தலினால், பரவலாகக் கிழிந்த உடையினராயும், உலறிய குடையினராயும் வழிச்செல்லும் புதியவர்கள், அந்தச் செயலால் எழுந்த ஆரவாரத்திற்கு அஞ்சியவர்களாயினர். உயர்ந்த மரத்தின்மேலே ஏறி இருந்துகொண்டு, தன்னுடைய உணவினை விரும்பி இனந்தினின்றும் பிரிந்து வந்த எருவைச் சேவலானது, வானிலே வட்டமிட்டுப் பறக்கும் தன்மையினை நோக்குபவர் களாக இருப்பாராயினர்.

"அத்தகைய காட்டின்பாற் செல்லும் வழிகளிலே, பணைத்த தோளினையும், குவளைமலர் மையுண்டது போன்ற கண்களையும் உடைய இவளும் நம்மோடுங்கூட வருவாளாக" என்றனர். நம் தலைவர். ஆகையால், நீயும் என்னருகே வருவாயாக. நாமும் பன்முறை தழுவிக் கொள்வோமாக. (தழுவுதல் அன்புடையார் விடைபெற்றுச் செல்லுங் காலத்தே மேற்கொள்வது);

என்று, உடன்போக்கு உடன்படுவித்த தோழி தலைமகட்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 2 அழி படர் - மிகுதியான வருத்தம்; அழிவிற்கு ஆட்படுத்தும் பெருந்துன்பம். 6. ஓடு குறங்கு - ஓட்டத்திற்குரிய தொடை. 7. இளைக்கும் - வாய்நீர் வடியப் பெருமூச்சுவிட்டு இளைத்திருக்கும். 9. கல் எடுத்து எறிந்ததனால் எனவும் கொள்ளலாம். 10. சோற்றுக் குடைகள் கிழிந்து சோறு சிந்திப் போக, அவை எல்லாம் உலறிய குடைகளாயின என்க.

**விளக்கம்:** செந்நாய் மானின் தொடையைக் கடிக்கவும் அதனால் எழுந்த ஆரவாரத்தினாலே ஓடித் தப்ப முயன்ற வழிச்

*செல்வார், கற்களிலே மோதி வீழ்ந்து, கிழிந்த உடையினராயும் உலறிய குடையினராயும் ஓடினவர், மரத்தின் மேலேறி இருந்து கொண்டனராகப், பிணந்தின்னும் எருவைச் சேவல் வானிலே வட்டமிட்டுப் பறந்து மேலெழ, அது போகும் திசையை நோக்கியவாறு, பிணம் வீழ்ந்த இடத்தை அறியவும் முயன்றனர் என்று கொள்க. காட்டின் வெம்மையும் கடுமையும் செல்வதற்கு அரிதென்ற போதும், அதனையும் பொருட்டாக்காது அவள் செல்லத் துணிந்தனள் என்க,*

## 286. உண்மை எங்கே?

**பாடியவர்:** ஓரம்போகியார். **திணை:** மருதம். **துறை:** 'வரைந்து எய்துவல்' என்று நீங்கும் தலைமகன், தலைமகளை ஆற்றுவித்துக்கொண்டு இருத்தல் வேண்டும்' என்று, தோழி யைக் கைப்பற்றியது; தன்னைத் தொட்டுச் சூள் உறுவானாகக் கருதித் தோழி சொல்லியதும் ஆம்.

*(தலைமகன், வரைவிற்கான பொருள் தேடி வருதலைக் குறித்துத், தலைவியைப் பிரிந்து செல்லுதற்கு நினைவுற்றுத் தோழியுடன் இப்படிச் சொல்லினான். அது கேட்ட அவள், 'என்றும் பிரியேன்' எனச் சொல்லிய சூளுறையை நினைவூட்டி இப்படிக் கூறுகின்றாள்.)*

**வெள்ளி விழுத்தொடி மென்கரும்பு உலக்கை,**
**வள்ளி நுண்இடை வயின்வயின் நுடங்க,**
**மீன்சினை அன்ன வெண்மணல் குவைஇக்,**
**காஞ்சி நீழல், தமர்வளம் பாடி,**
**ஊர்க்குறு மகளிர் குறுவழி, விறந்த**

**வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்**
**தாழ்சினை உறங்கும் தண்துறை ஊர!**
**விழையா உள்ளம் விழையும் ஆயினும்,**
**என்றும், கேட்டவை தோட்டி ஆக மீட்டு ஆங்கு,**
**அறனும் பொருளும் வழாமை நாடி,**

**தற்றகவு உடைமை நோக்கி, மற்றதன்**
**பின்ஆ கும்மே, முன்னியது முடித்தல்;**
**அனைய, பெரியோர் ஒழுக்கம்; அதனால்,**
**அரிய பெரியோர்த் தெரியுங் காலை**
**நும்மோர் அன்னோர் மாட்டும், இன்ன**

**பொய்யொடு மிடைந்தவை தோன்றின்,**
**மெய்யாண்டு உளதோ, இவ்வுலகத் தானே?**

வெள்ளியினாலே சிறந்த முறையிற் பூண்கட்டிய, மெல்லிய கரும்பினால் இயன்ற உலக்கையினாலே, கொடி போன்ற நுண்மையான இடையானது அப்பயும் இப்படியுமாகப் பக்கங்களிலே அசைந்தாட, மீனின் முட்டைபோன்ற வெண்மையான நுண் மணலைக் குவித்துக், காஞ்சி மரத்தின் நீழலிலே தம் குடியின் பெருமைகளைப் பாடியவாறே, ஊரிலுள்ள இளைய பெண்கள் உலக்கை இட்டு விளையாடுவார்கள். அந்த உலக்கைப் பாடலின் இனிய இசையிலே மெய்ம்மறந்து, மிகுதியான இறால் மீன்களைத் தின்ற சிறிய சிரற் பறவையானது, மருதமரத்தின் தாழ்வான கிளையிலேயிருந்து உறங்கிக் கொண்டிருக்கும் அத்தகைய தண்மையான நீர்த்துறையினை உடைய ஊரனே!

என்றும் விரும்பாத உள்ளமானது ஒரு சமயத்தே ஒன்றை விரும்புமாயினும், தாம் கேட்டறிந்த அறங்களைத் தோட்டியாகக் கொண்டு அந்த ஆசையாகிய மதயானையை அதன் போக்கிலே கட்டுமீறிச் செல்லாது அடக்கி மீட்டு, அறனும் பொருளும் ஆகிய இருவகைப்பட்ட அறங்களினின்றும் வழுவாத ஒரு முறைமையையே ஆராய்ந்து, தன்னுடைய தகுதி உடைமையும் உணர்ந்து, செய்யக் கருதியதைச் செய்த முடித்தலே, செயலிலே சிறப்பு உடையதாகும். பெரியோரின் ஒழுக்கம் அப்படிப் பட்டதாகவே என்றும் இருக்கும்.

அதனால், அரியனவே செய்யும் பெரியவர்கள் என ஆராய்ந்து அறியுங்காலத்திலே, நும்மை ஒத்தவர்களிடத்தும் இத் தன்மையான பொய்யோடுங்கூடிய நடத்தைகள் தோன்று மானால், இவ் உலகத்தினிடத்திலே, உண்மை என்பது எவ்விடத்தே உளதாகுமோ? (அதனை எனக்கு உரைப்பாயாக.)

என்று, 'வரைந்து எய்துவல்' என்று நீங்கும் தலைமகன், தலைமகளை ஆற்றுவித்துக்கொண்டு இருத்தல் வேண்டு மென்று தோழியைக் கைப்பற்றியது, தன்னைத் தொட்டுச் சூழ் உறுவானாகக் கருதித் தோழி சொல்லியதும் ஆம்.

**சொற்பொருள்:** 1. விழுத்தொடி சிறந்த பூண். கருப்பு - கரும்பு 2. வள்ளி - கொடி. வயின் வயின் - பக்கம் பக்கம்; இரு பக்கமும். 4. தமர் வளம் பாடி - தம் குடியின் வளத்தைப் போற்றிப் பாடி. 5. குறுமகளிர் - இளைய பெண்கள்; குறுமை பருவம் குறித்தது. விறந்த செறிந்த. 9. தோட்டி - அங்குசம்; துறட்டி. 16. மிடைந்தவை - கலந்தவை.

**விளக்கம்:** மகளிர் கடற்கரையில் இவ்வாறு விளையாடும் செய்தியினைச் சிலப்பதிகார வாழ்த்துக் காதையிலேவரும் 'தீங்கரும்பு நல்லுக்கையாக' என்னும் பகுதியும் விளக்கும்.

**உள்ளுறை:** பெண்களின் ஆரவாரத்திற்கு அஞ்சி ஓட வேண்டிய சிரல், அமைதியாக மருதின் தாழ்ந்த கிளையிலே யிருந்து உறங்குவதுபோல, அவனும் எழுந்த ஊரலரின் ஆரவாரங்களைக் கேட்டும் பொருட்படுத்தாது, தான் அநுபவித்த களவுறவின் இன்ப மயக்கத்தாலே, வரைந்து வராது வாளாவிருந்தனன் என்று சொன்னதாகக் கொள்க.

**குறிப்பு:** வரைந்து கொள்ளுதலுக்கான பொருள் தேடிவரப் பிரிந்து செல்பவன் தலைவன் எனக் கொள்க. தலையளி செய்துகூடிய காலத்தே, "அவன் வாய்மையாளன், என்றும் பிரியேன் என்றதைப் பொய்யான்" எனத் தாம் கருதித் தெளிந்த நிலையினைப் பொய்யாக்கி, அவன் 'போவேன்' என்றதனால், தோழி இங்ஙனம் கூறினள் என்பதும் ஆம்.

**மேற்கோள்:** 'குறியெனப் படுவது... மொழி' என்னும் இறையனார் களவியல் சூத்திர உரைக்கண், இந்தச் செய்யுளை உதாரணமாக நக்கீரர் காட்டுவர்.

'கூதிர் வேனில் என்றிரு பாசறை' என்னும் தொல்காப்பியப் புறத்திணையியற் சூத்திர உரையினும், 'பெறற் கரும் பொருள் முடிந்தபின் வந்த' என்னும் தொல்காப்பியக் கற்பியற் சூத்திர உரையினும், நச்சினார்க்கினியரும் இச்செய்யுளை உதாரண மாகக் கொண்டுள்ளனர்.

## 287. அலைக்கும் மாலை!

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை:** பாலை. **துறை:** பிரிந்து போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்து நின்று தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(*தலைவியைப் பிரிந்து சென்ற தலைமகன், இடைச் சுரத்திலே, அவளுடைய நினைவு மிகுதியாகித் தன்னை வருத்தத் தன் நெஞ்சிற்கு இப்படி உரைத்துக் கொள்ளுகின்றான்.*)

**தொடிஅணி முன்கைத் தொகுவிரல் இவைஇப்,**
**படிவ நெஞ்சமொடு பகல்துணை ஆக,**
**நோம்கொல்? அளியன் தானே! - தூங்குநிலை,**
**மரைஏறு சொறிந்த மாத்தாட் கந்தின்**
**சுரைஇவர் பொதியில் அம்குடிச் சீறூர்** 5

**நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை,**
**புரிசை மூழ்கிய பொரி அரை ஆலத்து**
**ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை**
**துணைப் புறா இரிக்கும் தூய்மழை நனந்தலைக்,**
**கணைக்கால் அம்பிணை ஏறுபுறம் நக்க,**

**ஒல்குநிலை யா அத்து ஓங்குசினை பயந்த,**
**அரம்புவந்து அலைக்கும் மாலை,**
**நிரம்பா நீள்இடை வருதுதும் யாமே.**

*வளைகள் அணிந்த தன் முன்கைகளின் தொகுதியான விரல்களைக் குவித்து, நோன்பு மேற்கொண்ட நெஞ்சத்துடனே, ஞாயிறே தனக்குத் துணையாகக் கருதி வருந்தியவளாகவே அவள் இருப்பாளோ? நெஞ்சமே! அவள் இரங்கத்தக்கவளே!*

*ஆண் மரை உராய்ந்தமையால் அசைந்து கொண்டிருக்கும் நிலையினதாகிய, கரிய அடிபொருந்திய கந்தினையுடைய, சுரைக் கொடி படர்ந்திருக்கும் ஊர் அம்பலத்தின் கண்ணே, அழகிய குடியிருப்பினையுடைய சிற்றூரிலே உள்ளவர்கள், நாள்தோறும் இடுகின்ற பலியினையும் இடாது மறந்தமையால், அவ்விடத்துப் பலிபீடமும் வெளிதாகிக் கிடக்கும். அதனைக்கண்ட கோடைக் காற்றானது, அந்த மன்றத்தைக் கவிந்திருக்கும் பொரிந்த அடிமரத்தினையுடைய ஆலமரத்தின் ஒன்றாய்த் தனித்த விழுதினை அசைத்து மோதி, அம் மரத்தின்கண் துணையுடன் மேவியிருந்த புறாவினை அப் பலிபீடத்திலே அடித்து வீழ்த்தும். அத்தகைய இடமாகிய மழையற்ற அகன்ற காட்டகத்தின் இடத்திலே,*

*அசையும் நிலையினைக் கொண்ட யாமரத்தின் உயர்ந்த கிளைகள் உதவிய சுருங்கிய வரிப்பட்ட நிழலிலே தங்கித், திரண்ட கால்களையுடைய அழகிய பிணையானது தன் ஏற்றின் முதுகை நக்கிக் கொண்டிருக்க, அதனைப் பார்க்கவும், குறும்பாக வந்து நம்மை வருத்தும் மாலைப் பொழுதிலே, இந்தத் தொலையாத நெடுவழியிலே, அவனைப் பிரிந்துவந்த வருத்தம் மிகுதியாக யாம் தனித்திருந்து வருந்துகின்றோம். (இனி, என் செய்வோம்?);*

*என்று? பிரிந்து போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்து நின்று, தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** 1. தொடி - வளையல், தொகு விரல் - தொகுதியான விரல்கள். குவைஇ - குவித்து. 2. படிவ நெஞ்சம் நோன்பு கொண்ட நெஞ்சம். பகல் ஞாயிறு. தூங்கு நிலை -

அசையும் நிலை. 4. கந்து - தெய்வம் வீற்றிருக்கும் கல் அல்லது குற்றி. 6.நரைக்கண் இட்டிகை - வெளியாகத் தோன்றுவதாகிய பலிபீடம். 7. பொரிஅரை - பொரிந்த அடிமரம். 8. வீழ் - விழுது. 9. இரிக்கும் - ஓட்டும். 11. ஒல்குதல் - அசைதல் 14. நிரம்பா - தொலையாத.

**விளக்கம்:** கலையின் வருத்தந்தீரப் பிணை அதன் முதுகினை நக்கிவிடக் காண்பவன், தன் துயரைத் தீர்க்கத் தன் அருமைக் காதலியும் அவ்விடத்திலில்லையே என்ற ஏக்கம் பெரிதாயினான் என்க. குற்றி நட்டுத் தெய்வம் அதனிடத்தே வந்து நின்று அனைவருக்கும் அருள்வதாகப் பாவித்துப் பலியிட்டு வழிபட்ட வழக்கமே பிற்காலத்து இலிங்க வழிபாடாக வளர்ந்தது என்பர் ஆராய்வோர்.

அவளும், ஞாயிற்றைக் கைகுவித்தவளாக வாடியிருப்பாள், அவள் நினைவால் யானும் இங்கிருந்து வாடுவேன்; ஏனோ இதற்குத் துணிந்தேன்? என அவன் வருந்தினான் என்க.

## 288. எளிமை செய்தனை!

**பாடியவர்:** விற்றூற்று மூதெயினனார்: முத்தூற்று மூதெயினனார் என்பதும் பாடம். **திணை:** குறிஞ்சி. **துறை:** பகற்குறிக் கண் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

(தலைமகனும் தலைமகளும் பகற்குறிக்கண் கூடி இன்புற்று வந்துகொண்டிருந்த காலம்; தலைவியின் ஒழுக்கத்தால் ஊரலர் எழ, அவளை இற்செறிப்பில் வைத்துக் காக்கத் தொடங்கினர் வீட்டவர். அந்தச் செய்தியைக் குறியிடத்தே வந்திருக்கும் தலைவனிடம் அறிவித்து, அவனை, விரைவிலே வரைவுடன் வந்து தலைவியை மணந்துகொள்ளுமாறு, தோழி வேண்டுகின்றாள்.)

**சென்மதி; சிறக்க; நின் உள்ளம்! நின்மலை**
**ஆரம் நிவிய அம்பகட்டு மார்பினை,**
**சாரல் வேங்கைப் படுசினைப் புதுப் பூ**
**முருகுமுரண் கொள்ளும் உருவக் கண்ணியை,**
**எரிதின் கொல்லை இறைஞ்சிய ஏனல்,**

**எவ்வம் கூரிய, வைகலும் வருவோய்!**
**கனிமுதிர் அடுக்கத்துஎம் தனிமை காண்டலின்**
**எண்மை செய்தனை ஆகுவை; நண்ணிக்**
**கொடியோர் குறுகும் நெடிஇருங் குன்றத்து,**
**இட்டுஆறு இரங்கும் விட்டுஒளிர் அருவி**

**அருவரை இழிதரும் வெருவரு படாஅர்க்**
**கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்,**

**பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்,**
**நனிநோய் ஏய்க்கும் பனிகூர் அடுக்கத்து,**
**மகளிர் மாங்காட்டு அற்றே துகள் அறக்**

**கொங்தோடு உதிர்த்த கதுப்பின்,**
**அம்தீம் கிளவித் தந்தை காப்பே!**

*தலைவனே! நின் மலையகத்துச் சந்தனம் பூசப்பெற்ற அழகிய விளக்கம் பொருந்திய மார்பினையாக நீயும் உள்ளனை; மலைச்சாரலிலுள்ள வேங்கைமரத்தின் மிகுதியான கிளை களிலேயுள்ள பூக்களால் தொடுத்த, முருகனும் விரும்புமாறு கொள்ளும் அழகிய கண்ணியினை உடையவனாகவும் இருக்கின்றனை; எரியானது தின்றழித்த கொல்லையினிடத்தே, முற்றிக் கதிர்வளைந்த தினைகளையுடைய புனத்திலே, துன்பமிகுதி உடையவனாக நாடோறும் தவறாது வருதலையும் செய்கின்றனை!*

*ஆறலைப்போராகிய கொடியவர்கள் நெருங்கித் தங்கியிருக்கும் நெடிதான பெரிய குன்றத்திலேயுள்ள குறுகிய வழியிலே, விளங்கும் அருவியின் ஒலி முழக்கம் இடையிட்டுக் கேட்கும். அந்த அருவி அரிய மலையினின்றும் வீழ்ந்து கொண்டிருக்கும் இடமோ மிகவும் அச்சந்தோன்றும் இடம் ஆகும். அவ்விடத்தே, சிறு தூறுகளுள் ஒன்றிலே இருக்கும் மெல்லிய தலையினையுடைய மந்தி பசியினால் வருந்தியிருக்க, அதன் குட்டிக்குத் தந்தையான கடுவன் பலாச்சுளையினைச் சென்று தோண்டும். தோண்டினவிடத்திலே அதற்கும் மிகுந்த துன்பம் வந்து சேருமாறு நேர்கின்ற, நடுக்கம் மிகுந்த அத்தகைய மலையடுக்கத்திலே, தேவகன்னியர்கள் வாழ்கின்றனர் என்பர். அத்தகைய மலையிடத்தேயுள்ள 'மாங்காடு' என்னும் காவல் மிகுந்த ஊரைப் போன்றது.*

*குற்றம் ஏதும் இல்லாமல், கொத்தோடு பூக்களை உதிர்த்து அணிந்த கூந்தலையும், அழகிய இனிதான பேச்சினையும் உடைய இவளுடைய தந்தையின் காவல் மிகுந்த பெருமனை.*

*அங்ஙனம் இருப்பவும், கனிகள் முதிர்ந்துள்ள பக்கமலைச் சாரல்களிலே, எம்முடைய தனிமையைக் காண்பதனால், நீ எங்களின் அருமையினை உணராது எமக்கு எளிமை செய்தனையும் ஆயினாய். நின் அத்தகைய உள்ளம் சிறப்பதாக! நீயும் சென்று வருவாயாக! (தம் குடிப்பெருமை உரைத்து இரவுக் குறிவாய்த்தல் அரிதாகலின், மணம் வேட்டலே இனிச் செய்தற்குரியது என்றனள்);*

என்று, பகற்குறிக்கண் தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயினாள் என்க.

**சொற்பொருள்:** 2. அம் பகட்டு - மார்பு அழகிய விளக்கத்தினையுடைய மார்பு. 3. படுசினை - மிகுந்த கிளைகள். 4. முருகு - அழகு; முருகனும் ஆம். எரிதின்கொல்லை எரியுண்ட கொல்லை. இறைஞ்சிய ஏனல் - கதிர் முற்றித் தலை தாழ்ந்து வளைந்திருக்கும் தினைப்புனம். 8. எண்மை - எளிமை. 9. கொடியோர் ஆறலைகள்வர்; கொடிய தன்மை உடையவர் ஆகலின் கொடியோர் எனப்பட்டனர் 11. படாஅர் - தூறு. 12. கயந்தலை - மென்தலை. 15. மகளிர் - தேவ மகளிர்; சூரர மகளிர் என்றும் கொள்வர். 17. காப்பு காவல் உள்ள இடம்; இல்லம்.

**விளக்கம்:** தலைவியின் குடும்பத்தின் தகுதி கூறி. நீ அவளை அடைதல் எளிதென எண்ணாதே எனக் கூறுவதன் மூலமும், இல்லம் காப்புடையது எனக் கூறுவதன் மூலமும் இரவுக்குறி மறுத்து, இச்செறிப்பும் அறிவுறுத்தித் தோழி வரைவு கடாயினாள் என்க.

**பாடபேதங்கள்:** 6. எவ்வம் கூறிய. 16. கொங்கோடு. உதிர்த்த; கொங்கு - பூந்தாது.

## 289. முத்துச் சொரியும் கண்கள்!

**பாடியவர்:** எயினந்தை மகன் இளங்கீரனார் **திணை:** பாலை **துறை:** பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(தன்னுடைய உயிர்த் துணைவியைப் பிரிந்து தன் வினை மேற் செல்லுதலுற்ற தலைமகன் ஒருவன், இடை வழியிலே, அவளைப் பிரிந்த பெருவருத்தம் நெஞ்சிலே சூழ்ந்து வருத்தத்தன் நெஞ்சிற்கு இவ்வாறு கூறுகின்றான்;)

**சிலைஏ றட்ட கணைவீழ் வம்பலர்**
**உயர்பதுக்கு இவர்ந்த ததர்கொடி அதிரல்**
**நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்**
**சுரனிடை விலங்கிய மரன்ஓங்கு இயவின்,**
**வந்து, வினை வலித்த நம்வயின், என்றும்**

**தெருமரல் உள்ளமொடு வருந்தல் ஆனாது,**
**நெகிழா மென்பிணி வீங்கிய கைசிறிது**
**அவிழினும், உயவும் ஆய்மடத் தகுவி;**
**சேண்உறை புலம்பின் நாள்முறை இழைத்த**
**திண்சுவர் நோக்கி, நினைந்து கண்பனி,**

**நெகிழ்நூல் முத்தின், முகிழ்முலைத் தெறிப்ப,**
**மைஅற விரிந்த படைஅமை சேக்கை**
**ஐமென் தூவி அணைசேர்பு அசைஇ**
**மையல் கொண்ட மதன்அழி இருக்கையள்**
**பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி;**

**'நல்ல கூறு என நடுங்கிப்**
**புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே?**

*ஆறலை கள்வர் வில்லிலே கோத்து எய்த கணையால் வழிப் போக்கராகிய புதியவர்கள் வீழ்ந்துபட, அவர்கள் உடல்மேல் எழுப்பிய கற்குவியல்களிலே ஏறிப் படர்ந்த நெருங்கிய கொடிகளையுடைய அதிரலானது, உயர்ந்த நிலையினையுடைய நடுகல்லின் நாட்பலிக்குப் பூச்சூட்டப் பெற்றதாக விளங்கும். அத்தகைய சுர நெறியிலே, குறுக்கிட்ட மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள வழியிலே வந்து, வினையின்பால் உறுதிகொண்ட நம்மிடத்தே, என்றும் நினைந்து சுழலும் உள்ளத்துடன் வருந்துதல் ஒன்றுமட்டுமே அமையாது, மென்மையான பிணிப்பு மிகுந்த கை நெகிழ்ந்து சிறிதளவே விலகினாலும் வருத்தங்கொள்பவளான நம் தலைவியானவள்,*

*நாம் தொலைவிடத்தே வாழ்தலான தனிமையால், நாள் தோறும் முறையாக இழைத்த கோடுகளையுடைய திண்மை யான சுவரினை நோக்கி, நம்மையே நினைந்து நூலறுந்து வீழ்கின்ற முத்துக்களைப்போல, முலைமுகங்களிலே கண்ணீர் பட்டுத் தெறித்துவீழக், குற்றமற விரிந்து கிடக்கும் படுக்கையமைந்த பள்ளியிலே, மென்மையான அன்னச் சிறகால் ஆகிய அணையினைச் சேர்ந்து தங்கியவளாக, மயக்கங் கொண்டவளாகத் தன் வலியழிந்த இருக்கையளாக ஆவாளோ?*

*பிளந்த வாயினையுடைய பல்லி ஒலிக்குந்தோறும் தெய்வத்தைத் தொழுது, 'நன்மையே கூறு' எனச் சொல்லி மனம் நடுங்கியவளாகப், பொலிவுற்ற மாலைக் காலத்தினோடு போராடிக் கிடந்தும் தவிப்பாளோ? (நெஞ்சமே! அவள் நிலைதான் யாதோ? யான் ஏது செய்வேன்?)*

*என்று பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.*

**சொற்பொருள்:** *1. சிலையேறு அட்ட - வில்லிலே கோத்து எய்த அம்புகளால் கொன்ற. 2. பதுக்கு - பதுக்கைகள். ததர் கொடி - நெருக்கமாகத் தழைத்த கொடி. 3. நெடுநிலை - நீண்ட நிலை; உயரமான என்பது பொருள். 4. விலங்கிய - குறுக்கிட்ட இயவு -*

*வழி. 5. வினை வலித்த - வினையிலே உறுதிகொண்ட 7. பிணி - பிணிப்பு. 8. மடத் தகுவி - மடமையான தகுதியினை உடையவள். 13. அசைஇ - தங்கி. படுதொறும் - ஒலிக்குந் தோறும் பரவி, தெய்வத்தைப் போற்றி.*

**விளக்கம்:** *"மனமே! அச்சமுடைய வழியிடையிலே என்னை இப்படி உறுதிஇழக்கச் செய்கின்றாயே! அவள் என்ன ஆவாளோ? அணைத்த கைகளின் பிணிப்பு நெகிழினும் வருந்தும் அத்தகைய இயல்பினளாயிற்றே!" என, அவளை நினைந்து வருந்துகின்றான் அவன்.*

**பாடபேதம்:** *3. நிரை நிலை நடுகல்.*

## 290. நீலம் பொன்னாயிற்றே!

**பாடியவர்:** *நக்கீரர்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *இரவுக்குறிக் கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.* **சிறப்பு:** *விறற்போர்க் குட்டுவனின் தொண்டி நகரின் வளம் பற்றிய செய்தி.*

*(தன்னுடைய காதலனைச் சிறிது பிரிந்திருக்கவும் இயலாத காதற் பெருக்குடையவள் தலைவி. இரவுக்குறியிடத்தே, அவன் வரக் காலந்தாழ்க்கவும் அவள் மனம் வருந்தினாள். பின், அவன் வந்து சிறைப்புறமாக இருப்பவும், அவள் தன் தோழிக்குச் சொல்லுபவளேபோல, அவன் கேட்குமாறு தன் நிலையினைக் கூறுகின்றாள்.)*

**குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை**
**இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய**
**கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்**
**நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டெனு,**
**அல்குகு பொழுதின் மெல்குஇரை மிசையாது,**

**பைதல் பிள்ளை தழீஇ, ஒய்யென,**
**அம்கண் பெண்ணை அன்புற நரலும்**
**சிறுபல் தொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்.**
**கழிசேர் புன்னை அழிபூங் கானல்,**
**தணவா நெஞ்சமொடு தமியன் வந்து நம்**

**மணவா முன்னும் எவனோ, தோழி?**
**வெண்கோட்டு யானை விறற்போர்க் குட்டுவன்**
**தெண்திரைப் பரப்பின் தொண்டி முன்துறைக்,**
**கரும்புஉண மலர்ந்த பெருந்தண் நெய்தல்**
**மணிஏர் மாண்நலம் ஒரீஇப்,**

**பொன்நேர் வண்ணம் கொண்டஎன் கண்ணே?**

தோழி! கருமையான சேற்றுக் குழம்பினைக் கொண்ட வயலினிடத்தே, நாட் காலையிலே சென்ற, கொழுமீன் உணவைக் கொண்டவராகிய புற்கென்ற தலைமயிரையுடைய சிறுவர்களின் நுண்ணிய கறிற்றினாலாகிய அழகிய வலையிலே தன் சேவல் அகப்பட்டதாகத், தலையிற் கொண்டையினை யுடைய அக் கொக்கின் பசுமையான கால்களையுடைய பேடையானது, தனித்துத் தான் மிகவும் வருந்தும். அப்படி அது வருந்தும் பொழுதிலே, மெல்லும் இரையினையும் தின்னாது துன்புறும் தன் குஞ்சினைத் தழுவியவாறே, 'ஒய் என்று, அழகிய இடத்தையுடைய பனை மரத்தின்கண் சென்று அமர்ந்து, தன் அன்பு தோன்ற ஒலித்துக்கொண்டே இருக்கும். அத்தகைய, சிறிய பலவாகிய பழங்குடியினர்களைக் கொண்ட, கடற்கரை நாட்டின் தலைவன் நம் காதலன். அவன்.

கழியினைச் சேர்ந்துள்ள புன்னையின் உதிர்ந்த பூக்களையுடைய கானற்சோலையிலே, அன்பு நீங்காத நெஞ்சத்துடனே, தனிமையாளனாக வந்து நம்மைக் கூடி இன்புறுத்தாதற்கு முன்பாகவும், என் கண்கள்,

வெண்மையான கொம்புகளையுடைய யானையினைப் போன்ற போர் வெற்றினையுடைய குட்டுவனது, தெளிந்த அலைகள் பொருந்திய பரப்பினிடத்தேயுள்ள தொண்டியின் முன்துறையிலே, வண்டு உண்ணலால் மலர்ந்த பெரிய குளிர்ச்சியான நெய்தற்பூவின் நீலமணி போன்ற அழகு மாட்சிமையினை உடைய நலத்தினைக் கைவிட்டுப், பொன்போலும் நிறத்தினைக் கொண்டனவே! இஃது என்னவோ?

என்று, இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. குடுமி - கொண்டை; ஆண் கொக்கின் தலையுச்சியிலேயுள்ள இறகுகள். 2. அள்ளல் - குழம்பு போன்ற தன்மை; அளல் எனவும் வழங்குவர். 3. வல்சி - உணவு. 5. அல்குறு பொழுது - தனித்த பொழுது. 6. பைதல் - வருத்தம். 9. அழிபூ - உதிர்ந்த பூ; மிகுந்த பூக்களும் ஆம். 10. தணவா - அன்பு நீங்காத. 16. பொன்னேர் வண்ணம் கொளல் - பசலை பாய்தல்.

**உள்ளுறை:** தன் சேவல் வலையிற்பட, உணவும் மறந்த பனைமேற் சென்றிருந்து, பைதற் பிள்ளையை அணைத்துக் கொண்டு அலறும் கொக்குப் பேட்டினையுடைய ஊரினன்; அவனைப் பிரிந்து யாம் வருந்தும் நிலையினை உணராமற் போனானே என்று கொள்க; பயன், வரைவு வேட்டல் என்க.

## 291. நினைத்தனையே நெஞ்சமே!

**பாடியவர்:** *பாலை பாடிய பெருங்கடுங்கோ.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தலைமகன் ஒருவன், தன் உள்ளத்திலே பொருளார்வம் மிகுந்தவனாகத், தன் அன்புடைக் காதலியையும் பிரிந்து தொலைநாடு நோக்கிச் சென்றான். இடைச் சுரத்திலே தன் காதலியின் நினைவினாலே வருந்திய அவன், தன் நெஞ்சிற்குச் சொல்லி வருந்தியது இது.)*

**வானம் வெல்வளம் கரப்பக், கானம்**
**உலறி இலைஇல வாகப், பல உடன்**
**ஏறுடை ஆயத்து இனம்பசி தெறுப்பக்**
**கயன்அற வறந்த கோடையொடு நயன் அறப்**
**பெருவரை நிவந்த மருங்கில், கொடுவரிப்**

**புலியொடு பொருது சினஞ்சிவந்து, வலியோடு**
**உரவுக்களிறு ஒதுங்கிய மருங்கில் பரூஉப்பரல்**
**சிறுபல் மின்மினி கடுப்ப எவ்வாயும்**
**நிறைவன இமைக்கும் நிரம்பா நீள்இடை,**
**எருவை இருஞ்சிறை இழீஇய, விரிஇணர்த்**

**தாதுஉண் தும்பி முரல்இசை கடுப்பப்,**
**பரியினது உயிர்க்கும் அம்பினர், வெருவர**
**உவலை சூடிய தலையர், கவலை**
**ஆர்த்து, உடன் அரும்பொருள் வவ்வலின், யாவதும்**
**சாத்துஇடை வழங்காச் சேண்சிமை அதரச்**

**சிறியிலை நெல்லித் தீம்சுவைத் திரள்காய்**
**உதிர்வன தாஅம் அத்தம் தவிர்வுஇன்று,**
**புள்ளிஅம் பிணை உணீஇய உள்ளி,**
**அறுமருப்பு ஒழித்த தலைய, தோல்பொதி,**
**மறுமருப்பு இளங்கோடு அதிரக் கூஉம்**

**சுடர்தெரு வருந்திய அருஞ்சுரம் இறந்து, ஆங்கு**
**உள்ளினை வாழிய நெஞ்சே! போதுஎனப்**
**புலம்கமழ் நாற்றத்து இரும்பல் கூந்தல்,**
**நல்லெழில், மழைக்கண், நம் காதலி**
**மெல்லிறைப் பணைத்தோள் விளங்கும்மாண் கவினே.**

*நெஞ்சமே! நீ வாழ்வாயாக!*

புலமெங்கும் நறுமணம் பரப்பிக்கொண்டிருக்கின்ற மலரினைப்போலக் கரிய பலவாகிய கூந்தலை உடையவள்; நல்ல அழகினை உடையவள்; குளிர்ச்சியான கண்களை உடையவள், நம்முடைய காதலி மெல்லிய சந்தினையுடைய அவளுடைய பணைத்த தோள்களின் அழகோ, விளக்கம்அமைந்த மாண்பு உடையது ஆகும்.

நன்மையெல்லாம் அற்றுப் போயின, பெரிய மலை உயர்ந்துள்ள பக்கங்களிலே, வளைந்த கோடுகளைக்கொண்ட புலியுடனே சினத்தால் மிகுதிகொண்டு போர் செய்தது, செருக்கு மிகுந்த வலிய களிறு ஒன்று. அதனை வென்ற செருக்குடனே அது சென்று ஒதுங்கியிருக்கும் பக்கங்களிலே,

பெரியவான பரற்கற்கள், சிறிய பலவான மின்மினிப் பூச்சிகளைப் போல எல்லாப் பக்கங்களிலும் நிறைந்துள்ளன. வாக ஒளிபரப்பிக் கொண்டிருக்கும் செல்லத்தொலையாத நெடிதான காட்டிடத்தே,

பெரிய சிறகினையுடைய எருவைச் சேவலானது அஞ்சி யோடுமாறு,விரிந்த பூங்கொத்துக்களிலே தாதினை ஊதி உண்ணும் வண்டினம் முரல்கின்ற ஒலியைப்போல விரைவுடனே ஒலிசெய்து செல்லுகின்ற அம்பினை உடையவர்கள் ஆறலைப்போர். காண்பார்க்கு அச்சம் வருமாறு தழைக் கண்ணியினைச் சூடிய தலையினராகக் கவர்த்த நெறிகளிலே ஆப்பரித்துக் கொண்டு, வழிச்செல்வாரின் அரிய பொருள் களையெல்லாம் பறித்துக் கொள்பவர் அவர். ஆதலின், வாணிகச் சாத்து எதுவும் செல்லுதலும் அற்றதான அத்தகைய கொடிய நெறியிலே,

உயர்ந்த உச்சிகளை அடுத்ததாக, சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய சுவையுடைய திரண்ட காய்கள் உதிர்ந்து கிடக்கும் காட்டிலே, புள்ளிமானின் அழகிய பிணைகள் தவிர்தல் இன்றி அந் நெல்லிக்காய்களை உண்ணலை நினைந்து, அற்று வீழுகின்ற கொம்புகளை ஒழித்த தலையினவும், தோலாற் பொதிய பெற்ற மறு மருப்பு ஆகியனவுமாகிய தம் இளைய கொம்புகள் அதிருமாறு, ஆண் மான்கள் அவற்றைக் கூவி அழைத்துக் கொண்டிருக்கும். ஞாயிறு காய்தலால் வருத்தமுற்ற அத்தகைய அறிய சுரநெறிகளை எல்லாம் கடந்து வந்தும், நீ இப்போதுஅவளை நினைத்தனையே? (யான் இனி என் செய்வேன்?)

என்று, பொருள்வயிற் போகா நின்ற தலைமகன் இடைச் சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** *4. கயம் - குளம். 7. ஒதுங்கிய - நடந்து சென்ற. 9. நிரம்பா - செல்லத் தொலையாத. 10. இருஞ்சிறை - பெரிய சிறகு 13. உவலை - தழை 17. தாஅம் - பரவிக் கிடக்கும். 23. இரும்பல் - கரிய பலவாகிய.*

**விளக்கம்:** *கூந்தலின் இயல்பான மணம், புலத்திடமெங்கும் மலர்மணம்போல் எழுந்து பரவிற்று என்க. மான்கொம்புகள் முதலில் கழன்று வீழ்ந்து மீண்டும் முளைக்கும் இயல்பின; அதனையே மறுகொம்பு என்பர்.*

## 292. செய்வது யாது தோழி!

**பாடியவர்:** *கபிலர்* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *வெறி அச்சுறீஇத், தலைமைகள் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைமகள் தலைமகனுடனே களவிலே உறவாடி வர, அதனால் அவள் மேனியின்கண் புதுமாற்றங்கள் தோன்றின. அவனுடன் கூடும் உறவு தடைபடவும் அவள் பொலிவிழந்தாள். உடல் நலிந்து வாடியும் சோர்ந்தாள். மகளின் நிலை கண்டு வருந்திய தாய், முருகனுக்கு வெறியாட்டயர்தலிலே ஈடுபட, அவள் தன் தோழியினிடம் இப்படிக் கூறுகின்றாள்.)*

**கூறாய், செய்வது தோழி! வேறுஉணர்ந்து,**
**அன்னையும் பொருள்உகுத்து அலமரும்; மென்முறிச்**
**சிறுகுளகு அருந்து, தாய்மலை பெறாஅ,**
**மறிகொலைப் படுத்தல் வேண்டி, வெறிபுரி**
**ஏதில் வேலன் கோதை துயல்வரத்**

**தூங்கும் ஆயின், அதூஉம் நாணுவல்;**
**இலங்குவளை நெகிழ்ந்த செல்லல்; புலம்படர்ந்து**
**இரவின் மேயல் மரூஉம் யானைக்**
**கால்வல் இயக்கம் ஒற்றி, நடுநாள்,**
**வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்**

**கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்**
**உடுஉறு கணையின் போகிச் சாரல்**
**வேங்கை விரிஇணர் சிதறித் தேன் சிதையூஉ,**
**பலவின் பழத்துள் தங்கும்**
**மலைகெழு நாடன் மணவாக் காலே!**

*தோழி! விளங்கும் நம்முடைய வளைகள் நெகிழ்தற்கு ஏதுவான நம் வருத்தத்தினை அன்னையும் கண்டனள். அது, வேறொன்றால் வந்ததெனவும் நினைந்தனள். பொருளைச் சொரிந்து மனம் சுழன்று வருந்தவும் செய்கின்றனள்.*

மென்மையான தளிராகிய சிறிய தழையுணவினையே அருந்தும், தாய் முலையினைப் பெறாதுபோன ஆட்டுக் குட்டியினைக் கொலைப்படுத்துதலையும் அவள் விரும்பினள். வெறியாடலைச் செய்யும், யாதும் தொடர்பற்ற வேலன் தன் மார்பிலே மாலை கிடந்து அசைந்திட வெறியாடலையும் செய்வான் ஆயின், அது குறித்தும் யான் நாணங் கொள்வேன்.

காட்டிடத்தேயிருந்து தினைப்புனங்களில் மேய்தலை விரும்பி வருகின்ற யானையின் கால்களின் வலிய இயக்கத்தை உற்று அறிந்து, நள்ளிரவிலே, மலையிடத்தேயுள்ள பரண் மீதிலிருந்து காவல் காத்திருக்கும் கானவனானவன், மிகுந்த விசையோடு கவணினைச் சுழற்றி எறிந்த சிறு கல்லானது, இறகு பொருந்திய அம்பினைப் போல வேகமாகச் சென்று, மலைச்சாரலிலேயுள்ள, வேங்கையின் விரிந்த பூங்கொத்துக் களைச் சிதற செய்து, தேனிறால்களை அழித்துப் பலாப் பழத் தினுள்ளே போய்த் தங்கும்.

அத்தகைய மலைநாட்டை உடையவன் வந்து நம்மை உணர்ந்து கொள்ளாவிட்டால், நாம் செய்வதுதான் யாதோ? அதனைச் சொல்வாயாக.

என்று, வெறி அச்சுறீஇத் தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 2. பொருள் உகுத்து - பொருளைச் சொரிந்து, மென்முறி - மென்மையான துளிர்கள். 5. ஏதில் - தொடர்பு இல்லாத. 6. தூங்கும் - ஆடும். 7. செல்லல் - வருத்தம். புலம் படர்ந்து - புலத்தின்கண் மேய்தலை விரும்பி. 8. கால்வல் இயக்கம் - கால்களின் வன்மையான செலவு. 13. தேன் - தேனிறால்.

**விளக்கம்:** இற்செறிப்பு உடையவளாதலால் பகற்குறி வாய்த்தல் அரிதாயிற்று; காவல் திறமுடைய கானவர் காத்திருத்தலால் இரவுக் குறியும் நேர்தற்கு வழியில்லை; அன்னையோ முருகு அணங்கியதென வெறியாடவும், வேலனை வேண்டவும், வேலனுக்கு மறியைப் பலியிடவும் தொடங்கினாள்; இனி அவன் நம்மை மணந்த கொண்டாலன்றி, நம் துன்பங்களுக்கு ஒரு முடிவேயில்லை என்றனள்.

**உள்ளுறை:** கானவன் யானையின் வருகையை உய்த்தறிந்து எறியும் கவண்கல், யானையைத் தாக்காது போனாலும், வேங்கைப் பூக்களை உதிர்த்தும், தேனிறாலைச் சிதைத்தும், பலாப்பழத்துள் சென்றும் தங்கினாற் போலத், தலைவன் இரவுக்குறி வருதலால் நேர்ந்த ஊரலர் அவனுக்கு எட்டாது

போனாலும், நம்முடைய எழிலை எல்லாம் சிதைத்தும், நம் இன்பத்தை வாயாது தடுத்தும், நம் தாயின் மனத்திற் சென்று தங்குவதாயிற்று எனக் கொள்க.

**பாடபேதங்கள்:** *10. வன்கட் கானவன்.*

## 293. மயக்கம் எதனாலோ?

**பாடியவர்:** *காவன் முல்லைப் பூதனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *1. பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகனின் குறிப்பறிந்து, தலைமகள் தோழிக்குச் சொல்லியது. 2. தலை மகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளுக்குச் சொல்லியதூஉமாம்.*

*(1. பொருள்தேடி வருதலிலே தலைவன் மனஞ் செலுத்து பவன் ஆயினான் என்பதனைச் சில குறிப்புக்களால் தலைவியும் உணர்கின்றாள். தன் உள்ளத்துக் கவலை மிகுதியாகத் தோழிக்குத் தன்னுடைய வருத்தத்தை எடுத்துச் சொல்லுகின்றாள். 2. தலைமகன் தான் பிரியப்போகுஞ் செய்தியைத் தோழிக்குச் சொல்லுகின்றான். அதனைக் கேட்ட அவள் தலைமகளிடத்தே சென்று செய்தியை இவ்வாறு கூறுகின்றாள்.)*

**இலைஒழித்து உலறிய புன்தலை உலவை**
**வலைவலந் தனைய ஆகப், பலஉடன்**
**சிலம்பி சூழ்ந்த புலம்கெடு வைப்பின்,**
**துகில்ஆய் செய்கைப் பாவிரிந் தன்ன**
**வெயில் அவிர்பு நுடங்கும் வெவ்வெங் களரி,**

**குயிற்கண் அன்ன குரூஉக்காய் முற்றி**
**மணிக்காசு அன்ன மால்நிற இருங்கனி**
**உகாஅ மென்சினை உதிர்வன கழியும்**
**வேனில் வெஞ்சுரம் தமியர் தாமே**
**செல்ப என்ப தோழி! யாமே,**

**பண்பில் கோவலர் தாய்பிரிந்து யாத்த**
**நெஞ்சமர் குழவிபோல, நொந்து நொந்து,**
**இன்னா மொழிதும் என்ப;**
**என்மயங் கினர்கொல், நம் காத லோரே?**

'வேலமரங்கள் இலைகளை ஒழித்துப் பொலிவிழந்த உச்சியை உடையவையாகத் தோன்றும். அவற்றின்கண் வலியினைக் கட்டி வைத்திருப்பது போலச் சிலம்பி நூல்கள் பலவும் ஒருங்கே படர்ந்து விளங்கும். காடெல்லாம் தன் வளம் கெட்டும் கிடக்கும்.

துகிலினை ஆராய்ந்து நெய்கின்ற காலத்திலே பாவானது விரிந்திருப்பது போலக், கானல் விள்க்கமாக படர்ந்து அசைந்து கொண்டிருப்பதாகவும் மிகுந்த வெப்பத்தையுடைய அக்காடு தோன்றும்.

குயிற்கண் போன்ற சிறுகாய்கள் முதிர்ந்து, அழகிய பொற்காசு போன்ற நிறமுடைய பெருங்கனிகளாக உகாமரத்தின் மெல்லிய கிளைகளினின்றும் உதிர்ந்து வீழ்ந்து கொண்டிருக்கும். வேனிலால் வெம்மையுற்றுக் கிடக்கின்ற அத்தகைய சுரநெறி களிலே தமியராகத் தாம் செல்வதாக நம் காதலர் எண்ணினர் என்பார்கள்.

தோழி! பண்பு இல்லாத கோவலர்கள் தாயினைப் பிரித்துக் கட்டிவைத்த, நெஞ்சம் தாயையே விரும்பித் தவித்துக் கொண் டிருக்கும் ஆன்கன்றைப்போல, யாமும் உள்ளம் நொந்து நொந்து இன்னாதனவற்றையே சொல்லுகின்றோம் என்கின்றனர் அவர். அவர் இவ்வாறு மயங்கினதுதான் எதனாலோ?

என்று, பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகனின் குறிப்பறிந்து, தலைமகள் தோழிக்குச் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 2. வலை வலந்தனைய - வலை பின்னிவைத்தாற் போல. 4. துகிலாய் - செய்கை துகிலினை ஆய்ந்து நெய்கின்ற காலத்திலே. 6. குரூஉக்காய் - மிகச் சிறிதான காய்கள். 7. மணிக்காசு - பொற்காசு மாநிறம் - சிறந்த நிறம். 11. பண்பில் - கோவலர் கன்றினைத் தாயினின்றும் பிரித்துக் கட்டியதனால் அவர் பண்பற்ற கோவலராயினர்.

**விளக்கம்:** 'இன்னா மொழிதும் என்ப' என்பதனை ஊரவர் அலர் உரைத்ததாகவும் கொள்க. அன்றித், தலைவன் தன் செயலை மறைத்து அப்படிக் கூறினான், அவள் புலம்புதல் கேட்டு எனவும் கொள்ளலாம். உகா - கோடைப்பட்ட பகுதிகளிலே வளரும் ஒருவகை முள்மரம்; உடை கருவை போன்றது.

**பாடபேதங்கள்:** 5. வேல் வெங்களரி. 10. செல்ப என்னுநர். 14. என் மயங்கினர்நம்.

## 294. வாடையொடு வருந்துவேன்!

**பாடியவர்:** கழார்க்கீரன் எயிற்றியார். **திணை:** முல்லை. **துறை:** பருவ வரவின்கண் வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

*(தலைவன் பிரிந்து வினைமேற் சென்றிருந்தனன். குறித்த பருவம் வரவும் தலைவியின் பிரிவுத்துன்பமும் மிகவும் அதிகமாயிற்று. அவள் உள்ளங் கலங்கிப் பெரிதும்- உடல் மெலிந்தவளாயினாள். அது கண்டு தோழி, பருவத்தின் வரவைக் காட்டி, சொல் தவறாது அவன் வருவான் என வற்புறுத்த, அவளுக்குத் தலைவி இப்படிக் கூறுகின்றாள்)*

**மங்குல் மாமழை விண் அதிர்பு முழங்கித்,**
**துள்ளுப்பெயல் கழிந்த பின்றை, புகையுறப்**
**புள்ளிநுண் துவலைப் பூவகம் நிறையக்,**
**காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்**
**நீர்வார் கண்ணின் கருவிளை மலரத்,**

**துய்த்தலைப் பூவின் புதலிவர் ஈங்கை**
**நெய்தோய்த் தன்ன நீர்நனை அம்தளிர்**
**இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர,**
**அவரைப் பைம்பூப் பயில, அகல்வயல்**
**கதிர்வார் காய்நெல் கட்டுஇனிது இறைஞ்சச்**

**சிதர்சினை தூங்கும் அற்சிர அரைநாள்,**
**'காய்சின வேந்தன் பாசறை நீடி,**
**நம்நோய் அறியா அறனி லாளர்**
**இந்நிலை களைய வருகுவர் கொல்?' என**
**ஆனாது எறிதரும் வாடையொடு**

**நோனேன், தோழி! என் தனிமை யானே!**

*தோழி! மிகவும் இருண்ட மேகங்கள், விண்ணதிர முழங்கியவையாகத் துள்ளும் பெரும்பெயலையும் பெய்தன. அது கழிந்த பின்னர், புகைபோல நுண்மையான துவலைகள் பூக்களின் உள்ளளே நிறையுமாறு பனியாகப் பெய்து கொண்டிருக்கும் பனிக்காலமும் வந்தது.*

*தம் காதலனைப் பிரிந்துள்ள, செயலற்று வாடியிருக்கும் மகளிர்களின் நீர் வழியும் கண்களைப் போலக், காக்கணச் செடியிலே நீலப்பூக்களும் மலர்ந்தன.*

*பஞ்சு போன்ற தலையினையுடைய பூவினைக் கொண்டதும், புதர்களிலே படர்வதுமான ஈங்கையின், நெய்யிலே தோய்த்து எடுத்தாற்போல விளங்கும் நீர் நனைந்த தளிர்கள் இரு பிரிவாகப் பிளந்த ஈரலைப் போலப் பனித்துளியின் ஈரமுடனே விளங்கி அசைந்து கொண்டிருக்கின்றன.*

*அவரையும் பசுமையான பூக்களைப் பூத்துச் செறிவுடன் விளங்குகின்றது. அகன்ற வயல்களிலே கதிர்கள் நீண்ட*

நெற்பயிர்கள் காண்பதற்கு இனிதாகச் சாய்ந்து கிடக்கின்றன. வண்டுகள் மரக்கிளைகளிலே அசைந்து கொண்டிருக்கின்ற அத்தகைய முன்பனிக்காலத்து நள்ளிரவிலே,

'காயும் சினமுடைய வேந்தனின் பாசறைக் கண்ணே நெடுங்காலம் இருப்பவராயினர், நம் நோயின் தன்மையை அறியாத அறனற்றவரான நம் தலைவர். இந்த நம் நிலைமையினைப் போக்குவதற்கு அவர் வருவாரோ?' என்று, அமையாது வருத்துகின்ற வாடை காற்றோடு, என் தனிமைத் துயரினை யானும் பொறாதவளா யிருக்கின்றேனே? (என்ன சொல்லியும் என் மனம் தெளிவுற்றிலதே. யாது செய்வேன்? என்றனள்.)

என்று, பருவ வரவின்கண் வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** மங்குல் மாமழை - மிகவும்கடுமையான கார்காலத்து மேகங்கள். 2. துள்ளுப் பெயல் - கடுமையான பெருமழை. 3. துவலை - மென்துளிகள். 4. கையறு மகளிர் - செயலற்று வருந்தியிருக்கும் மகளிர். 6. துய்த்தலை - பஞ்சினைப் போன்ற மென்மையான. 7. அந்தளிர் - அழகிய தளிர். 8. ஈருள் - ஈரல். 10. கதிர்வார் - கதிர் நீண்ட 15. ஆனாது எறிதரும் அமையாது வந்து வருத்தும். 16. நோனேன் - வருந்துவேன்.

**விளக்கம்:** 'நின்னைப் பிரிந்து வாழார்; வினை முடிந்ததுமே விரைய வருவார்' எனத் தேறுதல் உரைக்கும் தோழிக்குக் 'குறித்த காலமும் பொய்த்தார்; அடுதத கூதிரும் முன்பனியும் வந்து கழிந்தது; இன்னமும் வருதற்கு அருள் அற்ற அவர் என்றுதான் வரப்போகிறாரோ?' எனத் தலைவி, தன் ஆற்றாமை மிகுதியைச் சொல்லி வருந்துகின்றாள்.

**மேற்கோள்:** 'முல்லையுள் முன்பனி வந்தது; நிலமும் கருவும் மயங்கிற்று 'என, இச்செய்யுளைத், 'திணை மயங்குறுதலும்' என்னும் சூத்திர உரையுள் நச்சினார்க்கினியர் காட்டுவர்.

**பாடபேதங்கள்:** 2. பொழிந்த பின்றை. 8. இருவகிர் இருளின். 16. தனிமையினானே.

## 295. வந்து நலம் தருவார்!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** புல்லியின் வேங்கடமலைத் தொடரைப் பற்றிய செய்தி.

*(தலைமகன் தலைமகளைப் பிரிந்து வினைமேற் சென்றவன், வருவதாகக் குறித்துச் சென்ற கார்காலத்தினும் வராதவனாக, மனம் உலைவுற்று வாடி நலிந்தனள் தலைவி. அதுகண்டு ஆற்றாதாளாகிய தோழி, அவளுடைய நிலைக்கு வருந்தியவளாக, அவளுக்கு இவ்வாறு ஆறுதல் கூறுகின்றாள்.)*

**நிலம்நீர் அற்று நீள்சுனை வறப்பக்**
**குன்றுகோடு அகையக், கடுங்கதிர் தெறுதலின்,**
**என்றூழ் நீடிய வேய்படு நனந்தலை,**
**நிலவுநிற மருப்பின் பெருங்கை சேர்த்தி,**
**வேங்கை வென்ற வெருவரு பணைத்தோள்**

**ஓங்கல் யானை உயங்கி, மதம் தேம்பிப்**
**பல்மர ஒருசிறைப் பிடியொடு வதியும்**
**கல்லுடை அதர கானம் நீந்திக்**
**கடல்நீர் உப்பின் கணஞ்சால் உமணர்**
**உயங்குபகடு உயிர்ப்ப அசைஇ, முரம்பு இடித்து**

**அகல்இடம் குறித்த அகல்வாய்க் கூவல்**
**ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்,**
**புடையலம் கழற்கால் புல்லி குன்றத்து,**
**நடைஅருங் கானம் விலங்கி, நோன்சிலைத்**
**தொடைஅமை பகழித் துதன்றுநிலை வடுகர்,**

**பிழிஆர் மகிழ்நர், கலிசிறந்து ஆர்க்கும்**
**மொழிபெயர் தேஎம் இறந்தனர் ஆயினும்,**
**பழிதீர் மாண்நலம் தருகுவர் மாதோ;**
**மாரிப் பித்திகத்து ஈர்இதழ் புரையும**
**அங்கலுழ் கொண்ட செங்கடை மழைக்கண்,**

**மணங்கமழ் ஐம்பால், மடந்தை! நின்**
**அணங்குநிலை பெற்ற தடமென் தோளே!**

*நிலமெங்கும் நீர்வளம் அற்றதாக, ஆழ்ந்த சுனைகளும் வறண்டு போயின. மலைக்கண், மரக்கிளைகளும் பற்றி எரிவன வாயின. கடுமையான ஞாயிற்றுக் கதிர்கள் வருத்துதலால், எங்கும் வெப்பம் மிகுதியாக, அதனால் மூங்கில்களும் வெடித்துக் கிடக்கும் நிலையினவாயின. அகன்ற அவ்விடங்களிலே,*

*வேங்கைப் புலியினை வென்ற, அச்சம் வரும் பணைத்த கையினையுடைய, உயரமான குன்றுபோல விளங்கும் யானையும் வருந்தி மதமழிந்து, நிலவு நிறத்தையுடைய தன் கொம்பினோடு தன் பெருங்கையினையும் ஒருசேர வைத்துக் கொண்டதாகப், பல மரங்களையுடையதான ஒரு பக்கத்திலே,*

தன்னுடைய பிடியோடுங்கூடி வருத்தத்துடன் தங்கியிருக்கும். கற்கள் பொருந்திய பாதைகளையுடைய அத்தகைய காடு களையுங் கடந்து,

உப்புச் சுமையினை ஏற்றிய வண்டிகளை இழுத்துவரும் பகடுகள் வருத்தமுற்றனவாக, அவற்றின் களைப்பு நீங்குமாறு ஓரிடத்தே தங்கி, வன்னிலத்தை இடித்து, அகன்ற இடத்திலே உமணர்கள் செல்லும் புதியவர்களின் தளர்ச்சி நீங்குவதற்கு உதவியாகவும் ஊறிக் கிடக்கும். அத்தகைய.

ஒலிசெய்யும் வீரக்கழல் அணிந்த காலினனான புல்லி என்பானது குன்றத்தைச் சார்ந்த, கடத்தற்கும்அருமையான காட்டினைக் கடந்து, வலிய வில்லிலே தொடுத்தல் அமைந்த அம்புகள் செறிவு கொண்டவையாகக் கொண்டிருக்கும் வடுகர்கள், கள்ளுண்ட மகிழ்வினராய்ச் செருக்குமிகுந்து ஆரவாரித்துக் கொண்டிருக்கும், வேற்றுமொழி வாங்கும் தேயத்தையும் கடந்து சென்றுள்ளனர் நம் தலைவர். ஆயினும்,

மாரிக்காலத்தே மலர்தலையுடைய பிச்சியின் குளிர்ந்த இதழைப் போன்ற அழகொழுகும் சிவந்த கடையினையுடைய தண்மையான கண்களையும், மணம் கமழுகின்ற ஐம்பகுப்பாக முடிக்கும் கூந்தலினையும் உடைய மடந்தையே!

நின்னுடைய அழகு நிலைபெற்ற, பரந்த மென்மையான தோள்களின், குற்றமற்ற மாட்சியினையுடைய நலத்தினை மறவாது வந்து, நின் காதலர் தந்தருள்வார்: (அதனால், நீயும் தேறியிருப்பாயாக என்றனள்.)

என்று, பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 2. கோடு அகைய - மரக்கிளைகள் வெப்பத்தால் கருகிப் போக. 3. என்றூழ் - வெம்மை. 4. நிலவு நிற மருப்பு - நிலவினைப் போன்ற நிறமுடைய கொம்பு. 6. ஓங்கல் யானை - மலையிடத்து யானையுமாம். 7. கடனீர் உப்பு - கடல் நீரினின்றும் எடுத்த உப்பு; இதனால், உப்பினை நிலத்தினின்றும் சிலவிடங்களில் வெட்டி எடுத்து வந்தனராகலாம். 10. அசை விட - களைப்பாற. 11. புடையல் அம் கழல் - ஒலி முழங்கும் அழகிய கழல்கள். 12. விலங்கி - நடந்து. 17. பித்திகம் - பிச்சி மலர். 18. செங்கடை மழைக்கண் - கடைசிவந்த குளிர்ச்சியான கண்கள்.

**விளக்கம்:** வேங்கையை வெல்லும் களிறும், வெப்பந் தாளாமல் வாடிச் சோர்ந்து பிடியோடு வருந்திக் கிடக்கும் என்பது காட்டின் கடுமையைக் கூறியதாகும். அவர் விரைந்து

*வருவார் என்னும் குறிப்புத் தோன்ற, 'நின் தோள் மாணலம் தருகுவர்' என்றனள்.*

**பாடபேதம்:** *நீடிய வெய்படு.*

## 296. ஊரலரோ பெரிதாயிற்று!

**பாடியவர்:** *மதுரைப் பேராலவாயார்.* **திணை:** *மருதம்.* **துறை:** *வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்கு வாயின் மறுக்கும் தோழி சொல்லியது.* **சிறப்பு:** *பெரும் புகழுடையவனும், கொற்கைப் பொருநனுமான, நெடுந்தேர்ச் செழியனைப் பற்றிய செய்தி.*

*(தலைமகன், வையைப் புதுப்புனலிலே பரத்தையோடுங் கூடிப் புதுப்புனலாடிக் களித்துத் திரிந்தான் எனக் கேட்டு ஊடல் கொண்டனள் தலைவி. அவன், அவளுடைய உறவை விரும்பியவனாக மறுநாள் வீட்டிற்கு வர, அதனை மறுத்து அவள் சொல்லுகின்றாள்.)*

**கோதைஇணர, குறுங்கால், காஞ்சிப்**
**போது அவிழ் நறுந்தாது அணிந்த கூந்தல்.**
**அரிமதர் மழைக்கண், மாஅ யோளொடு**
**நெருநையும் கமழ்பொழில் துஞ்சி,இன்றும்,**
**பெருநீர் வையை அவளொடு ஆடிப்,**

**புலரா மார்பினை வந்துநின்று, எம்வயின்**
**கரத்தல் கூடுமோ மற்றே பரப்பில்**
**பன்மீன் கொள்பவர் முகந்த இப்பி**
**நார்அரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்**
**பேர்இசைச் கொற்கைப் பொருநன், வென்வேல்**

**கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்,**
**மலைபுரை நெடுநகர்க் கூடல் நீடிய**
**மலிதரு கம்பலை போல,**
**அலர்ஆ கின்று, அது பலர்வாய்ப் பட்டே,**

*தலைவனே! தலைமாலை போன்ற பூங்கொத்துக்களைக் கொண்டிருக்கும் குறிய அடியினையுடைய காஞ்சி மரத்தின் இதழ்விரிந்த நறுமணப் பூந்தாதினைப் பொருந்தியிருக்கும் கூந்தலை உடையவள்; செவ்வரி படர்ந்த குளிர்ச்சியான கண்களை உடையவள்; மாமை நிறத்தினையும் கொண்டவள் ஆகிய பரத்தையுடனே, நேற்று, மணம் கமழுகின்ற பொழிலிலே கிடந்து உறங்கினாய்.*

இன்றும், அவளுடனே பெருநீர்ப் பெருக்கினையுடைய வையையிலே புதுப்புனலாடி மகிழ்ந்துவிட்டு, அந்த ஈரம் புலராத மார்பினை உடையவனாக எம்மிடத்தே வந்து நின்றனை! நின் செயலை எமக்கு மறைத்தல் நின்னால் இயலுமோ? இயலாதல்லவோ?

கடற்பரப்பிலே, பலவகையான மீன்களையும் சென்று கொணர்பவர்கள் பரதவர்கள், அவற்றுடன் வாரிக் கொணர்ந்த சிப்பிகளைப், பன்னாடையால் அரிக்கப்பெற்ற களிப்புத்தரும் கள்ளிற்கு விலையாக அவர்கள் சேர்த்து வைப்பார்கள். அத்தகைய, பெரும் புகழினையுடைய கொற்கைத் துறைக்குத் தலைவனாகிய,

வெற்றிச் சிறப்புடைய வேலினையும், பெரிய கடுமையான யானைகளையும், நெடிய தேரினையும் உடைய பாண்டியன் நெடுஞ் செழியனது, மலையைப் போன்ற நீண்ட உயர்ந்த அரண்மனையினையுடைய மதுரையினிடத்தே.

வெற்றிக் களிப்பால் ஆடிய, மிகுதியாக நிறைந்த ஆரவாரத்தைப்போலப், பலர் வாய்ப்பட்டு நின் செயலும் ஊர் அலர் ஆகின்றதே?

என்று, வாயில் வேண்டிச்சென்ற தலைமகற்கு வாயின் மறுக்கும் தோழி சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** 1. கோதை - தலைமாலை. இணர - பூங்கொத்துக்களை உடைய 2. போதவிழ் நறுந்தாது அணிந்த கூந்தல்' என்பது, அவள் காஞ்சிமரச் சோலையினூடே ஆடி மகிழ, அங்கு உதிர்ந்த பூந்துகள் அவள் கூந்தலிலே படிந்து அழகு செய்து கொண்டிருந்தன என்று காட்டுதற்காகும். 7. பரப்பில் - கடற் பரப்பில். 10 - 11. 'வென்வேல், கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்' என, அவன் படைச் சிறப்பைக் கூறுதலால், கூடலில் ஆடிய ஆரவாரம் வெற்றியாரவாரம் எனலாம். இதே ஆரவாரம், அகம் 253இல், நக்கீரனாராலும் கூறப்பட்டது.

**பாடபேதம் :** 4. துஞ்சினை இன்றும்.

## 297. தீங்கும் என்ன நிகழுமோ?

**பாடியவர்:** மதுரை மருதனிள நாகன்னார். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(பொருளார்வம் தன்னிடத்தே மிகுதியாக, வேற்று நாடு சென்று பொருளீட்டி வருதற்கும் துணிந்தான் ஒரு தலைவன். அவன் விடைபெற்றுப் புறப்பட்ட காலத்திலே, அவள், நீர் வார்ந்த கண்ணினளாக, 'நின்னுடன் யானும் வருவேன்' எனக் கதறியழுத காட்சி அவன் நெஞ்சிலே நிலைபெற்றும், அவன் பிரிந்து சென்றான். வழியிடையிலே, அவன், தன் நெஞ்சுக்கு இவ்வாறு சொல்லுகின்றான்.)

**பானாட் கங்குலும் பெரும்புன் மாலையும்,**
**ஆனா நோயொடு அழிபடர்க் கலங்கி,**
**நம்வயின் இனையும் இடும்பை கைம்மிக,**
**என்னை ஆகுமோ, நெஞ்சே! நம் வயின்;**
**இருங்கவின் இல்லாப் பெரும்புன் தாடிக்,**

**கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென,**
**மருங்குல் நுணுகிய பேஎம் முதிர் நடுகல்**
**பெயர்பயம் படரத் தோன்றுகுயில் எழுத்து**
**இயைபுடன் நோக்கல் செல்லாது, அசைவுடன்**
**ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியும்**

**சூர்முதல் இருந்த ஓமையம் புறவின்,**
**நீர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்,**
**எழுதி யன்ன கொடிபடு வெருகின்**
**பூளை அன்ன பொங்குமயிர்ப் பிள்ளை,**
**மதிசூழ் மீனின், தாய்வழிப் படூஉம்**

**சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு**
**எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்**
**வெருவரு கானம் நம்மொடு,**
**'வருவல் என்றோள் மகிழ்மட நோக்கே?**

பெரிதான அழகு என்பது எதுவும் அற்ற பெரிதான பொலிவில்லாத தாடியினையும், வன்கண்மையினையும் உடையவர் மறவர்கள். அவர்களது அம்புகள் தேய்த்துச் சென்றதாக, அதனால் பக்கம் தேய்ந்துள்ள அச்சமிக்க நடுகல்லிலே பெயரும் பீடும் விரிவாகத் தோன்றுமாறு பொறித்த எழுத்துக்களை, மனம் பொருந்த நோக்குதலும் மாட்டாதவர்களாய், மிகுந்த தளர்ச்சியுடன் வழியே செல்பவரான புதியவர்கள் அதனைக் கடந்து செல்லும், அடி மரத்திலே தெய்வம் இருப்பதான ஓமைமரக் காட்டிலே,

ஈர்கின்ற முள்வேலியையுடைய புலால் நாற்றமுடைய முற்றத்திலே, ஓவியமாக எழுதியதுபோன்று சோர்ந்து அசையாது கிடக்கும் பூனையின் பூளைப்பூப்போன்று விளங்கும்

மயிரினையுடைய குட்டிகள், திங்களைச் சூழ்ந்துள்ள விண்மீன்களைப் போலத் தம் தாயைச் சூழ்ந்து கிடக்கும்.

அத்தகைய சிறு குடியிருப்புக்களிலேயுள்ள மறவர்கள், ஏறுகொள்ளக் கருதி எழுதற்பொருட்டு எழுந்த பறையொலிக்கு, எருவைச் சேவலானது அஞ்சிச் சிறகு பெயர்த்தும் பறந்து போகும்.

அத்தகைய அச்சம் வரும் கானத்திற்கும் நம்மோடும் வருவேன் என்றவள் நம் தலைவி. அவளுடைய மகிழ்வுதரும் மடப்பமான நோக்கம்.

பாதி நாளாகிய இரவுவேளைகளிலும், மிகப் பொலிவற்ற தான மாலை நேரங்களிலும், அமைதியான காம நோயோடு நெஞ்சழிந்த பெருந்துயராற் கலங்கியவளாக, நம்மை நினைதலாகிய துன்பம் அவள்பால் அளவு கடத்தலான், நம்மிடத்தேயும், இனி என்ன தீங்கு நிகழ்த்துமோ? (நெஞ்சமே யான் ஏது செய்வேன்?);

என்று, பொருள்வயிற் போகா நின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. பானாட் கங்குல் - நாளின் பாதியாகிய இரவு; கங்குலின் பாரதியாகிய நடுச்சாமமும் ஆகும். பெரும் புன் மாலை - பெரிதும் பொலிவிழந்ததான மாலைக்காலம்; மாலை பொலிவிழந்து தோன்றுவது தலைவனைப் பிரிந்து உறைதலான். 2. ஆனாநோய் - அமையாத பெருநோய்; பிரிவுத் துயர். 5. இருங்கவின் - பெரிய அழகு; கருமையான ஓர் அழகு எனலும் பொருந்தும்; பாலை நிலத்தவராய் அவர் தாடியைப் பேணுதற்கான வசதியற்றவராயினதால், கருமைப் பொலிவுற்றுத் தோன்றுதல் உண்மையாதலை நினைக்க. 6. பகழி மாய்த்தென - பகழிகள் உராய்ந்து சென்று தேய்த்ததாக. நடுகல் மறைவிலே இருந்து அவர் எய்த அம்புகளால் அவை பக்கம் தேய்ந்து விளங்கின என்க. 11. சூர் முதலிருந்த - ஓமை தெய்வத்தை அடிமரத்தே உடையதான ஓமை மரம். 13. எழுதியன்ன - எழுதி வைத்தாற்போன்ற. 14. பொங்கு மயிர் - அடர்ந்த மயிர்.

**விளக்கம்:** ‘எருவைச் சேவல் தண்ணுமை ஒலி எழத்தானும் சிறை பெயர்த்து எழும்’ என்றது, மறவர் ஆநிரை - கவரச் செல்லுதலால், அங்குப் போர் நிகழத், தான் உண்ணுதற்கான பிணங்கள் கிடைக்கும் என்ற ஆர்வத்தால் என்க. அத்தகைய காட்டின் கடுமையினையும் கருதாது, தானும் உடன் வருவேன் என நின்ற தலைவியின் மடமை அவன் உள்ளத்தை வாட்டுவதாயிற்று என்க.

**பாடபேதங்கள்:** *6. கடுங்கணை மறவர். 7. மருங்கில் நுணுகிய. 8. தொன்று குயிலெழுத்து. 11. சுரமுதலிருந்த.*

## 298. உவப்பே இனிது!

**பாடியவர்:** *மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக் குறிக்கண் தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.*

*(இரவுக் குறியிடத்தே கூடிய காதலர் இருவரும் தம்முள் பேசுகின்ற சுவையான பேச்சு இது. தலைவி, 'தன் தோழியும் தானும் அவன் வரவை எதிர்பார்த்திருந்த செய்தியை, அவன் வந்ததும், அவனிடம் இப்படிக் கூறுகின்றாள்.)*

**பயங்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு**
**வயங்குதொழில் தரீஇயர், வலன்ஏர்பு விளங்கி,**
**மல்குகடல் தோன்றி யாங்கு, மல்குடை,**
**மணிமருள் மாலை, மலர்ந்த வேங்கை**
**ஒண்தளிர் அவிர்வரும் ஒலிகெழு பெருஞ்சினைத்**

**தண்துளி அசைவளி தைவரும் நாட!**
**கொன்றுசினம் தணியாது வென்றுமுரண் சாம்பாது,**
**இரும்பிடித் தொழுதியின் இனந்தலை மயங்காது,**
**பெரும்பெயற் கடாஅம் செருக்கி, வளமலை**
**இருங்களிறு இயல்வரும் பெருங்காட்டு இயவின்,**

**ஆர்இருள் துமிய வெள்வேல் ஏந்தி,**
**தாம்பூங் கோதை ஊதுவண்டு இரீஇ,**
**மென்பிணி அவிழ்ந்த அரைநாள் இரவு, இவண்**
**நீவந் ததனினும், இனிதுஆ கின்றே;**
**தூவல் கள்ளின் துணைதேர், எந்தை**

**கடியுடை வியல்நகர் ஓம்பினள் உறையும்**
**யாய்அறி வுறுதல் அஞ்சிப் பானாள்,**
**காவல் நெஞ்சமொடு காமம் செப்பேன்,**
**யான்நின் கொடுமை கூற, நினைபுஆங்கு,**
**இனையல்; வாழி, தோழி! நந் துறந்தவர்**

**நீடலர் ஆகி வருவர், வல்லென;**
**கங்குல் உயவுத்துணை ஆகிய**
**துஞ்சாது உறைவி இவளுவந் ததுவே!**

*உலகத்திற்குப், பலவகையான பயன்களும் பொருந்தியதாக விளங்கும் செல்வத்தின் தன்மை வாய்ந்த பல கதிர்களை உடையதாக விளங்குவது ஞாயிறு. விளக்கமுறும் தொழில்கள் பலவற்றையும் உலகத்தவர்க்குத் தருமாறு, வானிலே வலமாக எழுந்த விளக்கமுற்றுப், பெரிய கடலிடையிலே அது தோன்றும்.*

அந்தக் கருங்கடலின் நீலநிறத்தை ஒப்ப நீலமணி போன்று வானம் இருண்டதாகத் தோன்றும் மயக்கந்தரும் மாலைக் காலத்திலே, செறிவுபட மலர்ந்துள்ள வேங்கையின் ஒளியுடைய தளிர்கள் விளங்கும் தழைதல் பொருந்திய பெரிய கிளையிலே, தண்மையான துளிகளை அசையும் காற்றுத் தடவிக் கொண்டே வந்துகொண்டிருக்கும். அத்தகைய வளநாடனே!

தன்னுடைய பகையைக் கொன்ற பின்னும், தன் சினம் தணியாததாகி, அதனை வெற்றிகொண்டும் தன்னுடைய மாறுபாடு குறையாமல், பெரிய பெண்யானைக் கூட்டங்களை யுடைய தன் இனத்துடனேயும் கலந்து கொள்ளாமல், பெருமழை போலும் மதநீராற் செருக்குடையதாகி, வளமலை யிலேயுள்ள பெரிய களிறானது இயங்கிக் கொண்டிருக்கும் பெரிய காட்டு நெறியிலே, -

மிகுதியான இருள் துண்டுபடுமாறு வெள்ளிய வேலினைக் கையேந்தியவனாக, மெல்லிய கட்டவிழ்ந்த பூமாலைக்கண் ஊதும் வண்டினை ஓட்டியவாறே, நடு நாளாகிய இரவுக் காலத்தே நீயும் வந்தனை. அந்த வருகையிலும்.

மழைபோன்ற கள்வளத்தையும், விரைந்த தேரினையு முடைய எம் தந்தையின், காவலையுடைய பெரிய மனையிலே எம்மைப் பாதுகாத்தவளாகத் தங்கியிருக்கும் எம் தாய் அறிந்து கொள்ளுதலை அஞ்சி, நள்ளிரவிலேயும் மறைத்தலையுடைய உள்ளத்துடனே, என் காமத்தினைச் சொல்லாது, நீ என்னை மறந்தனை என்ற நின் கொடுமையினையே யான் கூறினேன்; அவ்விடத்தே,

நினைவு மேற்கொண்டு, 'தோழி, வாழ்க! வருந்தாதே நம்மை விட்டுச் சென்றிருப்பவர் இனியும் காலந் தாழ்த்தாதவராகி, விரைவிலே வந்து சேருவர்' என்று எனக்குத் தேறுதல் உரைந்து, 'இரவெல்லாம் என் வருத்தத்திற்குத் துணையாகியிருந்தவள் என் தோழியாகிய இவளே. இவள் உவப்பு அடைந்ததுதான் எனக்கும் இனிதாக இருக்கின்றது.

என்று, இரவுக் குறிக்கண் தலைமகற்குத் தலைமகள் சொன்னாள் என்க.

**சொற்பொருள்:** *1. பயம் - நன்மை. திரு - செல்வம் 2. வயங்குதொழில் - விளக்கமான நல்ல தொழில்கள். 1 - 5 நீலக் கடலினிடையே செங்கதிர் பொன்னொளியுடன் எழுவது போல, மலையில், நீலவானத்தே வேங்கையின் பெருங் கிளையிலே, ஒண்மையான தளிர் விளங்கிற்று என்க. 6. அசைவளி - அசைந்து*

வரும் காற்று. தைவரும் - தடவிச் செல்லும். 10. இயவு - வழி 12. தாழ் பூங்கோதை - தாழ்ந்து தொங்கும் பூவிளங்கும் கூந்தலுமாம். 13. மென்பிணி - மென்மையான கட்டு; அரும்பின் பிணிப்பு. 15. தூவல் மழை. துனை - விரைவு 16. கடி - காவல். 18. கரவல் நெஞ்சம் - கரத்தலை உடையதான நெஞ்சம்; கரத்தல் - மறைத்தல். 22. உயவுத் துணை - வருத்தத்திற்கு உரிய துணை; உசாத் துணையும் ஆம்.

**விளக்கம்:** என்னளவிலே, நீ வருதலால் நான் கொண்ட மகிழ்வினும், நின் வருகையால் என் துயர் தீர்ந்ததென உவக்கும் என் தோழியின் உவப்பினால் நான் கொள்ளும் இன்பமே மிகுதியாகும் என்றனள்; தோழியின் உதவியின் சிறப்பைக் கூறினாள்.

**பாடபேதம்:** 11 - 14, 'ஏந்தி மென்பிணி யவிழ்ந்த தாழ் பூங்கோதை, ஊது வண்டிரிய வழிப்பணை முயங்கிய. நீ வந்த தனினும்.

## 299. மறத்தலும் அரிதே!

**பாடியவர்:** எயினந்தை மகனார் இளங்கீரனார். **திணை:** பாலை. **துறை:** இடைச் சுரத்துப் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(தன் அன்புறு காதலியைப் பிரிந்து வினைமேற் கொண்டவனாகச் சுரத்துவழியே சென்று கொண்டிருக்கிறான், ஒரு தலைவன். இடை வழியிலே, தன் தலைவியின் நினைவு உள்ளத்தே மிக்கெழுந்து வருந்தத் தொடங்க, அவன், தன் நெஞ்சிற்கு இவ்வாறு கூறுகின்றான்.)

**எல்லையும் இரவும், வினைவயின் பிரிந்த**
**முன்னம், முன்உறுபு அடைய உள்ளிய**
**பதிமறந்து உறைதல் வல்லுநம் ஆயினும்**
**அதுமறந்து உறைதல் அரிது ஆகின்றே**
**கடுவளி எடுத்த கால்வழி தேக்கிலை**

**நெடுவிளிப் பருந்தின் வெறிஎழுந்து தாங்கு,**
**விசும்புகண் புதையப் பாஅய்ப், பலஉடன்**
**அகல்இடம் செல்லுநர் அறிவுகெடத் தாஅய்க்,**
**கவலை சுரக்கும் காடுஅகல் அத்தம்,**
**செய்பொருள் மருங்கின் செலவுதனக்கு உரைத்தென,**

**வைகுநிலை மதியம் போலப், பையெனப்,**
**புலம்புகொள் அவலமொடு, புதுக்கவின் இழந்த**

**நலம்கெழு திருமுகம் இறைஞ்சி, நிலம் கிளையா.**
**நீரொடு பொருத ஈர்இதழ் மழைக்கண்**
**இகுதரு தெண்பனி ஆகத்து உறைப்பக்,**

**கால்நிலை செல்லாது, கழிபடர்க் கலங்கி,**
**நாநடுக் குற்ற நவிலாக் கிளவியொடு,**
**அறல்மருள் கூந்தலின் மறையினள், 'திறல் மாண்டு**
**திருந்துக மாதோ, நும்செலவு' என வெய்து உயிராப்,**
**பருவரல் எவ்வமொடு அழிந்த**

**பெருவிதுப் புறுவி பேதுறு நிலையே.**

*தேக்கு மரத்தின் இலையானது, நெடிதாகக் கூப்பீட்டினைச் செய்யும் இயல்புடைய பருந்துகள் வானிலே வட்டமிட்டு, நாற்றம் பிடித்து எழுந்தாற் போன்று வானத்திடமெல்லாம் மறையுமாறு பரவும்; பின், அப்படிப் பறந்தவை பலவும் ஒன்றாக அகன்ற காட்டுவழிச் செல்வோரின் அறிவு மயக்கமடையுமாறு சுவடறியாது உதிர்ந்து பரவிக் கவர்த்த நெறிகளையெல்லாம் மறைத்து விடும்; அத்தகைய அகன்ற காட்டுவழியிலே கடந்து சென்று ஈட்டும் பொருள்பற்றிய செலவினை அவளுக்கு உரைத்தேன். அதனைக் கேட்ட அவள்.*

*வைகறைப் போதிலே வானத்து விளங்கும் நிலவினைப் போலத் தனிமைகொண்ட துன்பத்தோடு, மெல்ல மெல்லத் தன் புத்தழகினை எல்லாம் இழந்துபோன நலம் பொருந்திய திருமுகத்தினைக் கவிழ்ந்து கொண்டனள். கால்விரல்களாலே நிலத்தைக் கிளைத்தவளாகப் பொங்கி வரும் கண்ணீரோடும் மாறுபட்ட குளிர்ந்த இதழினையுடைய தண்மையான கண்களினின்றும், வீழ்கின்ற தெளிந்த கண்ணீரானது மார்பிலே துளித்து வீழ்ந்துகொண்டிருக்க, கால்கள் ஓரிடத்தே நிலை பரவாது மிகுதியான துன்பத்தால் கலக்கமுற்றுக் கருமணலைப் போன்ற தன் கூந்தலினிடையே தன் முகத்தை மறைத்துக் கொண்டனள்.*

*நா நடுக்கமுற்றுப் பேச்சும் எழமாட்டாத சொற்களோடு, 'நும்முடைய செலவு அதன் திறனிலே மாட்சிமையுற்றுச் செப்பம் பெறுக!' என்றும் கூறினள், வெம்மையாக நெடு மூச்சு விட்டவளாகத், துன்பத்தைத் தருகின்ற வருத்தத்தினாலே அழிவுற்ற, பெரிதான விரைவு கொண்டவளாக, மயக்கமுற்றும் நின்றனள்.*

*அவள் அங்ஙனமாகவும், வினைமேற் பிரிந்த உள்ளமானது பகலும் இரவும் அவள் என்முன் நின்ற அந்த நிலையினையே*

முற்றவும் நினைத்திருக்க, ஊரை மறந்து வாழ்தலையும் சகித்திருப்போமானாலும், அவளுடைய அந்த நிலையினை மறந்து தங்குதல் என்பது நமக்கு அரிதாக இருக்கின்றதே? (இனி என்ன செய்வோமோ?);

என்று, இடைச்சுரத்துப் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னான் என்க.

**சொற்பொருள்:** 1. எல்லை - பகல். 2. முன்உருபு - முன்னர் உற்றிருந்த அந்த நிலை. அடைய முற்றிலும். 3. பதிமறந்து உறைதல் - ஊரினை மறந்து; தங்குதல்; பிறந்து வளர்ந்த ஊரினையும் மறக்கும் வன்மையுடையோம்; கூடிய அவளுடைய காதலை மறக்கல் ஆற்றோம் என்பது கருத்து. 5. கால்கழி தேக்கிலை - காம்பு கழன்ற தேக்கிலைகள்; அது, காற்று கோடைக்காற்று எனவும்,இலைகள் கோடையால் வாடிய இலைகள் எனவும் காட்டும். 6. பருந்தின் வெறி - பருந்தின் கூட்டம். 8. தாஅய் - தாவிப் பரந்து. 11. வைகு நிலை மதியம் - வைகறை காலத்தே விளங்கும் மதியம்; அது மெல்ல மெல்ல் ஒளி குறைதல் போல முகமும் ஒளியற்றதாயிற்று என்க. 12. புதுக்கவின் - புதுமையான அழகு; நாளும்புதுமை தோன்றும் முகவசீகரம். 13. திருமுகம் இறைஞ்சுதல் முகம் கவிழ்தல். 16. கால்நிலை செல்லாது - கால்கள் நிற்பதற்கும் வலியற்றவனவாக. 17. நவிலாக் கிளவி எழாத பேச்சு; பேச்சும் எழாத சோகநிலை. 18. அறல் - அறல்பட்ட கருமணல். 18. கூந்தலில் மறையினள் - கூந்தல் அவிழ்ந்து தாழ, அது தலை கவிழலால் முகத்தை மறைக்க விளங்கினள். 20. பருவரல் - படரும் துன்பம். 21. விதுப்புறுதல் - விரைந்து சோர்தல். பேதுறல் மயக்கமடைதல்.

**விளக்கம்:** 'பருந்திம் வெறி எழுந்து' என்றது, காட்டினிடத்தே ஆறலைப்போரால் பட்டு வீழ்ந்தவரான மக்களின் பிணநாற்றத்தை அறிந்து, அவர் தசையை உண்ணுதற்கு வேட்டு, வட்டமிட்டுப் பறந்து ஏழுதல். இது காட்டின் கடுமையை உணர்த்தும்.

## 300. விருந்தும் செய்வோம்!

**பாடியவர்:** உலோச்சனார். **திணை:** நெய்தல். **துறை:** பகற்குறி வந்து நீங்கும் தலைமகற்குச் சொல்லியது.

(பகற்குறியிடத்தே வந்து தன் காதலியைக் கூடி இன்புற்றுச் செல்லுகின்றனன் தலைமகன். அவனைக் கண்டு, தோழி தலைமகள் அவனுடன் பிரியாதிருக்கும் நிலையினை வேண்டியவளாயினள் எனக் கூறுவதன் மூலம், விரைந்து இருவரும் மணநெறி புகுதலை வலியுறுத்துகின்றாள்.)

நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்,
பறிகொள் கொள்ளையர், மறுக உக்க
மீன்ஆர் குருகின் கானலம் பெருந்துறை,
எல்லை தண்பொழில் சென்றெனச் செலீஇயர்,

தேர்பூட்டு அயர ஏஎய், வார்கோல்
செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்,
'செல்இனி, மடந்தை! நின் தோழியொடு,மனை' எனச்
சொல்லிய அளவை, தான்பெரிது கலுழ்ந்து,
தீங்குஆ யினள்இவள் ஆயின் தாங்காது,

நொதுமலர் போலப் பிரியின் கதுமெனப்
பிறிதுஒன்று ஆகலும் அஞ்சுவல்; அதனால்,
சேணின் வருநர் போலப் பேணா,
இருங்கலி யாணர்எம் சிறுகுடித் தோன்றின்,
வல்லெதிர் கொண்டு, மெல்லிதின் விளைஇத்,

துறையும் மான்றன்று பொழுதே; சுறவும்
ஓதம் மல்கலின், மறு ஆயினவே;
எல்லின்று; தோன்றல்! செல்லாதீம்' என,
எமர்குறை கூறத் தங்கி, ஏமுற,
இளையரும் புரவியும் இன்புற, நீயும்

இல்லுறை நல்விருந்து அயர்தல்
ஒல்லுதும், பெரும! நீ நல்குதல் பெறினே.

*பெருமானே!*

*நாட்காலையிலேயே வலையால் மீனை முகந்துகொணர்ந்த, கொள்ளுந் தொழிலிலே வல்லவரான பரதவர்கள், பின், பறியினாலே கொண்ட கொள்ளையினையும் உடையவராகி, நுண்ணிய மணல் செறிந்துள்ள இடத்திலே அந்த மீன்கொள்ளை காயுமாறு அவற்றைப் பெய்திருப்பார்கள். அவர்கள் வருந்துமாறு மீன்களைத் தின்னும் பறவையினம் வந்து வீழும். அத்தகைய கானற் சோலையினை யுடையது கடற்றுறை. அதன் கண் குளிர்ச்சியான சோலையிடத்திலே, பகற்பொழுதும் கழிந்ததாக, நின் ஊருக்குச் செல்வாயாகத் தேரினைப் பூட்டு மாறு ஏவியவனாயினை! நின் தலைவியின் மிகுந்த கோற் றொழிலினையுடைய வளைகளைத் திருத்தியவனாகவும், சிதறிக் கலைந்த கூந்தலைத் தடவி ஒழுங்கு செய்தவனாகவும், 'மடந்தையே! நின் தோழியோடும் இனி நின் மனைக்குச் செல்வாயாக!' என்றனை. அப்படி நீ சொல்லிய அளவானே,*

இவள் பெரிதும் கலங்கியவளாகத் தீங்குற்றனள் என்றால், அதனைத் தாங்கி அவளைப் பேணி நிற்காது, ஏதிலார் போல நீயும் பிரிந்து செல்வாயானால், அதனால் திடுமெனப் பிரிதொன்று நிகழ்வதனைக் (அவள் பிரிவாற்றாது இரந்துபடு தலைக்) கருதியும் யான் அச்சம் கொள்வேன். அதனால்,

நீயும் என் பேச்சைக் கேட்டு அருளுதலாகிய எண்ணம் கொண்டனையானால், தொலைவினின்றும் வரும் ஏதிலார் போல, 'எம்மோடு உறவில்லாதவனாகக் காட்டிக்கொண்டு, எதனையும் கருதாயாக, மிக்க ஆரவாரத்தையுடைய அழகிய எம்முடைய சிற்றூரிடத்தே, நீயாக வருவதுபோல வந்து சேர்வாயாக. வந்தால்,

எங்கள் சுற்றத்தார், விரைவிலே நின்னை எதிர்கொள்வர். நின் வருகைபற்றியும் மெல்லென வினவுவர். "பொழுதும் மயங்கிவிட்டது. நீர்த்துறையும் அலை மிகுதியாகி ஏறுதலால் செல்வதற்கு ஏற்றதன்று. அவ்விடத்தே கிடக்கும் சுறாமீன்களும் செல்வார்க்கு மிகவும் பகையாயிருப்பன. இரவும் வந்தது. இளைஞனே! நீ இவ்வேளையிற் செல்லுதல் வேண்டா' எனக் குறையிரந்து, நின்னைத் தங்கிச் செல்லுமாறும் வேண்டுவர். அப்போது,

நின் ஏவலரும் குதிரைகளும் நீயும் அங்கே தங்கி, மிகுதியான இன்பத்தினை அடையுமாறு, எம் இல்லத்திலே நின்னை நல்ல விருந்தாக ஏற்றுப் பேணுதலையும் யாங்கள் செய்வோம்.

என்று, பகற்குறி வந்து நீங்கும் தலைமகற்குத் தோழி சொன்னாள் என்க.

**மேற்கோள்:** "இதனுள், தான் பெரிது கலுழ்ந்து தீங்காயினள் எனவே, அக்குறிப்புத் தலைவன் போகாமல் தடுக்கவே கூறியதென உணர்ந்து தோழி கூறினாள்" என, 'இருவகைக் குறிப் பிழைப்பாகிய விடத்தும்' என்னும் சூத்திர உரையினும்,

'வேளாண் பெருநெறி வேண்டியது' என, நாற்றமும் தோற்றமும்' என்னுஞ் சூத்திர உரையினும் நச்சினார்க்கினியர் காட்டுவர்.

**அகநானூறு மணிமிடை பவளமும்**
**புலியூர்க் கேசிகன் உரையும்**
**முற்றுப்பெற்றன**

★★★★★

# பாடினோர் வரலாறுகள்

*(நகவளைவிற்குள் காணப்படும் எண்கள் மணிமிடை பவளத்தின் பாட்டு எண்கள்.)*

## அண்டர் மகன் குறுவழுதியார் (150, 228)

*இவர் பெயர் அண்டர்முன் குறுவழுதியார் என்வும், குறு வழுதியார் எனவும் காணப்படும். 'வழுதி' என்ற சொல் இவர் பாண்டியர் குடிப்பிறந்த ஒருவர் என்பதை உணர்த்துவதும் ஆகலாம். புறநானூற்று 346ஆவது செய்யுளும், குறுந்தொகை 345ஆவது செய்யுளும் இவரியற்றினவாகக் காணப்படும் வேறு சங்கப் பாடல்களாகும். 'அண்டர்' என்ற பெயர் ஒருவரது இயற்பெயராகத் தோன்றாமல், யாதோ ஒரு பொறுபபினைக் குறிப்பதாக உள்ளதும் கருதத்தக்கதாகும். இந்நூலின் 150 ஆவது பாடல் நெய்தல் திணையினையும், 228 ஆவது பாடல் குறிஞ்சித் திணையினையும் சார்ந்ததாகும். முன்னது குறுவழுதியார் பாடியது எனவும், பின்னர் அண்டர்மகன் குறுவழுதியார் பாடியது எனவும் வருவதுகொண்டு இருவரும் வேறானவர் என்பாரும் உளர்.*

*'களைத்த நெய்தற் கண்போன் மாமலர்' என, இதழ் செறிந்த நெய்தலது கரிய பெரிய மலரைப் பாராட்டிய இவரது 150ஆவது செய்யுளையும், இங்ஙனமே 'கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளை' எனக் கரி இதழையுடைய குவ்ளை மலரைப் பாராட்டிய 228ஆவது செய்யுளையும் ஒப்பு நோக்கினால், இருவரும் ஒருவராதலே உறுதிப்படும்.*

## அம்மூவனார் (140 280)

*'அம்மு' எனச் சேரநாட்டினர் இக்காலத்தும் பெயரிடுவது கொண்டு இவரை அந்த பகுதியாளர் எனக் கருதுவர். இவரை ஆதரித்தோர் சேரன், பாண்டியன், திருக்கோவலூர் மலையமான் திருமுடிக்காரி முதலியோர். இவராற் பாடப் பெற்ற பட்டினங்கள் தொண்டி, மாந்தை, கொற்கை, கோவலூர் ஆகியவை. ஐங்குறுநூற்று நெய்தற் பாடல்கள் நூறும் (01 - 200) இவர் பாடியவையே, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை முதலிய நுல்களுள்ளும் இவர் பாடிய செய்யுட்கள் காணப்பெறும். பெரும்பாலும் நெய்தல் திணைச்செய்யுட் களையே இவர் பாடியுள்ளார். இந்நூலினுள் 140ஆவது பாடலுள், பரதவர் மகளிர் 'நெல்லின் நேரே உப்பு' என உப்பு*

விற்றலையும், காமநோய் படுசேற்றுள் அகப்பட்ட வண்டியை இழுக்கமாட்டாது வருந்தி வெய்ய உயிர்க்கும் பகட்டின் தன்மைபோல வருத்தும் எனவும் இவர் கூறியுள்ளார். 280ஆவது பாடலுள், 'சிறுமியர் கடற்கரையிலே நண்டுகளை வெருட்டி விளையாடும் திறமும், எப்பொருள் கொடுத்தும் பெறமுடியாத பரதவர் மகளை அவள் தந்தைக்குத் தொண்டு செய்தாவது பெறுவோமா என நினைக்கும் காதலனின் உள்ளமும்' சிறப்பாக விளங்குவனவாகும்.

## ஆமூர்க் கவுதமன் சாதேவனார் (159)

ஊர்ப்பெயர் 'ஆவூர்' எனவும் சில பிரதிகளில் காணப்பெறும். நற்றிணை 264ஆவது செய்யுளைச் செய்தவரான ஆவூர்க் காவிதிகள் சாதேவனாரும் இவரும் ஒருவரே எனவும் கொள்வர். 'காவிதி' என்பது வேளாளருள் உழுவித்து உண்ணும் நிலையினருள் சிலருக்கு அரசரால் தரப்படுவதோர் பட்டமாதலின், இவரை வேளாளர் என்பர் சிலர். 'ஆமூர்' சேரநாட்டுக் குறும்பொறை மலைக்குக் கீழ்ப்பாலுள்ளது. ஆதலின், இவர் ஆமூரைச் சேர்ந்த கவுதம் கோத்திரத்து அந்தணர் எனவும் கொள்வர். சாதேவனார் என்ற வடசொற்பெயரும், கவுதமன் என்ற அடையும் இதனையே வலியுறுத்தும் என்பர் வேறுசிலர். இந்நூலுள் இவர் பாடிய பாடல் பாலைத்திணையைச் சார்ந்தது. 'சேண்விளங்கு சிறப்பின் ஆமூர் எய்தினும் ஆண்டமைந்து உறையுநர் அல்லர்' எனத், தோழி தலைமகளைத் தேறுதல் கூறுவதாக வரும் இவர் சொற்கள், ஆமூரின் வளமையைக் காட்டுவனவாகும். பாரதத்துட் பயின்றுவரும் சகாதேவன் என்ற பெயருடன் இவர் பெயரையும் நோக்க, இதுவும் வழக்காற்றிலிருந்து பழம்பெயராதலைக் காணலாம்.

## ஆலம்பேரிச் சாத்தனார் (143, 175)

மதுரையைச் சார்ந்த ஆருலவிய நாட்டு ஆலம்பேரி என்னும் ஊரினர். நெய்தலையும் பாலையையும் சிறந்த முறையிலே பாடியவர். கடலனது 'விளங்கில்' என்னும் ஊரும், வானவன் மறவன் பிட்டனது 'குதிரைமலை'யும், நெடுஞ்செழியன் வென்ற தலையாலங் கானத்துப் போரும், 'நேமியன்' என்பானும் இவராற் பாடப் பெற்றிருப்பக் காணலாம். இந்நூலினுள், 143ஆவது பாடலிலே சேரர் படைத்தலைவனாகிய பிட்டனின் குதிரைமலைச் சிறப்பும், 175ஆவது பாடலுள் 'ஆலங்கானத்து அமர் கடந்து உயர்த்த வேலின் பெருக்கினையுடைய செழியனின் சிறப்பும் கூறப்பட்டுள்ளன. இரண்டும் பாலைத்திணையைச் சார்ந்தவை. நற்றிணையுள் நான்கு செய்யுட்கள் இவர் பாடியனவாகக் காணப்படும்.

## ஆவூர்க் கிழார் மகனார் கண்ணனார் (202)

ஆவூர்க் கிழார் மள்ளனாகனார் எனவும் பாடம் உரைக்கப் படும். ஆவூர்க் கிழார் இவர் தந்தை என்பதும், இவர் அவர் மகன் என்பதும் பெயரால் தெரிய வருகின்றது. ஆவூர்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் என மற்றொருவர் கூறப்படுகின்றனர். அவர் பெயர் சிலவிடத்து ஆவூர் மூலங்கிழார் மகனார் எனவும் குறிப்பிடப்படுகின்றது. குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன் காலத்தவர் அவர். அதுகொண்டு இவரையும் அவர் உடன் பிறந்தாரெனவும், அக்காலத்தவர் எனவும் கொள்ளலாம். இந்நூலுள் வரும் பாடல் குறிஞ்சித் திணையைச் சார்ந்தது. 'வேங்கைப் பூ சிதறுவதைக் கொல்லன் குருகூது மிதியுலை பிதிர்விற் பொங்கியதாக' இவர் கூறுவது சுவையும் நுட்பமும் உடையதாகும்.

## ஆவூர் மூலங்கிழார் (156)

'ஆமூர்' என்பதே 'ஆவூர்' என்றாயிற்று எனவும், அது சோழ நாட்டது எனவும் சிலர் உரைப்பர். ஆனால், குறும் பொறை என்னும் சேரநாட்டுக் குன்றத்துக்குக் கீழ்ப்பால் உள்ளது ஆமூர் என இந்நூலின் 159ஆவது பாடலுள் ஆமூர்க் கவுதமன் சாதேவனார் உரைப்பதனால், அவ்வூர் அந்நாட்டதே எனவும் கருதுவர். வேளாண் மரபினராகவும் மூல ஓரையிலே பிறந்தவராகவும் இவர் விளங்கினமையால் 'மூலங்கிழார்' எனப்பட்டார். இவராற் பாடப்பெற்றோர், சோழன் குளமுள்ளத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கீரஞ் சாத்தன், மல்லிகிழான் காரி ஆதி, சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் ஆகியோராவர். இவர் மகனே பெருந்தலைச் சாத்தனார் எனவும் கூறுவர். இவர் பாடல்களாக, அகம் புறம் ஆகிய நூல்களுள் மொத்தம் 19 செய்யுட்கள் காணப்படும். இந்நூலுள் வரும் பாடலிலே, 'மருதநில மகளிர் நீர்த்துறைக்கண் தெய்வத்திற்குப் பலியிட்டு வழிபடும் வழக்கம்' இவராற் கூறப்பட்டிருக்கின்றது.

## ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் (224)

ஆவூர்க் கிழார் மகனார் எனவும் சொல்லப்படுவர். இவர் பாடியனவாக அகத்துள் இரண்டு செய்யுட்களும், புறத்துள் ஆறு செய்யுட்களும் நற்றிணையுள் ஒன்றும் வழங்கும். குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன் காலத்தவனான குமணனை அடைந்து, அவன், 'தலையைக் கொள்க' என, அவன் தம்பியிடஞ் சென்று, 'வாள் தந்தனனே தலை எனக்கு ஈய' எனச்

சொல்லி, அவன் உள்ளத்தை மாற்றி, இருவரையும் சமாதானம் செய்தவர் இவர். தென்னவன் மறவனான கோடைப் பொருநன் பண்ணி, இளங்கண்டீரக்கோ, குமணன், கடிய நெடு வேட்டுவன், மூவன் ஆகியோரைப் பாடியவர். கபிலர், பரணர், கல்லாடர், மாமூலர்ஆகியோர் காலத்தவர். இந்நூலின் செய்யுள், காட்டு வழியே தேர் செல்வதனை மிகவும் நயமுடன் வருணிப்பதாகும். 'திரிமரக் குரல்' என வரும் சொற்கள், மரத் திரிகையினை அன்று பயன் படுத்தியதைக் காட்டுவதாகும்.

## இடைக் காடனார் (139, 174,194,284)

இடைக்காடு என்னும் குமரிமாவட்டத்து ஊரினைச் சேர்ந்தவர் இவர் என்பர். தஞ்சை மாவட்டத்துப் பட்டுக் கோட்டைத் தாலுக்கா இடைக்காட்டு ஊரினர் என்பதும் பொருந்தும். நற்றிணையுள்ளும், புறம், குறுந்தொகை, அகநானூறு ஆகியவற்றுள்ளுமாகப் பதினொரு பாடல்கள் இவர் பாடியனவாகக் காணப்படுகின்றன. பெரும்பாலும் இடையர்களைச் சிறப்பித்துப் பாடியவர். இவர் வேறு; இடைக்காட்டுச் சித்தர் என்பார் வேறு. மற்றும் பல நூல்கள் இவரால் இயற்றப்பட்டனவாக வழங்கக் காணலாம். அவை ஊசிமுறி, அறுபது வருட வெண்பா, மூவடி முப்பது ஆகியவை. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியவர் இவர். அவனை ஆலத்தூர் கிழார். வெள்ளைக்குடி நாகனார் மாறோக்கத்து நப்பசலையார், ஆவூர் மூலங்கிழார், கோவூர் கிழார், ஆடுதுறை மாசாத்தனார், ஐயூர் முடவனார், நல்லிறை யனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் ஆகியோரும் பாடியுள்ளனர். அதனால் இவர் அவர்கள் காலத்தவர் ஆகலாம். இந்நூற் பாடல்களுள் 139ஆவது பாலைத் திணையையும், பிற முல்லைத் திணையையும் சார்ந்தவை. ஆடு மேய்க்கும் இடையனை இவர் 274ஆவது பாடலுள் உருவகித்திருக்கும் காட்சி மிகவும் நயமுடைய தாகும்.

## இடையன் நெடுங்கீரனார் (166)

இவருடைய பெயரடை இவர் இடையர் மரபினர் எனவும், கீரனார் என்னும் சொல் சங்கறுப்போர் எனவும் நம்மை மயக்குவதாகும். இடையன் என்பதைக் குலமாகக் கொண்டால் கீரனாரோடு பொருந்தாமையின், இவரையும் இடைக்காட்டு ஊரினராகவே கொள்ளலாம். இவர் பாடியதாகக் காணப்படுவது இந்த ஒரே செய்யுளாகும். இதன்கண், காவிரிப் புதுப்புனலாடும் சிறப்பினையும், மனைவியின் ஊடலை மாற்றுவதற்கு வேளூர் வாயில் தெய்வத்தைக் குறித்து, 'அது என்னை அணங்குக' எனத் தலைவன் குறையிரந்து வேண்டும்

நிலையினையும், அது கேட்டு அவனது பரத்தை கொள்ளும் ஊடலையும் நயமுடன் கூறுகின்றனர்.

## இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார் (279)

'ஒல்லை' என்ற சொல் இவர் ஒல்லையூரினர் எனவும், 'ஆயன்' என்ற சொல் இவர் ஆயர் மரபினராயிருத்தல் கூடும் எனவும், 'இருங்கோன்' என்ற சொல் இவர் ஒரு குறுநிலத் தலைவராயிருத்தல் கூடும் எனவும் எண்ண இடந்தருகின்றது. ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் என்பாரும், ஒல்லையூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன் என்பாரும் ஒல்லையூரினரே என்பது, இவ்வூர் புலவர் பலருடைய ஊராயிருந்த சிறப்புடையதாதலை உணர்த்தும். 'ஆயன்' என்பதனை நாடு காவலுடையான் எனப் பொருள் கொள்ளுமிடத்து, இருங்கோன் என்பது இருங்கோவேள் என்றாற்போன்று குறுநில மன்னர் பரம்பரையைக் குறிப்பதுமாகலாம். இவர் பாடலாக விளங்குவது மணிமிடை பவளத்து இப்பாடல் ஒன்றேயாகும். இப்பாட்டினுள், இருங்கோக் கண்ணனார் என்ற பாடபேதமும் உரைக்கப்படும். 'புனல் தெளி காலையும் மதுகையளாகி அடைதரும் மனைவியின் காதற் பாசம்' இப் பாடலுள் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

## இறங்குடிக் குன்ற நாடன் (215)

இவர் செய்ததாகக் காணப்படுவது இச்செய்யுள் ஒன்றே யாகும். குன்ற நாடன் என்ற சொல்லினாலே மலைநாட்டவர் என்று கருதலாம். இறங்குகுடி என்றது குடிப்பெயராதலும் பொருந்தும். பாலைத்திணைச் செய்யுளாக இவர் செய்யுள் விளங்குவதும்,இவர் பாலைப்பட்ட மலைப்பதியினராதலை வலியுறுத்தும். 'கடுத்தது பிழைக்குவதாயின் கொடுத்த கைவிரல் கவ்வும் கல்லாக்காட்சிக் கொடுமரம் பிடித்த கோடா வன்கண் வடிநவில் அம்பின் ஏவல் ஆடவர்' என்று பாலைநிலத்து ஆடவரை இவர் குறிக்கும் பகுதி, மிகவும் நுட்பமானதாகும். 'வேறு பன்மொழிய தேஎம் முன்னி என்பது, தமிழ் இளைஞர்கள் வடவிந்தியாவின் கண்ணுள்ள பிற மொழி வழங்கும் நாடுகள் பலவற்றினுஞ் சென்று வாணிகம் செய்து வந்தனர் என்பதைக் காட்டுவதாகும்.

## ஈழத்துப் பூதன் தேவனார் (231)

மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் எனவும் இவர் பெயர் வழங்கப்படும். ஈழ நாட்டினரான இவர் மதுரைக்கண் தங்கிச் சங்கப் புலவருள் ஒருவராக விளங்கினர் எனலாம். இவராற் பாடப்பெற்றோன் பசும்பூண் பாண்டியன் என்பவன். 'பூதன் தேவனார்' என்னும் பெயர், இவர் தெய்வப் பெயர் பெற்றவர்

என்பதைக் காட்டும். இவர் செய்யுளாக நாம் காண்பவை, அகத்துள் மூன்றும், குறுந்தொகையுள் மூன்றும், நற்றிணையுள் ஒன்றும் ஆகும். பொருள்வயிற் பிரியும் இளைஞர்களின் நிலைமையினை இவர், 'நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்' என்று விளக்குவதும், பாண்டியன் காலத்துக் கூடல் நகரின் சிறப்பான ஆரவாரக் களிப்பினைக் கூறுவதும் இப்பாடலுள் காணப்படும் சிறப்பாகும்.

## உம்பற்காட்டு இளங்கண்ணனார் (264)

'உம்பற்காடு' என்பது சேரருக்குச் சொந்தமானதொரு நாட்டுப் பகுதியாகும். கண்ணனார் என்ற பெயர் அக்காலத்துப் பெருவழக்காயிருந்த பெயர் என்பதனைக் குமட்டூர்க் கண்ணனார் போன்று சங்கப் புலவர்களாக முப்பது புலவர்களுக்குமேல் வருவது கொண்டு துணியலாம். இந்தப் பாடலுள் 'காதலர் தந்நிலை அறியார் ஆயினும், தந்நிலை அறிந்தனர் கொல்லோ தாமே?' என்று, குறித்த காலத்துக் காதலன் வாரானாகத் தலைவி வருத்துவதாக வரும் பகுதி மிகவும் நயமுடையதாகும். 'மழையில் வானம் மீன் அணிந்தன்ன குழையமல் முசுண்டை வாலிய மலர' என்ற உவமையும் மிக்க சுவையுடையதாகும்.

## உலோச்சனார் (190, 200, 210, 300)

பெரும்பாலும் நெய்தற்பகுதிப் பாடல்கள் பாடுவதிலே சிறப்புடையவராயிருந்தவர் இவர். சொல்லும், இவர் கடற்பகுதி ஊரினர் எனவும், உமண் வகுப்பார் எனவும் காட்டும். 'பொறையாற்றுப் பெரியனும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் இவராற் பாடப்பெற்றோராவர். இவர் பாடியவையாக விளங்கும் செய்யுள்கள், குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, புறநானூறு ஆகிய அனைத்தினுமாக 23 செய்யுட்களாகும். இந்தப் பாடல்களுள் 200 ஆவது பாடலை நக்கீரர் பாடியதெனப் பாடபேதமும் உரைப்பர். நெய்தலுள், (300வது பாடல்) மகளிர் தலைமகனை இரவிலே தங்கிச் செல்க எனச் சொல்லி வற்புறுத்தும் திட்டம் மிகவும் நயமுடையதாகும். அத்துடன் அது மகளிரின் காதலுள்ளத்தின் பாங்கினையும் களவுறவின் ஆர்வத்தையும் நன்கு காட்டுவதாகும்.

## உவர்க் கண்ணூர்ப் புல்லங் கீரனார் (146)

புல்லங் கீரனார் என்ற பெயரால் இவர் கீரர் குலத்தவர் எனலாம். 'உவர்க் கண்ணூர்' என்றதனால், இவர் கண்ணூரினர் எனவும், நெய்தற் பகுதியினைச் சார்ந்தது அவ்வூர் எனவும் கருதலாம். இவர் பாடலாகக் காணப்படுவது இஃது ஒன்றேயாகும். மருதத்திணைச் செய்யுளாக இவராற் செய்யப்

பட்ட இச்செய்யுளில், 'மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி வளிபொரத் துயல்வருந் தளிபொழி மலரிற், கண்பனி அகத்து உறைப்ப, எனத் தலைவி, தலைவன் பரத்தமை கொண்டு பிரியத், தான் வருந்தியிருக்கும் நிலையைக் கூறுவதாக வரும் பகுதி மிகவும் சிறப்பு உடையதாகும்.

## உறையூர் மருத்துவன் தாமோதரனார் (133, 257)

இவர், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனையும், பிட்டங் கொற்றனையும் புறநானூற்றுள் பாடியுள்ளார் (60, 170, 321). உறையூரினர் என்பதும், மருத்துவத் தொழிலோர் என்பதும், திருமால் வழிபாட்டினர் என்பதும் பெயரால் புலனாவனவாம். அதே சோழனைக் கோவூர்க்கிழார், மாடலன் மதுரைக் குமரனார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் ஆகியோரும் பாடியுள்ளமையால், இவரும் அவர்கள் காலத்து இருந்தவராகலாம். இந்நூலுள் வரும் பாடல்கள் இரண்டும் பாலைத் திணையைச் சார்ந்தன. 'வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்' என்ற உவமையால் பஞ்சு கொட்டும் தொழிலையும், 'தலையிலுள்ள பூவின்கண் மொய்க்கும் வண்டினை ஓட்டுதற்கும் ஆற்றாயான நீ காட்டூடே எங்ஙனம் வருகின்றனையோ?" எனத் தலைவன் தன்னுடன் வரும் தலைவியை வியந்ததனையும் காட்டுகின்றனர் இவர்.

## உறையூர் முது கூத்தனார் (137)

உறையூர் முதுகூற்றனார், உறையூர் முதுகொற்றனார் என்றும் இவர் பெயர் காணப்படும். அகத்துள் இரண்டும், குறுந்தொகையுள் மூன்றும், நற்றிணையுள் இரண்டும், புறத்துள் ஒன்றும் இவர் பாடியவராகக் காணப்படும் செய்யுட்கள். சோழன் போர்வைகோப் பெருநற்கிள்ளியின் தந்தையாகிய வீரரை வேள்மான் வெளியன் தித்தனைப் (நற் - 58) பாடியிருத்தலினால் அவன் காலத்தவர் என்பர். தித்தனைச் சாத்தந்தையார், ஏணிச்சேரி முடமோசியார் ஆகியோரும் பாடியதால் இவரும் அவர்கள் காலத்தவராகலாம். இப்பாடலுள், உறையூரின்கண் நடைபெற்ற 'பங்குனி முயக்கம்' ஆகிய திருநாளையும், திண்தேர்ச் செழியனின் பொதியத்து மூங்கிலையும் பாராட்டிக் கூறியுள்ளனர்.

## எயினந்தை மகனார் இளங்கீரனார், (225, 239, 289, 299)

இவர் வேட்டுவக் குடியினர். இவர் எயினந்தையாரின மகனார் ஆவர். அகம், குறுந்தொகை, நற்றிணை முதலியவற்றுள் இவர் பாடியனவாகப் பதினாறு செய்யுட்கள் காணப்டும். இவர்

பாடல்கள் பெரும்பகுதியும் பாலைத்திணையைச் சார்ந்தவையே. இது அவரது குடியினர் வாழ்ந்த மலையகத்துப் பாலைப் பகுதியை ஒட்டியமைந்தது மாகலாம். 'அன்பும் மடனும் சாயலும் இயல்பும் என்பு நெகிழ்க்குங் கிளவியும்' உடையவளே சிறந்த பெண்; மகளிர் பிறைதொழூஉம் இயல்பினர்; நெகிழா மென்பிணி வீங்கிய கை, சிறிது அவிழினும் உயவும் ஆய்மடத் தகுவியாக விளங்கும் மனைவி; பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி 'நல்ல கூறு' என நடுங்கும் மனைவி; வைகுநிலை மதியம் போலப் புதுக்கவின் இழந்த திருமுகம்; என்றெல்லாம் மிகவும் அருமையான கருத்துக்களை இவர் பாடல்களுள் கண்டு இன்புறலாம்.

## எழூஉப் பன்றி நாகன் குமரனார் (138, 240)

இவர் பாடியவாகக் கிடைத்தவை இவ்விரண்டு செய்யுட்கள்தாம். வேட்டுவர் குலத்தினரான எழூஉப்பன்றி நாகன் என்பவரின் குமரனார் இவர் என்பது பெயராற் புலனாகும். 188 ஆவது பாட்டினுள், 'இருமணி உமிழ்ந்த நாகம் காந்தள் கொழுமடற் புதுப்பூ ஊதும் தும்பியின் நன்னிறங் கண்டு மருள்வதுபோலத் தாயும் களவினாலே பெற்ற மகளின் புதுப்பொலிவு கண்டு மருண்டு, முருகனை வேட்டலிலே மனஞ் செலுத்தினாள் எனவும், இவர் குறிஞ்சியைச் சிறப்பாகப் பாடியுள்ளார். 240 ஆவது செய்யுள் நெய்தல். அதன்கண், நுளையர்மகளிர் கிளையுடன் கூடி, சுறவுக்கோடு நட்டு வருணனுக்குப் பரவுக் கடன் கொடுப்பதைக் குறித்துள்ளார். இதனால் மலைநாடும் கடல்நாடும் நன்கறிந்தவர் இவர் என்பது புலனாகலாம். எழூஉப் பன்றி என்பது ஊராகவோ அன்றிக் குன்றாகவோ கொள்க.

## ஐயூர் முடவனார் (216)

அகத்துள் இச்செய்யுள் அன்றியும், குறுந்தொகையுள் மூன்றும், நற்றிணையுள் இரண்டும், புறத்துள் நான்கும் இவர் பாடியவாகக் காணப்படுவன. 'ஐயூர்' பாண்டிய நாட்டின் கண் உள்ளதோர் ஊர். முடவனார் என்பது இவரது உடற்குறை பற்றி வந்த பெயராகலாம். பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய வழுதி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், தாமான் தோன்றிக் கோன், ஆதன் எழினி ஆகியோரைப் பாடியவர். ஆவூர் மூலங்கிழார், இடைக்காடனார், கோவூர் கிழார், தாயங் கண்ணனார், மாறோக்கத்து நப்பசலையார் ஆகியோர் காலத்தவர் இவர். இந்நூற் செய்யுளுள் செல்லிக் கோமானான ஆதன் எழினி என்பானைச் சிறப்பித்துள்ளனர்; செல்லி என்பது கோசர்க்குரிய செல்லூர் ஆகும்.

## ஒரோடகத்துக் கந்தரத்தனார் (191)

உரோடகத்துக் கந்தரத்தனார் எனவும் வழங்கப் பெறுவர். அகத்துள் மூன்றும், குறுந்தொகையுள் ஒன்றும், நற்றிணையுள் நான்குமாக எட்டுச் செயயுட்கள் இவர் பெயரோடு சங்க நூல்களுள் காணப்படுவன. செங்கற்பட்டு மாவட்டத்து ஒரகடமே இவரது ஊர் என்பர். காவிரிப் பூம்பட்டினத்துக் கந்தரத்தனார், வண்ணப்புறக் கந்தரத்தனார் என வருவது கொண்டு, கந்தரத்தனார் என்னும் பெயர் அந்நாளிலே பரவலாக விளங்கியிருக்கலாம் எனக் கருதலாம். இந்நூலினுள் வருவ்து பாலைப் பாடலாகும். இதனை உரோடகக் கவுணியன் சேந்தன் பாடியது எனப் பாடபேதங் கொள்வாரும் உளர்.

## ஓரம் போகியார் (286)

ஐங்குறு நூற்றினுள் மருதத்திணை பற்றிய 100 பாடல் களைப் பாடியவர் இவர். அகத்துள் 286, 316 ஆகிய செய்யுட்களும், குறுந்தொகையுள் ஐந்தும், நற்றிணையுள் இரண்டும், புறத்துள் 284ஆவது செய்யுளும் இவர் பாடியனவாகக் கிடைத்துள்ளன. இவராற் பாடப்பெற்றோர் ஆதன் அவினி, இருப்பையூர் விரா, அன், பாண்டியன், சோழர், மத்தி முதலாயினோர் ஆவர். இந்நூலுள் இவர் பாடிய இச்செய்யுள் ஆசிரியர் நக்கீரனாரால் களவியல் உரையுள் காட்டப்பெற்ற சிறப்பு வாய்ந்தது. இதன்கண் கூறப்படும் 'பெரியோர் ஒழுக்கம் பெரிது' என்ற செய்தியின் செப்பத்தினை உணர்க.

## ஔவையார் (147, 273)

பாணர் மரபினரான இவர், அதியமான் நெடுமான் அஞ்சிக்கு நெருங்கிய நட்பினராக விளங்கியவர். மன்னர்கள் போற்றும் அறிவுத்திறனும், அஞ்சாமையும் உடையவர். நாஞ்சில் வள்ளுவன், தொண்டைமான, சேரமான் மாரி வெண்கோ, பாண்டியன் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெறுவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகியோரைப் பாடியவர். சங்கத் தொகை நூற்களுள் அகம், குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு ஆகியவற்றுள்ளும் இவர் பாடல்கள் காணப்படும். அரசியல் தூதராகவும், ஆலோசகராகவும், அரசரும் போற்றும் சிறப்புடன் திகழ்ந்தவர் இவர். இந்நூலுள், வெள்ளிவீதியின் துயரத்தையும், காமநோய் படிப்படியாக வளரும் தன்மையினையும் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளனர். இவரும் ஆத்திசூடி முதலியன பாடிய ஔவையாரும், தனிப் பாடல்கள் பாடியவரும் வேறு வேறானவர் ஆவார்கள்.

## கடியலூர் உருத்திரங் கண்ணனார் (167)

இவர், சோழன் கரிகாற் பெருவளத்தான் மீது பட்டினப் பாலை என்னும் ஒப்பற்ற நூலை இயற்றியவர். சங்கத் தொகையுள், பத்துப் பாட்டின் ஒன்பதாவது பாட்டு அதுவாகும். பதினாறு நூறாயிரம் பொன் அதற்காகப் பரிசில் பெற்றனர் இவர் எனக், கலிங்கத்துப் பரணி கூறும். கழாஅத்தலையார், முடத்தாமக் கண்ணியார் காலத்தவராகலாம். மேலும், தொண்டைமான் இளந்திரையன் மீது பத்துப் பாட்டுள் நான்காவதான பெரும்பாணாற்றுப் படையினைச் செய்தவரும் இவரேயாவர். கடியலூர் என்பது இன்றைய திருநெல்வேலி ம்ாவட்டத்துள் அந்நாள் விளங்கிய ஓர் ஊர். உருத்திரன் என்ற சொல்லால் இவர் அந்தணர் மரபினர் என்பர். குறுந் தொகையின் 352 ஆவத பாடலைப் பாடியவரும் இவரேயாவர். இந்நூற் செய்யுளுள் (167) பாலை நிலத்துள் கோடைக் காலத்துப் பாழ்பட்ட ஊரின் நிலையினை மிகவும் உருக்கமாக இவர் வருணித்துள்ளார்.

## கபிலர் (128, 158, 182, 203, 218, 238, 248, 278, 392)

இவர் வேள்பாரியின் மிகச் சிறந்த நண்பராக விளங்கியவர். பதிற்றுப்பத்துள் ஏழாம் பத்தைப் பாடிச் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பெரும்பரிசில் பெற்றவர். பத்துப்பாட்டிற் குறிஞ்சிப் பாட்டும், கலித்தொகையுள் குறிஞ்சிக் கலியும், ஐங்குறு நூற்றுள் குறிஞ்சி பற்றிய நூறும் இவர் இயற்றியவை. பரணர், இடைக்காடர் ஆகியோர் இவரது உற்ற நண்பர்கள். அகுதை, இருங்கோவேள், ஓரி,சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறை, நள்ளி, காரி, விச்சிக்கோன், பாரி, பேகன் ஆகிய பலர் இவராற் பாடப் பெற்றவர். இவர் வேறு, தொல்கபிலர் என்பார் வேறு. இவர், பாரி மகளிரின் மணத்திற்காகப் பெரிதும் முயற்சி எடுத்துக்கொண்டு, அது முடிந்ததும், வடக்கிருந்து உயிர் நீத்த பெருஞ் சிறப்பினரும் ஆவர். இவர் பாடல்கள் எல்லாம் பெரிதும் கருத்துச் செறிவும் பொருள் நயமும் உடையன.

## கயமனார் (145, 189, 195, 219, 221, 259, 275)

இவர் பாடியன அகத்துள் 12 - ம் குறுந்தொகையும் 4 - ம் நற்றிணையுள் 6 - ம், புறத்துள் 1 - ம் ஆக, 23 பாடல்களாகும். குறுந்தொகை ஒன்பதாவது செய்யுளிலே,

***'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்***
***இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்***
***கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்,"***

என நயமாக உரைத்தது பற்றியே இப்பெயர் பெற்றனர் என்பர். பெரும்பாலும் புலம்பலே இவர் பாடலின்கண் மிகுதியாகப் பயின்று வருவதாகும். அன்னி என்பவன் குறுக்கைப் பறந்தலையிலே வெற்றிகொண்டு, திதியனின் காவன் மரமாகிய புன்னையை வெட்டினான் என்ற செய்தியினை (அகம் 145)யும், முத்து குயவர்கள் அம்மன் கோயில் பூசாரிகளாக விளங்குவதை நற்றிணைச் செய்யுளிலும் (283) இவர் சொல்லியிருக்கின்றனர்.

## கருவூர்க் கள்ளம் பாளனார் (180, 263)

இவர் பெயர் கண்ணம் பாணனார் எனவும் காணப்படுவதுண்டு. இவ்விரு பாடல்கள் அன்றியும், நற்றிணை 148ஆவது செய்யுளும் இவர் செய்ததாகக் காணப்படும். இக் கருவூர் சேரநாட்டுத் தலைநகராக விளங்கிய கருவூர் ஆகும். இந்நூலினுள், தலைமகளைக் குறைநயப்பத் தோழி கூறியதாக வரும் நெய்தல் திணைச் செய்யுள் (180) மிகவும் நயம் உடையதாகும். 263ஆவது செய்யுளிற் சேரமான் கோக்கோதையினையும், அவனுடைய வஞ்சிமூதூரின் வளத்தையும் இவர் பாடியுள்ளனர். இச் சேரமானைப் பொய்கையாரும் பாடியுள்ளனர். ஆகவே அவர் காலத்து இருந்தவர் இவரும் ஆகலாம்.

## கருவூர்க் கலிங்கத்தார் (183)

இந்த ஒரு செய்யுளே இவர் பெயராற் சங்க நூல்களுள் காணப்படுவது. 'கருவூர்' இவர் ஊர் எனவும், கலிங்கத்தார் என்ற சொல்லால் இவர் ஆடை நெய்யும் தொழிலினராயிருத்தல் கூடுமெனவும் நாம் கருதலாம். இச் செய்யுளில், மழை மேகங்கள் சூல்கொண்ட பிடியானைகள் போல உலவும் என இவர் உவமிக்கும் திறம் மிகவும் இன்புறற் பாலதாகும்.

## கருவூர் நன்மார்பன் (277)

இவர் பாடியதாகக் காணப்படுவது இச் செய்யுள் ஒன்றேயாகும். நன் மார்பன் என்ற பெயர் இவருடைய சிறந்த மார்பின் ஆற்றல் பற்றியோ வனப்புப் பற்றியோ அமைந்ததாகலாம். மேலும், இவர்அரச மரபினராயிருத்தல் கூடுமெனவும் கருதலாம். இந்நூற் செய்யுளுள், தயிர் கடையும் ஒலியினைப் புலியின் முழக்கத்திற்கும், பன்றி மயிரினைப் பனையின் செறும்புக்கும், முருக்கின் பூங்கொத்தினைக் கோழியின் எருத்துச் சிவந்த தசைக்கும் உவமித்துள்ளனர். காதலனைப் பிரிந்த காதலியின் நெற்றியின் ஒளி குறைந்ததற்குப் பகலிலே ஒளி குன்றித் தோன்றும் நிலவினைக் கூறியதும் இவரது சிறந்த உவமையாகும்.

## கல்லாடனார் (171, 199, 209)

அகத்துள் ஏழும், குறுந்தொகையுள் இரண்டும், புறநானூற்றுள் ஐந்தும் ஆக இவர் பாடியவை 14 பாடல்கள். இவராற் பாடப்பெற்றோர் அம்பர் கிழான் அருவந்தை, முள்ளூர் மன்னன் காரி, ஓரி, அஃதை, பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கள்வர்கோமான் புல்லி, களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் ஆகியோராவர். தொல்காப்பியத்துக்கு உரை செய்தவருள் இவரும் ஒருவர் என்பர். கல்லாட நூலை இயற்றியவரும், பதினோராம் திருமுறைப் பாடல்களைச் செய்தவரும், இவரினும் வேறான கல்லாடர்கள். 'கல்லாடம்' என்பது பாண்டிநாட்டில் ஓரூர். அவ்வூர்ப் புலவர்கள் பலரும் கல்லாடர் எனப் பட்டிருத்தலும் கூடும். இந்நூலுள் வரும் மூன்று பாடல்களுள், 199 ஆவது பாடலிற் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் நன்னனை வென்ற செய்தியையும், 209ஆவது செய்யுளுள் தலையாலங்கானத்துப் போர்வென்ற நெடுஞ்செழியனின் வெற்றியையும்,ஓரியைக் கொன்று கொல்லியைச் சேரலர்க்குத் தந்த காரியின் செயலையும் இவர் கூறியுள்ளனர்.

## கழார்க் கீரன் எயிற்றியார் (163, 217, 235, 298)

சோணாட்டுத் தஞ்சை மாவட்டத்துள்ள, 'கழாஅர்' என்னும் ஊரைச் சேர்ந்தவர் இவர். (அது இப்பொழுது திருக்களார் என வழங்கும்.) பெண்பாற் புலவர்; வேட்டுவக் குடியினர். கீரன் என்பானின் மனைவியார் எனக் கொள்ளலாம். இவர் பாடியனவாக நற்றிணையுள் இரண்டும், குறுந்தொகையுள் மூன்றும், அகத்துள் ஐந்தும் காணப்படுவன, இவருடைய கணவர் படைத் தலைவர் என்பதும், அவர் சோழனின் துணையாகச் செல்ல, அவர் பிரிவினாலே இவர் உள்ளங் கலங்கிப் பாடிய பாடல்கள் பல என்பதும், அவற்றுள் சிலவே சங்க நூல்களுள் இடம்பெற்றன எனவும் கருதலாம். 'வாடையே! இங்கு வந்தனையே! அங்கு அவர்பாலும் செல்லாயோ?' எனக் குமுறும் (163) நுட்பமான உளவியல் கூறுபாடுகளைக் காட்டுவன இவர் செய்யுட்கள்.

## காவன் முல்லைப் பூதனார் (151, 241, 293)

காவல் முல்லைப் பூதரத்தனார் எனவும் குறிப்பிடப் பெற்றிருக்கின்றனர் இவர். இவர் இயற்பெயர் பூதனார் எனவும், காவன்முல்லை என்னும் துறைபற்றிய செய்யுட்களை இயற்றும் திறனுடைமை பற்றி இப்பெயர் உடையவராயினர் எனவும் கொள்ளலாம். இவர் பாடியனவாகக் குறுந்தொகையுள் இரண்டும், நற்றிணையுள் ஒன்றும், அகநானூற்றுள் ஐந்தும் ஆக

எட்டுச் செய்யுட்கள் காணப்படுவன. இந்நூலுள், 'கணிவாய்ப் பல்லி' எனப் பல்லி நன்னிமித்தம் சொல்வதனால் அதனையும், உழிஞ்சிலின் நெற்று ஆடுமகள் அரிகோல் பறைபோல ஒலிக்கும் எனவும், நெல்லியின் திரண்ட காய்கள் வட்டக் கழங்குக் காய்கள் போலத் தோன்றுமெனவும் சுவைபடக் கூறியிருக்கின்றனர். 'பண்பில் கோவலர் தாய் பிரிந்து யாத்த நெங்சமர் குழவிபோல, நொந்து' எனப் பிரிவால் வரும் வருத்தத்தையும் நுட்பமாகக் கூறியுள்ளனர்.

## காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் (123, 285)

இவர் காவிரிப்பூம் பட்டினத்தவர்; வணிக மரபினர். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் (காவிரிக் கிழவன்), ஆய் ஆண்டிரன், பிட்டங் கொற்றன் ஆகியோரைப் பாடியுள்ளவர். உறையூர் மருத்துவன் தாமோதரனார், கோவூர் கிழார், மாடலன் மதுரைக் குமரனார், ஆவூர் மூலங்கிழார், நக்கீரர், மருதனிள நாகனார் போன்ற பெரும்புலவர்களின் காலத்தையொட்டி வாழ்ந்தவர். இவர் செய்யுட்களாகக் காணப்படுபவை அகத்துள் மூன்றும், புறத்துள் ஐந்தும், குறுந்தொகையுள் ஒன்றும் ஆகும். இந்நூலுள், 'ஆடாப் படிவத்து ஆன்றோர்' என ஆன்றோர் யோகஞ் செய்தலையும், காவிரித் துறையின் சிறப்பினையும், வழியனுப்பும்போது தழுவி விடைபெறுதல் மரபென, 'வாராய் தோழி முயங்குகம் பலவே' என்ற காட்சியினையும் நயமாகக் கூறியுள்ளனர்.

## காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார் (271)

இவரும் காவிரிப்பூம் பட்டினத்து வணிகர் மரபினரேயாவர். இவர் பாடியனவாக, அகத்துள் இரண்டும், குறுந்தொகையில் ஒன்றும், நற்றிணையில் ஒன்றும் ஆக நான்கு செய்யுட்களே காணப்படுகின்றன. டாக்டர் உ. வே. சா. அவர்கள் இவர் பெயரினைச் சேந்தங் கண்ணனார் எனக் குறுந்தொகை உரையுட் கூறுவார்கள். இந்நூற் செய்யுளில், இவர்கள்ளில் என்னும் ஊருக்கு உரியவனாகிய அவியன் என்னும் தலைவனின் மலைவளத்தனைச் சிறப்பித்திருக்கின்றனர். 'கள்ளில்' என்பத தொண்டைநாட்டுச் சிவத்தலங்களுள் ஒன்றாகப் பொன் னேரிக்குத் தென்மேற்கே 12மைல் தொலைவில், 'திருக்கள்ளம்' என வழங்கும் ஊர் ஆகலாம். 'பிரிந்துறை நாட்டு மருந்தும் உண்டோ?' எனத் தோழி தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது நுட்பமான கருத்தாகும்.

## குவாயிற் கீரத்தனார் (129, 287)

குடவாயில் சோணாட்டுப் பேரூர்களுள் ஒன்று, தஞ்சை மாவட்டத்துக் கொரடாச்சேரிக்கு வடக்கே ஏழாவது கல்லில், இந்நாட் 'கொடைவாசல்' என வழங்குவதே இவ்வூர் என்பர். இப் புலவர் பல குறுநிலத் தலைவர்களைப் பாடியுள்ளனர். கழுமலப் பெரும் போரும், சோழர் குடந்தைக்கண் வைத்த பெருநிதியமும் இவராற் குறிக்கப்படும். பெரும்பூட்சென்னி, பொறையன், நன்னன், எவ்வி, அத்தி, பழையன், புன்றுறை, வழுதி, கணையன், கட்டி முதலியோர் பற்றி இவர் பாடியுள்ளனர். ஆகவே, அவர்களைப் பாடிய பிற புலவர்களான நக்கீரர், பரணர், கபிலர், மாமூலர் போன்றார் காலத்தவர் இவர் எனக் கொள்ளுதல் பொருந்தும். இந்நூலுள், சுரத்திடையே பாழ்மன்றில் தங்கி இருக்கும் பிரிந்து செல்வோனான காதலன், 'கணைக்கால் அம்பிணை சிறுபுறம் நக்க; 'நோக்க, வரம்பு வந்து அலைக்கும் மாலை என நுட்பமான கருத்தினை அமைத்துள்ளனர் (287)

## குமுழி ஞாழலார் நப்பசலையார் (150)

மாறோக்கத்து நப்பசலையார் என்னும் புலவரினும் வேறு படுத்த இப் புலவர்க்குக் குமுழி ஞாழலார் நப்பசலையார் என அடைமொழியிட்டுக் குறித்தனர் எனலாம். பெயரை நோக்கும் போது இவரையும் பெண்பாற் புலவர்களுள் ஒருவராகவே கொள்ளலாம். குமுழி - உருண்டை; ஞாழல் - கொன்றை; எனவே, பிரிவால் பெரிதாகக் கொன்றைப் பூப்போற் பொன்னிறமாகப் படந்த பசலை நோயினை உடையவர் இவர் எனவும் கூறலாம். இச் செய்யுளில், 'யாமை மறைத்தீன்று புதைத்த முட்டையைப் பார்ப்பிடனாகும் அளவைக் கணவன் ஓம்பும் என்ற செய்தியைக் கூறியுள்ளனர். 'வல்வாய் அரவச் சீறூர் காணப் பகல் வந்தன்றாற் பாய்பரி சிறந்தே' என்று தலைவன் வரைவுகுறித்துத் தேர் ஊர்ந்து வந்த செய்தியைச் சொல்லும் நுட்பமும் இனிமையுடையதாகும்.

## கொடியூர் கிழார் மகனார் நெய்தற்றத்தனார் (253)

இவருடைய பெயர் தத்தனார் என்பதாகும். நெய்தல் திணைச் செய்யுட்களைச் சிறந்த முறையிலே பாடுதல் பற்றி இப்பெயர் பெற்றனர் எனலாம். வேளாண் மரபினர். கொடியூர் கிழார் என்பவர் இவருடைய தந்தையார் ஆவர். குடிக்கிழார் மகனார் எனவும் பாடம் கொள்வதுண்டு. இவர் பாடியவாகக் காணப்படுபவை அகம் 243, நற்றிணை 49, 130 ஆகிய செய்யுட்களாகும். பிரிவு நோய், 'விரிநீர் வையக வரையளவு இறந்த எவ்வநோய்' என இவரால் நற்றிணை 130ஆவது செய்யுளுள் கூறப்பட்டது காண்க. இந்நூற் செய்யுளுள்,

'கண்ணில் வாடை' என வாடைக் காற்றையும், 'அனைத்தால் தோழி நம் தொல்வினைப் பயனே' என ஊழ்வினைப் பயன் உறுத்துவந்து ஊட்டுதல் பற்றிய கொள்கையினையும் கூறியுள்ளனர். இவருடைய கொடியூர் என்பது மதுரை மாவட்டத்து 'கொடி மங்கலமே' என்பார்கள்.

## கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் (168)

இவன் சேரமன்னர்களுள் ஒருவன். சேரமான் கோட்டம் பலத்துத் துங்கிய மாக்கோதை எனவும் வழங்குவர். கோட்டம்பலம் என்னும் இடத்தே நடந்த போரிலே உயிர் துறந்தவன். 'கோட்டம் பலம்' என்பது இந்நாளைய கோட்டாறு என்னும் குமரி மாவட்டத்துப் பேரூர் எனவும், இவன் சேரநாட்டின் அப்பகுதியை ஆண்டிருந்தவன் எனவும் கருதலாம். தொண்டிக்கு இறைவனாயிருந்து பொய்கையாரால் பாடப் பெற்ற சேரமான் கோக்கோதைமார்பன் வேறொருவன். இவன், தன் தலைவியின்பாற் பெரிதும் காதல் உடையவனாயிருந்தவன். புறநானூற்று 245 ஆவது பாடலுள் இவன் அவள் இறந்தபோது பாடியுள்ள செய்யுள் மிகவும் உருக்கம் உடைய தாகும். 'ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை, இன்னும் வாழ்வல் என்னிதன் பண்பே?' என, அவன் கதறியழுகிறான். இந்நூலினுள் வரும் செய்யுள், 'பல்லான் குன்றிற் படுநிழல் சேர்ந்த நல்லான் பரப்பிற் குழுமூர் ஆங்கண், உதியன் கொடைக்கடன் ஏன்ற' செய்தியைக் கூறுவதனால், இவன் உதியன் சேரலாதனின் காலத்தவனாகலாம். 'கோதை' என்பானின் தகப்பனாதலின், 'மாக்கோதை' எனப் பெயர் பெற்றனன் போலும்.

## கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார் (179, 282)

கொடி மங்கலத்து நற்சேந்தனார் எனவும் கூறப்பெறுவர். காப்பியஞ்சேந்தனர், நற்சேந்தனார் ஆகியோரினும் வேறுபடுத்த இவ்வாறு அடைமொழியிட்டு வழங்கப் பெற்றனர். இவராற் பாடப்பெற்றன இவ்விரண்டு செய்யுட்களுமேயாகும். இந்தக் கொடிமங்கலம் மதுரை மாவட்டத்தது ஆகும். குறவர் மகளிர் குரவையாடுதலும், இளம்பெண்களை முருகு அணங்கிய தென வேலனை அழைத்து வெறியாட்டயர்ந்து வேண்டுதலும் இவராற் கூறப்பெற்றுள்ளன.

## சாகலாசனார் (270)

அகநானூற்றுள் இதனையும், 16 ஆவது செய்யுளையும் இயற்றியவர் இவர். சேரநாட்டு ஊராகிய கழுமலத்தினைப் பற்றி இவர் குறிப்பிட்டுள்ளனர். அதிற் குறிப்பிட்டுள்ள நற்றேர்க் குட்டுவன் என்பான் யாவன் என்று அறிதற்கில்லை. இவர் பெயர், இவரோர் வடநாட்டவர் என்பதனையும் தமிழகத்துக்கு வந்து

சேர நாட்டுப் பகுதியில் தங்கித் தமிழ்ப்புலமை பெற்றவர் என்பதனையும் காட்டும். என்பர். இது ஆய்தற்கு உரியதாகும்.

## செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் (177)

இவர் பொன் வாணிகர் எனவும், செயலூர் என்னும் ஊரினர் எனவும், கொற்றனார் இவருடைய இயற்பெயர் எனவும், சாத்தனாரின் மகன் எனவும், இவருடைய பெயரால் அறியலாம். 'செயலூர்' என்பது கோசர்க்குரியதாயிருந்த செல்லூர் எனவும், வேறு எனவும் கூறுவர். இப்பாடல் ஒன்றே இவர் பெயராற் காணப்படுவது. செல்லூர் இளம் பொன் சாத்தன் கொற்றன், உறையூர் இளம்பொன் வாணிகன் சாத்தன் கொற்றன் எனவும் இப்பாடலைப் பாடியவர் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. இப் பாடலுள் 'அயிரியாற்று அடைகரை' என்பதும், பண்ணன் என்பானின் காவிரி வடகரையூரும் குறிப்பிட்டிருப்பக் காண்கின்றோம். ஆகவே, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலத்தவர் இவர் எனலாம்.

## செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார் (250)

செல்லூர் தமிழகத்துக் கீழைக்கடற்கரை ஊர்களுள் ஒன்று. கோசர்களுக்கு உரியது கொற்றனார் எனவும் இவர் பெயர் வழங்கும். பெரும்பூதனார் இவரின் தந்தையார். இச்செய்யுளில், "இறைவளை நெகிழ்ந்த நம்மோடு துறையுந் துஞ்சாது கங்குலானே' எனக் காதலற் காணாது வருந்தும் மகளிர் உரைத்ததாகக் கூறும் பகுதி மிகுதியான சுவையுடையதாகும். நற்றிணையின் 30 ஆவது செய்யுளும், குறுந்தொகையுள் 218, 858 ஆவது செய்யுட்களும் இவர் செய்தன என்பர்.

## சேரமான் இளங்குட்டுவன் (153)

இவன் பாடியதாகக் காணப்படுவது இச்செய்யுள் ஒன்றே யாகும். 'குட்டுவன்' என்ற சிறப்புப் பெயரால் இவன் குட்ட நாடு என்னுஞ் சேரநாட்டின் பகுதிக்குரிய அரச மரபினரைச் சார்ந்தவன் எனலாம். 'குட்டுவன் தொண்டி அன்ன' என வருவது கொண்டு, இவன் தொண்டியில் இருந்தவன் ஆகலாம் எனக் கருத இடம் உண்டு. இச்செய்யுளுள் கோங்கின் புதுமலர் உதிர்ந்து விழுவது கைவிடு சுடர்போலத் தோன்றும் என்று நயமாகக் கூறியுள்ளார். பிற செய்திகள் ஏதும் அறிதற்கு இல்லை.

## தாயங் கண்ணனார் (132, 159, 213, 237)

இவர் பெயர் எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் எனவும் வழங்கப்பெறும். எருக்காட்டூர் என்பது தஞ்சை மாவட்டத்து

நன்னிலத்துப் பகுதியிலுள்ள ஓர் ஊர். தாயன் தந்தை பெயர் எனவும், கண்ணன் இயற்பெயர் எனவும் உரைப்பர். அரசு தந்த தாய உரிமை பெற்ற சிறப்பினரும் ஆகலாம். இவர் பாடியவையாக அகத்துள் நான்கும், குறுந் தொகையுள்ளும் நற்றிணையுள்ளும் புறநானூற்றுள்ளும் ஒவ்வொன்றுமாக ஏழு செய்யுட்கள் காணப்படுகின்றன. இவர் பாடலுள் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், எழினி, யவனர், வடுகர் ஆகியோர் பற்றிய செய்திகள் காணப்படும், கிள்ளி வளவனைப் பாடியமையால் அவனைப் பாடிய ஆலத்தூர் கிழார், கோவூர் கிழார். நல்லிறையனார், ஆடுதுறை மாசாத்தனார், மாறோக்கத்துப் நப்பசலையார் போன்றோர் காலத்தவர் இவர் எனலாம். 'சேரலர் சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னோடு வந்து கறியொடு பெயரும், வளங்கெழு முசிறி' என, இந்நூலின் 149 ஆவது பாடலுள் தமிழரின் மேலைநாட்டு வாணிகத்தைப் பற்றி இவர் கூறியுள்ளனர். 'ஆன்றோர் அரும்பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும்' எனத், தேவருலகையும் அமுதையும் குறிப்பிடுகின்றார்.

## தொண்டி ஆமூர் சாத்தனார் (169)

இவர் குறும்பொறை மலைக்குக் கீழ்ப்பாலுள்ள ஆமூர் என்னும் ஊரினர். சாத்தனார் இயற்பெயர். தொண்டியின் கண்ணுள்ள சேரமரபினரால் ஆதரிக்கப்பெற்றறு, அதனால் தொண்டியில் தங்கியவராதல் பற்றித் தொண்டி ஆமூர்ச் சாத்தனார் எனப் பெற்றனர்.

***'செல் கதிர் மழுகிய புலம்புகொண் மாலை***
***மெல்விரல் சேர்த்திய நுதலள் மல்கிக்***
***கயலுமிழ் நீர் கண்பனி வாரப்***
***பெருந்தோள் நெகிழ்ந்த செல்லலொடு***
***வருந்துமால் அளியள்'***

எனப், பிரிந்துறை தலைவியைத் தலைவன் நினைந்து வருந்துவ தாக இவர் காட்டும் சொல்லோவியம், நிழலோவியமாகவே நிலைபெறக் காணலாம். இவர் பாடியதாகக் காணப்படுவது இந்த ஒரே செய்யுள்தான்.

## தொல் கபிலர் (282)

கபிலரினும் தொன்மை உடையவராதலால் இப் பெயரடை பெற்றனர் போலும். இவர் செய்யுட்களாகக் காணப் பெறுபவை நற்றிணையுள் நான்கும், அகத்துள் இந்த ஒன்றும், குறுந்தொகைப் பதினான்காவது செய்யுளும் ஆகும். இவர்

பாடிய நற் 114 இல் கரையைப் 'பள்ளித்தொல் கரை' என்று கூறிய சிறப்பால் இந்த அடைமொழி பெற்றனர் எனலும் பொருந்தும். இந்நூற் செய்யுளுள் (282) குறிஞ்சியின் வளமும், அக்காலத்து மகளிர் 'வல்லே வருக வரைந்த நாள்' என, நல்லிறை மெல்விரல் கூப்பி, இல்லுறை கடவுட்குப் பலிக்கடன் செலுத்தும் வழக்கமும் காணப்படும்.

## நக்கண்ணையார் (25)

இவர் பெண் பாலார். பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் எனவும், திண்பொற் கோழிக் காவிதிமகன் கண்ணனார். நக்கணன் எனவும் இதனைப் பாடியோர் பெயர் காணப்படும். உறையூர் வீரை வேண்மான் வெளியன் தித்தனது மகனான போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைக் காதலித்து, அவன் தந்தையோடு மனவேறுபாடு கொண்டு வேற்று நாடு செல்ல, அதனால் துயருற்று அழுது புலம்பியவர் (புறம் 83, 84) அழிசி என்பானது ஆர்க்காட்டையும் இவர் நற்றிணைப் பாடலுள் சிறப்பித்துப் பாடியுள்ளனர். இவர் பாடியவையாகக் காணப்படுவை நற்றிணையுள் இரண்டும், அகத்தில் ஒவ்வொன்றும், புறத்துள் மூன்றும் ஆக ஆறு செய்யுட்கள். இப் பாடலுள், 'மழை பெரிது பெய்த காலத்துச் சிறு கோட்டுப் பெருங்குளத்தைக் காக்கும் காவலனைப்' போல, அன்னையின் காவலும் கடுமையாயிருக்கின்றதென இவர் சொல்வது மிக்க நயம் உடையதாகும்.

## நக்கீரர் (126, 141, 205, 227, 249, 253, 290)

நக்கீரனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார், மதுரை நக்கீரனார் எனவெல்லாம் இவர் பெயர் காணப்படும். பத்துப்பாட்டுள், திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்னும் இருநூல்களும், அகத்துள் 17, குறுந்தொகையுள் 8, நற்றிணையும் 7, புறத்துள் 3, ஆக 35 செய்யுள்களும் இவர் பாடியவையாகக் கிடைத்தவை. இறையனார் களவியலுக்குச் சிறந்த உரை வகுத்து, அதன்மூலம் சங்ககால உரை நடைச் சிறப்பை நாம் காணச் செய்தவரும் இவரே. இவர் கபிலர் பரணர் ஆகியோர் காலத்தவர், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கரிகாற்சோழன், இருங்கோ வேண்மான் மற்றும்பலர் இவராற் பாடப்பெற்றோராவர். இவர் வேறு; நக்கீரதேவநாயனார் வேறு. காதலரை ஊழ்வினை கூட்டும் என்பதைத், 'தொன்றுபடு நட்பிற் செயிர்தீர் நெஞ்சமொடு, செறிந்தோர் போல' எனக் (205) கூறியவர் இவர். இவர் பாடல்களுள் வரலாற்றுச் செய்திகள் மிகுதியாக விளங்கும்.

**பாணர் (122, 125, 135, 142, 148, 152, 162, 178, 181, 186, 196, 198, 208, 212, 222, 226, 236, 246, 258, 262, 266, 276)**

*மணிமிடை பவளத்துள் ஒருவர் பாடியனவாகக் காணப்படும் பாடல்களுள் இவரதே மிகுதியாகும். இவர் வரலாறு மிகவும் விரிவானது. கபிலரின் நண்பர் இவர். செங்குட்டுவன்மீது பதிற்றுப் பத்துள் ஐந்தாம் பத்தினைப் பாடிப் பெரும் பரிசிலும், அவர் மகன் குட்டுவன் சேரலையும் பெற்றவர். இவர் செய்யுட்களுள் அரசர், அவர் நாடு, அவர் சிறப்பு முதலிய பல செய்திகள் காணப்படும். நற்றிணையுள் 12, குறுந்தொகையுள் 15, ஐந்தாம் பத்து, அகத்துள் 33, புறத்துள் 12, ஆகியவை இவர் பாடியன.*

**பாலை பாடிய பெருங் கடுங்கோ (155, 185, 223, 251, 267, 291)**

*சேரவரசர் குடியிலே தோன்றியவன், பாலைத் திணைச் செய்யுட்கள் பாடுவதில் சிறந்தவனாயிருந்தமை பற்றிப், பாலை பாடிய என்னும் அடை மொழியோடு குறிப்பிடப்படுவான் ஆயினன். பேய்மகள் இளவெயினி என்னும் புலவர் இவனைப் புறநானூற்று 11ஆவது செய்யுளிலே பாடியுள்ளனர். அதன் கண், 'விண் பொருபுகழ் விறல் வஞ்சி, பாடல் சான்ற விறல் வேந்தனும்மே' என இவன் குறிப்பிடப் பெற்றதுடன், இவனுடைய வள்ளன்மையும் சிறந்ததாகப் பேசப்பட்டிருப்ப தனைக் காணலாம். அதனால், இவனை அரசனாயிருந்தவன் என்றே கருதுதல் பொருந்தும். இவன் பாடியவாகச் சங்கத் தொகை நூற்களுள்ளே காணப்பெறுபவை அகம், நற்றிணை ஆகியவற்றுள் 23 செய்யுட்களும், கலித்தொகையுள் பாலைக்கலியும் ஆகும். இவன் பாடிய புறநானூற்று 282ஆவது செய்யுள் இவனது உயரிய உள்ளப் பண்பினைக் காட்டுவதாகும். தனக்காகப் போரிலே உடல் சிதைத்து வீழ்ந்த ஒரு வீரனின் தியாகத்தைச், 'சேண் விளங்கு நல்லிசை நிறீஇ, நாநவில் புலவர் வாயுளானே' என இவன் போற்றியுள்ளான். பாலைக் கலியினுள்ளும், இவன் 'கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான் பழவினை மருங்கிற் பெயர்பு பெயர்பு உறையும் ('கலி,' 21)' எனப் பொருளின் நிலையாத தன்மையினையும், 'ஆள்பவர் கலக்குறு அலை பெற்ற நாடு போல்' என, ஆள்பவர் நாடாள வேண்டிய மரபு பற்றியும் பலவாறு கூறியுள்ளான். இவற்றால், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என வழங்கும், சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனின் மூத்த மகனே இவன் எனவும் கருதுவர். அரிசில் கிழாருக்கு அரசு கட்டிலை அளித்தத் தகுதியையும், மோசி கீரனாருக்கு முரசு*

கட்டிலிலே அவர் உறங்க விசிறி வீசிய பண்பினையும் நினைத்தால், இவனே பெரும் புலமையுடன் திகழ்ந்த பாலை பாடிய பெருங்கடுங்கோ என நாமும் கூறலாம். இந்நூலுள், இவன் பாடியவை ஆறு செய்யுட்கள். அவை அனைத்தும் சுவையுடையனவாகும்.

***அறன் கடைப் படாஅ வாழ்க்கையும்; என்றும்***
***பிறன் கடைச் செலாஅச் செல்வமும்; இரண்டும்***
***பொருளின் ஆகும்...*** (155)

எனப் பொருளினால் அமைவதே வாழ்வு என்ற உண்மையினை இவன் தெளிவுறக் காட்டிச் சொல்லுகின்றான்.

261ஆவது செய்யுளுள், காதலன் தன் காதலியுடன் வழி நடந்த செய்தியைத் தோழிக்குச் சுவைபடச் சொல்லும் நயமோ நினைந்து நினைந்து இன்புறற் பாலது.

***இலங்குவளை தெளிர்ப்ப வீசிச், சிலம்பு நகச்***
***சின்மெல் ஒதுக்கமொடு மென்மெல இயலி, 'நின்***
***அணிமாண் சிறுபுறம் காண்கம், சிறு நனி***
***ஏகு என, ஏகல் நாணி, ஒய்யென***
***மாகொ ணோக்கமொடு மடங்கொளச் சாஅய்***
***நின்றுதலை இறைஞ்சி யோளே!...***

பெண்மையின் சிறந்த பண்பின் விளக்கம் இது எனலாம்.

## பேயனார் (234)

முல்லைத் திணையினை மிகவும் வியந்து சிறப்புறப் பாடிய பெருமையுடையவர் இவர். ஐங்குறு நூற்றின் ஐந்தாவது நூறாகிய முல்லைபற்றி செய்யுட்களைச் செய்தவரும் இவரே. அஃதன்றியும் குறுந்தொகையுள் 233, 339, 359, 400ஆவது செய்யுட்களையும், அகநானூற்றின் இந்தச் செய்யுளையும் இவர் பாடியுள்ளனர். குறுந்தொகை 339ஆவது செய்யுளுட் பேயார் எனக் காண்பதுகொண்டு, இவரும் அவரும் வேறானவர் எனக் கொள்வர் டாக்டர் உ. வே. சா. பேய்மகள் இளவெயினி என்பவர் இவருடைய மகளார் போலும்! அவர், சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடியவர். இச் செய்யுளுள், தலைமகன் தேரினை விரைவாகச் செலுத்துமாறு பாகனை ஏவியதை நயமுடன் கூறியுள்ளனர்.

## பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் (130, 192)

இவர் வேளாண் மரபினர். பொதும்பில் என்னும் ஊரினர். இவ்வூர் பாண்டிநாட்டில், மதுரைத் தாலுக்காவில் உள்ளது. இவர் பாடியவை இந்த இரண்டு செய்யுட்களேயாகும். இவற்றுள்

*130ஆவதுபாடல் வெண்கண்ணனார் பாடியது என மட்டுமே காணப்படுகின்றது. அது நெய்தல் திணைச் செய்யுள். நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை' எனக் கொற்கையின் சிறப்பினை அதன்கண் நயமாகக் கூறியுள்ளனர். 192ஆவது குறிஞ்சிச் செய்யுள், 'மதியிருப் பன்ன மாசறு சுடர்நுதல் பொன்னேர் வண்ணம் கொண்டன்று' என இவர் கூறும் உவமை நயமுடையதாகும்.*

## பொதும்பில் புல்லாளங் கண்ணியார் (154)

*இவரும் பொதும்பில் என்னும் ஊரினரே யாவர். இவர் பாடியது இந்த ஒரு பாடலேயாகும். இவர் ஒரு பெண்பாற்புலவர். 'புல்லாளம் கண்ணி' என்றதனால், இவர் பிரிவாற்றாமை வருத்தத்தால் கலங்கிப் புல்லென்ற கண்ணினராக விளங்கினர் போலும். இச்செய்யுள் முல்லைத்திணை பற்றியதாகும். 'மழைக்காலத்துத் தேரை சிறுபல்லியத்தின் கறங்கும்' எனவும், 'கோடல், அரவின் பையணந்தன்ன மலர்ந்திருக்கும்' எனவும் கூறும் உவமைத்திறம் இன்புறப்பாலதாகும்.*

## மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார் (144, 174, 244)

*மதுரையிலிருந்த அளக்கர் ஞாழார் என்பவரின் மகனார் எனவும், மள்ளன் என்னும் பெயரினர் எனவும் அறியலாம். அளக்கர் ஞாழார் மகனார் அம்மள்ளனார் எனவும், அளக்கர் ஞாழலார் மகனார் எனவும் பாடபேதங்கள் காணப்படும். அளக்கர் என்பது பாண்டிநாட்டுள் ஓர் ஊர். இவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சி கிள்ளிவளவன், கோவூர் கிழார் ஆகியோர் காலத்தவர். புறநானூற்று 368ஆவது செய்யுளுள் இவர் சிறுகுடிகிழான் பண்ணனைப் பாடியுள்ளனர். இந்நூலுள்வரும் மூன்று பாடல்களுமே முல்லைத்திணையைச் சார்ந்தவை, 'வருதும் என்ற நாளும் பொய்த்தன; வரியேர் உன்கண் நீரும் நில்லா' எனக் காதலி வருந்தும் நிலையினை நன்முறையிலே எடுத்துக் கூறியுள்ளனர். 'அமரோர்த்து அட்ட செல்வம் தமர் விரைந்து உரைப்பக் கேட்கும் ஞான்று, பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு, துனிதீர் முயக்கம் பெற்றோள்போல உவக்குவள்' என்று (174) உரைத்ததால், இவர் பாண்டியர் படைத்தலைவருள் ஒருவர் எனவும் கருதலாம்.*

## மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் (124, 230, 254, 272)

*மதுரையின்கண் அறுவை வாணிகத்திலே ஈடுபட்டிருந்தவர் இவர். அகத்துள் ஆறும், குறுந்தொகையுள் ஒன்றும்,*

நற்றிணையுள் நான்கும், புறத்துள் ஒன்றுமாக இவர் பாடியவை 12 செய்யுட்கள். 'சிறுகரு நெய்தற் கண்போல் மாமலர்' என உவமையைக் கையாண்டுள்ளனர். பெண் மகளிர் புறவுச் சேவலைக் குறும்பறை பயிற்றி விளையாடுவதையும்; நெய்தற்கண் மகளிர் விளையாடலையும்; இரவுக்குறியிடத்து வந்த காதலனை, அன்னை முருகனென மயங்கி வழிபட்டதும் போன்ற பல சுவையான செய்திகளை இப் பாடல்களுள் காணலாம்.

## மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார் (207)

சேந்தன் தந்தை பெயர்; பூதன் இவருடைய இயற்பெயர். மதுரைப் பாண்டிய மன்னர்களிடத்தே அவர்கள் ஆணைகளை எழுதும் தொழிலைச் செய்து வந்தவர் இவர். சேகம்பூதனார் எனவும் சில ஏடுகளில் காணப்படும். இவர் பாடியனவாக நற்றிணையுள் இரண்டு பாடல்களும், குறுந்தொகையுள் மூன்றும், அகத்துள் இரண்டுமாக ஏழு பாடல்கள் காணப்படும். இச்செய்யுளில் மகள் உடன்போக்கிற் செல்ல, அதனால் கவலையுற்ற தாயின் மனநிலையினை மிகவும் உருக்கமாக எடுத்துக் காட்டியுள்ளனர்.

## மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் (170)

மதுரைப் புலவர்களுள் இவரும் ஒருவர். கள்ளில் என்பது ஓர் ஊர்; பொன்னேரிக்குத் தென்மேற்கே 12 மைல். கடையத்தன் என்பது இவர் மேற்கொண்டதொரு தொழிலாகலாம். இவர் பாடியவாகக் கிடைத்தவை இச்செய்யுளும், புறநானூற்று 316ஆவது செய்யுளும் ஆகும். 'அவன் எம் இறைவன்; யாம் அவன் பாணர்' எனக் கூறுவதனால் இவர் பாணர் மரபினர் எனக் கருதுவதும் கூடும். இச்செய்யுளுள்,தலைவி அலவனிடம் தன் காமநோயை உரைத்துத் தலைவனிடம் சொல்லல் வேண்டும் எனக் கேட்பதாக அமைந்த கருத்து நயமுடையதாகும்.

## மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார் (204)

கொல்லியாண்ட வல்விலோரியைச் சிறப்பித்து நற்றிணை யுள் (52) பாடிய்வர் நப்பாலத்தனார் என்பவர்; அவர் வேறு; இவர் வேறு. அந்த வேறுபாட்டினைக் குறிக்கவே, காமக்கணி என்ற அடைகொடுத்து இவர் பெயர் அமைவ தாயிற்று எனலாம். இப் பாடலுள் வாணனுடைய சிறுகுடியின் வளத்தைக் கூறியுள்ளனர். 'காமக்கணி' என்பது இவர் வானநூல் பயிற்சி உடையவராயிருந்தனர் என்பதனையும் காட்டும்.

## மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் (134, 229)

மதுரைப் பெரும் புலவர்களுள் இவரும் ஒருவர். தானிய வணிகராக விளங்கினமையால் கூலவாணிகன் எனப் பெற்றனர். சீத்தலைச் சாத்தனார் என்பதில் சீத்தலை என்பது ஊரைக் குறித்தது எனவும், உறுப்புப்பற்றியது எனவும் இருவேறாக ஆய்வாளர் கருதுவர். நற்றிணையுள் மூன்றும், அகத்துள் ஐந்தும், புறநானூற்றுள் ஒன்றும், குறுந்தொகையுள் ஒன்றுமாக இவர் பாடியவையாகக் காணப்படுவன பத்துச்செய்யுட்கள். இவையன்றியும் மணிமேகலைக் காப்பியத்தினை இயற்றியவர் இவரே எனவும் சான்றோர் கூறுவர். அங்ஙனமாயின், இவரது சமயம் பௌத்தம் எனக் கொள்ளலாம். இந்நூற் பாடல்களுள், 'குவிமுகை வாழை வான்பூ ஊழுறுபு உதிர்ந்த ஒழிகுலை யன்ன திரிமருப்பு' என மானேற்றின் கொம்பினையும் 'பகல்செய் பல்கதிர்ப் பருதியஞ் செல்வன் அகல்வாய் வானத்து ஆழி போழ்ந்தென, நீரற வறந்த நிரம்பா நீளிடை' எனக், கோடையின் வெம்மையினால் நிலம் வெடித்துக் கிடப்பதனையும் நயமுடன் கூறியுள்ளனர்.

## மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார் (256)

இவரும் மதுரையிலிருந்த புலவர்களுள் ஒருவரேயாவர். ஆரியக் கூத்து தமிழ்க் கூதது என்ற இருவகையான கூத்துக்களுள், இவர் தமிழ்க் கூததில் வல்லவராக விளங்கியவர். மள்ளனார் இயற்பெயர் எனவும் கடுவன் என்பது சிறப்புப் பெயராகவும் கொள்வர். அகநானூற்றுள் மூன்றும், குறுந்தொகையுள் ஒன்றுமாக இவர் பாடியவாகக் கிடைத்தவை நான்கு பாடல்களாகும். இந்நூலின் இப்பாடலுள்ள ஓர் இளம் பெண்ணைக் காதலித்துப், பின் கைவிட்ட பொய்மையாளன் ஒருவனை, ஊர் மன்றத்தார் நீறு தலைப்பெய்து தண்டித்த செய்தியை இவர் கூறியுள்ளார். மேலும், இராமாயண சம்பவம் ஒன்றும் இவரால் அகநானூற்று எழுபதாவது பாடலுள் கூறப் பட்டிருக்கின்றது.

## மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார் (164)

மதுரைப் புலவருள் ஒருவராகவும், தமிழ்க் கூத்திலே வல்லவராகவும் விளங்கியவர் இவர். இயற்பெயர் தேவனார் எனவும், நாகன் என்பது தந்தையார் பெயராகலாம் எனவும் கொள்ளலாம். சங்கத்தொகை நூற்களுள், இவர் பாடியது இவ் வொரே பாடலேயாகும். பாசறைக்கண் இருந்த தலைமகன் ஒருவன் தன் காதலியை நினைந்து தன் நெஞ்சிற்குக் கூறிய துறையமையச் சுவையுடன் பாடல் விளங்குகிறது.

## மதுரைப் பண்ட வாணிகன் இளந்தேவனார் (298)

மதுரையிலே பலசரக்கு வாணிகம் செய்து வந்தவர் இவர். இளந்தேவனார் என்பது பெருந்தேவனாரினும் வேறுபடுத்தக் கூறியதாகும். இவர் பாடியவை அகம் 58, 298, 328, நற்றிணை 41, ஆகிய செய்யுட்களாகும். 'உன்னைத் தழுவுவதிலும் உன்னை நினைந்திருக்கும். அதுவே இனிது' என, இவர் (48) கூறுவது நய்னுடையதாகும். இப்பாடலுள்ளும், 'நீ வந்த தனினும் என் தோழி உவந்தது எனக்கு இனிது' என்று, தலைமகனிடம் தலைமகள் கூறுவதாக இனிதாகச் சொல்லியுள்ளனர்.

## மதுரைப் பாலாசிரியன் நப்பாலனார் (172)

பாலனார் இவர் பெயர். 'நல்' என்பது அடைமொழியா யிருக்கலாம். பாலாசிரியன் என்பது இவர் மதுரையின் ஒரு பகுதிக்கண் ஆசிரியத்தொழில் பூண்டிருந்ததனால் அமைந்த தாகும் என்பர். பேராசிரியர், பாலாசிரியர், இளம் பாலாசியர் என்ற மூன்று பகுப்பினுள் இவர் பாலாசிரியர் பகுப்பினைச் சாரந்தவர். சேந்தன் கொற்றனார், நற்றாமனார் ஆகியோரும் பாலாசிரியன் என்ற அடைமொழியுடன் வழங்கி வந்தனர். இச்செய்யுள் ஒன்றே இவர் செய்ததாகக் கிடைத்தது. இதன்கண், 'இரும்பு வடித்தன்ன கருங்கைக் கானவன்' என், வேட்டுவனின் ஆற்றலையும் உடற்கட்டையும் இவர் போற்றியுள்ளது சிறப்புடையதாகும்.

## மதுரைப் புல்லங் கண்ணனார் (161)

இவர் பாடியவையாகக் கிடைத்ததும் இந்த ஒரே செய்யுள்தான். கண்ணனார் இயற்பெயர் எனவும், புல்லன் தந்தை யார் பெயர் எனவும் கூறுவர். இப்பாடலுள், 'நல்வரல் இளமுலை நனையப் பல்லிதழ் உண்கண் பரந்தன பனியே' என்றதனால், ஒளியற்ற கண்ணுடையார் என்ற கருத்துடன், கண்ணனார் என்பார் பலரிடையும் வேறுபடுத்துக் காட்டுவதற்குப் 'புல்லங் கண்ணனார்' எனப் பெற்றனர் எனவும் கருதலாம்.

## மதுரைப் பேராலவாயார் (296)

இவர் பாடியவை நற்றிணை, புறநானூறு, அகநானூறு ஆகிய வற்றுள் இரண்டிரண்டு பாடல்களாக ஆறு செய்யுட்க ளாகும். ஒல்லையூர் தத்த பூதப்பாண்டியனின் தேவியான பெருங்கோப்பெண்டு தீப்பாய்ந்த காலத்திலே, இவர் பாடியதாகக் காணப்படும் புறநானூற்றுப் பாடல் மிகவும் உருக்கந் தருவதாகும். மற்றும், வெற்றி பெற்று வரும் அரசனையும் படைவீரரையும் வரவேற்குமாறு மக்களைத் தூண்டும் இவரது மற்றொரு புறப்பாட்டும் சுவை மிகுந்ததாகும். இந்தப் பாடலுள்

இவர், பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேற் கடும் பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன், எனப் பாண்டியனைக் குறித்துள்ளதும் காணலாம்.

## மதுரை மருதங்கிழார் மகனார் பெருங் கண்ணனார் (247)

அகநானூற்று 247, 347 செய்யுட்களையும், நற்றிணை 338 ஆவது செய்யுளையும் செய்தவர் இவர். பெருங் கண்ணனார் என்ற மற்றொருவரினும் வேறுபடுத்த இவர் மதுரை மருதங்கிழார் மகனார் எனக் குறிக்கப் பெற்றனர். இவருடைய உடன் பிறந்தாராக இளம் போத்தன் என்ற ஒருவரும் இருந்திருக்கின்றனர். அவர் குறுந்தொகை 332ஆவது செய்யுளைப் பாடியவர்; மற்றொருவர் சோகுத்தனார் என்பவர். இவர் வேளாளர் மரபினர். இப்பாடலுள், 'மண்ணாமுத்தம் ஒழுக்கிய வனமுலை நன்மா ணாகம்' எனப் பிரிவுத் துயரினாலே வாடியிருக்கும் தலைவியை இவர் நயமுறக் கூறுகின்றார்.

## மதுரை மருதன் இளநாகனார் (121, 131, 184, 193, 206, 220, 245, 255, 269, 283, 297)

இவர், பாடினவாகச் சங்கத் தொகை நூற்களுள் காணப்பெறும் செய்யுட்கள் 37 ஆகும். இவரும் மருதக்கலியினைச் செய்தவரும் வேறானவர் என டாக்டர் உவே.சா. அவர்கள் கூறுவர். ஒருவரே எனக் கொள்வாரும் உளர். இறையனார் அகப்பொருளுக்கு உரைகண்ட நாற்பத்தொன் பதின்மருள் இவரும் ஒருவர் என்பதனாலும், நக்கீரர் உரைக்கு அடுத்தபடி சிறப்புடையதாக அது திகழ்ந்தது என்பதனாலும், இவர் அவர் காலத்திலிருந்தவர் எனலாம். பிட்டன், கழுவுள் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன், கூட காரத்துத் துஞ்சிய மாறன் வழுதி முதலியோரைக் பாடியவர் இவர்.

*'பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்*
*வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்'* (131)

என நடுகற்கள் நின்ற நிலையினையும்,

*'கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய*
*புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்*
*நன்னராட்டி'* (184)

என, இல்லத் தலைவியின் சிறப்பினையும்,

**'வானம் வேண்டா வில்லேர் உழவர்** (193)

என, ஆறலை கள்வர் இயல்பினையும்,

**'மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்**
**சிறுதொழில் மகாஅர் ஏறிச் சேணோர்க்குத்**
**துறுகல் மந்தியிற் றோன்றும்'** (206)

எனச் சிறுவர்களது தன்மையினையும், செல்லூரிலே பரசுராமன் யாகம் செய்த சிறப்பினையும், வேளிரின் வீரை முன்றுறை, கோசரின் செல்லூர், ஊணூர், வாணனின் சிறுகுடி என்ற ஊர்களையும், நடுகற்களில் எழுதுவதைக் 'குயிலெழுத்து' என்று சொல்லும் வழக்கினையும் இந்நூற் பாடல்களுள் காணலாம்.

## மருதம் பாடிய இளங்கடுங்கோ (176)

இவர் சேரர் மரபினர். பாலைபாடிய இளங்கடுங்கோவின் தம்பியாயிருக்கலாம் எனக் கருதுவர். மருதத்தைச் சிறப்பித்துப் பாடியவர். நற்றிணையுள் ஒன்றும், அகத்துள் இரண்டுமாக மூன்று பாடல்கள் இவர் பாடியவாகக் கிடைத்தவை, அகுதையின் தந்தையரான சோழர்கள் பருவூர்ப் போர்க்களத்திலே செய்த போர் இவரால் குறிக்கப் பெற்றிருக்கின்றது. இவரே இளஞ்சேரல் இரும்பொறை எனக் கூறுபவரும் உளர். 'கழுநிவந்தன்ன கொழுமுகை, என்றலால் உவமைநயம் பெறப்படும். பரத்தை உறவிலே தலைவன் ஈடுபட்டான் என வாடிய தலைவியானவள்,

**'....நீன் காதலி, எம்போல்**
**புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து**
**நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய**
**என்ன கடத்தளோ?'**

என்று சொல்வதாக இவர் கூறுவது, சொல்லாட்சியின் நுண்மையைக் காட்டுவதாகும்.

## மாமூலனார் (127, 187, 197, 201, 211, 233, 251, 265, 281, 295)

இவர் அந்தணர் மரபினர் எனவும், முக்காலமும் அறியும் திறன்பெற்ற யோகசித்தியை உடையவர் எனவும் கூறப் பெறுபவர். இவராற் பாடப்பெற்றோர் பலராவர். அகநானூற்றுள் 27 பாடல்களும், குறுந்தொகை 11 ஆவது பாடலும் நற்றிணையுள் இரண்டும் இவர் பாடியவ்வையாகக் காணப்படுபவை. இவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், உதியஞ் சேரலாதன் ஆகியோர் காலத்தவர். இவர் பாடல்களுள் அரசியற் ஆகியோர் காலத்தவர். இவர் பாடல்களுள் அரசியற்

செய்திகள் பலவும் அமைந்துவரக் காணலாம். திருமந்திரம் பாடியவர், வேறு திருமூலர் ஆவர்.

### முள்ளியூர்ப் பூதியார் (173)

இவர் பாடியதாகக் கிடைத்தது இந்த ஒரே செய்யுளே யாகும். இது பாலைத்திணைப் பாடல் மலையமானுக்கு உரியதான முள்ளூர்க் கானத்தை இலக்கியங்களிலே காண்கிறோம். இம் முள்ளியூர் அந்தப் பகுதியில் உள்ளது போலும்! பூதியார் என்ற பெயரமைப்பினால் இவரோற் பெண்பாற் புலவர் எனவும் கருதலாம். 'அறந்தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த கேளிர் கேடுபல ஊன்றலும், நாளும் வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்லெனச் செய்வினை புரிந்த நெஞ்சினர்' எனப் பொருள்வயிற் பிரியும் காதலரைப் பற்றிக் கூறும் இல்வாழ்வின் நெறிகுறித்த தன்மையும், 'நன்னன்' என்பவனின் சிறப்பைக் கூறுவதும் இனிமையுடையதாகும்.

### மோசிக் கரையனார் (260)

'மோசி' என்ற அடையுடன் மோசிக் கண்ணத்தனார் மோசி கீரனார், மோசி கொற்றன், மோசிக் கரையனார், மோசி சாத்தனார் என்ற புலவர் பெயர்கள் காணப்படுகின்றன. ஆகவே, இவர்கள் அனைவரும் 'மோசி' என்ற பெயருடன் தொடர்பு உடையவர்கள் எனலாம். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்பார் புகழ்பெற்ற புலவர்களுள் ஒருவர். அவருடைய மக்களாக இவர்கள் அனைவரையும் கருதுவர். இது நெய்தல் திணைச் செய்யுள், 'கழுது வழங்கு அரைநாள்' என நள்ளிரவிலே பேய்கள் நடமாடுவது உண்டு என்ற ஒரு பழஞ் செய்தியை இவர் பாடலில் குறிப்பிடுகிறார்.

### வடம வண்ணக்கண் பேரிசாத்தனார். (214, 242, 268)

இவர் பெயர் பேரிசாத்தனார் எனவும் வழங்கும். கடலலையின் ஒலிமுழக்கினை நற்றிணை 377 ஆவது பாடலுள் பேரிகையின் ஒலிக்கு உவமித்த காரணத்தால் இப்பெயர் பெற்றனர் என்பர். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்பவனை இவர் வாழ்த்தும் பகுதி, அந்தக் காலத்து வாழ்த்தியல் மரபினை விளக்குவதாகும். 'நீயும் நின் புதல்வரும் அவர் பெறும் புதல்வரும் நீடு வாழ்க!' என்பதே அது. 'காமம் வந்த காதல் உண்டெனின்?' எனக், காதலின் ஒரு சிறந்த கவர்ச்சி நிலையினையும் (அகம் 268) காணலாம்.

### விற்றூற்று மூதெயினனார் (136, 288)

இவர் வேடர் மரபினர். விற்றூற்று என்னும் ஊரினர். 'மூதெயினன்' என்ற சொல்லால் இவரை வேடர் மரபினர் என்று

*சொல்வதே பொருந்தும். அகம் 136 ஆவது பாடலுள் பண்டைய திருமண வைபவத்தை இவர் சுவைபடச் சொல்லிச் செல்வது மிகவும் சிறப்பு உடையதாகும். மாங்காட்டு மலைதெய்வம் உடையது என்ற செய்தியினையும் இவரது (அகம். 288) பாடலுள் காணலாம்.*

## விரை வெளியன் தித்தனார் (188)

*தித்தன் என்பவனைப் பரணர் புறம் 351இல் பாடியுள்ளனர். அவன் உறந்தைக்கு உரியவன். இவர் வீரை என்னும் நகருக்கு உரியவரான தித்தனார். வீரை வெண்மான் வெளியன் தித்தன் எனவும் இவர் பெயர் வழங்கப்படுவது உண்டு. அதனை, முது கூத்தனார் பாடிய நற்றிணை 58ஆவது பாடலுள் காணலாம். இவர் குறுநிலத் தலைவர் என்பதை, 'அறநெறி பிழையாத் திறனறி மன்னர்' என்பதால் அறியலாம்.*

## வெண் கண்ணனார் (130)

*பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் பார்க்கவும். இப்பாடலுள் கொற்கை முன்றுறையிலேயுள்ள நெய்தற் போதினை இவர் உவமைக்கு எடுத்தாண்டு உள்ளனர்.*

## வேம்பற்றூர்க் குமரனார் (157)

*வேம்பற்றூர் பாண்டி நாட்டுள் ஓர் ஊர். இவரது இயற்பெயர் குமரனார். வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன் என்பார் ஒருவரும் இவ்வூரவராக உள்ளனர். இத்துடன் புறநானூற்று 317 ஆவது பாடலும் இவர் பாடியதாகும். 'முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப் பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச் சாஅய் வினையழி பாவை' எனப் பிரிந்துறை மகளிர்க்கு இவர் கூறும் உவமை மிகவும் நயமுடையதாம்.*

## ஆசிரியர் பெயர் காணாப் பாடல் (165)



பிற்சேர்க்கை : 2

# மணிமிடை பவளத்தால்அறியப்படும் பல்வேறு ஊர்கள்





பிற்சேர்க்கை - 3

# மணிமிடை பவளத்துள் பாடப்பெற்றோர் வரலாறுகள்

*(மணிமிடை பவளத்துச் செய்யுட்களுள் வரும் பல தலைவர்கள் அரசர்களைப் பற்றிய குறிப்புக்கள் அகர வரிசையில் எண் - செய்யுள் எண்)*

## அகுதை (208)

*இவன் கூடல் நகரிலே இருந்து அரசோச்சியவொரு குறுநிலத் தலைவன். கபிலர். கல்லாடனார், பரணர் போன்ற புலவர் பெருமக்களின் பாராட்டுக்களைப் பெற்றவன். வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் பாழிப்பரந்தலையிலே மிஞிலியோடு போரிட்டுப் புண்பட்டு வீழவும், நன்னன் படுகளஞ் சென்று அருளாது ஒளிந்து கொள்ளவும், வேள் மகளிர் பூசலைக் களைந்து உதவியவன் இவன் என்பது இந்தப் பாட்டிலே வரும் செய்தியாகும். பின்னர் இவனுக்கு ஆபத்து நேர்ந்த காலத்திலே, இவனை அரண்மிகுந்த இடத்திலே வைத்துக் காத்து நின்றவர்கள் கோசர்களாவர். இவனது கூடல் நகரம் மேற்காநாட்டுக் கூடல் எனப்படும் 'கூடலூர்' நகரம்.*

## அதிகன் (142, 162)

*வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்பவனே இந்த அதிகன் எனப்படுபவனுமாவன். இந்த இரண்டு பாடல்களையும் பாடியவர் பரணர். 'வாய் மொழி மிஞிலி புள்ளிற்கு ஏமமாகிய பெரும் பெய்யர் அதிகற் கொன்று வந்து ஒள்வாள் அமலை ஆடியதாகவும்' (142); நல்லிசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய நகை பிழைப்பு அறியாக் கழல்தொடி அதிகன் எனவும் (162) கூறியிருப்பதனை இந்நூலுட் காண்கிறோம். மிஞிலியோடு போரிட்டு வீழ்ந்தவன் வெளியன் வேண்மான் ஆய் எயினன் எனவும், அவன் வீழ்ந்தபோது ஒண் கதிர்தெறா அமைப் புள்ளொருங்கு சிறகரின் கோலி நிழல் செய்தன எனவும், பரணரே (208) உரைப்பதனால், இவனே அவன் எனலாம். தகடூரை ஆண்டிருந்தவனாகிய அதிகமான் நெடுமான் அஞ்சியும், பாண்டியர் படைத்தலைவனாகப் பணியாற்றியவனாகக் கொங்கரோடு நடந்த வாகைப் பறந்தலைப் போரிலே பட்ட*

அதியனும் வேறாவர். அகம் 162 இல் குறிப்பிடப்படும் அதியன் என்பான் பாண்டியர் படைத்தலைவனா யிருந்தவனே எனக் கொள்வாரும் உளர்.

## அவியன் (271)

இவன், 'கள்ளில்' என்னும் ஊர்க்குத் தலைவனாக விளங்கியவன் எனவும், இவனுடைய மலைச்சாரல் மழைவளம் சிறந்தது எனவும் இப்பாடலுள் காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் என்பார் கூறுகின்றார். 'களிமலி கள்ளில்' என்றதனால் அவ்வூர் கள்வளமுடையதாயிருந்த தன்மையும் புலப்படும். இவ்ன் நாடு திருமுனைப்பாடி நாட்டுப் பகுதியிலிருந்தது எனவும் கூறுவர். இவன் மனைவி கற்பிற் சிறந்தவளாயிருந்தவள். மாறோக்கத்து நப்பசலையார் என்னும் புலவர் புறம் 383இல் 'கற்புடை மடந்தை தற்புறம் புல்ல மெல்லணைக் கிடந்தோன்' என, இவனைக் கூறுவதனால் அதனை நாம் அறியலாம்.

## அன்னி (126, 145)

இவன் அழுந்தூர்த் திதியனின் காவன்மரமாகிய புன்னையை வெட்டி வீழ்த்தும் விருப்பங்கொண்டு சென்றவன் என்பதும், எவ்வி என்பவன் நல்ல வார்த்தைகள் பலவும் சொல்லிஇவன் முயற்சியைத் தடுப்பதற்கு முயன்றும், தன் விருப்பம் அடங்காதவனாக இவன் படையெடுத்துச் சென்றான் எனவும், முடிவிலே திதியனால் அழிக்கப்பட்டான் எனவும் நக்கீரர் 126 ஆவது பாடலுள் கூறுகின்றார். கயமனார் என்பவர், இந்த அன்னி என்பவன் குறுக்கைப் பறந்தலை என்னுமிடத்துப் போரிலே திதியனின் பழமையாக நிலைபெற்று வந்த புன்னையை அடியோடும் வெட்டி வீழ்த்தினான் என்கின்றனர். ஆகவே, புன்னையை வெட்டி வீழ்த்திய பின்னரே திதியன் அன்னியை அழித்தான் எனலாம். இந்தத் திதியனே அன்னி மிஞிலி என்பாளின் பொருட்டாக, ஒன்றுமொழிக்கோசரைக் கொன்று அவளுடைய நோன்பை நிறைவேற்றியவன் என்பர் 196 ஆவது பாடலுள் பரணர். இந்தச் செய்தியை மீண்டும் 262 ஆவது செய்யுளிலும் பரணர் உரைப்பர்,

## அன்னி மிஞிலி (196, 262)

இவளுடைய தந்தையின் கண்களைப் பயற்றங் காட்டிலே ஆ புகுந்ததென ஊர்முது கோசர்கள் அழித்துவிட, இவள் கலத்து உண்ணாதவளாகவும், தூய ஆடை உடாதவளாகவும் சினந்து, கொண்ட தன் விரதம் மாறாதவளாகவும் விளங்கினாள் என்று

பரணர் மேற்கண்ட பாடல்களுள் கூறுவர். முடிவிலே, அழுந்தூர்த் திதியனிடம் முறையிட்டு, அவன் அம் முதுகோசர்களைக் கொன்று அழிக்கக் கண்டு, தன் சினந் தணிந்தவள். அன்னிக்கும் இவளுக்குமோ, மிஞிலிக்கும் இவளுக்குமோ எத்தகைய தொடர்பும் இல்லை என்பதைத் தெளிவாக அறிதல் வேண்டும்.

## ஆய் அண்டிரன் (152, 198)

இரவலர்க்குச் சோறளித்துப பேணியவன் இவன் எனப் பரணர் கூறுகின்றார் (152), ஆயின் நாடு நல்ல வளநாடு என்று, அது தென்பகுதிய்து எனவும், அவன் நாட்டிலே 'கவிரம்' என்ற பெயருடன் ஒரு பக்கமலை இருந்ததாகவும் (198) பரணரே கூறுவர். இவன் பொதியமலைப் பகுதிக்கண் இருந்ததாகவும், சிறந்த பெருவள்ளன்மை உடையவனாக விளங்கியதாகவும் அறிகின்றோம். வேளிர் குலத்துத் தலைவர்களுள் இவனும் ஒருவனாவான். 'வடதிசையதுவே வான் தோய் இமயம்; தென்திசை ஆஅய்குடி இன்றாயின் பிறழ்வது மன்னோ இம் மலர்தலை உலகே' (புறம் 132) என்பது இந்த ஆய்குடியினரின் பெருமையை விளக்கும். இவனைப் பாடியவர்கள், இடைக் கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார். உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், காரிக் கண்ணனார், குட்டுவன் கீரனார், துறையூர் ஓடை கிழார், பரணர், பெருஞ்சித்திரனார் முதலியோராவர். இவனுடைய வள்ளன்மை மிகவும் புகழுடன் விளங்கிற்று. 'நாகம் நல்கிய கலிங்கத்தை ஆலமர் செல்வனுக்கு அளித்தவன்; பாடி வந்தார்களுக்குக் குதிரையும், களிறும், தேரும், வளநாடும், ஊரும் அளித்த உயர்ந்தோன் இவன், புறம் 158இல் 'திருந்து மொழி மோசி பாடிய ஆய்' என்று வருவதால், அம் மோசியாரே இவன் அவைப் புலவராக இருந்திருக்கலாம். 'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வாணிகன் ஆய் அலன்' (புறம் 134); கழல் தொடி ஆஅய் அண்டிரன்போல வண்மையும் உடையையோ ஞயிறு' (புறம் 374) எனவெல்லாம் இவனைப் புலவர் போற்றுவர். ஆய் இறந்த காலத்து உளம் நைந்து புலவர் பாடிய பாடல் (புறம் 240) உள்ளத்தை உருக்குவதாக அமைந்ததாகும்.

## ஆட்டன் அத்தி (222, 236)

இவன் சேரநாட்டவன். இவன் மனைவி ஆதிமந்தி என்பவள். ஆடல் வல்லவனாகிய இவனைக் காதலித்து மணந்தவள் அவள். இந்த இரண்டு செய்யுட்களும் பரணராற் செய்யப் பெற்றவை. கழாஅர்ப் பெருந்துறையின்கண் புதுப்புனல் விழாவிலே புனலாடிய ஆட்டனத்தியின் அழகினை விரும்பியவளாகக்

காவிரி அவனை ஆதிமந்தியிடம் இருந்து கவர்ந்து சென்றதாகவும், ஆதிமந்தியானவள் கதறிப் புலம்பித் தேடிச் செல்ல மருதி என்ற கடல் தெய்வம் அவனை அவளுக்குக் காட்டித் தந்தது என்பதாகவும், 222ஆவது செய்யுளில் உரைக்கப்பட்டிருக்கின்றது. 'ஆட்டன் அத்தியைக் காணீரோ?' என ஆதிமந்தி, நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின் எல்லாம் கலங்கிய கண்ணளாகத் தேடிச்சென்ற செய்தி 236ஆவது செய்யுளிற் கூறப்பட்டிருக்கின்றது. இனிச் சிலப்பதிகாரமோ, இவனைச் சேரமன்னன் எனவும், ஆதிமந்தியைக் கரிகால் வளவன் மகள் எனவும் கூறும்.

## ஆதன் எழினி(216)

இவன் கோசர் குடியினருள் ஒருவனாவான். சிறந்த புது வருவாயினையுடையதும் கீழைக் கடறிகரையோரத்து அந்நாளிலே இருந்ததுமான செல்லூர் கோசர்களுக்கு உரியதாயிருந்தது. அவர்களுடைய மன்னனாகத் திகழ்ந்தவன் இவன். இவன் வேலெறிவதிலே வல்லவன் என்பதும், யானைகளையும் வேலெறிந்து கொல்லும் திறன் உடையவன் என்பதும் ஐயூர் முடவனாரால் இப் பாடலுள் சொல்லப்பட்டது. மேலும், இவன் நாட்டு வளத்தைக், 'கடலாடு மகளிர் கொய்த ஞாழலும், கழனி உழவர் குற்ற குவளையும், கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு, பல்லிளங் கோசர் கண்ணி அயரும், மல்லல் யாணர்ச். செல்லிக் கோமான்' என வருணிப்பார் ஐயூர் முடவனார்.

## ஆதி மந்தியார் (135,222,226)

சோழ நாட்டவரான இவ்வம்மை, ஆடல் வல்லோனான ஆட்டனத்தியின் காதல் மனைவியார் ஆவர். அவன் கழாஅர்ப் பெருந்துறையிலே காவிரிப் புதுப்புனலோடு, செல்ல, நாடெங்கும் கதறிக்கதறி அவனைத் தேடிச்சென்று, இறுதியிற் காவிரி முன்துறையிலே மருதி என்னும் கடல் தெய்வம் கணவனைக் காட்ட அடைந்து இன்புற்றவர். 135 - ஆவது செய்யுளில் ஆதிமந்திகொண்ட பெருவருத்தம் பரணரால் உரைக்கப்பட்டுள்ளது. 222, 236ஆம் செய்யுட்களும் அந்தத் துயரமான சம்பவத்தைப் பரணர் வாய்மொழியாக நமக்கு எடுத்துக் காட்டுகின்றார். காதலனைப் பிரிந்து வருந்திய வெள்ளிவீதியார் /என்னும் புலவரும், 'ஆதி மந்திபோலப் பேதுற்று அலந்தனென் உழல்வென் கொலலோ' என இவர் வருத்தத்தைத் தன் துயருக்கு ஒப்பிட்டுக் கூறுவர் (அகம் 55.) இவரை, 'மன்னன் கரிகால் வளவன் மகள்' எனச் சிலப்பதிகாரம் கூறும்.

## உதியஞ் சேரல் (468, 233)

இவனே சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் எனப் போற்றி உரைக்கப்பெறுவன். பாரதப் போரிலே பெருஞ்சோறு அளித்தமைபற்றி இப் புகழ் பெயர் அமைந்தது எனவும் தன் முன்னோர்களுக்காகப் பெருஞ்சோற்று அமலை அளித்தமைபற்றி அமைந்தது எனவும் ஆன்றோர் கூறுவார்கள். இவன் மக்கள் இருவர். ஒருவன் செங்குட்டுவனின் தந்தையான இமயவரம்பன்; மற்றவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன். இவன் மனைவியின் பெயர் நல்லினியார். அவர், வெளியத்து வேளிர் குலத்து நங்கையாவர். இவன், தன் நாட்டு எல்லையை விரிவுபடுத்திய செய்தியை மாமூலனார் அகம் 65இல் கூறுவர். கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான், இவன் தன் முன்னோர்க்குச் செய்த கொடைக்கடனைப் பற்றிக் கூறுவர். மகமூலனார், இவனுடைய இந்தச் சிறந்த செயலைத்

***'துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை***
***முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்***
***பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை'***

எனத் தமது 233ஆவது செய்யுளிற் கூறுவர்.

## எருமை (243)

இந்நாள் மைசூர்ப் பகுதிகளை அக்காலத்தே எருமை நாடெனவும், அதன் தலைவனை எருமையூரன் எனவும் வழங்கி வந்ததாகக் காண்கின்றோம். 'நேரா வன்தோள் வடுகர் பெருமகன்' என இவன் போற்றப் பெற்றவன். பாண்டியன் நெடுஞ்செழியனைத் தலையாலங்கானப் பெரும்போரிலே எதிர்த்து நின்று தோற்றோடியவருள் இவனும் ஒருவனாவான். இப் பாடலுள், நக்கீரர் பெருமான், இவன் 'கன்றுடைப் பெருநிறை மன்றுநிறை தரூஉம் நேராவன் தோளினன்' எனவும், வடுகர் பெருமகன் எனவும், இவன் நாட்டுள் அயிரியாறு என ஒன்று இருந்தது எனவும் குறித்துள்ளனர்.

## எவ்வி (126, 226)

சோணாட்டுத் திருவீழிமிழலையும், திருநீடூரும் உள்ளடங்கிய பகுதிக்குத் தலைவனாயிருந்தவன் இவன். பல்வேல் எவ்வி, வாய்வாள் எவ்வி என் இவனுடைய போர்வன்மை போற்றப் பெறும், குடவாயிற் கீரத்தனார், வெள்ளெருக்கிலையார் ஆகியோர் இவனைப் பாடியவர். அன்னி என்பவன் அழுந்தூர்த் திதியனுடனே போரிடத் துணிந்தபோது, நன்மொழி கூறித் தடுக்க முயன்றவன் இவன்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் அழிக்கப் பெற்றவர்களுள் இவனும் ஒருவன். இவன் நாட்டு வளத்தினை 126 - ஆவது செய்யுளில் நக்கீரனாரும், இவன் நீடூர்க்கு உரியோன் எனவும், தன் ஏவல் கேளாது பகைத்த அரிமணவாயில் உறத்தூர் ஆகிய ஊர்களின் தலைவர்களை அழித்தவன் எனவும், இவன் ஊர் யாழிசைக்குப் பேர்பெற்றது எனவும் 266ஆவது செய்யுளுள் பரணரும் கூறுகின்றனர். இவன் நாட்டு வளத்தினை புறம் 24 மிகவும் தெளிவாக விளக்கிக் கூறும். இவன் தலையாலங்கானப் போரிலே வீழ்ந்துபட்டபோது வருந்திப் பாடியதாக வரும் புறநானூற்றுப் பாடல்கள் (233, 244) உள்ளத்தை உருக்குவனவாகும். இவன் காதலி, இவன் இறந்த பின்னர் கைம்மை நோன்பு பூண்டிருந்தனள் என்பதனைப் புறம் 234 உருக்கமுடன் எடுத்துக் கூறும்.

## எழினி (அஞ்சி) (211)

இவன் சோழன் ஏவலின்படி யானை பிடிக்கும் முயற்சிக்கு உதவாதவனாகச் சோழன் இவனை அழிக்குமாறு மத்தி என்பவனை ஏவினான். அவன் இவனைக்கொன்று இவன் பற்களைப் பறித்துவந்து வெண்மணிவாயிற் கதவிலே பதித்து வைத்தான். இந்தச் செய்தியை இந்தப் பாட்டுள் மாமூலனார் கூறுகின்றனர். 'எழினி' என்ற பெயருடையவர் பலருள் இவன் திருமுதுகுன்றப் பகுதியின்கண் இருந்தவன். கண்ணன் எழினி எனக் கூறுப்படுபவனும் (அகம் 197) இவனே என்பர். இவனும், தலையாலங்கனாப் பெரும்போரிலே நெடுஞ்செழியனோடு போரிட்டு உயிர் துறந்தவனுள் ஒருவன் என்பதனை அகநானூற்று 36 ஆவது செய்யுள் கூறும்.

## ஓரி (208, 209)

இவன் கொல்லிமலைக்கு உரியவன். 'வல்வில் ஓரி' என இவனுடைய வில்லாற்றல் பெரிதும் போற்றப் பெற்றதாயிருந்தது. அதன் சிறப்பைப் புறம் 152 நன்கு கூறும். ஓரிக் குதிரையினை ஊர்ந்தே இவர் போர்மேற் செல்பவனாதலின் ஓரி எனப் பெற்றனன் என்பர். இவன் மலை பலாப்பழங்களை மிகுதியாக உடையது என 208 - ஆவது செய்யுளில் பரணரும் முள்ளூர் மன்னனாகிய மலையமான் திருமுடிக்காரி என்பவன் இவனைக்கொன்று இவன் நாட்டைச் சேரர்களுக்குக் கொடுத்தான் என 200 - ஆவது செய்யுளிற் கல்லாடரும் இவனைப் பற்றிக் கூறுகின்றனர். இவன் மழவர் கோமான் அதியமான் நெடுமான் அஞ்சிக்கும் சோழனுக்கும் நண்பனாக இருந்தவன் என்பதும் அறியப்படுவதாகும். இவனைப்

பாடியோர் கபிலர், பரணர், கல்லாடனார், பெருஞ்சித்திரனார் போன்ற எண்மரவார்.

## கட்டி (226)

இவன், இன்றைய சேலம் மாவட்டத்துப் பவானியாற்றுப் பகுதியினை ஆண்டு வந்தவன். உறையூர்த் தித்தனை ஆரியப் பொருனனான பாணனின் துணையுடன் வெல்ல முயன்று பின்னிட்டவன். சேரர்க்குத் துணையாகக் கழுமலப் போரிலே ஈடுபட்டு அதன்கண் தோற்றவன். இப்பாடலுள் பரணர் பெருமான் இவன் தித்தன்பாற் சென்று திரும்பியதை, 'வலமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த் தித்தன் வெளியன் உறந்தை நாளவைப், பாடின் தெண்கிணை பாடு கேட்டு அஞ்சிப் போரடுதானைக் கட்டி, பொராஅது ஓடினான்' எனக் குறிப்பிடுகின்றனர். இவன், கழுமலப்போரிலே சோழர் படைத்தலைவனாகிய பழையனால் வீழ்ந்தான் என, அகம் 44 ஆவது செய்யுள் கூறும்.

## கண்ணன் எழினி (197)

இவன் ஒரு குறுநிலத் தலைவன் போலும். இப்பாடலுள் மாமூலனார் இவனை,

> ................ *முனைஎழ*
> ***முன்னுவர் ஓட்டிய முரண்மிகு திருவின்***
> ***மறமிகு தானைக் கண்ணன் எழினி***

எனக் குறிப்பிடுகின்றனர்.

## கரிகால் வளவன் ( 125, 141, 246)

சோழன் கரிகாற் பெருவளத்தான் என்ற பெரும்புகழ் பெற்றவன் இவனேயாவான். இவன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன். பொருநராற்றுப் படைக்கும், பட்டினப் பாலைக்கும் பாட்டுடைத் தலைவன். இரும்பிடர்த் தலையாரை அம்மானாகப் பெற்று அவரால் சிறுவயதிலேயே பேணி வளர்க்கப் பெற்றவன். சேரமான் பெருஞ்சேரலாதனோடு போரிட்டு வென்றவன். இவனைப் பாடியோர் கருங் குழலாதனார், வெண்ணியக்குயத்தியார், கடியலூர் உருத்திரங் கண்ணனார் ஆகியோர் 'பெருவள்க் கரிகால் முன்னிலைச் செல்லார், சூடா வாகைப் பறத்தலை ஆடுபெற ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த பீடில் மன்னர்' என, இவனோடு போரிட்டுத் தோற்ற ஒன்பது மன்னர்களைப் பற்றிப் பரணர் 125 ஆவது செய்யுளிலே கூறுகின்றனர். 'செல்குடி நிறுத்த பெரும்

பெயர்க் கரிகால்' என 141 ஆவது செய்யுளுள் நக்கீரர் இவனைப் போற்றுகின்றனர். வெண்ணிவாயில் என்னுமிடத்தில் பதினொரு வேளிரோடு இருபெருவேந்தரும் தோற்று அழிய இவன் வென்ற சிறப்பைப் பரணர் 249ஆவது செய்யுளில் குறிப்பிடுகின்றனர். காவிரிக்குக் கரைகட்டியவன் என்ற பெரும்புகழும் இவனுக்கு உண்டு.

## கழுவுள் (135)

இவன் ஒரு குறுநிலத் தலைவன். இவனுடைய ஊர் காமூர் என்பதாகும். இவனைப் பதினான்கு வேளிர்களும் ஒன்றுகூடி முற்றுகையிட்டு அழித்த செய்தியை இந்நூற் செய்யுளுள் பரணர் பெருமான் கூறுகின்றனர். அதனால், இவனைப் பரணரோடு ஒட்டிய காலத்தவன் எனலாம். இவனைத் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அடக்கிய செய்தியைப் பதிற்றுப்பத்துக் கூறும். எனினும், இவன் மீண்டும் தலை தூக்கவும் பதினான்கு வேளிர்களும் ஒன்றுகூடி முற்றுகையிட்டு இவனை அழித்தனர் என்று கருதலாம், இவனை ஆயர்குடித் தலைவன் எனவும் சிலர் கருதுவர்.

## களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் (199)

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு வேளாவிக் கோமான் மகள் ஈன்ற மக்கள் இருவருள் இவனும் ஒருவன். மற்றையோன் சேரமான் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆவன். இவன் யாதோவொரு கொள்கை பற்றிக் களங்காய்க் கண்ணியும் நார்முடியும் அணிவதாகச் சூளுற்று இருந்த சிறப்புப்பற்றி, இப்பெயர் பெற்றனன் ஆகலாம். இச் செய்யுளுள், இவன் பெற்ற வெற்றிச் சிறப்பையும், சேரர்களின் இழந்த நாட்டை இவன் இப்போரினாலே மீட்டுத் தந்த பெருமிதத்தையும் கல்லாடனார் குறிப்பிடுகின்றனர்.

## காரி (209)

மலையமான் திருமுடிக்காரி என்பவன் இவனே. இவன் திருக்கோவலூரிலிருந்து அரசியற்றியவன். சேரர்க்குத் துணையாகக் கொல்லிமலைக்கு உரியவனாகிய வல்வில் ஓரியைக் கொன்று, அந்த நாட்டை அவர்களுக்கு அளித்தவன். புலவோர் போற்றும் பெருவள்ளலாகத் திகழ்ந்த இவன், மழவர் கோமான், அதியமான் நெடுமான் அஞ்சியுடனும், சோழ னுடனும் பகை கொண்டிருந்தான். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவள்வன் என்னும் சோழன் இவனைக் கொன்றதுடன், இவன் மன்னனை யானைக் காலிலிட்டுக் கொல்ல

முயன்றபோது, கோவூர் கிழார் தலையிட்டுக் காத்த செய்தியைப் புறநானூற்றுள் காணலாம். இப்பாடலுள் இவன் முள்ளூர் மன்னன் எனவும், கல்லாடனார் கூறுகின்றனர். இவனைக் கபிலர் மிகவும் சிறப்புறப் பாடியுள்ளனர். பாரிமகளிரை மணந்த மலையமானின் மக்களான, தேர்வண் மலையனும், மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனும் இவனுடைய மக்களே என்பர்.

## குட்டுவன் (212,288, 290)

'குட்டுவன்' என்ற சொல் சேரநாட்டுப் பகுதிகளுள் குட்ட நாட்டிற்குரிய சேரர் மரபினன் என வலியுறுத்தும், பரணர், 212 ஆவது செய்யுளிலே இக்குட்டுவன் கடலினை முற்றிப் பகைவரையழித்த செய்தியைக் குறிப்பதனால் இது கடற்பிறக் கோட்டியவனும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகனுமாகிய சேரன் செங்குட்டுவனையே குறிப்பதுமாகலாம். சாகலாசனார் என்பவர் 270 ஆவது செய்யுளில், 'கொய்சுவல் புரவிக் கைவண் கோமான் நல்தேர்க் குட்டுவன்' எனப் போற்றுவதுடன், இவனுடைய கழுமலத்தையும் போற்றி உரைக்கின்றனர். வெண்கோட்டியானை விறற்போர்க் குட்டுவன்! என இவனையும், ' தெண்டிரைப் பரப்பின் தொண்டி முன்றுறை" என இவனுக்கு உரிய தொண்டி நகரையும் நக்கீரர் 290 ஆவது செய்யுளுள் குறிப்பிடுகின்றனர்.

## குறும்பியன் (262)

இவனே அழுந்தூர்த் திதியன் என்பவன். அன்னி மிஞிலியின் தந்தைக்குச் செய்த கொடுமையின் காரணமாகக் கோசர்களோடு போரிட்டு அவரை அழித்தவன். இந்த வெற்றியைப் பரணர் இந்தப் பாடலுள் குறிப்பிட்டுப் போற்றுகின்றனர். 'குறும்பு' என்பது மலைப்பகுதியிலே குறுங்காடு சூழ்ந்த பகுதி. இவன் நாட்டின்கண் அது மிகுதியாக இருந்தமையின் இப்படியும் அழைத்தனர் போலும். குறும்பு - சிற்றரண்.

## கொடுமுடி (259)

குறும்பொறை என்னும் மலைக்குக் கீழ்பால் விளங்கிய ஆமூர் என்னும் நகரினைக் காத்துப் பேணிய குறுநிலத்தலைவன் இவனாவன். ஆமூர்க்கவுதமன் சாதேவனார் என்பவர் இவனுடைய ஆமூரின் வளத்தினைப் பற்றிக், 'கொடுமுடி காக்கும் குரூஉக்கன் நெடுமதில் சேண்விளங்கு சிறப்பின் ஆமூர்' என இப்பாடலுட் கூறுகின்றனர். கொங்கு நாட்டிலே 'கொடு முடி' என்றிருக்கும் ஊர்ப்பெயர் இவன் நினைவாக ஏற்பட்டது போலும். வானவனோடு (சேரன்) இவன் போரிட்ட செய்தி இப்பாடலுள் கூறப்படுவதனால் அது பொருந்துவதுமாகலாம்.

## கோதை (263)

கருவூர்க் கண்ணாம்பாளனார் என்னும் புலவர் இப்பாடலுள், 'ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும் வஞ்சி' என உரைக்கின்றனர். இவன், 'சேரர் படைத்தலைவனான வில்லவன் கோதையோ அன்றிச் சேரமான் கோக் கோதை மார்பன் என்பவனோ' என்றெல்லாம் தெளிவாக அறிதற்கு இயலவில்லை. ஆனால், சேரமான் கோக்கோதை மார்பன் தொண்டி நகர்க்கு இறைவனாக விளங்கினவன் என்பதையும், அவ்வூரவராகிய பொய்கையார் என்னும் பெரும்புலவர், அவனைப் புகழ்ந்து பாடினமையும் புறம் 48, 49 - ஆம் செய்யுட்களாற் காணலாம். குறுநிலத் தலைவர்கள் முடியுடை வேந்தர்களின் படைத் தளபதிகளாகப் பணியாற்றி இருத்தலும் கூடுமாதலின், அவ்வாறே, தொண்டிக்கு இறைவனாகிய இவன், சேரர் படைத் தலைவனாகவும் திகழ்ந்தனன் எனவும் கருதலாம்.

## செழியன் (137, 149, 175, 209, 296)

உறையூர் முதுகூத்தனார் என்பவர் 'தோளா முத்தின் தெண்கடல் பொருநன் திண்தேர்ச் செழியன்' என, 137ஆவது செய்யுளில் குறிப்பிடுகின்றார். எருக்காட்டூர் தாயங் கண்ணனார், 'நெடுநல் யானை அடுபோர்ச் செழியன், வளங்கெழு முசிறி ஆர்பெழ வளைஇ' அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய' செய்தியை 149ஆவது செய்யுளிற் கூறுகின்றனர். இதுவே, சேரர் அமைத்த கொல்லிப்பாவை என்னும் பொற்பாவை போலும். 'கால் இயல் நெடுந்தேர்க் கைவண் செழியன் ஆலங்கானத்து அமர்கடந்து' என, ஆலங்கானத்து வெற்றிக்குரிய தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பெயரினைச் செழியன் என்றே ஆலம்பேரிச் சாத்தனார் என்பவர் இந்நூலின் 165ஆவது செய்யுளில் கூறுவர். 209ஆவது செய்யுளிற் கல்லாடனாரும், 'எழுவுறழ் திணிதோள் இயல் தேர்ச்செழியன் சேரா எழுவர் அடிப்படக் கடந்த ஆலங்கானத்து' என நெடுஞ்செழியனின் வெற்றியையே குறிக்கின்றனர், 'பேரிசைக் கொற்கையம் பொருநன் வென்வேல் கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்' எனக் கூறுகிறார் மதுரைப் பேரால வாயார், தம் 296 - ஆவது செய்யுளுள், ஆகவே, இவை யனைத்துமே, பெரும்புகழினனாகிய தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனையே குறிப்பன ஆகலாம்.

## சேரலாதன் (127)

கடலிடையே இருந்த பகைவரை முற்றி அவருடை கடம்பினை அறுத்த செய்தியையும், இமயத்து முன்னோர்

மருள அங்கே விற் பொறித்ததும், இவனே. நன்னகர் மாந்தை முற்றத்துப் பகைவர் கொணர்ந்து நிறை குவிக்கவும் வாழ்ந்தவன் இவன் என மாமூலனார் குறிப்பிடுகின்றனர். இவனுடைய சிறப்புக்களை எல்லாம் நோக்க, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனே எனலாம்.

## ஞிமிலி (142, 148, 182, 208)

நன்னனுடைய பாழிப்பறம்பிலே வேளிர்கள் ஓம்பினராக வைத்த பெருஞ்செல்வத்தைப் பேய்க்கூடு முதலிய கருவிகளுடன் காத்து வந்தவன். கோசர் குலத்தவனான இவன், புள்ளிற்கு ஏமமாகிய அதிகனைக் கொன்றவன் எனப் பரணர் 142ஆவது செய்யுளுட் கூறுவர், 'கடும் பரிக் குதிரை ஆஅய் எயினன் இவனொடு பொருது களம்பட்டனன் என 148, 181, 208 - ஆம் செய்யுட்களிலும் பரணர் குறிப்பிடுகின்றனர். வல்லோனாகிய அதிகனைக் கொன்ற இவனது வெற்றிச்செயல் பலகாற் சொல்லிப் போற்றுஞ் சிறப்பின தாயிற்று எனலாம்.

## தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியன் (175, 209)

செழியன் என்னும் பகுதியிற் காணப்பெற்ற செய்திகளும் இவனைப் பற்றியனவே யாதலால், அதனையும் காணவும், இவன் மிகவும் புகழோடு விளங்கியவன். இவனுடைய தலையாலங் கானத்துப் பெருவெற்றியினை 175 - ஆவது செய்யுளில் ஆலம்பேரிச் சாத்தனாரும், 209 - ஆவது செய்யுளில் கல்லாட னாரும் புகழ்ந்துள்ளனர். மதுரைக் காஞ்சி, நெடுநெல்வாடை ஆகிய பத்துப்பாட்டு நூல்களுக்குப் பாட்டுடைத் தலைவன் இவன். மாங்குடி மருதனார் இவனாற் பெரிதும் மதிக்கப் பெற்றவர். இடைக் குன்றூர்கிழார், கல்லாடனார், குறுங் கோழியூர்க் கிழார், குடபுலவியனார் முதலாய பலராற் பாராட்டப் பெற்றவன் இவன்.

## தித்தன் (122, 152, 226)

உறந்தைப் பதியிருந்து அரசியற்றிய சோழருள் இவனும் ஒருவனாவன். தித்தன் எனவும், தித்தன் வெளியன் எனவும் இவன் பெயர் வழங்கும். 'நொச்சிவேலித் தித்தன் உறந்தை' என இவனூரையும் (122), இவனோடு பொருதுதற்கு வலிமிகு முன்பிற் பாணனோடும் வந்த கட்டி, யென்பான் அஞ்சி ஓடிய செய்தியையும் (226), இவனுக்குரிய கானலம் பெருந்துறையின் வளத்தினையும் (152) பரணர் பாடியுள்ளனர்.

## திதியன் (126, 145, 196, 262)

*அன்னி மிஞிலியின் துயர் தீர்த்தான் ஒரு திதியன். அவன் அழுந்தூர் வேளிர்குலத் தலைவன். 126 - ஆவது செய்யுள் இவனோடு அன்னி என்பான் பொருதுபட்ட நிகழ்ச்சியைக் கூறுகிறது. இதனைப் பாடியவர் நக்கீரர். 145 - ஆவது செய்யுளில் கயமனாரும் இந்தப் போரினையே குறிக்கின்றனர். 196 - ஆவது செய்யுளில் பரணர், அழுந்தூர்த் திதியன் என்பான் அன்னி மிஞிலிக்காகக் கோசர்களைக் கொன்ற செய்தியைக் கூறுகின்றனர். 362 - ஆவது செய்யுளிலும் பரணர் இதே செய்தியைக் கூறுகின்றனர். இவன் வேறு; பொதியிற் செல்வனாகிய திதியன் என்பான் வேறு.*

## நந்தன் (251, 265)

*மஹா பத்ம நந்தன் அக்காலத்தில் வடநாட்டுள் பேரரசனாகத் திகழ்ந்தவன். இவனுடைய செல்வச் செழுமை பற்றியே பேரெண்ணான 'மஹாபத்ம' என்ற அடைமொழியுடன் இவன் வழங்கப் படுவானாயினான். இவனுடைய செல்வச் செழுமையை இப்பாடலுள் (251) மாமூலனார் குறிப்பிடுகின்றனர். 265 - ஆவது பாடலுள்ளும் நந்தர்கள் பாடலியிற் சேர்த்து வைத்த பெருஞ் செல்வமெல்லாம் கங்கையடியிலே சென்று மறைந்த செய்தியை அவரே கூறுகின்றனர்.*

## நள்ளி (152, 238)

*இவனே கண்டீரக்கோப் பெருநள்ளி என்று போற்றப் பெறும் வள்ளலாவான். 'வல்வில் இளையர் பெருமகன் நள்ளி' எனப் பரணர் இவனை 152 - ஆவது செய்யுளில் குறிப்பிடுகிறார். கபிலர், 'இழையணி நெடுந்தேர் களிறோடு என்றும், மழை சுரந்தன்ன ஈகை வண்மகிழ்க், கழல் தொடிக் தடக்கைக் கலிவான் நள்ளி' என இவனை 258 - ஆவது செய்யுளிற் போற்றுகின்றனர்.*

## நன்னன் - 1 (142, 152, 173, 199, 208, 258)

*நன்னன் என்ற பெயருடையார் மூவர் என்பர் ஆய்வாளர்கள். அவர்கள், கடம்பின் பெருவாயில் நன்னன், பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்து வேள் நன்னன், நன்னன் உதியன் என்றும் சேரர் படைத் தலைவன் ஆகியோராவர். அவருள் இந்தப் பாடல்களுக்கு உரியவன் பல்குன்றக் கோட்டத்து நன்னனாவான். ஞிமிலியோடு பகை கொண்டு அவன் படையொடும் வரத் துணைக்கு வந்த ஆய் எயினனைத் தனியே அழியவிட்டு ஒளிந்திருந்தவன் இவனே, பெண் கொலை புரிந்த நன்னன் என்ற பழிக்கும் உரியவன்; வேளிர் குலத்தவன்; பாழி, பாரம், பிரம்பு என்ற மலைகளுக்கு உரியவன்.*

## பசும்பூட்பாண்டியன் (162, 231, 153)

*இப் பெயருடன் ஒருவனைப் பரணர் (162) மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் (231), நக்கீரர் (258) ஆகியோர் கூறுகின்றனர். நக்கீரரின் பாடலுள் மட்டும், இவன் கொங்கர்களை வெருட்டி, அவர்களது நாட்டைப் பாண்டிய நாட்டுடன் சேர்த்த செய்தி கூறப்பெற்றிருக்கின்றது.*

## பண்ணன் (177, 204)

*காவிரிக்கு வடபாலிருந்த இவனுடைய நாட்டின் வளத்தினைச் செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் இப்பாடலுட் கூறுகின்றனர். சிறுகுடிகிழான் பண்ணன் என்பவனும் இவனே யாவன். அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், மாற்றூர் கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் ஆகியோர் இவனைப் பாடியுள்ளனர்.*

## பழையன் - 1. (251)

*இவனே மோகூர்ப் பழையன் என்று போற்றப்பட்டவன். பாண்டியர், தளபதி ; பழையன் மாறன் எனவும் பெயர்; கோசர்கள் வடுகர் துணையோடு வந்து தாக்க, அவருக்கு அஞ்சாது எதிர்த்து அவரை அழித்து வெற்றிபெற்றவன் இவன். இப்பாடல் இவனுடைய மோகூர் மோரியர்க்குப் பணியாது நின்ற நிலையினை விளக்குவது, இதனைப் பாடியவர் மாமூலனார்.*

## பழையன் -2 (196)

*இவன் சோழர் படைத் தலைவருள் ஒருவன். காவிரிக் கரையிலேயுள்ள 'போஒர்' இவனது ஊர் ஆகும். கழுமலப் போரிலே சோழர் படைத் தளபதிகளுள் இவனும் ஒருவனாயிருந்தவன். இவனைப் பாடியவர் பரணர். நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை ஆகிய சேரர் படைத்தலைவரை அழித்து இறுதியிற் களத்திலே வீழ்ந்தவன் இவன்.*

## பாணன் (226)

*இவன் கட்டியோடுங்கூடி, உறந்தைத் தித்தன் வெளியனோடு போரிடச் சென்று, அங்கே அவனுடைய நாளவையின் தெண்கிணையின் ஒலியினைக் கேட்டு அஞ்சி ஓடிப் போனவன். இந்தச் செய்தியைப் பரணர் இந்தப் பாடலுள் குறித்துள்ளனர்.*

## பிட்டன் (143)

சேரர்களின் படைத் தலைவருள் ஒருவன். குதிரை மலைக்கு உரியவன். அகம் - 77ல் மதுரை மருதன் இளநாகனார் இவனைப் பற்றிக் கூறியுள்ளனர். ஆலம்பேரிச் சாத்தனார் பாடிய இச் செய்யுள், 'வசையில் வெம்போர் வானவன் மறவன்' எனவும், 'நசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும், பொய்யா வாய்வாள் புனைகழல் பிட்டன்' எனவும் இவனைப் போற்றுகின்றது.

## பிண்டன் (152)

இவனும் சேரர் தளபதிகளுள் ஒருவன்; குறுநிலத் தலைவன். பாரத்துத் தலைவனான நன்னனோடு பெரும்படையுடன் சென்று இவன் முதற்கண் போரிட, இவன் படை நன்னனால் அழிக்கப் பெற்றதென்ற செய்தியைப் பரணரின் இந்தப்பாடல் கூறுகிறது. நன்னனை முடிவில் அழித்தவன் சேரமான் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் ஆவான்.

## புல்லி (209, 294)

இவனே கள்வர் கோமான் புல்லி எனவும், வேங்கடத்துப் புல்லி எனவும் குறிக்கப் பெறுபவன். வேங்கடமலைப் பகுதிக்குத் தலைவனாக இருந்தவன்; பாண்டியரின் நட்பினன். அவர் படைக்கு யானைகளை வழங்கியவன். கல்லாடனார், மாமூலனார் ஆகியோராற் பாடப்பெற்றவன். 'மாஅல் யானை மறப்போர்ப் புல்லி' (அகம் 209) என்க் கல்லாடனாரும், 'புடையல் அம் கழற்கால் புல்லி' (295) என மாமூலனாரும் இவனைப் போற்றுகின்றனர்.

## பேகன் (262)

வையாவிக் கோப்பெரும் பேகன் எனப்படும். மயிலுக்குப் போர்வை நல்கிய புகழுடையோன் இவனேயாவன். இவனைப் பாடியோர் பலர். இவன், மனைவியாம் கண்ணகியை மறந்து முல்லைவேலி நல்லூர்க் கண் காதலியோடு வாழப், பெரும் புலவர் பலர் இவனுக்கு அறவுரை கூறிய செய்திகளைப் புறநானூற்றுள் காணலாம். இச்செய்யுளின்கண், 'வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்' எனப் பரணர் இவனைப் பற்றிக் கூறுகின்றனர்.

## பொலம்பூண் கிள்ளி (205)

சோழ மன்னர்களுள் ஒருவனான இவன் கோசர்களுடைய ஆற்றல் மிகுந்த பெரும்படையினை அழித்து, அவர்களுடைய நாட்டைக் கவர்ந்து கொண்டவன். இவனுடைய கோநகர் காவிரிப்பூம் பட்டினமாகும். இந்தப் பாடலுள் இவனைக்

குறிப்பிடுவோர் நக்கீரனாராதலினால், இவன் நலங்கிள்ளியதால் பொருந்தும் என்பாரும் உளர்.

## மத்தி (211, 226)

இவன், சோழனின் ஏவலின்படி சென்று, எழினியின் பற்களைப் பெயர்த்து வந்து வெண்மணிவாயில், கோட்டைக் கதவுகளிலே பதித்த செய்தியும், அங்கே இறந்த வீரர்களுக்குக் கல்நாட்டிய சிறப்பும் மாமூலனாரால் 211 - ஆவது செய்யுளிற் கூறப்பட்டிருப்பக் காணலாம். பரணர் 226 - ஆவது செய்யுட்கண் இந்த மத்தி என்பான் வலிய வில்லைத் தாங்கியவன் எனவும், பரதவர்களின் கோமான் எனவும், கழாஅர் என்னும் காவிரித்துறைக்கு உரியவன் எனவும் கூறுகின்றனர்.

## மருதி (222)

இவளோர் கடல் தெய்வம். ஆதிமந்தியின் காதலனான ஆட்டனத்தியைக் காவிரியினின்று காத்து, அவளிடம் சேர்ப்பித்தவள். இச்செய்தி இப்பாடலுள் பரணராற் குறிப்பிடப் பெற்றிருக்கின்றது.

## மழுவாள் நெடியோன் (202)

திருமாலின் அவதாரம் எனப்படும் பரசுராமனைக் குறிப்பது இப்பெயர். மன்னர் குடியை அறுத்த பரசுராமன் செல்லூரிடத்தே பெரிதான யாகம் ஒன்றும் செய்தனன் என இப்பாடல் கூறுகின்றது.

## மாந்தரன் பொறையன் கடுங்கோ (182)

இவன் சேரர் மரபிலே வந்தவன். மாந்தரன் என்ற சொல் இவனைத் தலையாலங்கனத்து நெடுஞ்செழியனோடு போரிட்டுச் சிறைப்பட்ட, கோச்சேரமான் யானைகட்சேய் மாந்தரன் சேரல் இரும்பொறை என எண்ணுவதற்கும் இடந்தரும்.

## மூசுண்டை (229)

இவன் பலவாகிய வேல்வீரர்களின் பெருக்கத்தை உடையவன். இவனுடைய ஊர் வேம்பி. அது மிகவும் வளமுடையது.

## வெள்ளிவீதியார் (147)

கணவரைப் பிரிந்து, அந்தத் துயர் தாளாது புலம்பியவர் என இவர் பாடல்கள் உணர்த்தும். இந்தப் பாடலுள் ஔவையார், அவர் தம் கணவனைத் தேடிச் சென்ற செய்தியை, 'வெள்ளி வீதியைப் போல நன்றும் செலவயர்ந்திசினால்' என்று குறிக்கின்றார்.



# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

## (எண் - செய்யுள் எண்)

